# ஆனந்தரங்கப் பிள்ளை நாட் குறிப்பு




## தொகுதி இரண்டு



கலை பண்பாட்டுத் துறை
புதுவை அரசு
**1998**

☆ ஆனந்தரங்கப்பிள்ளை நாட்குறிப்பு (நகல் பதிப்பு) தொகுதி II

☆ மக்கள் பதிப்பு

☆ 1988, ஏப்ரல்



☆ விலை :

☆ வெளியீடு : கலை பண்பாட்டுத் துறை
புதுவை அரசு.

☆ பதிப்பாக்க மேற்பார்வை : புதுவை மொழியியல் பண்பாட்டு
ஆராய்ச்சி நிறுவனம்
புதுவை 605 001.

☆ அச்சு : மோகனா பதிப்பகம்
புதுச்சேரி.

☆ வெளியீட்டுக் குழு : திரு. கி. இராசாராம்
திரு. ஆனந்தரங்க ரவிச்சந்தர்
திரு. பிரபஞ்சன்
திரு. செபஸ்தியான்
முனைவர் எல். இராமமூர்த்தி




பிரத்தியேகமான

ஆனந்த ரங்கப்பிள்ளையவர்களின்

சொஸ்த லிகித

# தினப்படி சேதி குறிப்பு.

இரண்டாம் புத்தகம்

சந்தானம் பிரிண்டிங் ஒர்க்ஸ், புதுவை.

1949

# நூன்முகம்

பிரஞ்சு கப்பல் படைத் தலைவன் மாயே தே லபூர்தொனே, சென்னை நகரைப் பிடிப்பதற்கு முந்தியும், பிடித்தபோதும், பிடித்தபிறகும் நடந்த சம்பவங்களை, ஆசிரியர் நுணுக்கமாய் விபரமாய் எழுதியிருப்பதால், இந்த இரண்டாவது புத்தகம் முக்கியத்துவம் வாய்ந்தது.

மேல்நாட்டு ஆசிரியர்களில் எவரும் இவ்வளவு விபரங்களை வெளிப்படுத்தியதில்லை. அவற்றை அறிந்து கொள்ள, வாசகர்கள் விரும்புவது இயற்கை.

மேலும், லபூர்தொனேக்கும், புதுச்சேரி குவர்னேர் தூய்ப்ளேக்சுக்கும் உண்டான பகை, எப்படிப் பிறந்து வளர்ச்சி பெற்றது என்பதை அறியவேண்டுமானால் இந்தப் புத்தகத்தை வாசிக்கவேண்டியது அவசியம்.

குவர்னேருக்கும் தமக்கும், அந்தரங்கமாயும், மனம் விட்டும் நடந்த சம்பாஷணைகளில் ஆசிரியர் கிரஹித்துக் கொண்ட சமாசாரங்கள், மிகவும் உண்மையாயும் முக்கியமானவையாயும் இருக்கின்றன. இந்த விஷயங்கள், இதுவரையில் வெளியான நூல்கள் ஒன்றிலும் காணப்படவில்லை.

சென்னை நகரைப் பிடித்து, அதை இங்கிலீஷ்காரருக்கே, ஒப்புக்கொடுக்கச் சம்மதித்து உடன்படிக்கையும் எழுதிக்கொடுத்தபிறகு, ஏன்பேச்சைமாற்றி, லபூர்தொனே உடன்படிக்கையைக் கிழித்துப்போட்டான். பிற்பாடு இங்கிலீஷ்காரரோடு, ஏன் பேச்சுவார்த்தையாடி பேரம் பேசினான். கடைசியாய் எந்த முகாந்திரத்துக்காகப் பிரஞ்சுக்காரரிடம் சென்னையை ஒப்புக்கொடுத்தான். இந்த ரகசியங்களை ஆசிரியர் மறைக்காமல் வெளிப்படுத்தியிருக்கிறார். பாரிஸ் பட்டணத்தில், லபூர்தொனே பேரில் குற்றஞ்சாட்டி, அவனைச் சிறையில் வைத்து நடந்த வழக்கில் கூட இந்த ரகசியங்கள் வெளியாகவில்லை.

ஞானு தியாகு

# பொருளடக்கம்.

## அத்தியாயம் XVI

அக்ஷய ஞு சித்திரை மீ 14உ (*23-4-1746*) முதல் அக்ஷய ஞு வைகாசி மீ 7உ (*17-5-1746*) வரையில் பக்கம் 1—*18*.

நாச்சன்பிள்ளை குமாரன் மரணம்.—காவலில் வைக்கப்பட்டிருந்த கடைக்காரர்களின் விடுதலை.—தேவான் தாண்டவராயனும், ரங்கனும், தினசரி ஆசிரியர் சிபார்சில் விடுதலையானார்கள்.—மங்கத்தாயும், நன்னாச்சியும், நாச்சன்பிள்ளை மகன் மரணத்திற்கு அனுதாபஞ் சொல்ல, செங்கழுனீர்ப்பட்டுபாளயத்துக்குப் போனார்கள்.—தினப்படி சேதி குறிப்பு ஆசிரியர், குவர்னரைப் பார்த்துவிட்டு, திரும்பிவந்த பிறகு குமஸ்தா ரங்கப்பிள்ளையோடு, நெல் விற்பனையைப்பற்றிச் சம்பாஷணை.—குவர்னர் தானப்ப முதலியாரை அழைத்து, தனக்கு வந்த பிராதைப் படிக்கச்சொல்லி, நெல் தரகர்களை வரவழைத்து, விசாரணை செய்தார். அந்தச் சமயத்தில், துய்பொசே வருகை.—அவருக்கு அந்தப் பிராதைப் படிக்கச்சொல்லி, அதற்குச் சமாதானம் கேட்டார்.—துய்பொசே சொன்ன சமாதானம்.—குவர்னர் உத்தரவு.—வேங்கடேசய்யன் பிராது.—ஆசிரியர் சரீர சௌஸ்தமில்லாமலிருந்தது.—வேங்கடேசய்யன் காவலில் வைக்கப்பட்டான்.—கோட்டை கணக்கு ராமய்யன், வர்த்தகர் கிடங்கு கணக்கு வேமய்யன், தய அருணாசல செட்டி இவர்கள் சாவடியில் வைக்கப்பட்டார்கள்.—கனகராய முதலியார் ஆதின சொத்தில், மூன்றில் ஒரு பாகமாகிற, 11,000 வராகனைக் குவர்னருக்குத் தானப்ப முதலி கொடுத்தார்.—அதி சீக்கிரம் ஒருவனை ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ளும்படி குவர்னர் ஆலோசனை சொன்னார்—வேங்கடேசய்யன் விடுதலை.—ராமய்யன் குவர்னர் முன்னிலையில் கம்பெனி புடவைகளைத் திருடியதாக ஒப்புக்கொண்டு, இன்னொரு திருட்டை மறுதளிக்கிறான்—சின்னப்பையன் கிடங்கில் போடப்பட்டான்.—கம்பெனி வர்த்தகர்களுக்கு, கொர்னேத் உத்தரவன்னியில், சரக்குகளைக் கொடுக்கக்கூடாது என்று கட்டளை பிறந்தது.—கோட்டை சுப்பையன் ஆசிரியரை, தன்னைக் காப்பாற்றும்படி கேட்டது—கொர்னேத்துக்கு எல்லாம் தெரியுமென்று சொன்னது.—கொர்னேத் அதை நிராகரித்தான்.—குவர்னர் பெண்சாதி கடைக்காரர்களைக் கண்டித்து எது விஷயத்தையும் தன்னிடம் சொல்லும்படி ஆக்கியாபித்தது.—துய்பொசே, தன் வேலையை ராஜிநாமா செய்ததை நிலைநாட்டியதன் விளைவாக, லசேல் நியமிக்கப்பட்டான்.—சென்னை குடியானவர்கள், தங்கள் சொத்துகளை அப்புறப்

படுத்துகிறார்களாவென்று குவர்னர் கேட்டதற்கு, இல்லையென்று ஆசிரியர் உத்தாரம்.— குவர்னர் கோபம்.— இங்கிலீஷ் கப்பல் தளகர்த்தன் பர்னேத் மரணம்.— அவனுக்குச் செய்த மரியாதைகள்.— ஜனங்கள், இங்கிலீஷ்காரரிடமிருந்து பிரஞ்சுக்காரர்களுக்கு அதிர்ஷ்டம் திரும்புவதாகப் பேசிக்கொள்ளுதல் அத்தாக்ஷியாக பிரஞ்சுக்காரர்களின் சண்டை முஸ்தீப்புகள்.— ஆற்காட்டிலிருந்து வந்த கடிதமொன்றை, தானப்ப முதலியார் குவர்னருக்கு மொழிபெயர்த்தார். அதில் ஆற்காடு நபாபு மகன், மருட்டியரைத் தோற்கடித்து ஜெயங்கொண்டதையும், ஆசிரியருக்கு, கார்வெட்டி ராசா அனுப்பிய வெகுமானங்களைப் பற்றியும் எழுதியிருந்தது.— தானப்ப முதலியார் ஸ்வீகார விஷயமாய் தனக்குள்ள கஷ்டங்களைச் சொன்னார். கார்வெட்டி ராசா ஆசிரியருக்கு அனுப்பிய வெகுமானங்களின் ஜாபிதா. அவைகளை ஆடம்பரமாய் புதுச்சேரிக்குக் கொண்டுவர ஆசைப்பட்டார் ஆனால், குவர்னர் சந்தோஷமில்லாமலிருப்பதை ஊகித்து அக்கிராகரத்திலேயே அவைகளைப் பெற்றுக்கொண்டார்.— தானப்ப முதலியாருடன் சம்பாஷணை.— துய்ப்ளேக்ஸ் பெண்சாதியுடன் சம்பாஷணை.— பிறகு குவர்னருடன் ஆசிரியரும், தானப்ப முதலியாரும் பேசினார்கள்.

---

## அத்தியாயம் XVII

அக்ஷய ஹு வைகாசி மீ 10உ (20-5-46) லிருந்து, அக்ஷய ஹு ஆனி மீ 1உ (11-6-1746) வரையில் பக்கம் 28—38.

ராணுவத்தினர் சிலர், காரைக்காலுக்குப் போனார்கள் காரணம் தெரியவில்லை —பிரஞ்சுக்காரரை, தரையிலும் சமுத்திரத்திலும் தாக்கும்பொருட்டு, இங்கிலீஷ்காரருக்கும் தஞ்சாவூராருக்கும் உடன்படிக்கையானதாக வதந்தி.— ஆசிரியர் குவர்னருக்குக் கொடுக்கவேண்டிய கடனுக்குப் பத்திரம்.— துக்றேன் காரைக்காலுக்குப் பயணம்,— பாலய சுவாமியார் மரணம்.— அவரைப்பற்றின தகவல்.— ஆசிரியர் குடும்பத்தார், புதுச்சேரிக்குத் திரும்பினார்கள். — நாகப்பட்டணம் சின்ன வாண்டா வந்தது.— அதில் முத்து எடுக்கப் போனவர்களுக்கும், வர்த்தகர்களுக்கும் ஏற்படக்கூடுமான லாபத்தைப் பற்றியும், கல்லா முதலியார் வகையராக்கள் பிடிப்பட்டு, தஞ்சாவூரில் ஹிம்சிக்கப்படுகிறதையும், நாகப்பட்டணத்தில் செய்யப்படும் சண்டை முஸ்தீப்புகளைப் பற்றியும் தகவல் இருந்தன.— புதுச்சேரியில் நடந்த ஒரு வியாச்சியத்தைப்பற்றி முகம்மது கமால் ஒரு சிபார்சு கடிதம் அனுப்பினான்.— அதற்குக் குவர்னர் மறுமொழி எழுதவில்லை.— ஆசிரியர் சிபார்சு செய்தபடியால், காரைக்கால் திருவேங்கடத்துக்கு மறுபடியும் உத்தியோகம்

கிடைத்தது.— லாலாபேட்டை பிள்ளா செட்டி பிராதின்பேரில் விளக்கம்.— தடி அருணாசல செட்டி கொடுக்கவேண்டிய கடனைச் செலுத்தி, அவனை விடுவிக்கவேணுமென்று கேட்டுக்கொள்ளப் பட்டது.— குவர்னர் கவலையாயிருப்பதைப் பார்த்து கம்பெனிக்குத் தெரிவிக்காமலும், ஆலோசனை மேல் சபையாருக்குத் தெரிவிக்காமலும், சண்டைக்கு முஸ்திப்பு செய்ததைப்பற்றி குவர்னர் ஆசிரியருக்குச் சொல்லி, இனி சீனக் கடலில் ஒலாந்து வாலாட்டமாட்டாது என்கிறார். — தடி அருணாசல செட்டி விடுதலை.— கோட்டைப்பாக்கைப் புதுச்சேரியில் வரவழைக்கத்தடை, சாத்துகான் பட்டாணி விடுதலை — சேஷாசல செட்டி குமாரத்தி கள் கல்யாணத்திற்குப் போன குவர்னருக்கு, ரகசியமாய் கொடுத்த சன்மானம்.— சுங்கு சேஷாசல செட்டியார் வீட்டில் நடந்த கல்யாண ஊர்வலத்திற்குக் குண்டுகள் போட குவர்னர் மறுத்தார்.— அவர் மணவாளர்களுக்குச் செய்த சன்மானம்.

---

## அத்தியாயம் XVIII

அக்ஷய ஷு ஆனி மீ 2 உ (12-6-1746) முதல் அக்ஷய ஷு ஆனி மூ 10 உ (20-6-1746) வரை, பக்கம் 42—55

துய்மொசே, லபூர்தொனே கப்பல்படை ஜூன் 30 தேதிக்குள் புதுச்சேரிக்கு வருமென்று சொல்லி, தலைமை துவிபாஷி அலுவலைப்பற்றி, ஆசிரியருடன் சம்பாஷிக்கிறார்.—குவர்னர் வீட்டில் சின்ன முதலியாருடன் சம்பாஷணை.— குஜராத்தியரிடமிருந்து காரைக்காலில் விடப்பட்ட நவரத்தினமுடிப்புகளைப் பற்றி, குவர்னர், அசரத்து மாபூஸ்கானுக்கு எழுதச் சொன்ன கடிதத்தின் விபரம்.— கோபால அய்யங்காருடன் ஒரு கலியாண விஷயமாய் சம்பாஷணை,— வேங்கடேச தீக்ஷதர் வீட்டு கல்யாணம்.— கப்பல்கள் வராததை முன்னிட்டு ஏக்கம் —. தெய்வ தண்டனையாயிருக்கலாம்.— புருயே என்பவனோடு, லபூர்தொனே கப்பல்படையைப் பற்றியும், தலைமை துவிபாஷி அலுவலைப்பற்றியும் சம்பாஷணை.— வடவண்டை வாசற்படிக்கு ஒரு மாடு தவறிப்போய்விட்டதால், அதை அந்த வாசற்படி காவற்காரன் பிடித்து இறைச்சியை சமையலுக்கு எடுத்துக் கொண்டான். குவர்னர் அவனை சிறையிலடைத்து, மாட்டின் கிரயத்தை இரண்டு பங்காக வாங்கிக் கொடுத்தார்.— லாலாபேட்டையில் ஆசிரியர் குமஸ்தா ராயலு ஐயரை, பணத்தைக் கையாடியதற்குக் கண்டித்தபோது. ஆசிரியரை எதிர்த்துப்பேசியதற்காகச் சிறையில் அடைக்கப்பட்டான் — சென்னை குவர்னர் மைலாப்பூரிலுள்ள பிரஞ்சு இந்தியர்களைப் பிடித்துக் கொடுக்கும்படி, மயிலாப்பூர் அவல்தாரனுக்கு எழுதி அனுப்பியதை, மயிலாப்பூர் உபதேசி மகன், சின்னமுதலியாருக்குத் தெரிவித்த

கடிதம் பார்த்து, குவனர் உசன்சாயபுதாயிருக்கு ஆட்சேபனை கடிதம் எழுதி அனுப்பினார்.— சம்பாகோவிலில் தேவமாதாவின் கருணை திருவிழா.— அன்வர்திக்கான் சுகசிங்கு வியாச்சியத்தைத் தீர்த்துக்கட்ட ஏன் தாமதமென்று குவர்னர் ஆசிரியரைக் கேட்டபோது சின்னமுதலியார், குறுக்கிட்டதினால், அவரை ஆசிரியர் கடிந்து கொண்டது — தேவனாம்பட்டணம் குவர்னர் துவிபாஷிக்கு மறுமொழி யெழுதினது.— குவர்னர் முத்து விலை விசாரித்தது — இங்கிலிஷ், ஒலாந்து கம்பனிகள் விஷயமாய் பேசி, இரண்டும் வெகுசீக்கிரம் திவாலையாய்ப் போய்விடுமென்று குவர்னர் சொன்னது.

---

## அத்தியாயம் XIX

அக்ஷய ஸு ஆனி மீ 11உ (21-6-1746) முதல் அக்ஷய ஸு ஆனி மீ 25உ (5-7-1746) வரை பக்கம் 57—73.

ஆலம்பரை படகு மாலுமிக்கு குவர்னர், பணம் அனுப்பச் சொல்லி, பிறகு லபூர்தொனே கப்பல்படை வரப்போகிறதைத் தெரிவித்தார்.—கும்பினிக்குக் கொடுக்க வேண்டிய தொகையைக் கேட்டதின்பேரில், ஆசிரியர் தவணை கேட்டார். கப்பல் பாய் ரெட்டு கேட்டுவிட்டு, மாச சம்பளம் கொடுப்பதற்கு, ஆயிரம் வராகன் கேட்டார்.— தனது கஷ்டங்களை நினைத்து, ஆசிரியர் ஆயாசம்.— சேன்ழான் திருவிழாவை கொண்டாட சொக்கபானை கொளுத்தப்பட்டது.— சேன்ழான் திருவிழா குவர்னர் பெண்சாதியின் பேர் கொண்டவர் திருவிழா ஆனபடியால் யாவரும் அவளைப்போய் கண்டு தெரிசனம் செய்தார்கள்.—பறங்கிபேட்டை அவுல்தாரன், 2000 கலம் நெல் அனுப்பி, புதுச்சேரியில் விற்கும்படி திட்டம் செய்து ஆள் அனுப்பினான். தீர்வை தள்ளிக் கொடுக்கும்படி கேட்டதற்கு, இராசரீக விஷயம் தனக்கு அதிகாரமில்லையென்று குவர்னர் சொன்னது.— நபாப் அன்வர்திகானுக்கு எழுத வேண்டிய கடிதத்தை எழுத குவர்னர், அவர் பெண்சாதி, சின்னமுதலியார், மதனாந்தபண்டிதர் இவர்கள் நால்வரும் எழுதுகிறதற்கு, கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தபோது ஆசிரியர் அந்தக் கடிதத்தை வயணமாய் எழுதியது. — மதனாந்தபண்டிதர், ஒரு மனுவை குவர்னரிடம் கொடுக்க, ஆசிரியரை அழைத்துச் சென்றது.— வேலமூரி வேங்கடய்யன் மெத்த வியாதியாயிருக்கும் போது, பெண்சாதி பிள்ளைகளைப் பார்க்க ஆவலுடையவனாயிருக்கிறானென்று சொல்லி, குவர்னரிடம் உத்தாரம் வாங்கினது.— வேங்கடய்யன் இறந்துபோன சேதியை ஆசிரியர் குவர்னரிடம் தெரிவித்தபோது இனி என்ன செய்யவேண்டும் என்று குவர்னர் கேட்டதற்கு, வேங்கடய்யன் என்னத்திற்கு சிறையில் வைக்கப்பட்டான், அதுமுதல் நடந்த விஷயங்களை

யெல்லாம் ஞாபகப்படுத்தி, வேங்கடய்யன் செய்த மாறுபாடு களுக்கு சேஷாசல செட்டியார்தான் ஜவாப்தாரி, ஆகையால் அவருக்கு இந்த விஷயத்தைத் தெரிவிக்கும்படி குவர்னர் சொல்லி அனுப்பியது — சென்னையில் காவலிலிருந்த சில பிரஞ்சுக்காரரைத் தப்புவித்துவிட்ட ஒரு பிரஞ்சுக்காரனுக்குத் தூக்குத் தண்டனை.— காரைக்கால் குவர்னர் பராதி, கும்பனிக்குச் சேரவேண்டிய பணத்துக்காகக்கடிதம் எழுதினார். அவருக்கு ஆசிரியர் மறுமொழி.—ஆசிரியர் குமஸ்தா பணம் செலுத்த மறுத்துவிட்டதினால், விலங்கு போடப்பட்டான்— அவனை மாற்றும்படி குவர்னர் ஆலோசனை,— பராதி செய்த அநியாயங்கள்.

---

## அத்தியாயம் XX

அக்ஷய ஸ்ரீ ஆனி மீ 28உ (8-7-1746) முதல் அக்ஷய ஸ்ரீ ஆடி மூ 5உ (17-7 1746) வரை பக்கம் 74—89

லபூர்தொனே சப்பல்படையின் எட்டு கப்பல்கள் வருகை.— ஆலம்பரைக்குப் போன ஒன்பதாம் கப்பலும் திருப்பி அழைக்கப்பட்டது. புதுச்சேரி ஜனங்களின் குதூகலம் அதன்காரணம். லபூர்தொனே குவர்னருடன் சம்பாஷணை — லபூர்தொனே கப்பல்படை பிரஞ்சுதேசத்தைவிட்டுப்புறப்பட்டது முதல், நடந்த சம்பவங்கள்.— இந்தியக் கடலில் இரண்டு விசை புயல்காற்றினால் நேர்ந்த கஷ்டங்கள்.— இங்கிலீஷ் கப்பல்களோடு சண்டை இந்தக் கப்பல்கள் கொண்டுவந்த சாமான்களின் விபரம் — காரைக்காலிருந்து பராதி வருகை—லபூர்தொனே துய்ப்ளேக்ஸ் சந்திப்பு.—ஆசிரியரும் சின்னமுதலியாரும் துய்லோரூன் பிள்ளைகளைச் சந்தித்தது.— ஆசிரியரும் சின்னமுதலியாரும் லபூர்தொனேயைச் சந்தித்த.— பொம்மராசாபாளையத்திலிருந்து வெகுமானம் கொண்டுவந்த ஆச்சாரியார் மூலம் வேங்கட்ட. நரசிங்கராசாவுக்குப்பிரதி சன்மானங்களும் குருவுக்கும் அவருடன் வந்தவர்களுக்கும் சம்பாவனை கொடுத்து அனுப்பியது.— தெமாரேயுடன் சம்பாஷணை.— துய்ப்ளேக்ஸ்பங்காள குவர்னராகவேணுமென்று கேட்டது.— துய்மாவுக்கு அழிசபாக்கம் ஜாகீர் —கப்பல் சிப்பாய்களை ஊர்வாசற்படியில் காவல்வைத்தது.— குலாம் உசேனுக்குச்சேரவேண்டிய கடனை வட்டியுடன் கொடுப்பதாகக் குவர்னர் கடிதம்.— தஞ்சாவூர் ரங்கோ பண்டிதன் வருகை. ராணுவத்தினர் தங்கள் மேல் அதிகாரிகளுக்குச் செய்யவேண்டிய மரியாதைபற்றி துய்கேனுக்கும் லபூர்தொனெயுக்கும் சர்ச்சை.— துய்கேன் காவலில் வைக்கப்பட்டது — லபூர்தொனே கப்பல்களிலிருந்து ராணுவ அதிகாரிகளையும் ராணுவத்தினரையும் அழைத்து, தரைக்குவந்து, தனக்கு மரியாதை செய்து

கொண்டது.— லபூர்தொனேக்கும் துய்ப்ளேக்சுக்கும் வந்த மனஸ்தாபத்தின் காரணம்.— தஞ்சாவூரில் மானேசி அப்பாவுக்கு மந்திரிவேலைகிடைத்தமையால், ரங்கோபண்டிதர் தஞ்சாவூருக்குப் போனார்.— தேவனாம்பட்டினம் கூடலூரிலிருக்கும் ஜனங்கள் பீதியடைந்து, பரங்கிப்பேட்டைக்குப் போகிறார்கள். சென்னை குவர்னர் மாசு, தைரியமில்லாதவன். ஆனபடியால் ஜனங்கள் பயந்து ஆற்காட்டுக்குப் போகிறார்கள்.— குவர்னர் ஆசிரியரிடம், லபூர்தொனே சரித்திரத்தைத் தூஷணையாகச் சொல்லியது — பிரஞ்சு கப்பலில் ஒரு மேலதிகாரி இறந்து போனபடியால், ராணுவசம்பிரதாயமாய் அவனை அடக்கம் செய்தது — கிராமங்கள் விற்பதாயும் அல்லது குத்தகைக்கு விடுவதாயும் ஆசைகாட்டி, பிரஞ்சுக்காரருடைய உதவியைக் கேட்டு தஞ்சாவூர் ராசா அனுப்பிய ஸ்தானாதிபதிகள் வருகை.

---

## அத்தியாயம் XXI

அக்ஷய ஹூ ஆடி மீ 6வ (18-7-1746) முதல் அக்ஷய ஹூ ஆடி மீ 18 வ (30-7-1746) வரை பக்கம் 90—104

இரண்டாவது குவர்னர் லெகு பெண்சாதியின் மரணம். அவள் குணாதிசயம்— சித்தபிரமைகண்டு, மருத்துவசாலையில் ஒருவருஷம் அடைபட்டிருந்தாள்.— அவள் அடக்கசடங்குகள். ஆற்காடுநவாப், உடன்படிக்கைப்படி வெள்ளி கட்டிகள் அனுப்பும்படி குவர்னருக்குக் கடிதம். வெள்ளி அனுப்புவதில் உண்டான நஷ்டம்.— குவர்னர் கொடுக்கவேண்டிய கடனைப்பற்றி கடிதம்.—தானப்பமுதலியார் வீட்டில் தங்கிய காரணம்—குவர்னர் அவரை அழைத்து ஒருகடிதம் எழுதச்சொன்னது.—குவர்னர் கொடுக்கவேண்டிய கடனின் வட்டியைத் தள்ளிக் கொடுக்கும்படி கடிதம் எழுதியது.— மரிஜெர்துருயிது என்ற கப்பலை ஆலம்பரைக்கு அனுப்பியது—சண்டை கப்பல் ஒன்றை இங்கிலீஷ் சிறு கப்பல்களைப் பிடித்துவர அனுப்பியது.—என்னத்துக்காக மதனாந்தபண்டிதர் சின்னமுதலியாருக்குப் பெரிய துவிபாஷிவேலை கொடுபட வேணுமென்று பிரயாசைப்படுகிறார்? தேவனாம்பட்டணம் தலைமை துவிபாஷி மறுமொழியைக் குவர்னருக்குத் தெரியப்படுத்தினபோது, தந்திரமாய் உண்மையை மறைத்து அவருக்கு மறுமொழி எழுதச்சொன்னது.—கப்பலில் வந்தசரக்குகளில் சிலவற்றை கும்பினியார் தனக்குக் கொடுக்க வேண்டிய கடனுக்காக எடுத்துக்கொண்டு, அதுகளை விற்றுக் கொடுக்கும்படி ஆசிரியரை குவர்னர்கேட்டது —தலைமை துவிபாஷி அலுவல்பற்றி குவர்னர் அபிப்பிராயத்தை அறிய மதனாந்தபண்டிதர்செய்தசூழ்ச்சி பலிக்கவில்லை.— முன்காலத்தில் லபூர்தொனே புதுச்சேரிக்கு வந்தபோது, வைத்திருந்த எல்

லாக் பெண்பிள்ளையோடு தேவனாம்பட்டினத்திலிருந்து வந்த ஒருவன் வேவு சொன்னதற்குச் சிறையில் அடைப்பட்டான். குவர்னர், ஆசிரியரிடம் ஒரு தெலுங்கு கடிதத்தைக் கொடுத்து வாசிக்கச்சொல்லி, அதிலுள்ள ரகசியத்தை அறிந்துகொண்டு திரிகோணமலைக்குப் போகும் பாட்டையை அறிந்த ஒரு மாலுமியைத்தேடச் சொன்னது—தெலாவீல்பாகுக்கும் ஆசிரியருக்கும் இருந்த கூட்டு வியாபார கணக்கைத் தீர்த்து, ஆசிரியருக்குண்டான பாகத்தைக் கொடுத்தது.— அந்தச் சமயம் துய்புலாவோடும் தெலாவீல்பாகோடும், தலைமை துவிபாஷி அலுவலைப் பற்றி ஆசிரியர் சம்பாஷணை.

---

## அத்தியாயம் XXII

அக்ஷய ஸ்ரீ ஆடி மீ 19உ (*31-7-1746*) முதல அக்ஷய ஸ்ரீ ஆடி மீ 29உ (*10-8-1746*) வரை பக்கம் *106—122.*

பராதி குவர்னருக்கும் லபூர்தொனேயுக்கும் விருந்து செய்தது.—தெப்ரெமெனில் சம்பாஷணை.— குவர்னர் ஆசிரியருக்குத் தான் கொடுக்கவேண்டிய தொகையைக் கொடுத்து, மற்ற கணக்குக் கடனைச் செலுத்தியது.— குவர்னர் கனகராய முதலியார் பங்குக்குச் சேரவேண்டியதை தானப்ப முதலியாருக்கு ரூபில் கொடுக்கச் சொன்னது:— ஆசிரியர் தயக்கம், சின்ன முதலியார் வல்லடி வழக்குகள் பேசி, கடைசியாய் தொகையைப் பெற்றுக் கொண்டது.—குவர்னர் குலாம் உசேனுக்குக் கொடுக்கவேண்டிய கடனைக் கொடுத்தது.—மோக்காவுக்குப்போன கப்பல் வர்த்தகக் கணக்குத் தீர்ந்தது.— மாயேயிலிருந்து நாலு பிராமணர், 12 நாளில் கடிதம் கொண்டுவந்தது.— தன் தம்பி வீல்பாக் வீட்டில் குவர்னரோடு விருந்து சாப்பிட்டு, லபூர்தொனே சண்டைக்குப் பயணமாய், படகில் ஏறினபோது செய்த சபதம் — அவனுக்குச் செய்த ராணுவ மரியாதைப்பற்றிப் பொதுஜன அபிப்பிராயம்.— கப்பல்களில் ஏற்றின சாமான்கள், செலவுக்குப் பணம், அவற்றிற்குச் செய்யவேண்டிய செலவுகளுக்கு அனுப்பிய ரூபாய்.— வழிகாட்டி இரண்டுபேர் கூடப்போனார்கள்.— சந்தா சாயபு மகன் வகையராக்கள் கப்பலுக்குப்போய், லபூர்தொனேயுக்குச் செய்தவெகுமானங்கள், பெற்றுக்கொண்ட சன்மானங்கள்.— குவர்னர் சில சரக்குகள் தரும்படி உத்தரவு.— சரீர சௌக்கியத்துக்குத் தான் மசுக்கரைக்குப் போவதாகவும், அந்தச் சமயத்தைப் பயன்படுத்தி, சில சரக்குகளைக் கொண்டுபோய் விற்றுவருவதாகவும், அந்த வியாபாரத்தில் ஆசிரியருக்குப் பாதி பாகம் கொடுப்பதாகவும் சொன்னார்.—பாலசெட்டி சில சாமான்கள் தருவதாகச் சொல்லி, அதற்கு இருபதினாயிரம் வாங்கிக் கொண்டான்.— அதைக் குறித்த விஷயத்துக்கு உபயோகப்படுத்துகிறானென்று விசாரிக்க ஆசிரியருக்கு உத்தரவு.— குவர்னர்

பெண்சாதி சில சரக்குகளைக் கொடுக்கும்படி கேட்டுக்கொண்டது.— சம்புதாசைப்பற்றியும், வேங்கட்ட நரசிங்க ராசாவைப் பற்றியும் குவர்னர் தகவல் கேட்டு, அவர்கள் சிநேகிதத்தைத் தனக்கு ஏற்படுத்தும்படி கேட்டது.— குவர்னர், குதிரைகள் வாங்கும்படி கட்டளையிட்டது.— ஆற்காட்டில் பிரஞ்சு ஸ்தானீகர் சபதம்.— அதில் சென்னை குவர்னர் மோரீஸ், சென்னை நகரை பிரஞ்சுக்காரர் தாக்குவதற்குத் தடை செய்யும்படி கேட்டுக்கொண்டது — ஆற்காடு நாவாபு பதில், முயற்சிகள்.— விக்கிரவாண்டி செட்டிகள் குரு. அம்பலத்தாடு அய்யர் மரணம்.— எப்படி அவர் தனக்குப் பதிலாளியை பட்டங் கட்டினர்.— தேவனாம்பட்டணம் குவர்னர் துவிபாஷி வழுதாவூருக்கு வந்து திரும்பிப் போனார் — இமாம் சாயபு ஒரு கொலை விஷயமாய் விசாரணை செய்ய குவர்னருக்கு எழுதினார் — இவர் ஆசிரியரை அந்த விசாரணை செய்யும்படி உத்தரவிட்டார்.— ஆற்காடு நபாபு, ஒரு கப்பல் சாமான்களைக் காப்பாற்றும் சீட்டு கேட்டது.— வெகு சில துணிகளை தயாரிக்கும்படி சின்ன முதலியாரிடம் கேட்டு, பிரயோசனப்படாததால், ஆசிரியரை அவற்றை நெய்துகொடுக்கும்படி கேட்டது.

---

## அத்தியாயம் XXIII

அக்ஷய ஞு ஆடி மூ 30 உ (11—8—1746) முதல் அக்ஷய ஞு ஆவணி மீ 5 உ (17—8—1746) வரை பக்கம் 123-139.

சின்னமுதலியார், குவர்னரைப்பார்ப்பதற்கு ஆசிரியரிடம் வந்தது.— குவர்னர் ஆசிரியரைச் சாராயம் காச்சும்படி சொன்னது.—ஒலாந்துகாரருக்குக்கடிதம் முஸ்திப்பு செய்தது.— காலாப்பட்டு வாசிகள் திருவிழாவுக்கு உத்தரவு கேட்க வந்தது.— காலாப்பட்டு கொலையைப்பற்றிக்குவனர் வினவியபோது, ஆசிரியர் மறுமொழி.— அசாத் சாயபுடன் பேசியதை விபரமாய் சொன்னது.— வேலைபார்த்துவரும்படி தேவனாம்பட்டணம் முத்தியாலு நாய்க்கன் அனுப்பின ஆளை உடனே திரும்பிப் போகும்படி சொன்னது.— சண்டைக்கான தளவாடங்களைப் படகில் ஏற்றினது.— பராதி காரைக்காலுக்குப் போனது — குருவப்பசெட்டி தலைமை துவிபாஷி அலுவலைப்பற்றி ஆசிரியருடன் சம்பாஷணை.— மாயேயிலிருந்து வந்த கடுதாசியால், இங்கிலீஷ் கப்பல் ஒன்று பிடிபட்டதை அறிந்தது — சென்னையில் காங்கு புடவைகள் விலையைப்பற்றிப்பரிசிலனை —காலாப்பட்டு கொலையைப்பற்றி ஆசிரியருக்குத் தெரிந்ததைச் சொன்னது.—குவர்னர் தானப்பமுதலியார் வியாதியைப்பற்றி ஆசிரியரை வினவினது.—குவர்னர்பெண்சாதியுடன் தலைமை துவிபாஷி அலுவலைப்பற்றிச் சம்பாஷணை.— அன்னபூரண அய்யர் அந்த

வேலையைத் தனக்குக் கொடுத்தால் 6500 வராகன் லஞ்சம் கொடுப்பதாகச் சொன்னது.— காலாப்பட்டு பாளையக்காரனை கொலைவிஷயமாய் சிறையில் அடைத்தது.— ஆற்காடு நபாப் கடிதத்திற்குப் பிரஞ்சு குவர்னர் பதில்— தேவனாம்பட்டணம், கடலூர் இவ்விடங்களில் ஜனங்கள் கிலிபிடித்துச் சொத்துகளை மறைத்துவிட்டு ஓட்டம்பிடித்தது.— பராதி காரைக்காலுக்குப் போகும் வழியில் அவனைப் பார்த்து கிலி அதிகப்பட்டது. குவர்னர், அருக் சாராயம் ஆசிரியரைக் கேட்டது.— லத்தூஷ் கொஞ்சம் சரக்கைக் கொடுத்து மீதியைத் தேடித் தருவதாகச் சொன்னது. தானப்பமுதலியாரின் சுற்றத்தார் தலைமை துவிபாஷி வேலைக்காக கிருஸ்துவ பாதிரிமார்களைத் தூண்டி சிபார்சு செய்யச்சொன்னது.நபாபின் மனிதர்கள் தானப்பமுதலியாரைக் கண்டது. வீல்பாக் மலையாளரைக்கு அனுப்ப சில சரக்குகள் கேட்டது.— பராதி காரைக்காலுக்குப் போய் அங்கு லபூர் தொனேயைக் கண்டுபேசி திரும்பி வந்து ஒரு நாள் முழுவதும் குவர்னரோடும் தெத்தேயிலோடும்பேசி சண்டை தளவாடங்களைக் கப்பலில் ஏற்றியது சண்டை நடக்கப் போகும் இடத்தைப்பற்றி ஆசிரியர் ஹேஷியம். லத்தூஷ் குழம்புசாராயத்துக்காக தன்னிடம் கேட்டதை ஊர்ஜிதம் செய்துகொண்டது.— தானப்பமுதலியார் அன்னபூரண ஐயரை வைத்துத் தலைமை துவிபாஷி வேலைக்குப் பணம் திரட்டுவது.

---

## அத்தியாயம் XXIV

அக்ஷய ௵ ஆவணி ௴ 6௳ (18-8-1746) முதல் அக்ஷய ௵ ஆவணி ௴ 13 ௳ (25-8-1746) வரை பக்கம் 140—156

350 சிப்பாய்களை சண்டை தளவாடங்களுடன் கப்பல் ஏற்றியது. அப்தால் ஜலீலுக்குக் கடிதம்—குதிரைகளைப்பற்றி வினவியது—அன்னபூரண ஐயனுடைய பேராசையைப்பற்றி குறிப்புகள்.–மறுபடியும் சண்டைக்கு ஆள்கள் அனுப்பியது.– கடல் நீரால் சேதமடைந்த சகலாத்துகளை முத்து செட்டி வாங்கினது.–பணமுடையால். ஆசிரியர் அவற்றை வாங்கவில்லை.– மத்தியு என்பவள் ஆசிரியருக்கு சொன்ன சேதி—நாகப்பட்டணம் துரைத்தனத்தார். லபூர்தொனேயை ஆடம்பரமாக ஊருக்கு வரவழைத்து தாங்கள் செய்த குற்றங்களுக்கு மன்னிப்புக் கேட்டுச் சமாதானஉடன்படிக்கை செய்துகொண்டது.— நாலு இங்கிலீஷ் கப்பல்களை பிரஞ்சுக்காரர் பிடித்ததாக வதந்தி. அருக் சாராய விஷயமாய் குவர்னர் ஆசிரியரை வினவினது. உசன் சாயபுக்கு கொடுக்கவேண்டிய கடனின் வட்டியை தள்ளி கொடுக்கும்படி கேட்கச் சொன்னது—உசேன்சாயபு மருமகன் அசாத்சாயபு குவர்னரை துற்பாஷையால் பேசினது.—ஆசிரியர்

பொறுமையாய் அவர் தவறுதலை எடுத்துக்காட்டி, குவர்னரை யும் வட்டி கொடுக்கும்படி தூண்டினது.—உசன்சாயபு ஏழ்மை தனத்தை விளக்கிசொல்லி ஏழு எட்டு நாள் விவாதத்திற்குப் பிறகு குவர்னர் வட்டியைக் கொடுத்து, தான் எழுதிக்கொடுத்த சீட்டைப் பெற்றுக்கொண்டது. குடிபோதையில் ஒரு ராணுவ உத்தியோகஸ்தன் இரு பீரங்கி குண்டுகளை அனுவசியமாய் சுட்டுப் பீதியை உண்டாக்கினதால் சிறையில் அடைக்கப்பட்டது—குவனர் குதிரைகள் விஷயமாய் ஆசிரியரை வினவியது.—14 குதிரைகளை சேகரித்தது—தன்னைக் கேட்காமல் தன் குதிரையைப் பிடித்துக்கொண்டதாக, சந்தாசாயபு மகன், ஆசிரியர் மேல் பிராது கொடுத்தது.— அவர் குதிரையை விட்டுவிடும்படி குவர்னர்சொன்னது— அது விஷயமாய் கிரிமாசி பண்டிதனை ஒத்தேயில் இடமனுப்பியது— குவர்னர் பெண்சாதி தன் கணக்குப்பிள்ளை வீட்டை, சோதிக்கச் சொன்னது.–பின் அந்த உத்தரவை ரத்து செய்தது— கிரிமாசிபண்டிதனை குவனர் பிரம்பால் அடிக்கப்போய் பின்பு காலால் உதைத்தது— லபூர் தொனே கப்பல்கள் வருகை— உடம்பு அசௌக்கியத்தை முன்னிட்டு, வீட்டுஉடுப்புடன், மூடு பல்லக்கில் லபூர்தொனே குவர்னர் வீட்டுக்கு வந்து, பராதியுடன் பேசினது—லபூர்தொனே தெமூர்தேன் வீட்டில் தங்கியது.— ஊருக்கு வெளியில் வாசற்படி கதவுகளைச் சாத்தி, காகிதங்களைப் பரிசோதித்தது.— ராசா பிறந்த நாள் கொண்டாட்டத்திற்கு பீரங்கிகள் சுட்டது.– கஸ்தூரி ரங் ய்யன் ஆசிரியர்பேரில் பாடின பாட்டை அரங்கேற்றியது.

---

## அத்தியாயம் XXV

அக்ஷய ஸூ ஆவணி மீ 14உ (26-8-1746) முதல் அக்ஷய ஸூ ஆவணி மீ 21உ (2-9-1746) வரை பக்கம் 157—173.

குவர்னர் பெண்சாதி, ஆசிரியரை வரவழைத்துப் பேசி, தான் கொடுக்கவேண்டிய கடனுக்கு ஒரு பகுதியைக் கொடுத்தது.—ராணுவபடைகளை, கப்பலில் ஏற்றியது.—தொத்தேயிலே சென்னை குவர்னரிடம் அனுப்பியது.—கேட்கும் விஷயங்களை அவர் கொடுக்காமற்போனால் சண்டைக்குக் கூப்பிட தொத்தேயிலுக்கு ஏன் மெய்க்காப்பாளர்? லபூர்தொனே கௌரவத்தைப் பங்கம் செய்ய அதை தெரிந்து லபூர்தொனே வியாதியாய் இருப்பதாக பாசாங்குசெய்தது.—தன்னைவிட வேறு ஆரையும் தளகர்த்தனுக்க மறுத்தது.— ஆலோசனை சங்க கூட்டத்திற்கு வர மறுத்தது–குவர்னர்பெண்சாதிதுவிபாஷிக்கு சில பவழங்களை காட்டி, அதன் விலையை கேட்டது.–பின்பு அன்னபூரணய்யன், தானப்பமுதலியார், ஆசிரியர், இவன் சகோதாரரைப்பற்றிச் சம்பாஷித்தது.—லபூர்தொனே, காற்று மாறுதலுக்காக உழவர்

கரைக்குப் போனது.—சண்டை கப்பல்கள் பயணமானது.—ஆசிரியர் தெமரேயைச் சந்தித்தபோது அவர் சொன்னது.—லபூர்தொனேயுக்கு கும்பினியாரும் மந்திரியும் எழுத்துப்பட கொடுத்த உத்தரவு என்னவென்றால், இங்கிலீஷ்காரனை; கடலில் சண்டையிடுவது. சென்னையைப் பிடிக்கும்படி துய்ப்ளேக்ஸ் கேட்டபோது, மேல் ஆலோசனை சங்கத்தார் எழுத்துப்பட அந்த உத்தரவை கொடுக்கும்படி கேட்டார். அவர்கள் மறுத்துவிட்டார்கள். இப்படியாக, சென்னையை ஆளலாமென்கிற குவர்னர் கினு வியர்த்தமாயிற்று—லபூர்தொனே மேல் ஆலோசனை சங்கத்தாருக்கும் கட்டுப்பட்டவரல்ல. இதுவுமன்னியில் லபூர்தொனே பெண்சாதிக்கும் தொத்தேயில் பெண்சாதிக்கும் உள்ள பகையும் வேறொரு காரணம். இதை முன்னிட்டுதான் பராதிக்கு கப்பல் தளகர்த்தன் அதிகாரத்தை கொடுக்க, லபூர்தொனே மறுத்தார்.—துய்ப்ளேக்ஸ் தமக்கை மகன் கெர்ஜானோடு, தலைமை துவிபாஷி அலுவலைப்பற்றி, ஆசிரியர் சம்பாஷணை—குவர்னர் பெண்சாதி ஒன்பது நாளைக்கு திருவிழாவுக்கு அரியாங்குப்பத்தில் தங்க பிரயாணமானது.—கும்பினிக்குச் சொந்தமான சகலாத்துக்கட்டுகளை ஆசிரியர் வாங்கி, அது விஷயமாய் ரசீது கொடுக்க கொர்னேதுரையிடம் வாக்குவாதம்.—அரியப்பமுதலி ஆசிரியர் தர்பியை சரிசெய்துகொண்டு கூட்டு வியாபாரஞ்செய்ய கேட்டபோது, ஆசிரியர் மறுத்தது.—பிரஞ்சு சண்டை கப்பல்கள், சென்னையைத் தாக்கி குண்டுகளை போட்டு, நடுகடலுக்குப் போன சேதியை மயிலாப்பூர் உபதேசி தானப்பமுதலியாருக்குத் தெரிவித்த சேதியை குவர்னர் கேட்டு, கோபித்துக்கொண்டது.— சுகசிங்கு வியாச்சியத்தைப்பற்றி, குவர்னர் தானப்பமுதலியார் மூலம் ஆசிரியருக்குச் சொல்லி அனுப்புவித்து, பராதி, பர்த்தெலேமி இவர்களை சந்தித்து, அரியாங்குப்பத்துக்கு போனது.—ஏன் குவர்னர் லபூர்தொனேயைப் போய்ப் பார்த்தார்.— சில சகலாத்துகட்டுகளை ஆசிரியர் வாங்கினது.— போன் புரூயின் என்பவனுக்கு லபூர்தொனே எழுதிய கடிதத்தில், கோவளத்திற்கு எதிரே, இரண்டு இங்கிலீஷ் கப்பல்களைப் பிடித்ததாக எழுதியிருந்தான்.— ஹூஸ் என்பவன் பிடிபட்டு சென்னைக்குக் கொண்டுபோகப்பட்டான்.

---

## அத்தியாயம் XXVI

அக்ஷய ௵ ஆவணி ௴ 22௳ (3-9-1746) முதல் அக்ஷய ௵ ஆவணி ௴ 30௳ (11-9-1746) வரை, பக்கம் 175—191.

குவர்னரும் பராதியும் மறுமுறை, லபூர்தொனேயை சந்தித்தது.— சுகசிங்கு வழக்கு தீர்ப்பை அறிவித்து, குவர்னர் ஆமோதித்ததைப்பற்றி சந்தோஷமடைந்தது.— குலாம் உசேனிடமிருந்து, குவர்னருக்குக் கடிதம்.— அதில் ஒலாந்துகாரரை கடல் மார்க்கமாய் தாக்கினால்தான் தரை மார்க்கத்தில்

சண்டையிட்டு விரட்டி, அவர்கள் துறைமுகங்களை, பிரஞ்சுக்காரருக்குக் கொடுப்பதாக வாக்குறுதி.— ஒலாந்துகாரருடன் பிராஞ்சுக்காரருக்கு சண்டையில்லாததால், அப்படிசெய்ய குவர்னர் மறுப்பு.— பர்னெவால் பெண்சாதி, இங்கிலீஷ்காரர் சண்டைதுவக்கி பிரஞ்சுக்காரர் ஓடிவிட்டதால், ஏளனமாய்ப் பேசுகிறார்களென்று தகவல் கொடுத்தது.— குவர்னர், சென்னை சேதி கேட்டபோது, சென்னையின்பேரில் சண்டைக்கு போய், பின்வாங்கியதைப்பற்றி ஜனங்கள் ஏளனமாய் பிரஞ்சுக்காரரைப் பேசுவதை சொன்னபோது, குவர்னர் லபூர்தொனேயால் விடிந்தது என்று சொல்லிப் துர்ப்பாஷையாய்ப் பேசின பிறகு, எல்லாம் சீர்மையில் மந்திரியின் தப்பிதம் என்று சொன்னது.— ஆசிரியர், அந்த மந்திரி ஓரியின் தம்பி புல்விக்கு லஞ்சம் கொடுத்தபடியால், பெரிய அலுவலை வாங்கினானென்று சொல்ல, அமீத் இச்சக வார்த்தைகளால், குவர்னரை நிசமாய் ஸ்துதித்தது.— எப்படியாகிலும் சென்னையைப்பிடித்துதான் ஆகவேண்டுமென்றுகுவர்னரைஉற்சாகப்படுத்தியது. குவர்னர், பராதி, தெப்ரேமெனில் இவர்களோடு, லபூர்தோனையைப் பார்க்கப்போனது.— பிரஞ்சு கும்பினி குலாம் உசேனுக்குக் கொடுக்கவேண்டியகடனைப்பற்றி, பாபர்சாயபுவிடம்ஆசிரியர், சிபார்சு செய்தது— தானப்ப முதலியார், தனக்கு அனுகூலமாய் பதினெட்டு ஜாதி நாட்டாண்மைகாரர் கூறிய தீர்ப்பை மேல் ஆலோசனை சங்கத்தார் ஊர்ஜிதம் செய்யவேண்டுமென்று, ஆசிரியரைக் கேட்டுகொண்டது.— குவர்னரிடம், தானப்பமுதலியார் கேட்டுக்கொண்டதைத் தெரிவித்தபோது, அப்படிக்குச் செய்ய சட்டமில்லையென்று சொன்னார்.— இதற்குமுன் இரண்டுதடவை அப்படி நடந்திருப்பதை எடுத்து சொன்னதின்பேரில், அப்படி செய்ய சம்மதித்தார். தொத்தேலோடு, சென்னைக்குச் சண்டைசெய்யப் போகும்படி இருபது குதிரைகளை அனுப்பினார்கள்.— நபாப் கடிதம்: சண்டை செய்யக்கூடாதென்று, தான் சொல்லியும் கேளாமையால்தான் புதுச்சேரிபேரில் சண்டைக்கு வருவதாக எழுதினான்.— அதற்குத் தப்பித்துக்கொள்ளும்படியான மறுமொழி.— லபூர்தொனேயுக்கு ஒன்றும் வாங்கிக் கொடுக்கக்கூடாதென்று வகுர்னர் ஆசிரியருக்குகட்டளையிட்டது.— சென்னைக்குபோக, தொத்தேயிலுக்கு 16 குதிரைகளை சேகரித்து அனுப்பியது. நபாபுக்கு அனுப்பிய கடிதத்தின் நகலை உள்வைத்து, நிஜாம் உல்முலுக்கு, கடிதம் எழுதி உதவிகேட்டது— இரண்டு வருஷமாய் சேகரித்த தளவாடங்களையெல்லாம் கப்பலேற்றி, சென்னையில் அமல்தாரர்கள், பெரிய மனுஷர்கள் வந்தால் அவர்களிடம் பேசுவதற்கு ஆசிரியர் தம்பியை அனுப்பச்சொன்னார் குவர்னர்.— சென்னையைப் பிடித்ததும், அதற்கு லபூர்தொனே குவர்னராகவும், பராதி இரண்டாவதாகவும் இருக்கவேணுமென்றும், சர்வத்திராளும் அவர்களுக்குக் கீழ்ப்படியவேணுமென்றும் உத்தரவு பிறப்பிக்கப்பட்டது.

## அத்தியாயம் XXVII

அக்ஷய ஸு ஆவணி மீ 31௳ (12-9-1746) முதல் அக்ஷய ஸு புரட்டாசி ஙூ 11௳ (23-9-1746) வரை பக்கம் 192—208.

ஒரு கப்பல் பழுதாகிவிட்டபடியால், கப்பல்படை பயணம் தாமதப்பட்டது.— ஊர் வாயல்களெல்லாம் தாளிடப்பட்டது.— இரவில் கப்பல்படை பயணம்.— ஆசிரியர் சகோதரரை, குவர்னர், சென்னைக்கு அனுப்புகிறார்.— அவருக்குக்குவர்னர் செய்த உபதேசம்.— ஆசிரியர், தினசரி நடவடிக்கைகளை எழுதி அனுப்புமாறு ஆக்ஞாபித்தார்— ஆசிரியர் சகோதரர் புறப்பாடு.— அந்தச் சமயம் உண்டான சகுனங்கள்.— ஆசிரியரைக் குவர்னர் அழைத்து, தனக்கு ஏராளமான நஷ்டங்கள் ஏற்பட்டதாயும், அவற்றை நவாப் தக்க ஆசிரியரால் கூடுமானதை யெல்லாம் செய்யும்படிக் கேட்டார். ஆசிரியரின் தக்க உத்தாரம்.— சென்னையிலிருந்து என்னசேதி வந்தது என்று கேட்டுவிட்டு, மகமதியர்கள் என்ன பேசிக்கொள்ளுகிறார்கள் என்றும் கேட்டார்.— தற்காலம் இங்கிலீஷ்காரர்பேரில், மகம்மதியர் தீர்மானங்கள். நடந்ததை ஒரு புராணமாக எழுதி, மகம்மதியர் வீடுகளில் அதை வாசிக்கும்படிச்செய்ய ஆசிரியரை ஏவுகிறார். அந்த அலுவலை, மதனந்தபண்டிதருக்கு, ஆசிரியர் ஒப்புவித்தார்.— பராதி எழுதிய கடிதத்தின் சேதிகளை குவர்னர் சொல்ல ஆசிரியர் அவரை அணைகடந்த இச்சகவார்த்தைகளால் புகழ்ந்தார்.— சந்தோஷ மேலீட்டால், லொஸ், புறி என்பவர்கள் முன்னிலையில் குவர்னர், ஆசிரியரை முதுகில் தட்டிக்கொடுத்தார்.— பராதி மைலாப்பூர் அமல்தாரனிடம் பேசிய சேதியைச் சொல்ல, குவர்னர் மகமதியர்களைத் திட்டியது. தானப்பமுதலியாருக்கு உபதேசி மதுரநாயகம் எழுதின கடிதத்தில், சண்டை அனுகூலமாய் நடக்கிறதென்று எழுதிஇருந்தது.— மாயேயிலிருந்து வந்த கடிதத்தில் ஏழு கப்பல்கள் வந்ததாக சேதி — லபூர்தொனே கடிதத்தில் உள்ள சேதியைக், குவர்னர் ஆசிரியருக்குச் சொன்னபோது, அவருக்கும் ஆசிரியருக்கும் நடந்த ரசமான சம்பாஷணை.— தன்பேரில் புகழ்ச்சியாய்ப் புனைந்தபாடல்களைப், பாடச்சொல்லிக் கேட்டு குவர்னர் ஆனந்திக்கிறார்.— சென்னை கோட்டை பிடிபட்டதையும், அவ்வூர் குவர்னர், சின்னதுரை இவர்களைக் கைதியாக்கின சேதியையும் கடித மூலம் அறிந்து, குவர்னர் வெள்ளைக்காரர் சந்தோஷங் கொண்டாடினது.— சிறைகைதிகளை விடுவித்தது காசுக்கு ஒன்பது வெற்றிலையும், பணத்துக்குப்பனிரெண்டரை பலம் புகையிலையும் விற்கச்சொன்னது ஈஸ்வரன்கோவில் மதிலைக் கட்டிக்கொள்ளும்படி உத்தரவிட்டது.

## அத்தியாயம் XXVIII

அயகூஷ ஸ்ரீ புரட்டாசி மீ 12௳ (24-9-1746) முதல் அக்ஷய ஸ்ரீ புரட்டாசி மீ 19௳ 1-10-1746) வரை பக்கம் 209—228.

சென்னை நகரஸ்திதியை கண்டறிய துய்லோரானும், அர்மேனியரை வசப்படுத்த எலியாசும், பேர்ச்சியரை வசப்படுத்த தெலார்ஷிம், இங்கிலீஷ் மொழிபெயர்க்க புய்ரேலும், சுதேசிகளை வசப்படுத்த தாண்டவராயப்பிள்ளையையும், குவர்னர் அனுப்பினார்.— பாரிவேட்டை திருவிழா.— குவர்னர், சென்னையிலிருந்து, ஆசிரியர் தம்பியை வரவழைக்கும்படி கட்டளையிட்டது; காரணம் அவர் லபூர்தொனேயுடன் சிநேகமாயிருந்தது.—பராதி குவர்னரிடம் அவசியம் சிபார்சு செய்வதாகச் சொன்னது.— லபூர்தொனே கடற்படையின் ஒரு கப்பல், பங்காளத்திற்கு அனுப்பப்பட்டு இங்கிலீஷ்காரனால் பிடிப்பட்டு கங்கையில் மூழ்கிப்போனது.— லபூர்தொனே சொல்வதெல்லாம், தெப்ரேமெனியிடம் ஒப்புவிக்கும்படி, ஆசிரியர் தம்பிக்குக் கடிதம் குவர்னர் எழுதச் சொன்னார்.— மபூஸ்கான் கடிதத்துக்குக் குவனர் பதில்.— கும்பனி வர்த்தகர்களுக்குக் குவர்னர் கட்டளை அவர்கள் விண்ணப்பம்.— வாசுதேவ பண்டிதனைக் குவர்னர் கண்டித்தது.— எல்லா வெளியூர் சிநேகிதர்களுக்கும் குவர்னர் கடிதம்.— தோஸ்த் அலிகான் பெண்சாதி, சந்திராசாயபு வீட்டுக் கல்யாணத்திற்கு வருவதால், அவ்வரை எதிர்கொண்டு அழைக்க வேணுமென்று கடிதம் வந்ததற்கு, குவர்னர் நிபந்தனைகள். சாமராயரைக்கொண்டு, ஆசிரியர் பேரம் பேசினார்.— தோஸ்த் அலிகான் சம்சாரம் வருகை.— சமாதான உடன்படிக்கைபற்றி லபூர்தொனே கடிதம்.— குவர்னர் ஆவேசம்.— இரண்டாவது குவர்னர் வீட்டில் சகல வெள்ளைக்காரரும் உத்தியோகஸ்தர்களும் கூடி, சரித்திரத்தில் இடம்பெறத்தகுதிவாய்ந்த ஒரு தீர்மானத்தைச் செய்தார்கள்.— துய்ப்ளேக்ஸ் ஆட்சியில் நடந்த முக்கிய சம்பவங்கள் யாவும், சுருக்கமாய் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.— இந்தத் தீர்மானத்தை, தனக்கு ஆதாரமாய் வைத்துக்கொண்டு குவர்னர் லபூர்தொனேயுக்கு கடிதம் எழுதினார்.— அந்தக் கடிதத்தை விளக்கிச்சொல்ல மூன்று ஆலோசனைக் காரரையும் கப்பலில் ஏற்றி அனுப்பிவைத்தார்.

## அத்தியாயம் XXIX

அக்ஷய ஸ்ரீ புரட்டாசி மீ 19௳ (1-10-1746) முதல் அக்ஷய ஸ்ரீ புரட்டாசி மீ 28 ௳ (10-10-1746) வரை பக்கம் 228—241.

லபூர்தொனே சென்னையை இங்கிலீஷ்காரருக்கு விற்றுச் சரக்குகளைத் தன் இஷ்டம்போல் விநியோகஞ்செய்து குவர்னர் அனுப்பிய சாராயக்காரரை வெளியில் போகும்படி செய்ததால், மேல் ஆலோசனைச் சங்கம் கூடிற்று.— தன் சொல்படி லபூர்தொனே நடக்காவிட்டால், மேல் ஆலோசனை சங்கம் அவனைச் சிறையில் வைக்க உத்தரவிட்டது. அவன் அந்தக் கட்டளைக்குக் கீழ்ப்படிவானோ என்கிற பீதி எல்லா வெள்ளையருக்

கும் உண்டு.— லதூஷுக்கும், அஸ்தருவுக்கும் கல்யாண ஓலை. பதினொரு லக்ஷம் வராகனுக்குச் சென்னையை, இங்கிலீஷ்காரருக்கு விற்க லபூர்தொனே முடிவு.— துய்புவா உடன் சம்பாஷணை.— திருவான்கோடு மார்த்தண்ட ராசாவின் ஓலை.— அங்கிருக்கிற கிருஸ்துவ பாதிரியின் கடிதம்.— குவர்னரோடு சம்பாஷணை.— மேன்வில் என்பவனைச் சென்னைக்கு மேல் ஆலோசனைச் சங்கத்தின் கட்டளையை லபூர்தொனேயுக்குக் காட்டி, அவனைக் கீழ்ப்படியவைத்தது.— ஆனைக்கார சுகசிங்கு, ஏறம் நாய்க்கர் இவர்கள் எழுதிக் கொடுத்த நாலு சீட்டுகள்.—புவனகிரி வட்டாரத்திலுள்ள கிராமங்களின் குத்தகைதார் முத்தையப் பிள்ளை, பெருத்த நஷ்டப்பட்டதால், அவர் புதுவையில் வசிக்க அனுமதிக்கப்பட்டார். சென்னை சிறையிலிருந்து தப்பி ஓடிவந்த பொன்னு என்பவன் சொன்ன செய்தி: புதுவையிலிருந்து அனுப்பப்பட்ட உத்தியோகஸ்தர்களை விருந்துக்கு அழைத்து, அவர்களில் சிலரை, லபூர்தொனே சிறையில் வைத்தான். சீர்மையிலிருந்து மூன்று கப்பல்கள் வந்தன.— அவைகள் கொண்டுவந்த சரக்குகளின் விபரம், கடிதத்தின் செய்தி:— திருவேங்கட பிள்ளையோடு முத்தியப்பிள்ளையைச் சென்னைக்கு அனுப்புகிற விஷயமாய், குவர்னருடன் சம்பாஷணை.— நவாப், உசேன்சாயபு மாபூஸ்கான், சயந்திராயர் இவர்களுக்குக் குவர்னர் கடிதம் எழுதியனுப்பியது. அதுற்றில் ராசதந்திரமாய் நல்ல வார்த்தைகளும் மிரட்டல்களும் கலந்துயிருக்கிறது.— முத்தயப்பிள்ளை குடும்பத்தார். ஆசிரியர் வீட்டில் தங்கினது அவர் கணக்குகளைப் பரிசோதிக்க ஏற்பாடு செய்தது — லபூர்தொனே சென்னையை இங்கிலீஷ்காரரிடம் ஒப்படைத்து லஞ்சம் பெற்றது.— பிரான்சீஸ் பெரேராவின் மரணம். அவன் செய்த மோசம் கொடுமைகள்.— வைத்தியன் ஆறுமுகப்பண்டிதன் சொன்ன செய்தி:— லபூர்தொனே சென்னையை விற்றுப்போட்டு, பிரஞ்சுக்காரரை கோட்டைக்குள் அனுமதியாமல் தன்னிஷ்டம்போல் நடத்தின விஷயத்தில் ஆசிரியருடைய தீர்மானம்.

## அத்தியாயம் XXX

அக்ஷய ஹூ புரட்டாசி மீ 29 உ (11-10-1746) முதல் அக்ஷய ஹூ ஐப்பசி மீ 5 உ (18-10-1746) வரை பக்கம் 215 - 259.

லத்தூர் கல்யாணம் குவர்னருக்கு உற்சாகமில்லாததால் சோபிக்கவில்லை. ஆசிரியர் செய்த சன்மானங்கள் — ராணிப்பேட்டையில் மராட்டியர் பேரில் மமுதலிகான் சண்டைக்குப் போக முஸ்தீப்பு செய்யும்போது மாபுஸ்க்கான் அவனிடம் போனவிஷயமாய் கடிதம்.— வன்னிப்பேட்டை தீர்வை வசூல் விஷயமாய் சம்பந்திராயனுக்குக் கடிதம்.— தண்ணீர் பாய்ச்சல் விஷயமாய் காரைக்காலிலிருக்கும் கனகராய முதலியார் குமஸ்தா பிரகாசமுதலியாருக்குக் கடிதம்,— சென்னையில் லபூர்தொனே செய்த அடாவடி காரியங்களைச் சென்னையிலிருந்து வந்த மெல்வில் சொன்னான்.— கோட்டைக் கொடிமரத்தின் அடியில் 2 லக்ஷம் ரூபாய்களைப் புதைத்து வைத்ததை,

லபூர்தோனே கண்டு பிடித்து, கோபித்து, தான் எழுதி கொடுத்த உடன்படிக்கையைக் கிழித்துப்பிராஞ்சுக்காரரிடம் கோட்டையை ஒப்புக்கொள்ளும்படி கடிதம் எழுதினுன்.— சென்னையிலிருந்துவந்த மேல் ஆலோசனைச் சங்க அங்கத்தினர்களை வழிமறித்து திரும்ப சென்னைக்குப்போக உத்தரவாச்சுது சென்னையில் லபூர்தொனேயும் அவன் தம்பியும் அடித்த கொள்ளையின் தொகையைப்பற்றி, ஆசிரியருக்கும் குவர்னருக்கும் சம்பாஷணை.— புயல் அடிக்காதுயென்று எப்படி பட்டணவர்கள் நிச்சயம் செய்கிறுர்கள்— சோசியன் சொன்னது நிறைவேறினது.— சென்னையைத் தன் வசமாகவே வைத்துக்கொள்ள துய்ப்ளேக்ஸ் சம்மதித்தால், இங்கிலீஷ்காரருக்குச் சென்னையைத் திரும்பிக் கொடுக்கிறதில்லை யென்று லபூர்தொனே கடிதம் எழுதினுன்.— காரைக்காலில் ஆற்று அணையை வெட்டி தண்ணீரைப் பாய்ச்சின செலவை தாம் கொடுக்க முடியாதென்று ஆசிரியர் சொன்னது.— சென்னை கோட்டையைத் திரும்பி இங்கிலீஷ்காரருக்குக் கொடுக்கப்போவதாக லபூர்தொனே கடிதம் எழுதினதில் மேல் ஆலோசனைச் சங்கம் கூடிற்று.— கம்பெனி கப்பல்கள் மூன்றையும் புதுவையிலிருந்து உடனே சென்னைக்கு வரும்படி லபூர்தொனே உத்தரவு அனுப்பினுன். அதன்பேரில் அந்தக்கப்பல் ஓட்டிகளை எழுத்துப்பட ஒரு வாக்குமூலம் வாங்கிக்கொண்டு, மேல் ஆலோசனைச் சபை கூடியது. இப்படிக்கு நாளுக்கு ஒரு விதம் மாறி, மாறி கட்டளைகள் பிறப்பிப்பதின் காரணத்தை எல்லோரும் பேசிக்கொள்ளுகிறுர்கள், லபூர்தொனே கழுத்துக்கே அவன் கயிறு முஸ்தீபு செய்வதாகச் சொல்லுகிறுர்கள்,— ஆசிரியர் வீட்டுக்கெதிரேயுள்ள சேம்போல் கோவிலுக்கடுத்தாற்போல் உள்ள ஜவுளிக்கடைகளில் ராத்திரியில் இரண்டு கப்பல் ஊழியர்கள் திருட புகுந்தார்கள். புதுவை துறையில் இருக்கும் மூன்று கப்பல்கள் எசமான்கள் தாங்கள் குவர்னர் சொற்படி நடப்பதாக எழுதிக் கொடுத்தார்கள்.— சென்னையில் அடித்த புயல் காற்றினுல் உண்டான சேதங்களை விபரமாய் குருவப்பச்செட்டி கடித மூலம் தெரிவித்தான்— நாகப்பட்டணம் குவர்னர் ஒலாந்துக்காரருக்கும் பிரஞ்சுக்காரருக்கும் சண்டையென்று தமுக்குப் போடுவித்தான்.— புதுச்சேரி துறையிலிருந்த மூன்று கப்பல்களையும் தலைச்சேரிமேல் சண்டைக்குப் போகும்படி மேல் ஆலோசனைச் சங்கத்தார் முடிவுசெய்தார்கள்.— சென்னையில் அடித்த புயலினுல் லபூர்தொனே கப்பல் ஒன்று உடைந்து கோவளத்தில் ஒதுங்கிப் போனதாகவும், அதனுல் லபூர்தொனே விசனமாயிருப்பதாகவும் குருவப்பச்செட்டி கடிதம் எழுதினுன்.— லபூர்தொனே தான் செய்த தப்புகளுக்கு மன்னிப்பு கேட்டு குவர்னருக்குக் கடிதம் எழுதினுன்— அவனுக்கு நேர்ந்த கஷ்டங்களைப் பற்றி ஜனங்கள் பேசிக்கொள்வது.— கனகராய முதலியார் தம்பி தன் பேரில் எப்போதும் விரோதம் பாராட்டுவதைப் பற்றி ஆசிரியர் வருத்தம்.

# ஆங்கில மொழி பெயர்ப்பாளரின் குறிப்புகள்.

| பக்கம் | வரி. | விளக்கம். |
|---|---|---|
| 1 | 4 | ஆனந்தரங்கப்பிள்ளை மாமனார், சேஷாத்திரி பிள்ளை சகோதரர் காச்சான்பிள்ளை. |
| 2 | 39 | மங்கத்தாய், ரங்கப்பிள்ளையின் பெண்சாதி—நன்னாச்சி அவர் குமாரத்தி.— |
| 11 | 1 | ஆற்காடு ரூபாய் 320க்கு 100 வராகன் சமம் |
| 11 | 5 | சீட்டு என்றால் சன்மானம். |
| 14 | 13 | தமிழ் வருஷத்தில், முதல் மாதத்தில் வருகிற பௌர்ணமி. |
| 17 | 15 | யாசம நாய்க்கன், வெங்கட்டகிரி ராஜா.—கார் வேட்டி என்பது, தற்கால வேட்டி ஜமீன். |
| 17 | 17 | குவர்னர் மறுமொழி விளங்கவில்லை. ப்ராஞ்சு வார்த்தைகள்போலிருக்குது. |
| 18 | 33 | ஆசிரியர் தம்பி திருவேங்கடபிள்ளை குமாரன் அப்பாவு. |
| 35 | 39 | ஒரு அவணத்திற்கு 20,000 கொட்டைப்பாக்கு கள். |
| 37 | 21 | கலியாணத்திற்கும், புதுவீடு கட்ட அஸ்திவாரம் போடுவதற்கும், வான சாஸ்திரி உகந்த நேரம் முகூர்த்தம் எனப்படுவது. |
| 46 | 10 | சேஷாத்திரிபிள்ளை, ஆசிரியர் மாமனாராயிருக்க வேண்டும். |
| 46 | 17 | [illegible]த்துவாதி பிராமணர்கள், பண்டிதர் அல்லது [illegible]ராவ் என்கிற நாமம் உடையவர். |
| 46 | 32 | தட்டார வகுப்பைச்சேர்ந்த கம்மாளர், இடங்கை வகுப்பினர். பலிஜர் என்றழைக்கும் கவரைகள், தெலுங்கு வியாபாரிகள். வலங்கையைச் சேர்ந்தவர்கள். வேத சடங்குகள் விஷயமாய் இந்த இரண்டு ஜாதியாருக்கும் எப்போதும் சண்டை. |
| 53 | கடைசிவரி | தர்பார் நீதி மண்டபம் காணவந்தவர்களுடன் பேசி, நடைமுதல் விஷயங்களை முடிவு செய்கிறது என்று, இங்கு அர்த்தம். |
| 60 | 32 | இரண்டு மரக்கால் கொண்டது ஒரு கலம்—பழைய மரக்கால் 750 சதுர இன்ச் கொண்டது. |
| 78 | 33 | மொக்கா சட்டம் என்பது இங்கிலீஷ் துவனி, போர்துகீசுக்கள் உபயோகித்த வார்த்தை. |

| பக்கம் | வரி | விளக்கம் |
|---|---|---|
| 82 | 33 | தம்பூர் என்பது, பிரான்சு ராணுவத்தின் சின்ன உத்தியோகஸ்தர்களுக்குச் செய்யும் மரியாதை. |
| 83 | 16 | தம்பூர் ஓ உமாம் என்பது பிரான்சு ராணுவத்தில் மேல் உத்தியோகஸ்தருக்குச் செய்யும் மரியாதை. |
| 89 | 7 | நாலு கோட்டுடையாத தேவன்; சிவகங்கை ராசா. |
| 89 | 8 | நந்தகோபால் வம்சம்— மாடுகளை மேய்க்கும் வம்சம்: ஆசிரியர் சாதி.— |
| 101 | 22 | இன்னுசி; Ignace என்னும் பிரான்சு வார்த்தையின் திரிபு — |
| 101 | 39 | மதாம் ஓலாக்கு; Madame Hollaque. இவள் யார் என்று இன்னும் புலப்படவில்லை. |
| 107 | 21 | முகக்கட்டையைப் பிடித்து ஹிந்துக்களில் கடையிலுள்ளவர்கள் கெஞ்சி கேட்கும் மாதிரி. |
| 119 | 17 | காப்பிரிகள் தென்கிழக்கு ஆப்ரிக்கா சுதேசிகள் போர்ச்சுகீச்காரரும், இங்கிலீஷ்காரரும், பிரான்சுக்காரரும், இவர்களை இந்தியாவுக்குக்கொண்டுவந்து ராணுவத்தில் சேர்த்திருந்தார். |
| 120 | 18 | சா அதாத் பந்தர் என்பது, இப்போது கோவளம் என்று அழைக்கபடும் ஒரு கிராமம், உப்பு அளம், சமுத்திரக்கரையில், சென்னைக்கு 20 மைலில் உள்ளது ஒஸ்தான்து, கிழக்கிந்தியா கம்பனி, அவ்விடத்தில் ஒரு கோட்டை கட்டினதாகவும், அது இடிந்துபோகவே, அனுவர்திகான் அவ்விடத்தில் ஒரு புது கோட்டை கட்டியதாகவும், ஒரு பழைய புத்தகம் கூறுகிறது.— |
| 124 | 2 | பிராகு என்கிற அளவு விஷயமாய், புதுச்சேரியிலும், மற்ற இடங்களிலும் விசாரித்ததில் சரியான விபரம் ஏற்படவில்லை.— |
| 134 | 33 | Legre என்பது 580 litres, அல்லது 126, 975 காலன்.— |
| 149 | 9 | கலைபாரம் என்றால் இந்தக் கைக்கு அந்தக்கை வியாபாரம். ஒருவரை மற்றொருவர் நம்பாமல், ஒருவர் கையில் பணமும் மற்றொருவர் கையில் சாக்கும் வைத்துக்கொண்டு வியாபாரம் செய்வது. இது பேர்தான் Nicober வியாபாரம். |

| பக்கம் | வரி | விளக்கம் |
|---|---|---|
| 151 | 27 | மதாம் அல்பேர்—துய்ப்ளேக்ஸ் மாமியார் |
| 168 | கடைசிவரி | இவ்விடத்தில் ஆறரைப் பக்கங்கள் வெள்ளை யாயிருப்பதால், குவர்னர் சொன்ன செய்தி தெரியவில்லை |
| 171 | 17 | நரியா டங்கசாலை—சென்னையில், சிந்தாத்திரி பேட்டைக்குத் தென்மேற்கில் உள்ள இட கோட்டையின் சமுத்திர சுவரிலிருந்து, நேராய் ஒன்றரைமைல் தூரத்திலுள்ளது |
| 173 | 28 | மோக்கா கட்டம் என்பது இங்கிலீஷ்துணி இந்தியாவில் சாதாரணமாய் விற்கப்படுவ தற்கு முன்பு அது மாக்காவில் விற்பனை ஆகிவந்தது. மொக்காவிலிருந்து அந்தத் துணியை அராபியர்கள் இந்தியாவுக்குக் கொண்டுவந்தார்கள் |
| 176 | 18 | காயல், தூத்துகுடி, குலசேகரபட்டணம்-தற் போது தின்னவேலி பாஸ்ட்திக்கு, மன்னார் குடாக்கடலில் இருந்த துறை முகங்கள்—முதல் துறைமுகம், மார்கோ போலோவின் காயில் என்பது, பெரிய பட்டணமாயிருந் தது தூத்துகுடி ஒன்றுதான் இப்போது. முக்கியத்துவம் வாய்ந்தது. |
| 177 | 17 | மதாம் பெர்னெவால்—துய்ப்ளேக்ஸ் பெண் சாதிமுதல்புருஷன் வேன்சான் என்பவனின் மூன்ருவது குமாரத்தி மரிரோஸ் என்று பெயர். இவள் Francis Cale de Berneval என்பவனைக் கல்யாணம் செய்துகொண்டாள். இந்த பர்னெவால், இங்கிலீஷ் கிழக்கிந்திய கம்பனியின் வியாபாரி. அந்தச் சமயம் சென்னை கோட்டையில் குடியிருந்தான். |
| 190 | 14 | வக்கீல்—அதிகாரம் பெற்ற தரணி |
| 210 | 25 | அப்பாவு—ஆசிரியரின் தம்பி மகன் 1737 ஹ் பிறந்தவன். அவனுக்கு நன்ருச்சி ஒரு வரு ஷம் இளையவள் |
| 246 | 16 | மாஜிஸ்ரேட் அதிகாரமும், போலீஸ் அதிகாரி உத்தியோகமும் சேர்த்துப் பார்க்கும் உத்தி யோகஸ்தர். கொத்வால் எனப்படுவார் |
| 259 | 7 | Coja petrus Uscan ஒருமகாராச அர்மேனியன். சென்னையில் Marmdouq பாலம் கட்டுவித் தான்—அந்தப்பாலத்தை சாஸ்வதமாய் பழு துபார்க்கவும், சின்ன மலையில் மடங்கள் கட் டவும் ஒரு தொகை கொடுத்தான். |

பிரத்தியேகமான

# ஆனந்தரங்கப்பிள்ளை

# தினப்படி சேதி குறிப்பு.

## சொஸ்த லிகிதம்

### இரண்டாம் புத்தகம்

17.6 ஆ அவ்ரில் ௴ 23 ௳க்கு அக்ஷய ௵ சித்திரை ௴ 14 ௳ சனிக்கிழமை.

இன்றையதினம் சாயங்காலம் ஐந்து மணிக்கு, செங்கழுநீர்ப்பட்டு, பாளையத்திலிருந்து சேஷாத்திரி பிள்ளையவர்கள் ஒரு கடுதாசி அனுப்புவித்தார். அந்தக் கடுதாசியிலே நாளது ௴ 11 ௳ காலமே நாச்சன்பிள்ளை யவர்கள் குமாரன் எட்டு மணிக்குள்ளாகக் காலம்பண்ணிப் போனான் என்று எழுதி வந்தது. அந்தச் சேதி கேட்டு மெத்தவும் தாபந்தப்பட்டது ...

1746 ஆ அவ்ரில் ௴ 24 ௳க்கு அக்ஷய ௵ சித்திரை ௴ 15 ௳ ஆதிவாரம் நாள்

பதினொரு மணிக்கு (ரா) துரையவர்கள் வீட்டிலே நடந்த சேதி யென்னவென்றால்: சாவடியிலே கிடங்கிலே வைத்திருந்த கடைக்காரருக்குள்ளே சிறிது பேர் உடன்படிக்கைப் பண்ணிக் கொண்டு போனவர்களல்லாமல் பின்னையும் நாலுபேருமிருந் தார்கள். அந்த நாலுபேரும் நாளது ௴ 11 ௳ சீட்டெழுதிக் கொடுத்தபடியினாலே அன்றையதினம் விடுதலைபண்ணுவித்த சமயம் இல்லாமற்போனபடியினால் பின்னையும் இன்றைய தினம் துரையவர்களுக்குச் சொல்லி விடுதலைபண்ண வேணு மென்று சொல்லினவிடத்திலே (ரா) துரையவர்கள் சொன்னது:

செவிட்டுராமன் மகன் கோவிந்தனைப் பார்த்து இப்படியெல்லாம் நீங்கள் பண்ணினீர்களே, இப்போது உங்களுக்கு வந்த அவசியம் என்னவென்று கேட்டதற்கு அவர்களும் அவனும் சொன்னது: எங்களுக்கு மெத்தவும் நஷ்டம் வந்து நொந்து போனபடியினாலே புத்தியில்லாமல் இப்படியெல்லாம் நடப்பித்துக்கொண்டோம் என்று சொன்னான். அதன் பிறகு நாமும் கும்பினீர் வர்த்தகரும் துரையவர்களுக்கு மனுவாய்ச் சொல்லி, கடைக்காரருக்குப் புத்தியில்லாமல் நடந்துகொண்டதைத் தாங்களல்லவோ மனம் பொறுக்கவேண்டியது. பின்னையும், ரொம்பவும் சொல்லவேண்டிய மனுவெல்லாம் சொல்லி அந்த நாலு பேரையும் காவல் விடத்தக்கதாகச் சொல்லி விடுதலை பண்ணுவித்தோம். அதன் பிறகு, முன்பாய் விசேஷஞ் சொன்ன தேவான் தாண்டவராயனும் கோவிந்தன் தம்பி ரங்கனையும் விடுதலைபண்ணுவிக்கவேண்டுமென்று கும்பினீர் வர்த்தகரும் இந்த நாலுபேர் கடைக்காரரும் (ர) துரையவர்களை மனுவாய்க் கேட்டுக்கொண்டார்கள். அதற்கு (ர) துரையவர்கள் சொன்னது: நமக்குக் கொடுக்கவேண்டிய சம்மதியானபடியினாலே கடைக்காரர் சம்மதிக்குச் சம்மதிபண்ணிக்கொண்டு விட்டுவிட்டேன். இது இந்த இரண்டுபேர் சம்மதியும் என்னுடைய வேலையல்ல, நீங்கள் கடைக்காரர் எல்லோரும் போய் கோன்செல்காரருடனே எல்லாம் சொல்லிக்கொண்டீர்கள். அந்த நியாயம் வந்து ரங்கப்பிள்ளையின் பேரிலே நீங்கள் சொன்னபடியினாலே அது ரங்கப்பிள்ளையைச் சேர்ந்த காரியம் அல்லாமல் நமக்குக் காரியமில்லையென்று சொன்னார். அதன் பிறகு நான் (ர) துரையிடம் போய் இந்த மனு என் நிமித்தியம் கொடுக்கவேணும். அவர்களுக்கு ஏதாகிலும் உபத்திரவம் வந்தால் நான் செய்வித்தாற்போலேயிருக்கும். ஆனபடியினாலே, என் பேரிலே தயவுபண்ணி அவர்களுக்குக் காவல் இல்லாதபடிக்கு உத்தாரங் கொடுத்தனுப்பவேணுமென்று சொல்லிக்கொண்டதற்கு அந்தபடிக்குத்தானே தயவுபண்ணி அந்த இரண்டு பேரையும் காவல் விடுதலைபண்ணிவிடச் சொல்லி உத்தாரங்கொடுத்தார். பிறகு, கடைக்காரரும், கும்பினீர் வர்த்தகரும், நானும் அவரவர் வீட்டுக்கு அவரவர்களையனுப்பிவிட்டுப் பனிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்துவிட்டோம்.

1746 ௵ அவ்ரில் ௴ 25 ௳ க்கு அக்ஷய ௵ சித்திரை ௴ 16 ௳ திங்கட்கிழமை

மத்தியானம் ஒரு மணிக்கு, செங்கழுநீர்ப்பட்டுப் பாளையத்திற்கு மங்கத்தாயும் நன்னாச்சியும் சென்னப்பட்டணத்தி

லிருந்து வநதிருந்த ஷெ உறவு வேங்கடாசல பிள்ளையும் நார்சன்ன பிள்ளை குமாரன் காலம் பண்ணிப்போனதற்கு னெவவரத் தக்கதாகப் பயணம் சாகிப்போனார்கள்.— நாங்கள் இரண்டு பேரிலே ஒருத்தர் போகவேண்டிய காரியம் இவ்விடத்திலே யிருக்கிற காரியங்களை முன்னிட்டுப் போகக்கூடாமல் போச்சுதென்று சேஷாத்திரி பிள்ளையவர்களுக்கு மாத்திரம் பரிசு காகிதம் உபகாரமாய் எழுதியனுப்பிவித்தோம்.

1746 ஆ அவ்ரில் மூ 27 உக்த அக்ஷய ஸு சித்திரை மீ 18 உ புதன்கிழமை.

இற்றைநாள் காலமே நான் குவர்னதோர் வீட்டுக்குப் போய் குவர்னதோரைக் கண்டு பேசிவிட்டு நான் வந்து சாவ்காசமாய் பாக்குக் கிடங்கிலே உட்கார்ந்து கொண்டிருக்கையில் அருணாசல செட்டியாரும், துரை கணக்கு ரங்கப்பிள்ளையும் வந்து ஊரிலே அவரவர் சொல்லிக்கொள்ளுகிற விசேஷங்களும், கப்பல்கள் வருகிற சாடையுண்டாய் அதற்குத் தக்கதாய் நடக்கப்பட்ட காரியங்களும், கடைக்காரர் பேரிலே (௩) துரையவர்களுக்கு வரவேண்டிய பணம் கேட்டால் அவரவர்கள் நிலுவையைச் சாக்கடித்துப் பேசுகிறப் பேச்சுகளும் இப்படிப்பட்ட விசேஷங்கள் பேசிக்கொண்டிருக்கையில் சாவடி கணக்கு அழகப்பிள்ளை நாலு பேரையும் துரையவர்கள் அழைப்பித்தபடியால் நாமிருக்கிறதற்கு நேராகப் போனபோது கண்டு நாங்கள் மூன்று பெரும் பேசிக்கொண்டது நெல்லுப் பிராதுகள் ஏதாகிலும் உண்டாயிருக்கும். அதனாலேதானிவர்கள் போகிறார்களென்று சொல்லிக்கொண்டிருந்தோம். இப்படியிருக்கையில் சாவடி கணக்கு அழகப்பிள்ளை, ரங்கப்பிள்ளை முருகப்பிள்ளை, திருச்செல்வராயன் இவர்கள் நாலு பெரும் வந்து உட்கார்ந்தார்கள். துரையவர்கள் அழைப்பித்து இப்போ உத்தாரங்கொடுத்ததென்னவென்றால்: இனிமேல் யாராகிலும் தானியம் கொண்டுவந்தால் எல்லாம் கடையிலே போட்டு விற்றுப் போட்டுவிடுகிறது. ஆராகிலும் சாப்பாட்டுக்குக் கொண்டு வந்தால் அதிலே பாதி கடையிலே போட்டு விற்றுப் போட்டுவிடுகிறது என்றும் வீட்டுக்குப் போகிறதற்கு உள்படநம்முடைய உத்தாரம் வந்தால் விடுகிறது. மற்றப் பேர் யாருடைய உத்தாரமும் கவையில்லையென்று சொல்லிப் போகச் சொன்னார்களென்று சொன்னார்கள். அதிலே நானிருந்து கொண்டு இது இப்படி பிராதுகள் உண்டான நிமித்தியம் நாலு பேரையும் அழைப்பிக்கச் சொல்லவும் இப்படி நடப்பானேன் என்று கேட்டதற்கு முருகப்பிள்ளையிருந்துகொண்டு

தன்னைப்பற்றி இந்தப் பிராது உண்டானதாய்ச் சொன்னான்; அப்போது நானிருந்துகொண்டு நல்லதாச்சுது என்று லோகாபிராமமாய் பேசிக்கொண்டு போகச் சொன்னோம். அவர்கள் போனபிற்பாடு தானப்பமுதலியாரைத் துரை அழைப்பித்து தரகர்களை அழைப்பிக்கச் சொன்னவிடத்திலே குளுப்பய்யனை அழைப்பித்து, துரையவர்கள் முன்பாக நிறுத்திக் கேட்ட விடத்திலே தரகன் சொன்னது: மணியக்காரர்களளந்து கொள்ளுகிற நெல்லுக்குக் கால்படி ஏறத்தானே அளந்து கொள்ளுவார்கள் என்று சொன்னான். அதைச் சின்னமுதலியார் துபாசித்தனம் பண்ணவர் கால்வாசி ஏறத்தானே அளந்து கொள்ளுவார்களென்று சொன்னான் என்று சொன்னார். பிக்ஷைக்காரருக்கும் மகமைக்காரருக்கும் அள்ளுபோடுகிறதுண்டா என்று கேட்டார். மகமைக்காரர் வெகுநாளாய் நடக்கிறது. பிக்ஷைக்காரர் வந்து நின்றால் ஒருபிடி நெல்லும் போடுங்கோளென்று சொன்னான். அந்தப் பேச்சுக்கு, துரை சொன்னது: இனிமேல்பட்டு பிக்ஷைக்காரருக்கும் சில்லரை செலவுகளுக்கும் மகமைக்காரருக்கும் கொடுக்கக்கூடாது. அவரவர்கள் கொடுக்கட்டும். நீங்களாய் பலவந்தமாய் கொடுக்கும்படி சொல்லவேண்டியதில்லை. ஆரானாலும் சரி. மற்றப் படிக்கு* ... ... ... ... ... ... ... ...
அல்லாமல் எதிராட்சியாய் அளந்தால் அதற்கு எந்த ஆக்கினையும் பண்ணுவோம் என்று தாக்கீதுபண்ணிப் போகச்சொன்னார். அந்தச் சமயத்திலே சாவடி கணக்கனாயிருக்கிற மூசே துப்போசேத்து வந்தான். அவனைக் கண்டவுடனே காத்தாலே சின்னதுரை கொண்டுவந்து கொடுத்த பெத்திஸியோனை (Petition) எடுத்துப்போட்டுப் படித்து அதிலேயிருக்கிற வயணம்: எல்லாம் மூசே துபோசேத்துடனே சொன்ன வயணத்தையெல்லாம் எழுதக்கூடாதபடியினாலே கொஞ்சம் சிறிது வார்த்தைகள் மாத்திரம், பலனாயிருக்கிற வார்த்தைகள் மாத்திரம், எழுதினது என்னவென்றால் முத்திரை சாவடியிலே மணியக்காரர் ஒவ்வொருத்தர் வருகிற நெல்லை பத்துக்கும் இருபதுக்கும் அளந்துகொள்ளுகிறார்களென்றும் அளந்துகொள்ளுகிற அளவு கால்வாசி கூடி வரத்தக்கதாக அளந்துகொள்ளுகிறார்களென்றும், பிரியவேளையிலே அவரவர்கள் கையிலே வராகன் ஒன்றுக்கு இரண்டு பணம், மூன்று பணம், நாலு பணம் அந்தந்த வேளைக்குத் தக்கதாகப்போலே நெல்லுகொள்ள வந்தவர்கள் கையிலே வாங்கிக்கொண்டு தரகனுக்குச் சொல்லி அளந்துவிடச்சொல்லுகிறார்களென்றும், இந்த ஆதாயத்திலே மூசே துபோசேத்துக்கு இரண்டு பங்கும் மணியக்காரர் ஒரு

---

* கிழிந்திருக்கிறது.

பங்குமாக எடுத்துக்கொள்ளுகிருர்களென்றும், இதல்லாமல் புடவைக்காரருக்கு என்றும் அய்யங்காரருக்கு என்றும் ஒவ்வொரு பொதி நெல்லு இதிலே சரிகட்டிப் போடுகிருர்களென்றும், இதனுலே நெல்லு கொண்டுவருகிற வர்த்தகருக்கு அளவிலே வருகிற நஷ்டத்திலேயும் பிச்சைக்காரருக்கு என்றும் சிறிது செலவு கொடுக்கிற நஷ்டத்திலுலேயும் தாங்கள் தாங்கள் கொண்டுவந்த நெல்லைக் கும்பனீருக்கு உண்டான தீர்வையைக் கொடுத்துப்போட்டு, தங்கள் தங்கள் மனதின் படியே விற்றுக்கொள்ளுகிறது. இடம்பாடில்லாததினுலேயும் வெளியிலேயிருந்து தானியம் கொண்டுவருகிற வர்த்தகர் இந்தப்பட்டணத்திலே இப்படிப்பட்ட நியாய தப்பிதங்கள் நடக்குதென்று தானியம் கொண்டுவராததினுலே கொள்ளக் கிடக்காமல் சனங்கள் அங்கலாய்க்கிருர்களென்றும், இவர்கள் இந்தப் பிரயோசனத்தைக் குறித்து மணியக்காரரும் மூசே துப்போசேத்தும் பண்ணுகிற பொல்லாப்பு இப்படியிருக்கிறது என்றும், மணியக்காரரர் நாலுபேரிலே மூன்றுபேர் நல்லவர்களென்றும் முருகப்பிள்ளை ஒருத்தன் பொல்லாதவனென்றும், அவன் நடத்தப்பட்ட அநியாயங்கள் அனேகமுண்டு என்றும், மூசே துப்போசேத்து கணக்கப்பிள்ளை பெரியண்ணமுதலி என்கிறவனும் துபாசி கனகப்பனென்கிற செட்டிப்பிள்ளையாண்டானும் வெளிகளிலேயிருந்து ஊருக்கு வருகிற தானியத்தைத் தங்கள் பேருக்கு அழைப்பித்துக்கொண்டு அதை விலை ஏறக்குறைய விற்று அதிலே வருகிற பிரயோசனத்தைக் கொண்டுபோனுர்களென்றும் அருணசல செட்டி துரைக்கணக்கு ரங்கப்பிள்ளை பேருக்கு ஐந்நூறு வராகன் தானியம் கொண்டுவந்து ஊரிலே குடியிருக்கிருர்களென்றும், இப்படி பின்னையும் பல சம்மதிகளாய் எழுதி, இந்தச் சம்மதியையும் மூசே துபோசேத்து (M. de Bausset) க்குப் படித்துக் காண்பித்து இப்படி சாவடியிலே இந்தக் காரியம் ... அநியாயம் போனதென்று * ... ... ... ... ... அறுபத்து நாலுகாசிலே ஒரு காசாகிலும் நான் வாங்கினதற்கு ... ... ...யானுல் கப்புசினுக்கு முன்னூறு வராகன் அபராதமுங் கொடுத்து உத்தியோகமும் பரிகரித்துக்கொண்டு போய்விடுகிறேனென்றும் கெட்டியாய்ச் சொன்னுர். அதன் பேரிலே துரையிருந்துகொண்டு அந்தப் பேச்சை நிறுத்திப் போட்டுமூன்றுபேர் சாவடி மணியக்காரர் நாலுபேருக்குள்ளே மூன்றுபேர் நல்லவர்களென்றும், முருகப்பிள்ளை மாத்திரம் பொல்லாதவனென்றும் எழுதினுர்களே, அது மெய்தான். அதல்லாமல் மூசே லேனுவார் காலையிலேயும் அனேகங் குற்றங்கள் செய்து தள்ளுபடியானவ

* கிழிந்துபோய்விட்டது.

னென்றும், அந்தப் பெத்திஸியோனில் எழுதியிருந்தது மெய் தான். அவன் பொல்லாதவனென்றுமே யென்றும், பின்னையும் சிறிது உதாசீனமான வார்த்தையாய்ச் சொல்லி அவனைத்தொட்டு இல்லாத அனேக காரியங்கள் எல்லாம் உண்டாகிறதென் றும் துரையவர்கள் சொன்னதற்கு மூசே துபோசேத்தும் (M. de Bausset) அவர் சொன்னப்போலேதானே மெய்தான் அவன் மெத்த பொல்லாதவன், அப்படிப்பட்டவன், இப்படிப் பட்டவன், அவன் நடத்தையெல்லாம் மகா ஆகாத நடத்தை யென்றுங்கூடத்தானே சொன்னான். அதின்பேரிலே கடைசி யிலே குப்பினீர் தீர்வை விட்டுவிடவேணுமென்றும், அந்தப் பெத்திஸியோனில் எழுதியிருந்ததுவே கும்பினிருக்கு நஷ்டம் பண்ணவேணுமென்று சம்பாகோவில் பாதிரிகள் யோசனை பண்ணினார்களென்று துரை சொன்னதற்கு மூசே துபோசேத்து அவர்கள், இதுவா சொல்லுவார்கள்! இன்னும் அனேக விசித் திரமெல்லாம் சொல்லுவார்களென்றும் சொல்லிவிட்டு நான் இப்படிப்பட்ட அபாண்டம் போடுகிற உத்தியோகத்திலே இனிமேலிருக்கிறதில்லையென்று துரையை அனுப்பிவித்துக் கொண்டு வீட்டுக்குப் போய்விட்டார். இப்படியெல்லாம் நடந்த சேதியை இதற்கு முன் முருகப்பிள்ளை அறியாததினா லே துரையழைத்து தானியச்சம்மதிக்கு அவரவர்கள் கொண்டு வருகிற நெல்லைக் கடையிலே போட்டு விற்கிறதேயல்லாமல் வீட்டுக்குக் கொண்டுபோகவேணுமானால் நம்முடைய சீட்டில் லாமல் ஒருத்தருக்கும் ஒரு மணியளவிலேயாகிலும் பின்னை யார் சொல்லியனுப்பினாலும் விடத்தேவையில்லையென்று சொன்னார். அந்த உத்தாரத்தை முருகப்பிள்ளைதான் ராத் திரியிலே கபுறுபோய்ச் சொல்லுகையில் மூசே துபோசேத்து வெள்ளைக்காரருக்கு, தினம் ஒன்றுக்கு முன்னூறு பொதி நானூறு பொதி விட்டுவிடுகிறாரென்று சொன்னதின்பேரிலே துரையவர்கள் இந்த உத்தாரங்கொடுத்ததாய்* ... ... போகிற பழியைத் தன்மேலே போட்டுக்கொண்டு பிரதிஷ்டை கோசரம் உள்ள தங்கள்பேரில் எழுதிப்போட்ட பெத்திஸி யோம் என அறியாமல் தான் மேல்போட்டு* ... ... ... சொன்னார்* ... ... ...செய்தாலும் அது தான் செய்ததாய் மேல் வாங்கிக்கொண்டு அந்தப் பழியை தான் ஏற் றுக்கொண்டு ஊருக்குள்ளே பொல்லாதவனென்று எண்பித்து * ... ... தெரிகிறது. இவனுடைய பொல்லாத நடத்தையும் பொல்லாத காரியம்* ... ... ... ... ... ... கடுதாசியாகிலும் செல்லுபடியாகுமானபடி பி னாலே அதை விஸ்தரித்து நான் எழுதவில்லை. அப்பால் துரை யவர்கள் தானப்பமுதலியாரைப் பார்த்து நம்முடைய கணக்கு

* கிழிந்திருக்கிறது.

ரங்கப்பிள்ளையைக் கேட்கச்சொன்னது அருணசலசெட்டி, ரங்கப்பிள்ளை இவர்கள் இரண்டுபேரும் பேருக்கு ஐந்நூறு வராகன் நெல்லு கொண்டுவந்து கட்டினது மெய்தானு வென்று கேட்கச் சொல்லிச் சொன்னுர். அதற்கு, துரை கணக்கு ரங்கப்பிள்ளை சொன்னது: தானியம் கொண்டு வந்து கட்டிவைத்தால் பட்டணத்துக்குச் சகாயமேயல்லாமல் அதைப்பற்றி தாட்சியில்லையே அல்லாமலும் நாங்கள் ஏதா கிலும் கும்பினீர் தீர்வை கொடாமல்படிக்குத் திருட்டளவாய்க் கொண்டுவரவில்லையே, அல்லாமல் திருட்டு உடைமை வாங்க வில்லையே. எங்கள் பணத்தைப் போட்டுக்கொண்டு கும்பினீ ருக்கு உண்டான தீர்வையைக் கொடுத்துவிட்டுக் கட்டினதே யல்லாமல் மற்றத் திருட்டு உடைமை வாங்கினதல்லவே. ஆகி லும்பேருக்கு நாங்கள் ஐந்நூறுவராகன் நெல்லுகொண்டு கட் டினதேயில்லை. வெளியிலேயிருக்கிற ரெட்டி ஒருத்தன் என் பேருக்கு நூற்றியைம்பது வராகனுக்கு நெல்லு கொண்டு வந்து கட்டினதைக் கிடங்கிலே போட்டுவைத்து இரண்டு மாசத்திற்குப் பிறகு, மூன்று மாசத்திற்குப் பிறகு விற்றுக் கொண்டுபோவான். இதல்லாமல் என் மனவரச் செலவுக்கு முப்பது சட்டை நெல்லு வந்தது. அதற்கு மசே துபோசேத்தை உத்திரவுகேட்டு உண்டான தீர்வையைக் கொடுத்துவிட்டு எடுத்துக்கொண்டு போனேன். அருணசல செட்டியும் அப்படித்தானே வீட்டுக்கு வேணுமென்று ஐம்பது வராகன் நெல்லு மசே துபேசேத்தை உத்தாரங் கேட்டு, தீர்வை கொடுத்துவிட்டு வீட்டுக்குக் கொண்டுபோனுன். இது தவிர, ஏதாகிலும் அதிசயம் உண்டாயிருந்தால் நாங்கள் கும்பினீருக்கு நேரஸ்தனுய்ப் போகிறேும். சுயமாய் எங்கள் பேரிலே அபாண்டமாய் எழுதின பேர்களை அதை விசாரித்து அவர்களை யாகிலும் அதுக்கொத்தபடி ஆக்கினைபண்ணி வைக்க வேணுமென்று அருணசல செட்டியும் ரங்கப்பிள்ளை யும் சொன்னுர்கள். அதற்கு, துரை யிருந்துகொண்டு தானப்ப முதலியாரைப் பார்த்து இவ்வளவுதானு, இதின் பேரில் இன்னம் அதிசயங்கள் உண்டா, இது நன்ருய் விசா ரித்து வந்து சொல்லச்சொன்னுர். இதல்லாமல் சாவடி தரகர் மணியக்காரர் எல்லாரையும் அழைப்பித்து இனிமேல் எல்லா ருக்கும் அளவு சமனுய் அளக்கிறதேயல்லாமல் எத்திசாட்சி யாய் அளக்கிறதில்லையென்றும் தானியம் கொண்டுவந்து விற்கிறவர்கள் சம்மதித்து ஏதாகிலும் கொடுத்தால் மற்றது கொடுத்தால் வாங்கிக்கொள்ளுகிறதே யல்லாமல் பலவந்தமாய் வாங்குகிறதில்லையென்றும் * ... ... ... ... ... ... ... ... ... ...அதன் பிறகு (ௗ) துரை

* கிழிந்திருக்கிறது.

யவர்கள் எல்லாரையும் எச்சரிக்கை செய்து அவரவர்களை வீட்டுக்குப் போகச் சொல்லச்சொன்னார்.

1746 ஆ அவ்ரீல் மீ 29 உ க்கு அக்ஷயஞூ சித்திரை மீ 20 உ இற்றைநாள் வெள்ளிக்கிழமை தினம்

வேங்கடேசய்யன் துரையுடனே போய் கும்பினீருடைய சொத்துக்களை மோசம் செய்துகொண்டுவருகிறதாக ராமய்யன் என்கிறவன் சின்னப்பய்யனுடைய கூட்டாளியாக இருந்துகொண்டு இப்படிப்பட்ட காரியம் நடப்பிக்கிறான் என்று துரையுடனே போய் சாயங்காலம் ஐந்துமணிக்கு குவர்னதோரண்டையில் சொன்னான்.

இந்தநாள் வேங்கடேசய்யன் துரையுடனேபோய் சந்திர முத்துப்பிள்ளையையும் தடி அருணாசலசெட்டி கணக்கப் பிள்ளை முத்துக்குமரப்பிள்ளையையும் அழைக்கப்போனவிடத்திலே முத்துக்குமரப்பிள்ளை என்கிறவன் வானூர் புளிச்சப் பள்ளத்திற்கு ஓடிப்போய்விட்டான். சந்திரமுத்துப்பிள்ளை ஊரிலேதானே மறைந்திருந்தான். அந்தச் சேதி துரை கணக்கு முருகப்பிள்ளை அறிந்து சின்ன பரசுராமப்பிள்ளைக்குச் சொல்லி அனுப்புவித்தான். சந்திரமதிப்பிள்ளையை அழைப்பித்து துரையண்டைக்குப் போய் பயப்படாது சொல்லச்சொன்ன தென்னவென்றால்: தடி அருணாசலசெட்டி என்கிறவன் என் வீடு மூன்று வருஷமாய்க் குடிக்கூலிக்கு வாங்கிக்கொண்டு அவன் என்னென்ன கொண்டுவந்து வைப்பானோ, என்னென்ன எடுத்துப்போவானோ, எப்படித் தெரியும். அதுவேயல்லாமல் மற்றப்படி நானொன்றும் அறியேன் என்று சொல்லென்று சொன்னான். அந்தப்படிக்குத்தானே துரையண்டைக்குப் போய் சொன்னவிடத்திலே, நல்லது, நீ போவென்று சொன்னார். அந்தமட்டுக்கும் தலை தப்பித்ததென்று துரை கணக்கு ரங்கப்பிள்ளையுடனே சொல்லிவிட்டுப் போய்விட்டான். தடி அருணாசல செட்டி கணக்கு முத்துக்குமரப்பிள்ளை என்கிறவனைக் காணோமென்று சொன்னதற்கு, நல்லது என்று துரை சொன்னார் என்று துரை கணக்கு ரங்கப்பிள்ளை வந்து என்னுடனே ராத்திரி சொல்லிவிட்டுப் போய்விட்டான். துரை கணக்கு ரங்கப்பிள்ளையும் என்னுடனே சொன்னது. துரையவர்கள் நீங்கள் எப்போ வருவாரென்று கேட்டார். அக்குளிலே கட்டி. இன்னம் உடையவில்லை. நாளையதினம் சுவஸ்தப்படும் என்று சொன்னேன் என்று சொல்லிவிட்டுப் போய்விட்டான். நான் இரண்டு மூன்று நாளாய் அக்குள் சிலந்தி உபத்திரவத்தினாலேயும் மேகவாத பிடிப்பினாலேயும் துரையவர்களண்டைக்குப் போகவில்லை... ... ... ... ... ... ...

1746 ஆ அவ்ரீல் மீ 30உக்கு அக்ஷய ௵ சித்திரை மீ 21உ சனிக்கிழமை நாள்

இந்தநாள் பனிரெண்டு மணிக்கு லோகய்யனை அழைத்து தியோகு என்கிற சட்டைக்காரன் துவிபாஷித்தனம் பண்ணச் சிறிது சங்கதி கேட்டார். அதற்கு லோகய்யன் என்ன சொன்னானோ தெரியாது. அதன்பேரிலே வேங்கடேசய்யனையும் காவல் வைத்தார்கள். வேங்கடேசய்யன் ஒரு குடியைச் சரங்கமாய் கெடுக்கத்தக்கதாய் நினைத்தால் இவனைத் தெய்வம் கெடுத்துப் போடாதா. வெகு பேருக்கு இக்கட்டு நினைத்தபடியினாலே தெய்வம் இவனுக்குத்தானே இக்கட்டு கொண்டு வந்து விட்டார். இதிலே இரண்டு மூன்று நாளையிலே இவன் தலைக்கீழாய் விழுந்ததும் துரையண்டைக்குப் போகிற பிரதிஷ்டையும் இவன் ஒருத்தரையும் சட்டைபண்ணாமல் திரிந்ததும் எழுதிமுடியாது.

முன் பக்கம் அவ்ரீல் மீ 28 உ வியாழக்கிழமை

இந்த நாள் சாயங்காலம் ஐந்து மணிக்கு நடந்தது என்னவென்றால்: கும்பினீர் கிடங்குக்காரன் வேங்கடேசய்யன் என்கிறவன் கோட்டையில் கும்பினீருடைய திரவியத்தை எடுத்துக் கொண்டு போகிறதாக ராமய்யனைப்பற்றி துரையண்டைக்குச் சொன்னான். ராமய்யன் கோட்டையில் சின்னய்யனுடைய கூட்டாளியாயிருக்கிறவன், ராமய்யன் திருட்டுச் செயல் செய்கிறான் என்று சொன்னவிடத்திலே அதற்கு அத்தாட்சி உண்டாவென்று கேட்டவிடத்திலே அதற்கு அனேகம் கொண்டுவந்து விடுகிறோம் என்றும் சொல்லி புது சேவகரை என் பிறகே கூட்டி எந்தக் குதந்த கவைகள் எப்படிச் செய்யவேணுமோ அப்படியெல்லாம் செய்து அப்படி கபுறு சொல்லுகிறேனென்று சொன்னான். பத்துப்பேர் கும்பினீர் சேவகரை அழைத்துக்கொண்டுவந்து நடப்பித்த காரியம். முணலை தடி அருணாசலசெட்டியண்டைக்கு வந்து இரண்டு நெடுமுழம் கொடுக்கவேணும் கவையிருக்கிறதென்று கேட்டான். அதற்கு அவன் என் வசத்திலே நெடுமுழம் இல்லையென்று சொன்னான். அவ்விடம் விட்டுப் புறப்பட்டுச் சந்திரமதிப்பிள்ளை வீட்டுக்குவந்து தடி அருணாசலசெட்டிக்குச் சரக்குப் போட்டிருக்கிற வீட்டைத் திறக்கச் சொல்லிச் சொன்னவிடத்திலே சாவியில்லையென்று சாவிக்கு ஆள் போனானென்றும், இப்படி இரண்டு நாழிகை மட்டுக்கும் காலதாமதம் பண்ணிக்கொண்டிருந்தார்கள். இதிலே தடி அருணா

சலசெட்டி வந்து வேங்கடேசய்யனுக்கு நல்ல விசேஷம் சொல்லிக்கொண்டு காலதாமதம் பண்ணிக்கொண்டிருக்கை யிலே வேங்கடேசய்யன் பார்த்து நீங்கள் சாவி அழைப்பித் துத் திறந்தாலாச்சுது, இல்லாமற்போனால் நான் கருமானை அழைப்பித்துத் திறக்கச் சொல்லுவேன் என்று உத்தண்ட மாய்ச் சொன்னமாத்திரத்திலே அப்பால் கதவைத் திறந்து விட்டார்கள் அந்தக் கிடங்குக்குள்ளே போய் காரிக்கம் ஒன் பதேகால் சேலத்து நெடு மூன்று கோடி சுருட்டியிருக்கிற ஆறு மூட்டையையும் ஆறு மூட்டைக்காரர்பேரில் எடுத்து விட்டுத் தானும் மூட்டைக்காரனுமாய் துரை வீட்டிலே துரை எழுதுகிற காம்பிருவிலே கொண்டுபோய் வைத்து துரையுடனே கபுறு சொன்னான். இது யாரார் கூடிச்செய்தது என்று கேட்டதற்கு. கோட்டை கணக்கு ராமய்யனும் வர்த்தகர் கிடங்கு கணக்கு லோகய்யனும் கூடி, தடி அருணசல செட்டியும் கூடிச்செய்த வேலை யென்று சொன்னதின்பேரில் இவர்கள் மூன்று பேரையும் கொண்டுபோய்ச் சாவடியிலே தனித்தனியே கிடங்கிலே போட்டுவைத்தால் இன்னும் அனேக காரியங்களுண்டு, அதெல்லாம் வெளியாகும் என்று சொன்னான், அந்தப்படித் தானே (ா) துரையவர்கள் சேவகரையனுப்பி அவர்களைத் தனித்தனியே கிடங்கிலே போடச்சொன்னார் அந்தப்படி கிடங்கிலே போட்டார்கள். இந்த மூன்று கோடியும் தடி அருணசலசெட்டி வாங்கினது. விலை கோடி 1-க்கு இருபத்து நாலு மோடிபண வராகன் 40 ஆக வாங்கினதாகவும், இதற்கு கோடி 1 க்கு தரகருக்கு மூன்று வராகன் விழுக்காடு எடுத்துக் கொண்டானென்றும் தர்ம செலவுக்கு இரண்டு வராகனும் வேறே இரண்டு வராகன் எடுத்துக்கொண்டானென்றும் * ... பெரியதுரையவர்களுடனே சொன்னான். அவைகளை நாளைய தினம் விசாரிப்போம் என்று வேங்கடேசய்யனை வீட்டுக்குப் போகச்சொன்னார்.

20 உ நடந்தது என்னவென்றால்:— ... ... ...

1746 ஆ மே மீ 2 உக்கு அக்ஷய ஹூ சித்திரை மீ 21 உ திங்கட்கிழமை நாள்

இராத்திரி எட்டு மணிக்கு கனகராயமுதலியார் காலம் பண்ணிப்போனதற்கு இந்த வியாச்சியத்துக்குத் தானப்ப முதலியார் மூச்ச துப்ளேயிக்கு குவர்னதோருக்குக் கொடுக்கிறே மென்று சொன்ன மூணத்தொரு பங்கும் தீர்த்துக்கொண்டு போய்க் கொடுத்த ரொக்கம் வராகன் 4000 மதாம் துப்ளே

* ஒழிந்திருக்கிறது.

ய்ச்சு சீட்டுக்கு ரூபாய் 3200 க்கு வராகன் 1000. முசேதுப் பேய்ச்சு கடன் சீட்டுக்கு வராகன் 6000 ஆக தொகை 3 க்கு ரொக்கமுள்பட வராகன் 11000. இன்னம் பத்து நாளையிலே கொடுக்கிறேமென்று சொன்ன வராகன் 1000. ஆக பன்னீ ராயிரமும் வராகனுகத் தீர்ந்தது ரொக்கம் சீட்டு உள்பட பதினோராயிரமும் கொண்டுபோய் கொடுத்து காலிலேவிழுந்து நீர் வைத்தவீடு, அப்புறம் உமக்குச் சம்மதியானபடிக்கு என்று சொன்னர், நல்லது எழுந்திரு உனக்கு நான் செய்த வேலைக்கு மனப்பூர்வமாய் கொடுத்ததுதானே நாமேதாகிலும் பலவந்தமா என்று கேட்டார். ஆம் மனப்பூர்வமாய் கொடுத்ததுதான் நீர் தயவுபண்ணினதற்கு இதுவா, நான் உங்களடிமையாயிருக் கிறேன் என்று சொன்னர். நல்லது மஞ்சீனிர் மருமகப்பிள்ளை யாண்டானை சீக்கிரமத்துக்கு குளித்துக்கோ இல்லாவிட்டால் தொந்தரையாய் வரும். இதல்லாமலும் ... ... ... மனுஷர் சீவன் அநித்தியம் இருந்தாப்போலேயிருந்து உங் கள் அண்ணன் விழுந்துபோய் இத்தனை தொந்தரவுக்கு இட் மானது நீயறிவாயே யென்று சொல்லி, உன் பெணசாதி ஏதா கிலும் சம்மதியில்லாதிருக்கிருளா யென்று கேட்டார். இல்லை அவர்களெல்லாரும் சம்மதியாய்த்தானே இருக்கிருர்கள். சீக்கிரமத்துக்குத்தானே நடப்பித்துப் போடுகிறேமென்று சொன்னர். எத்தனை சீக்கிரமாய் நடத்தினல் அத்தனை நல் லது என்று சொன்னர். அப்புறம் போங்கோளென்று சொன் னர். நல்லது என்று அனுப்புவித்துக் கொண்டுவந்து விட் டோம். இதுக்கெல்லாம் நானும் கூட யிருந்தேன் அதினலே வந்துவிட்டோமென்று வெகு சபதமா யெழுதினேன். அப்பால் துரை என்னை அழைத்து மதாம் சீட்டு வராகன் லாசரைத் தானே கேட்டு வாங்கச்சொல்லு யென்று சொன்னர். அந்தப் பேச்சை சின்னமுதலியார் வெளியே யிருந்தவரண்டைக்கு வந்து சொன்னேன், பாதி (ர) பெண்சாதிக்கும், புருஷனுக்கும் திரவிய முன்னிலையா யிப்படியிருக்குதே யென்று சொல்லி வீட்டுக்குப் போவோமென்று சொன்னர். நல்லது என்று வந்து அவர் எப்போதும் குடியிருக்கிற வீட்டுக்கு அனுப்புவித் துக்கொண்டு போனர். நானும் வீட்டுக்கு வந்துவிட்டேன். இந்த நாள் காலமே வேங்கடேசய்யனை முந்த நாள் மத்தியா னம் காவலிலே வைத்திருந்தவனை இன்றையதினம் எட்டு மணிக்கு விட்டு விட்டார்கள்.

1746 ஆ மே மீ 5-உக்கு அக்ஷய ஸ்ரீ சித்திரை மீ 26 உ வியாழக்கிழமை நாள்

இன்றையதினம் சாமத்துக்குமேல் பனிரண்டு மணிக்குள் ளாக நடந்தசேதி யென்னவென்றல் (ர) துரையவர்கள் முன் பாக நடந்த வயணம் முன்னடியே சாவடியிலே காவலிலே

யிருக்கிற கோட்டை ராமய்யரை (ா) துரையவர்கள் அழைத்தனுப்புவித்து முன்னாலே மூன்றுகோடி நெடுமுழம் வர்த்தகர் கையிலே வாங்கி கும்பினியிலே வரவு வைத்துக்கொண்டு அருணாசலசெட்டிக்கு விற்றாயே இப்படிக்கொத்த காரியம் செய்தது மெய்தானாவென்று கேட்டார். அதற்குக் கோட்டை ராமய்யர் மெய்தானென்று சொல்லி இந்தச் சம்மதி நானே தாகிலும் கும்பினியிலே திருடவேணுமென்று எடுத்துக்கொண்டதல்ல எனக்கு ஒரு அவசரமாயிருந்தது. அதினாலே கும்பினிக்குப் பதிலுக்குப் புடவை கொண்டுபோய் போட்டுவிடுவோமென்று யெண்ணிக்கொண்டு எடுத்துக்கொண்டுபோய் விற்றேன் என்று சொன்னார் (ா) துரையவர்கள் சொன்னது: இதுதானிப்படியாச்சுதே, இதல்லாமல் கும்பினியாருக்குச் செலவுக்குப் பஞ்சு வேணுமென்று கும்பினிச்செலவிலே நூற்றிருபதுவராகன் செலவு எழுதி எடுத்துக்கொண்டாயே அந்த வேலை என்னத்துக்குச் செய்தாயென்று கேட்டார். அதற்கு கோட்டை ராமய்யன் சொன்னது: இந்தப் பேச்சு நான அறிந்ததில்லை. சும்மா யுங்களுடனே சொன்னார்கள் என்று சொன்னார். அதற்குத் துரையவர்கள் காகிதம் எடுத்துக் காண்பித்து இப்படி எழுதுவித்தார்களே நீ யொன்றும் அறியோமென்று பொய் சொல்லுகிறதென்னவென்று கேட்டார். அது ராமய்யர் சொன்னது அந்த வேலை நான் செய்ததில்லை. இந்த வேலை கோட்டை சீனப்பய்யர் செய்த வேலையன்றி நான் ஒன்றும் அறியேன். நான் செய்த வேலையல்லவென்று சொன்னான். அதன்பேரிலே சீனப்பய்யனை யழைப்பித்து வரச்சொல்லி அவரை ஒன்றும் கேளாமல்தானே அழைத்துக்கொண்டு சாவடியிலே கொண்டுபோய் ஒரு கிடங்கிலே போட்டு மூடிப்போடச்சொல்லி (ா) துரையவர்கள் உத்தாரங் கொடுத்தார்கள். அந்தப்படிக்குத்தானே கும்பினி சேவகன் அழைத்துக்கொண்டுபோய் சாவடியிலே ஒரு கிடங்கிலேபோட்டு மூடிப்போட்டான். அதன்பேரிலே (ா) துரையவர்கள் பழய கும்பினி வர்த்தகரை அழைத்துவரச் சொன்னார்கள். அப்பொழுது ராமய்யர் வீராகுலசெட்டி, ஆதிவராகசெட்டி, சித்தம்பல செட்டி இவர்கள் நாலுபேரும் வந்தார்கள். அவர்களுடனே (ா) துரையவர்கள் சொன்னவயணம்: இனிமேல் கும்பினிக்கு புடவைசீலை கவையிருந்தால் மூசே கோர்னே கையெழுத்து வந்தால் அதைப் பார்த்துக்கொண்டு அப்பால் நீங்கள் கொடுத்து அனுப்புகிறதேயல்லாமல் மற்றப்படி எழுதியனுப்பினாலும் நீங்கள் கொடுத்தனுப்பத் தேவையில்லையென்று சொன்னார். அதுக்கு நல்லதென்று சொல்லிப்போட்டு கும்பினி வர்த்தகர் நாலுபேரும் (ா) துரையவர்களை அனுப்புவித்துக்கொண்டு போய்விட்டார்கள். நானும் அந்த மட்டுக்கும் (ா) துரையவர்களுடனே அனுப்புவித்துக்கொண்டு வீட்

டுக்குப் பனிரண்டு மணிக்கு வந்தேன். வீட்டுக்கு வந்தபிறகு கோட்டை சுப்பையயரும், அவர் மகனும், சீனப்பய்யர் மகனும் ராமய்யர் தம்பியும் இவர்கள் நாலுபேரும் நம்மண்டைக்கு வந்து நடந்த சேதியுஞ்சொல்லி உபசாரவார்த்தையுஞ் சொல்லிக் காப்பாற்றுகிற பாரம் உங்களது என்று சொல்லி அதன்பேரிலே கோட்டை சுப்பையர் சொன்னசேதி: இந்த வேலையெல்லாம் சீனப்பய்யன் மகன் இந்த நாராயணய்யரைத் தொட்டுத்தானே வந்தது, இவர்கள் பத்து வேலை செய்தால் அந்த ராமய்யர் ஒரு வேலை செய்ததற்கு அவன்பேரிலே ராஜகாரியம் பண்ணிப்பண்ணி அவனைத் துரத்தவேணுமென்று இப்படிக்கொத்த சம்மதி யெல்லாம் வேங்கடேசய்யனுடனே போய்ச் சொல்லி அவனைக்கொண்டு (ா) துரையவர்களுக்குச் சொல்லச் சொல்லி இப்படி யெல்லாம் நடத்துவித்தார்கள் அதினாலே ராமய்யரும் இவர்கள்பேரிலே நடத்துவித்தார். வெகுநாளாகப் பிடித்துப் பெரியவாகள் இந்த உத்தியோகம் சம்பாதித்தார்கள் இப்போது இவர்களைத்தொட்டு உத்தியோகம் போகிறதற்குக் காலம் வந்தது யென்று சுப்பய்யர் வெகுசாய் தாபந்தப்பட்டார் இந்தப் பஞ்சு சம்மதி மாரியப்பமுதலியும் மூச்சே கோர்னேத்துடனேயும் சொன்னாப்போலே சொல்லுகிறார்கள். அதின்பேரிலே சீனப்பய்யரை மூச்சே கோர்னேத் அழைத்து இந்தப் பஞ்சு சம்மதியேதாகிலும் நடந்திருந்தால் அது நம்முடனே சொல்லு. நான் அதுக்கேற்றபடி திட்டம்பண்ணுகிறேன் என்று கேட்டார். அதற்கு, சீனப்பய்யர் நான் ஒன்றும் அறியேனென்று சொன்னார். இதல்லாமல் மூச்சே கோர்னேத்தை (ா) துரையவர்கள் அழைத்து அனுப்புவித்து கும்பினியிலே சூரத்துப்பஞ்சு கையிருப்பு இருக்கிறதிலே அசலிலே பஞ்சுவாங்கி கோட்டை வேலைக்குப் போட கவையென்ன இது நீ விசாரியாமல் போனதென்னவென்று ரொம்பக் கோபம்பண்ணி, பின்னையும் வெள்ளைக்காரர் சிறிது பேர் இருக்க (ா) துரையவர்கள் சொன்ன சேதி: ஊரிலே நடக்கிற சேதிகளை விசாரித்து நாம் யேதாகிலும் காவல் கட்டுப் பண்ணச்சொன்னால் அதுக்கு யெல்லாருங்கூடி நாம் அநியாயம் பண்ணுகிறோம் என்று சொல்லிக் கொள்ளுகிறார்கள். கும்பினிக்காரியங்களுக்குள்ளே இப்படிக்கொத்த சம்மதிகளெல்லாம் நடப்பித்திருக்கிறார்களே இது விசாரியாமல் இருக்கிறது எப்படி யென்று லோகாபிராமமாய்ப் பேசிக்கொண்டிருந்தார். இதல்லாமல் (ா) துரையவர்கள் சொன்னது ஊரிலே சொல்லிக்கொள்ளுகிற சேதிகளும் நடக்கிற சேதிகளும் சம்பாகோவில் பாதிரிமார்கள் விசாரிக்கிறார்கள். நாம் துரைத்தனம்பண்ணுகிறது நமக்கு கபுறு தெரிய இனிமேலந்த உத்தியோகத்திலேயிருந்து நீ விசாரிக்கிறது. ஒரு சேதியும் தெரியாமல் இப்படி தொந்தரைக் காறுபாருய் இருக்

கிறதென்று (ஈ) துரையவர்கள் மூசே கோர்னேத்தை கோபம் பண்ணினார்களென்று மூசே கோர்னேத்து கோட்டை சினப் பய்யன் குமாரன் நாரணய்யனுடனே தாங்களெல்லாரும் இருக் கிறதினாலே மூசே கோர்னேத்து சொன்னார் என்று கோட்டை சுப்பய்யன் குமாரன் நாரணய்யன் வந்து சொன்னான். இதல்லா மல் (ஈ) துரையவர்கள் பெண்சாதி ஜவளிக்கடைக்காரர் அனை வரையும் அழைப்பித்து நீங்கள் எது நிமித்தியம் கடை போட வில்லை. உங்களுக்கு யாராகிலும் பணம் காசு கொடுக்க வேணுமா, நாம் ஏதாகிலும பணம் கொடுக்கவேணுமா எத னாலே நீங்கள் கடை போடவில்லையென்றுகேட்டார் அதற்குக் கடைக்காரர் சொன்னது: ஒருத்தரும் எங்களுக்குப் பணம் கொடுக்கவேண்டியதில்லை. இன்றையதினம் எங்களுக்குச் சித் திராபவர்ணமி பண்டிகைதினம், ஆகையாலே நாங்கள் கடை போடவில்லையென்று சொன்னார்கள். அதற்கு அம்மாள் சொன்னது: இனிமேல் ஆராகிலும் கடனாய் உங்களைப் புடவை கேட்டாலும் என்னண்டையிலே யிருக்கிறபேர் வந்து புடவை கேட்டாலும் ஒருத்தருக்கும் நீங்கள் கடனாய் கொடுக்கத் தேவையில்லை. உங்களுக்கு ஏதாகிலும் சேதிகள் சொல்லிக் கொள்ளத்தக்கதுண்டானால் என்னுடனே வந்து சொல்லிக் கொள்ளுங்கோளென்று சொல்லியனுப்புவித்தாள். இரண்டு மூன்று நாளைக்கு முன்னே (ஈ) துரையவர்கள் மூசே புஸேத்தை (M. du Bausset) அழைத்துவரச்சொல்லி. நீர் சாவடி உத்தியோ கம் ஏன் வேண்டாம் என்றீர். பித்திலியோம் எழுதினவன் இன்னான் என்றுதெரியவில்லையே ஒரு சின்னப்பயல் அல்லவோ சின்ன துரை சேவகன் கையிலே கொடுத்துப் போனானென்று சொல்லுகிறார்கள். ஆனபடியினாலே இன்னம் பார்த்துக் கொள்ளுவோம் சிறிதுநாள் பொறும் என்று சொன்னார். அதற்கு அவர் சம்மதியாமல் தமக்கு உத்தியோகம் வேண்டா மென்று சொல்லிப்போட்டுப் போனார். அதன் பிறகு இன்றைய தினம்மூசே லசேல் என்கிறவருக்கு அந்தச் சாவடி உத்தியோகம் கொடுத்தார்கள் இதல்லாமல் (ஈ) துரையவர்கள் என்னை அழைத்துச் சென்னப்பட்டணத்திலே அவரவர் தட்டுமுட்டுக் கள் அப்புறப்படுத்துகிறார்களா வென்று கேட்டார். அதற்கு நாம் சொன்னது பிராஞ்சுகப்பல் சுருக்காய் வருகிறது என்று சேதி கேட்டு முன் பங்குனி மீ 25 உ அவரவர்கள் கொஞ்ச நஞ்சம் அப்புறப்படுத்தினார்கள். அதன் பிறகு இங்கிலிஷ் காரருக்குச் சீமையிலேயிருந்து போன ஞூ புறப்பட்ட ஒரு கப்பல் இந்தச் சித்திரை மாதத்திலேயே வந்தபடியினாலே சென்னப்பட்டணத்திலே இருக்கிறவர்கள் சொல்லிக்கொள்ளு கிறது பிராஞ்சுக் கப்பல்கள் வழியிலே யிருந்தால் இந்த ஒரு கப்பலும் எப்படி வரும். ஆனபடியினால் அவர்களுக்கு இந்த வருஷம் கப்பல் வர்த்தகத்துக்கு இல்லை யென்று சொல்லிக்

கொண்டு இப்பால் ஒருத்தரும் தட்டு முட்டை அப்புறப்படுத்த வில்லையென்று சொன்னேன். அதற்குத் துரையவர்கள் சொன்னது ரொம்பவும் சோபமாய் எங்களுக்குக் கப்பல் வருகிறது கொஞ்ச நாளையிலே அறியப்போகிருர்கள் என்றுமெத்தவும்...ச் சொன்னுர். அதன் பிறகு ஆலம்பூரவியிலேயிருக்கிற கப்பலுக்குச் செலவுக்கு நூறு ரூபாய். முன்னால் சொன்ன சேதி எல்லாம் பகலுக்குமேல் நடந்தது.

1746 ஆ மேமீ 11 உக்கு அக்ஷய ஞு வைகாசி மீ முதல் தேதி புதவாரம்

இந்த நாள் புதுச்சேரி பட்டணத்திலே கேட்ட சேதியென்னவென்ருல் தேவனுப்பட்டணத்துக் கோட்டையிலே பீரங்கி வேட்டு விஸ்தாரமாய் கேட்கப்பட்டது. சித்திரை மீ 31உ செவ்வாய்க்கிழமை ஐந்து மணிக்கு இங்கிலீஷ் கப்பல் சண்டை கப்பல்களுக்கு எல்லாம் கொம்மாந்தானுய் வந்திருந்த மூசே பர்னேத்து என்கிறவன் வியாதியாய் இருந்து மரணத்தை அடைந்தார். அது நிமித்தியமாய் கப்பல்கள் மேலேயும் கரையிலேயும் விஸ்தாரமாய் சுட்டார்கள். எல்லாரும் லோகவழக்கமாய் இந்த நாள் ராத்திரி எட்டுமணிக்குக் கொண்டுபோய் அடக்கினுர்கள். அப்போதும் கோட்டையின் பேரிலேயும் கப்பலின் பேரிலேயும் ஆறரை மணிக்குத் துவக்கி யெட்டேகால்மணிமட்டுக்கும்பீரங்கி சுட்டார்கள் இந்த இரண்டு நாளும் காலத்திலே மாறும் இப்படித்தான் விஸ்தாரமாய் சுட்டார்கள். எல்லாரும் வழக்கமாய்ச் சொல்லிக்கொள்ளுகிறதென்னவென்ருல் இந்த நாளும் இங்கிலீஷ்காரருக்கு ஜெயகாலமும் பிரஞ்சுக்காரருக்கு அபஜெயகாலமும். இங்கிலீஷ்காரருக்கு அபஜெய காலமுமாய் நடக்கும் அதுக்கு ஏஷ்யந்தான் பற்னெத்து என்கிற காமண்டோர் செத்ததும் அதுக்குப் பத்து நாளைக்கு முன்னே கொள்ளிட முனையிலே ஒரு கப்பல் உடைந்ததும் இந்தக்கப்பல் கப்பித்தான்மாருக்குள்ளே ஒருத்தனையும் பின்னையும் பத்துப்பனிரெண்டு மத்திலேத்தையும் தீவுக் கோட்டையிலே இறங்கி, மாடு சுட்டு, மனுஷரையும் அலக்கழித்த விடத்திலே தீவுக்கோட்டையிலேதானே தானியமிருக்கிற கப்பல் கப்பித்தானையும் பத்துப்பனிரெண்டு மத்திலேத்தையும் பிடித்துக்கொண்டுவந்து, தீவுக்கோட்டையிலே காவல் வைத்ததினுலேயும் இப்படி ஒன்றுக்கொன்று துக்க பரம்பரையாய் வருகிறபடியினுலே அபஜெயத்துக்குத் துவக்கிச்சென்றும், சயம் வரச்செயும் அப்படித்தான் அந்தக்கப்பலைப் பிடித்தான், இந்தக் கப்பலைப் பிடித்தான். அங்கே ஜெயங்கொண்டான், இங்கே ஜெயங்கொண்டான்போலே இனிமேலும் அப

ஜெயமும்அங்கே நஷ்டமும்வந்தது. இங்கே நஷ்டம்வந்ததுஎன்றும், அங்கே அவன் செத்தான், இங்கே இவன் செத்தான் என்றும் வருகிறது என்று சொல்லிக்கொள்ளுகிறார்கள். இதல்லாமல் இங்கிலீஷ்காரருக்குக் கும்பினீர் ஒப்பந்தம் கொடுக்கிறதை நிறுத்தினார்கள். அதுவே மூதேவி பிடித்ததற்கு அடையாளமென்று பிரஞ்சுக்காரருக்கு, ஜெயக்காலத்துக்கு ஆரம்பித்தது நாளுக்குநாள் விருத்தியாய் வருமென்றும் அவ்விடத்திலேயிருந்த ஜெயலக்ஷிமி இவ்விடத்துக்கு வந்து சேர்ந்தாளென்றும் இவ்விடத்திலேயிருந்த மூதேவி அவ்விடத்திலே போய்ச் சேர்ந்தாளென்றும் அவர்கள் பட்டணத்திலேயுள்ள பேர்களும் இந்தப் பட்டணத்திலுள்ளவர்களும் சருவத்திர சகலமான ஜனங்களும் சொல்லிக்கொள்ளுகிறார்கள். இவ்விடத்து துரையும் வெகு சனங்களுக்கு ரஸ்து சேர்க்கிற சாடையும் முன் முஸ்தீதுபண்ணதல்லாமல் இப்போது இருநூறு கட்டிலும் அதுக்கு மெத்தையும் அதுக்கு தலைகாணி முஸ்தீதுபண்ணுகிறதும், அதுக்கு கட்டில் துப்பட்டியும் மெத்தை துப்பட்டியும் துவாலைகளும் நாலாயிரம் பேருக்கு முஸ்தீதுபண்ணிவைக்கச் சொன்னார் என்று முஸ்தீது பண்ணுகிற சாடைகளும், கோழிகளும் ஆடுகளும் முஸ்தீதுபண்ணுகிற சாடைகளும், விறகு சேர்க்கிற சாடையும், கடற்கரையோரத்துச் சுவரெல்லாம் முஸ்தீதுபண்ணி கொத்தளங்கள் சீக்கிரமத்துக்குக் கட்டி முடிக்கிற சாடையும் இதின் பேரிலே இராத்திரி பகல் பண்ணுகிற சாக்கிரதையினாலேயும் கப்பல்கள் சுருக்கிலே வருகிறதென்று சொல்லிக்கொள்ளுகிறார்கள். சுவாமியுடைய தயவினாலே கப்பல்கள் சுருக்கிலே வந்து சகல சனங்களும் சுகப்படத்தக்கதாக ரக்ஷிப்பார் என்று எல்லாரும் சொல்லுகிறார்கள். இவர்கள் சுகப்படுவார்கள் என்கிறதுக்கு இரண்டு வருஷமாய்க் கஷ்டம் அனுபவித்தபடியினாலே இனிமேல் சுகப்படுவார்கள் என்று சொல்லுகிறார்கள் வெகு சன வாக்கியம் பொய்யாதென்று அந்தப்படிச் சுவாமி கடாக்ஷம் பண்ணி ரக்ஷிப்பார் என்று தோற்றுகிறது. தோற்றுகிறபடிக்கு எழுதினேன்......

1746 ஆ மே மீ 12 உ க்கு அக்ஷய ஞு வைகாசி மீ 2 உ வியாழக்கிழமை

காலமே துரை வீட்டுக்குப் போன விடத்திலே சின்ன முதலியாரும் மதனாந்தபண்டிதரும் ஆற்காட்டிலிருக்கிற சுப்பய்யன் அனுப்பின காகிதத்தைப் படித்து துரைக்குக் கபுறு சொன்னார்கள். அது என்னவென்றால்: நபாபு அன்வருத்திகானுக்கு முதுகிலே கண்டிருந்த ரணம் சுவஸ்தமாகி வருகிறதென்றும் இனிமேல் பிழைப்பானென்றும் சமஸ்தமான பேரும்

சொல்லிக்கொள்ளுகிறார்களென்றும். அன்வருத்திகான் மகன் மமுதல்லிகான் கந்தனூரண்டையிலே போயிருந்தவனுக்கும் மராட்டியர் பரமோசி நாயக்கனுக்கும் சண்டையாச்சுது என்றும் பரமோசி நாயக்கன் பவுஞ்சு முறிந்து பின்னையும் அரை காதவழி அப்பாலே போனானென்றும் மமுதல்லிகான் கந்தனூரான கடப்பையான் இவர்களுக்கும் ஜெயமாச்சுதென்றும் மராட்டியர் தண்டில் இருந்ததில் மூன்று ஆனையும், ஐந்தாறு ஒட்டகமும், பத்து குதிரையும் பிடித்துவந்தார்களென்றும், ஆற்காட்டிலே யிருக்கிறவர்களைப் பத்திரமாயிருக்கச் சொல்லியும் இப்படியாக எழுதியிருந்ததென்று துரையவர்களுக்குச் சொல்லி, இதல்லாமல் ஆனந்தரங்கப்பனுக்கு கார்வெட்டி ராசா ஒரு குதிரையும், சிரோப்பாவும், கத்தியும் அனுப்புவித்தானென்று எழுதியிருக்குதென்று கபுறு சொன்னார்கள். அதற்கு துரை யிருந்துகொண்டு, அவன் பெரிய மனுஷனா என்று கேட்டாராம். யாசமநாயக்கனைப்போலே அவர்களும் பெரிய மனுஷர் என்னப்பட்டவர்கள் என்று சொன்னார்களாம். அதற்குத் துரையிருந்துகொண்டு "எவு போலாகு மயித்து" என்று சொன்னாராம். அதற்கு அர்த்தம் எனக்கு மெத்தவும் சந்தோஷம் என்று சொன்னார். இந்தப்படி தாங்கள் கபுறு சொன்னதாய் இப்புறத்திலேயிருந்த என்னுடனே கூட சொன்னது சொன்னார்கள். அப்பால் சின்னமுதலியார் மலையப்பமுதலியைக் காண்பித்து என்னுடனே இவர்கள் இரண்டு மூன்று நாளாய் கதவைச் சாத்திக்கொண்டு பெத்திஷியோமோ, பின்னை என்னமோ சிறிது ராசகாரியங்களாய் எழுதுவிக்கிறதாய் சேதி கேட்டேன். இவர்கள் என்ன எழுதப்போகிறார்கள் தாங்கள் நியாயம் அநியாயமாய்த் தீர்த்தார்கள் என்று எழுதுவார்கள். பின்னை என்ன இருக்கிறது. இதற்கு உப்ரால் மூசே நிகோலாராம், மூசே மீரா, மூசே மேரி இவர்கள் தவிர வேறேயில்லை என்று சொன்னார். அதற்கு நானிருந்துகொண்டு, தமிழ் நியாயம் அறியாதவர்களாயிருக்கிறவர்கள் ஒருக்காலும் இதற்கு அனுகூலமாயிரார்கள். இவர்களைப் பிடித்த பயித்தியமே அல்லாமல் தீர்ந்த வியாச்சியம் தீர்ந்ததே. செத்தபிணம் செத்தபிணமே அல்லாமல் பிழைக்கப்போகிறதா. அதிலே என்ன இருக்கிறது நீர் சீக்கிரமாய் மஞ்சுநீர் குளித்துத் தீர்த்துப்போடுமென்று சொன்னேன். இதிலெ ஒரு தொந்தரையினாலே அப்படி பட்டது என்று சொன்னார். என்னவென்று கேட்டதற்கு திருச்செல்வராயனுக்குப் பிறந்த பிள்ளையை மூன்றும் நாளில் எடுத்து வந்து வளர்த்துக்கொண்டோமே, அந்தப் பிள்ளையையும் தைரியநாதனென்கிற மருமகப்பிள்ளையாண்டானையும், கூட

இரண்டு பேராய் மஞ்சுநீர் குளிப்போமென்றால் என் உடன் பிறந்தானுக்குச் சம்மதியில்லை. அதினாலேதான் தொந்தரையாயிருந்தது. இதற்கு எப்படி ஆலோசனை என்றார். உம்முடைய மனதிலே எப்படியிருக்கிறது என்று கேட்டதற்கு. ... ...

1746 ஆ மே மூ 17 உ க்கு அக்ஷய ஞு வைகாசி மீ 7 உ செவ்வாய்க்கிழமை

இந்த நாள் நடந்த சேதி யென்னவென்றால்: இதற்கு ஆறு நாளைக்கு முன்பாக, பொம்மாராசுபாளையம் காவெட்டிராசா அவர்கள் எனக்கு அனுப்பியிருந்த வெகுமானம் ஒரு துர்க்கி குதிரையும். மழுதிதான் குசராத்திப்படுக்காக மொக்கிஷாப்பாகை, சாலுவை, பெரிய பொன் மொலாம் பண்ணின கத்தி, இதுகள் கொண்டுவந்து நம்முடைய அக்கிரகாரமான திருவேங்கடபுரத்திலே வைத்துக்கொண்டிருந்த பிராமணன் அய்யாபிராலய்யன் நம்முடைய ஆச்சாரியார் குமாரத்தியைக் கலியாணம் பண்ணின மருமகன் ஸ்ரீனிவாசாச்சாரியாரும், திருப்பதி வேங்கடேசுரசுவாமி பிரசாதம் கொண்டுவந்த நாலு அர்ச்சகர்களும், இரண்டு மூன்றுபேர் சேவகரும் வந்தார்கள். இவர்கள் வந்திருந்தவர்களை ா) துரையவர்களுடனே சொல்லி மேன்பாடாய் அழைப்பிக்க வேணுமென்று யோசனைபண்ணி, இரண்டொரு நாள் தாமஸமாய் வைத்து, துரைசமயம் பார்த்த விடத்திலே துரைக்கு மனதிலே வியாகூலம் வந்து பிடித்துக்கொண்டு மகா விசனத்தின்பேரிலே யிருந்தார். இது உமக்கு எப்படி தெரிந்தது என்றால், அவர் முகத்தைப் பார்க்கக்கூடுகிறதில்லை. விலாசமாயிருக்கிற முகம் கடுகடுப்பு மேலேயிருக்கிறதினாலேயும் எவர்களாகிலும் போனால் முகத்தைக் கடுகடுத்துக்கொண்டு பேசுகிறதினாலேயும் எவர்களுடனேயும், பேசுகையில் கோபித்துக் கொள்ளுகிறதினாலேயும் ஊரிலே அவரவர்கள் சொல்லுகிறநாபுருவிசேஷத்துக்குச் சரியாயிருக்கிறதென்றும், இந்த வேளைக்கு துரையுடனே சொல்லுகிறதற்கு உற்சாகமாயிருக்கவில்லையென்றும் நிறுத்திவிட்டு, நாங்கள் கண்டால் குருவப்பசெட்டி, வந்தவாசி திருவேங்கடபிள்ளை, அரியப்ப முதலி முதலான பத்துப்பேர், குதிரைகள் பேரிலேயும் பல்லக்கின் பேரிலேயும் வரவும், அப்பாவு குழந்தைகள் கூட வர நம்முடைய அக்கிரகாரத்துக்குச் சாயங்காலத்துக்கு ஒரு நாழிகைக்குப் போய்ச் சேர்ந்து; ஆச்சாரியார் அவர்களைத் தரிசனம் பண்ணி நாங்கள் அனைவரும் உட்கார்ந்த மாத்திரத்திலே காவெட்டி ராசா, நரசிங்க ராசா அவர்கள் அனுப்புவித்த வெகுமதியும், அந்த அய்யமாரும் அங்கே யிருந்துவந்த சேவகருமாக சுவாமிப் பிரசாதம் கொண்டுவந்தவர்களும் ஆக ஆச்

சாரியார் அவர்களைப் புடைசூழ கிட்ட உட்கார்ந்திருந்தார்கள். இப்படி நாங்கள் உட்கார்ந்திருந்த மாத்திரத்திலே ராசா அவர்கள் நம்மையும் ஸ்தவுத்தியம் பண்ணுகிற சங்கதியும் நம்முடைய சினேகம் கோரியிருக்கிறதும், என்னேரமும் நம்முடைய பேரிலே அத்தியந்த பிரீதியுடனே இருக்கிறதும், நம்மைப் பார்க்கவேணுமென்று ராத்திரி பகலாய் நினைப்பாயிருக்கிறதும், இது நிமித்தியமாகிலும் தாம் ராமேசுரப் பயணம் உண்டிக்குக் கொண்டுவந்து பார்க்க வேணுமென்றுப்போலேயும் நம்மையாகிலும் திருப்பதி பயணமாகிலும் பண்ணி அது முன்னிலையாய் வராரென்றுமிப்படி அனேக முகாந்தரமாய் நரசிங்கராசா சொன்னதாகச் சொன்னார்கள். நாமும் அனேகவிதமாய் அவர்கள் சொன்னதற்கு நாலத்தனை ஆறத்தனை உபசாரம் சொன்னபிற்பாடு ஸ்ரீ சுவாமி பிரசாதம் கொண்டுவந்து கொடுத்தபிற்பாடு, ராசா அவர்கள் வெகுமானம் நாலு நகை சிரொப்பாவும் பெரிய கத்தியும் கொண்டுவந்து கொடுத்து, குதிரை தெருவிலே யிருக்கிறதே அதுவும் நீங்கள் அங்கீகரிக்கவேண்டும் என்று அய்யவராவய்யனும் ஆச்சாரியார் மாப்பிள்ளையுமான சீனிவாசாச்சாரியாரும் உபசாரமாய்ச் சொன்னார்கள். இந்த வெகுமானம் நாலைந்து மாசத்துக்குமுன்னே நீசாமவர்கள், ராசா அவர்களுக்கு அனுப்புவித்தார்கள். வந்த உத்திரக்ஷணமே உங்களுக்கென்று நேமித்தார்கள். அந்தப்படிக்கே உங்களுக்கு அனுப்புவித்தார்கள் என்றும் அனேகவிதமாய் உபசாரம் சொன்னார்கள். எங்களுக்கு நல்ல வேளையானபடியினாலே இப்படிப்பட்ட வெகுமதி சுவாமி தயவுபண்ணினார் என்று நானும் அனேகவிதமாய் உபசாரம் சொல்லி வாங்கிக் கொண்டு அரை நாழிகை மட்டுக்கும் லோகாபிராமமாய் வார்த்தைச் சொல்லிக்கொணடிருந்து அப்பால் அனுப்புவித்துக்கொண்டு, ராத்திரி அவ்விடத்திலே சாப்பிட்டுவிட்டுச் சகல சம்பிரமத்துடனேயுமிருந்து சூரிய உதயத்துக்கு நாலு நாழிகையிருக்கையில் அக்கிரகாரம் விட்டுப் புறப்பட்டு ராசா அண்டையிலிருந்து வந்த அய்யமார் முதலாகிய பேரும் நாங்களும் 8 வ புதன்கிழமை சூரிய உதயமான ஒரு நாழிகைக்குள்ளே ரிஷப லக்கினத்திலே சம்பிரமத்துடனே கிரகப்பிரவேசமானேம். அப்பால், மேல்வீட்டின்பேரிலே போய் உட்கார்ந்து எல்லாருக்கும் பாக்கு வெற்றிலை கொடுத்து அனுப்பி ராசா மனுஷருக்கு நம்முடைய நீலக்கிடங்கு விடுதி விட்டு, அவர்களை அவ்விடத்துக்கு அனுப்பிவிட்டு, அவர்களுக்குச் சாமக் கிரிகைகள் எல்லாம் அனுப்பி, நான் பழயது சாப்பிட்டு துரை வீட்டுக்குப் போனேன் வந்த விடத்திலே துரையவர்களைக் கண்டு சந்திப்புப்பண்ணிக்கொண்டு அப்போது துரையவர்கள் உற்சாகந் தப்பியிருக்கிற சாடையையும் முக விலா

சத்திலே பார்த்தேன். அப்பால் வெளியே வந்து தானப்பமுதலியாருடனே லோகாபிராமமாய் பேசிக்கொண்டிருக்கையிலே அவர் சொன்னது: கனகராய முதலி பெண்சாதி கிடங்கு சாவி கொடுத்தனுப்பினால் வாங்கிக்கொள்ளுகிறதில்லை யென்று சொன்னான். அது எது நிமித்தியம் என்று கேட்டனுப்பினால் துரை பார்த்துக் கொடுத்தால் வாங்கிக்கொள்ளுகிறோம் என்று சொன்னாளென்று சொல்லி, இதல்லாமல் அவர்கள் பெத்திஸியோ மெழுதியிருக்கிறார்கள் என்று கபுறு கேட்டேன் என்று துரையவர்கள் பலவந்தம்பண்ணி இப்படி நடப்பித்தார் என்றாப்போலே கோன்சேலுக்குப் பெத்திஸியோ மெழுதியிருக்கிறார்களென்று சொன்னார். நான் அப்படித்தான் கேள்விப்பட்டேன். இப்போது சாவி உங்கள் கையிலே வாங்குகிறதில்லை, துரை கொடுத்தால் வாங்குவோம் என்று சொன்ன சாடையைப் பார்த்தால் அவர்கள் நடப்பிக்கிற சாடை பெத்திஸியோ மெழுதுகிற சாடைக்குச் சரியாய்க் காணுதென்று சொன்னதற்கு, தானப்ப முதலியும் மெய்தான் அப்படித்தான் தோற்றுது என்று சொல்லி இந்தச் சாடையெல்லாம் துரைகளுடனே சொல்லுவோம் என்று அமைத்தார். அதற்கு நானிருந்துகொண்டு இப்போதைக்குச் சமயமாயிருக்கவில்லை. சாயங்காலமாகிறது என்று சொன்னேன். சாயங்காலம் மதாம் துய்ப்ளெய்க்ஸ் அழைத்தனுப்பி மதாம் கொடுதியேர் சம்மதி ஆயிரத் திருநூற்றைம்பது ரூபாயும் வட்டி நூற்றுக்குப் பத்து விழுக்காடு கொடுத்தாயே, இதற்கு ஏதாகிலும் உயர்ந்து வராதா என்று கேட்டாள். அப்படி உயர்ந்து வராது என்றால் நான் மூன்றுடி கொடுத்தனுப்பாமலிருப்பனோ என்று சொன்னதற்கு, ஆனால் போவென்று சொன்னாள். திரும்பியும் இந்த ரூபாயை வட்டிக்கு வாங்கிக் கொள்ளுகிறாயா யென்று கேட்டாள். அம்மா எனக்குக் கவையில்லை என்று உபசாரம் சொல்லிவிட்டு வந்துவிட்டேன். இதிலே தானப்பமுதலிவந்து, துரை வந்துசேர்ந்தார். இப்போது கபுறு சொல்லுவோமென்று இரண்டுபேரும் போனோம். துரை புகை பிடித்துக்கொண்டிருந்தார். எங்களைக் கண்டாற்போலே எழுந்துவந்து 'கீஹீலிய மோன்சியே ரங்கப்பா'' வென்று கேட்டார். அதின்பேரிலே கனகராயமுதலி பெண்சாதி, அவளுக்கு நேமித்த கிடங்கு சாவி கொடுத்தனுப்பினால் வாங்கமாட்டோமென்றாள். நீங்கள் கொடுத்தனுப்பினால் வாங்கிக்கொள்ளுகிறோமென்று சொல்லியனுப்பினாளென்று சொன்னதற்கு சொபுதாரை அழைத்து, அந்தக் கிடங்கு சாவியை இவன் கையில் கொடுத்து. பெத்துரு பெண்சாதி கையில் நான் கொடுக்கச் சொன்னேன் என்று சொல்லிக் கொண்டுபோய்க் கொடுக்கச் சொல்லு என்று சொன்னார். அந்தப்படிக்கு அவர் சொன்னபடிக்குச் சொல்லிச்

சாவியும் அவர் முன்பாக சொபுதாரன் கையில் கொடுத்து அனுப்புவித்தோம். அப்பால் அவர்கள் பெத்திஸியோ மெழுது கிற நியாயமும் அவர்கள் பண்ணிக்கொண்டிருக்கிற யோசனை யும் சொல்லும் என்று சொன்னார். நீர் சொல்லும் என்று சொன்னதற்குத் துரையவர்க ளிருந்துகொண்டு என்ன வென்று இரண்டுதரம் மூன்று தரம் கேட்டதின் பேரிலே தானப்பமுதலியாரிருந்துகொண்டு சொன்னது: கனகராய முதலியார் பெண்சாதியும் அவள் உடன்பிறந்த மாரும் நீர் பலவந்தமாய்ப்பண்ணி இந்த நியாயம் தீர்த்தா ரென்று கொன்சேலுக்குப் பெத்திஸியோ மெழுதிக் கொடுக்க வேணுமென்றிருக்கிறார்களென்று சொன்னார். அதுக்கு துரை என்னைப் பார்த்து, மெய்தானாவென்று கேட்டார். அதற்கு நானிருந்துகொண்டு லாசர் (M. Lazar) இந்தப்படியாக அவர் கள் யோசனைபண்ணி நடப்பிக்கிறார்களென்று என்னுடனே சொல்லி, உங்களுடனே சொல்லச் சொன்னார். நானும் இரண் டொருத்தர் சாடை சாடையாய்ச் சொல்லத்தக்க கேள்விப் பட்டேன் என்று சொன்னதற்கு அவரிருந்துகொண்டு இவர் களுக்கும் அவர்களுக்கும் ஒப்புறவு இல்லையாவென்று கேட் டார். ஒப்புறவேயானால் வியாச்சியத்துக்கு வருவானேன் என்று அவர்களும் சாவி நீர் கொடு .. ... ... ... ...

1746 ஆ மேமீ 20 உ அக்ஷய ஹு வைகாசி மீ 10 உ வெள்ளிக்கிழமை

இந்த நாள் நடந்த அதிசய மென்னவென்றால்: காரைக் காலுக்குப் போகிறதற்காகச் சீர்மைக் கப்பலை இங்கிலீசுக் காரர் பிடித்துக்கொண்டு போய் அதிலேயிருந்து வந்திருந்த கப்பல் மத்தொலோத்துகளிலே நூறு பேர், சொலுதாதுகளிலே ஐம்பது பேரும், மாயே சிப்பாய்களிலே ஐம்பது பேரும், ஐந்து ஒபிசியேல்மார் குதிரையின்பேரிலேயும். இதற்கு மருந்து, குண்டு தீ குடுக்கை. பின்னையும் சண்டை சாமான்களுக்குண் டானதும் கொடுத்து இன்றைநாள் ராத்திரி நாலு மணிக்குக் கரைவழியே காரைக்காலுக்குப் பயணம் பண்ணியனுப்பினார் கள். எது நிமித்தியம் என்றால் ஒருத்தருக்கும் இந்தப் பதசந்து இன்னதென்று தெரியாதிருக்கிற காரியத்தின்பேரிலே யோசனைபண்ணினதென்னவென்றால் இங்கிலீசுக்காரர் தஞ்சா வூருக்கு எழுதியனுப்பி அவர்கள் வந்து கரையிலே சண்டை கொடுக்கவும் தாங்கள் கடலின்பேரிலேயும் சண்டைகொடுக்க வும் இதற்குச்சென்ற செலவு இங்கிலீசுக்காரர் தஞ்சாவூருக் குக்கொடுக்கவும் இப்படி உடன்படிக்கைப் பேசித் தஞ்சாவூர் வந்து இறங்குகிறதாய்ச் சேதி வந்ததின் பேரிலே இங்கே

யிருந்து சொலுதாதுகளைப் பயணம்பண்ணி யனுப்பினதாய் இப்படி தோற்றுது. இதல்லாமல் கூடலூரிலிருந்து வந்தவர்களும் அவ்விடத்திலே இப்படி நடந்ததாய்ச் சொன்னதின் பேரிலே இவ்விடத்திலே சாடைக்கும் அந்தச் சேதிக்கும் சரியாயிருக்கிறபடியினாலே இது காரியமாய்த்தான் அனுப்பினதாய்த் தோற்றுகிறது இனிமேல் நடக்கிற சேதி அறிகிறதின்பேரிலே வெளியாமாம். இற்றைநாள் (ா) துரையவர்கள் என்னுடனே பணங்காசுகள் வந்து செல்லாமல் போச்சுது என்று கேட்டார். அதற்கு ஆனி மீ கடைசியிலே ஐயாயிரம் வராகன் செலுத்துகிறோமென்று அதற்குத் தக்கதாய் உடன்படிக்கைச் சொல்லிவிட்டு வந்தேன்.

1746 ஆ மே மீ 21௳க்கு அக்ஷய ௵ வைகாசி மீ 11௳ சனிக்கிழமை

இந்த நாள் கோட்டையிலே துரைகளிடத்திலே பின்னையொரு அதிசயமுமில்லை. காரைக்காலுக்கு மூசே தூக்கேனும். பத்து தமிழ் சேவகர் துப்பாக்கி எடுத்துக்கொண்டுபோனார்கள் இந்த நாள் மத்தியானம் இருபது நாழிகைக்குப் பொம்மைய பாளையம் மடத்துப் பெரியபாளைய சுவாமிகள் அவர்கள் கைலாசத்துக்குப்போனார். இவர் சுபகிருது ௵ பட்டத்துக்கு வந்து துந்துபி ௵ இருபத்துநாலு வருஷமும் சில்லரை மாசமுமாச்சுது இந்த மட்டுக்கும் இவரிருந்து மற்றக் குட்டித்தம்பிரான்கள் எல்லாம் வரவர பாலையசுவாமிபோலே தனித்தனி துரைத்தனமாயிருந்து மடத்துக் காரியங்களெல்லாம் கெடுத்துப் போட்டதல்லாமல் வெளியிலே கவுரவ ஆனி ரொம்ப வந்தது இனிமேல் வருகிறவர் சாடை யெப்படியிருக்குமோ தெரியாது. முன்னே யிருந்தவர் பசுவுக்குச் சமானமே யல்லாமல் மனுஷருடனே கூட்டடபோகாது ஆனால், சுவாமியுடைய சித்தம்பெரிது ... ... ... .. ... ... ...
இன்றைநாள் சாயங்காலம் ஆறரை மணிக்கு, செங்கழுநீர்ப் பட்டுக்குப்போயிருந்த மங்கத்தாளும் ஷெ குமாரத்திகள் பாப்பாள், பொன்னச்சி, நன்னச்சி வந்து சேர்ந்தார்கள்.

1746 ஆ மே மீ 22௳க்கு அக்ஷய ௵ வைகாசி மூ 12௳ ஆதிவாரம்

இந்த நாள் நாகப்பட்டணம் சின்னவாண்டசெட்டி அனுப்பின ஓலையிலே எழுதின வயணம் என்னவென்றால்: இந்த ௵ மூன்றுக்கு முத்துசலாபங் குளிக்கப்போனார்கள் என்றும் குத்தகையில்லை, சந்தாயித்தம் என்றும், சமஸ்தமான பேரும் வந்து

கொண்டு விற்கலாம் என்றும், இந்த வருஷ முத்துசலாபம் முழு கின பேருக்கு வெகு திரவியங்கள் கண்டது என்றும், போய் முழுகின தோணிக்காரருக்கு இந்த மாதத்துக்கும் கொண்டு விற்று லக்ஷம் வராகன் முத்து உண்டென்றும், இது கொண்டு வந்தவர்கள் இரண்டு மூன்று மரதம் வைத்து மேற்கு வட்டம் வடக்கு வட்டம் கொண்டுபோய்விற்ருல் ஒன்று மூன்று, ஒன்று இரண்டரை காணுமென்றும் கல்லாமுதலியார் தம்பி அருணு சல முதலியையும், கல்லாமுதலியார் குமாரனையும். முத்து முதலி குமாரன் சொக்கநாதமுதலியையும். ஷியார் தமையனை யும் தஞ்சாவூருக்குப் பிடித்துப் போய் விலங்குபோட்டு அடி தடிகள் ரொம்ப நடக்குதென்றும் நாகப்பட்டணம் மனுஷர் கோட்டைகளின்பேரிலே பீரங்கிகள் முஸ்தீது பண்ணி வைக் கிறதும் இப்படி பத்து நாளாய்ச் சண்டைச் சாமான் முஸ்தீது பண்ணுகிறதுமாய் இருக்குதென்று எழுதிவந்தது இப்படி பின்னையும் அனேகம்பேர் வருத்துப்போக்கு மனுஷரும் சொன்னார்கள். வர்த்தகரும் அங்கேயிருந்து எழுதிவந்த தாய்ச் சொல்லுகிருர்கள் இதுகள் நான் அறிந்ததினுலே சுவல்பமாயெழுதினேன்.

1746 ஆ மேமீ 27 உ க்ரு. அக்ஷய ஸு வைகாசி மீ 17 உ வெள்ளிக்கிழமை

இந்த நாள் காத்தாலே ஒன்பது மணிக்கு துரை வீட்டுக்குப் போயிருக்கையிலே துரையவர்களுக்கு மகம்முது கமால் என் கிறவன் துரையவர்களுக்கு அனுப்பின காகிதத்தைச் சின்ன முதலி மதனுந்த பண்டிதர் படித்துக்காண்பித்தவுடனே என்னை அழைத்தார் நான் போனவுடனே இதென்ன யிவன் சுக சிங்கு வியாச்சியம் தீர்த்துப்பேட்டச்சொல்லிச் சேமன் எழு தின வயணமென்னவென்று கேட்டான். அதெல்லாம் தீர்ந்து மத்தியஸ்தரும் கையெழுத்துப் போட்டுத் தீர்ந்திருக்கிறது. உங்கள் சமயம் பார்த்துக்கொண்டு வருகிறேன். இவன் எழுதுகிறதென்ன இதுக்கு நாம் ஒப்தேசேரிடுகிற நியாய மென்ன. அவர்கள் மனதிலே யெல்லாம் நாமொரு காகிதம் எழுதினுல் பயந்து நடந்துகொள்ளுவார்க ளென்ருப்போலே என்றிருக்கிறது இவர்கள் பத்து ரூபாய் கொடுத்தால் ஒரு காகிதத்தைக் கிறுக்கி அனுப்பிவிடுகிறது நாமிதுகளுக்கெல் லாம் உத்தாரம் எழுதினுல் நம்முடைய பட்டணத்திலே தீரு கிற வியாச்சியத்துக்கெல்லா மிவர்கள் சிபார்சு வந்துகொண் டேயிருக்கும், இதற்குப் பதில் உத்தரவு எழுதுகிறதற்குப் பொழுது அல்லாமல் வேறே வேலையில்லை என்றும் சொன் னேன். அதற்கு மெய்தான் இவன் ஆரென்று கேட்

டான், நவாபு வைப்பாட்டிப் பிள்ளை. மைலாப்பூரிலே ஒரு மூலையிலே குந்துகிறவனென்று சொன்னேன் அது மெய்தா னிவன் காகிதத்துக்குப் பதில் காகிதம் எழுதவேண்டா மென்று சின்னமுதலியாருக்கும் மதனானந்த பண்டிதருக்கும் உத்தாரம் கொடுத்து அவர்களைப் போகச்சொல்லி, அருணா சலம் பேச்சு தீர்த்துவிட்டாயாயென்று சொல்லி, காரைக்கால் திருவேங்கடம் பேச்சுக்குத் தயவுபண்ணவேணுமென்று ரொம்பவும் சொன்னேன். அதற்கு, கஸ்தூரி ரங்கய்யன் பெண்சாதி பொய்ச்சீட்டு என்று சத்தியம் பண்ணினவன். அவன் கும்பினீர் உத்தியோகத்துக்குப் பாத்திரவானல்லவென்று ரொம்பவும் மோசம் பண்ணினான் என்றுப்போலே அனேகவிதமாய்ச் சொன்னான். அதற்கெல் லாம் தெரியச்சொல்லி, நட்புவார்த்தையாய்ச் சொல்லி, உத்தி யோகம் கொடுத்து அனுப்புவித்தமாத்திரமாய்ச் சொன்னார். ... ... ... அதின்பேரிலே மதாம் பெபுரியேர் பெத் திஸியோம் கொடுத்த சம்மதிக்கு முசே பரிதிக்கு காகிதம் அனுப்பித் தெரிந்துகொள்ளச் சொல்லி ... ... [1746 ஆ மே மீ 8 உ க்கு அக்ஷய ஞு வைகாசி மீ 18 உ] ... ... ...

*1746* ஆ மே மீ *29* உ க்கு அக்ஷய ஞு வைகாசி மீ 19 உ ஆதிவாரம்

இந்த நாள் காத்தாலே முசே துய்ப்ளேய்க்ஸ் குவர்னதோர் அவர்கள் கோவிலுக்குப் போய் பூசை கேட்டுவரும்போது லாலாப்பேட்டை வேலாயுதசெட்டி தம்பி பிள்ளாசெட்டி என்கிறவர் துரை அவர்களுக்குச் சரக்கு வாங்கின சம்மதி ஆயிரம் வாங்கியிருக்கிறதைக் கொடுக்கவேணுமென்று நயி னார் வீட்டிலே மூன்று மாதமாய் காவல் பண்ணியிருக்கிறது. அவன் பெத்திஸியோம் எழுதிக்கொடுத்தான். அந்தப் பெத் திஸியோமைப் படித்துப் பார்த்தவுடனே வீட்டுக்கு ரங்கப் பிள்ளையை அழைத்து, பிள்ளாசெட்டி என்கிறவன் ஆரென்று கேட்டார். லாலாப்பேட்டை வர்த்தகர் என்றும், அவன் பேரிலே வரவேண்டிய நிலுவையையும் அவனைக் காவல் பண் ணியிருக்கிற வயணமும் சொன்னார். நல்லது. அவனை அழைப் பியும், வேறு மளிகைக்காரரை அழைப்பிக்கச் சொல்லிச் சொன்னார். அதன்பேரிலே என்னை அழைத்து வரச்சொல்லிச் சேவகன் சொபுதாரை அனுப்பினார். நான் பாக்குக் கிடங் கிலே யிருக்கும்போது வந்தழைத்தார்கள். நான் போன வுடனே லாசரை அழைக்கச் சொல்லச் சொன்னார். லாசரு வந்தவுடனே, பிள்ளைசெட்டியையும், அருணாசலசெட்டியையும் மளிகைக்காரர் எல்லாரையும் அழைத்துவரச் சொல்லிச்

சொன்னார்கள். எல்லாருமம வந்த பிற்பாடு அந்தப் பெத்திஸியோமை படித்துக்காண்பித்து அதிலே யிருந்த வயணம் சொன்ன விபரம்: அருணா லசெட்டியும் கணக்கு ரங்கப்பிள்ளையும் தங்கள் சரக்கை, துரை அவர்கள் சாக்கென்று கட்டாயம் போட்டாரென்றும் சகலமானபேரும் பிழைக்கத்தக்க பரிபாலனம்பண்ணிவந்த வரவர் இப்படிக் கட்டாயம் போடுவரென்று கேட்டதற்கு, வெய்யிலிலே மறியல் வைத்துப் பலவந்தமாய்த் தங்கள் வீட்டிலே கொண்டுபோய்ப் போட்டதுமாய, அதிலே வீற்று செலுத்துகிறதிலே ஒன்று முக்காலாய்ப் போய் உள்ளதெல்லாம் வற்று கொடுத்து நஷ்டம் வந்ததிற்கு வீட்டிலே உண்டான பழைய ஆஸ்தியிலே யிருக்கிறார்களென்றும், தான் வியாதிஸ்தனென்றும் வாய் இழுத்துக்கொண்டு போய்ப் பேசக்கூடாமலிருக்கிற என்னைக் காவலிலே வைத்துக் கொல்லுகிறார்களென்றும், இதல்லாமல் தரகல்லாமல் ஆயிரத்தி அறுநூறு ரூபாய் லஞ்சம் வாங்கினார்களென்றும் இதற்குச் சாட்சியும்....

1746 ஆ மே ௴ 30 ௳ ஸ்ரீ அக்ஷய ௵ வைகாசி ௴ 20 ௳ திங்கட்கிழமை நாள்

சாயங்காலம் பத்து மணி வேளைக்கு தடி அருணாசல செட்டியை விடுவிக்கச் செய்யவேணுமென்று துரைவீட்டுக்குப்போனவிடத்திலே துரையவர்கள் சமயமில்லாமல் காகிதமாடிக்கொண்டிருக்கிறார் என்று சொன்னார்கள். அதின்பேரில் பாக்குக் கிடங்கு திண்ணையின்பேரிலே யிருக்கையிலே சூரத்திலேயிருந்து காசிதுகள் இண்டு பேர் துரையவர்களுக்குக் காகிதம் கொண்டுவந்தார்கள். அதிலே சீர்மைக் காகிதம்கூட வந்ததென்றும், கசேத்துவந்ததென்றும், அந்தக் கசேத்துப் படிக்கிறார்களென்றும் அப்பு வந்து சொன்னான். ஆனால் சீர்மை சமாசாரமெல்லாம் நன்றாய்த் தெரியுமென்று தடி அருணாசலம் பேச்சுக்கு நாளைக்கு விடுவிப்போம் என்று சந்தோஷத்துடனே வீட்டுக்கு வந்துவிட்டேன். சூரத்திலிருந்து வந்த சீர்மைக் காகிதத்துச் சேதி நாளையதினம் நன்றாய் விசாரித்து எழுதுகிறேன்,

1746 ஆ மே ௴ 31 ௳ ஸ்ரீ அக்ஷய ௵ வைகாசி ௴ 21 ௳ செவ்வாய்க்கிழமை

இற்றைநாள் காலமே (ா) துரை அவர்கள் வீட்டுக்கு ஆறரை மணிக்குத் தானேபோய் (ா) துரையவர்கள் உடுத்திக்கொண்டு வெளியே வருகிறதற்கு முன்னமே தடி அருணா

சலம் சம்மதி ஆயிரம் வராகன் பணமும் துரைக்குக் கொடுத்து, தடி அருணாசலத்தை விடுதலை பண்ணிவிக்கவே ணுமேயென்று யோசனைபண்ணி, துரை வீட்டுக்குப் போய் கணக்கு ரங்கப்பிள்ளையை மூவாயிரத்தி இரு நூறு ரூபாய்க் குச் சரியாய்ப் பணம் வந்து சேர்ந்ததா, துரையவர்களுடனே எச்சரிக்கட்டாயென்று கேட்டதற்கு, எச்சரிப்பும் முஸ்தீப் பாய் இருக்கிறது இப்போதானே விடுதலைபண்ணிப் போட வேணுமென்றுசொன்னான் நல்லதென்று துரை அண்டைக்குப் போய்ச் சொன்னேன். அப்போது துரை எழுந்திருந்து புகை பிடித்துக்கொண்டு உட்கார்ந்து கொண்டிருந்தார். நான் போய் ஆசாரம் பண்ணினேன், எங்குவந்தாய் என்று கேட்டார் ஐயா, அருணாசலம் பணமும் முஸ்தீதாயிருக்கிறது கொண்டு வரட் டாயென்று கேட்டேன். ரூபாயோவென்று கேட்டார் பணம் என்று சொல்லி ரூபாய்க்கு எட்டு பணம் விழுக்காடு கணக்குப் பார்த்து மூவாயிரத்தி இரு நூறு ரூபாய்க்குச் சரியாய் பணம் கொண்டு வந்திருக்கிறதென்று சொன்னேன். ஆனால், என் கணக்குப்பிள்ளை கையில் முதலிடு என்று சொன்னார். நல்லது முதலிடுகிறேன் என்று சொல்லி அருணாசலத்தை விடுதலை பண்ணுங்கோளென்று சொன்னேன். பொறு, விட்டுவிடச் சொல்லுகிறேன் என்று சொல்லி, பணத்தைக் கொண்டுபோய் முதலிடு என்று சொன்னார். நல்லது என்று ரங்கப்பிள்ளை அண்டைக்கு வந்து, உம்முடைய கையில் முதலிடச் சொன்னார். உம்முடைய வசத்திலேதான் இருக்கிறதே மூவாயிரத்தி இரு நூறுரூபாய் பணமும் சென்றதென்று கபுறு சொல்லுங்கோ ளென்று சொன்னேன். இதிலே துரை உடுத்திக்கொண்டு, பண் டிகையானபடியினாலே கோவிலுக்குப் பூசைகேட்கப் புறப்பட் டார். நாங்கள் இரண்டுபேரும் கபுறுசொல்வதற்குச் சமய மில்லாமல் நின்று சலாம்பண்ணினோம். அவர் கோவிலுக்குக் கூண்டுமேலே ஏறிக்கொண் ... ... ... ... ...

1743 ஆ ஜூன் மீ முதல் தேதிக்கு அக்ஷய ஸு வைகாசி மீ 22 உ புதவாரம்

இந்த நாள் காலமே துரையவர்களிடத்துக்குப் போன விடத்திலே தடி அருணாசலம் சம்மதி நேற்று ஆயிரம் வராகன் முதலிட்டதைச் சின்னதுரை புசேலிது கையில் கொண்டுபோய் முதலிட்ட சம்மதிக்குத் தடி அருணாசலச்செட்டியை விடுவிக்கிற தற்கு உத்தாரங்கேட்க வேணுமென்று போனதற்கு, துரை யவர்கள் மகாவெசனையாயிருக்கிற சாடையைப் பார்த்து என் மனதுக்கும் வெசனையாய் இந்த வேளையிலே பேசுகிறதில்லை யென்று நானிருக்கிற பாக்குக் கிடங்கிலே வந்துவிட்டேன்

துரையவர்களுக்கு இத்தனை வேசடை வரக் காரணமென்ன, சீர்மையிலிருந்து வந்த காகிதத்திலே இங்கிலிசு ராசாவுக்குப் பதில் புதுராசாவை பிராஞ்சுராசா கொண்டுபோய் ராசரீகத்துக்கு வைக்கப் பழயராசா ஓடிப்போக இருக்கிறானென்றும் செணுதெ உங்கீ ராசாவுடைய சீர்மை யெல்லாம் கட்டிப் போட்டாரென்றும், அவர் இருக்கிற பட்டணம் தவிர மற்றதெல்லாம் பிராஞ்சுராசா வசமாய் மகாயதிசயமான சந்தோஷமாயிருக்கிறாரென்று கும்பினியார் பிராஞ்சுராசாவுக்கு விண்ணப்பம் பண்ணிக்கொண்டது. இங்கிலித்தேர் கும்பினியார் இந்தியாவுக்குச் சண்டை கவையில்லையென்று உடன்படிக்கையெழுதி கையெழுத்துப்போட்டுக்கொடுத்தது. அதில் பிற்பாடு இந்தியாவுக்குச் சிறிது சண்டைக் கப்பல் அனுப்பி, சீனத்துக் கப்பல் மணிலாக் கப்பல்களைப் பிடித்துக்கொண்டு, பின்னையும் இந்தியாவிலே போய் அனேகவிதமாய்ச் சேதம் பண்ணினதினால் பிராஞ்சுக்காரருடைய கீர்த்திக்குத் தாழ்ச்சி வந்திருக்கிறதென்று சொல்லிக் கொண்டதற்கு அவர் மகா ஆக்கரகப்பட்டு ஒலாந்து ஸ்தாதுக்கு காகிதம் எழுதி ஸ்தானபதியை அனுப்புவித்துச் சொல்லச்சொன்ன வயணம்: முன்னாலே இங்கிலீசுக்காரருக்கும் எங்களுக்கும் சண்டை தெக்ளாரிடச்சே நீங்களும் இங்கிலிசுக்காரரும் ஒன்றான படியினாலே நீங்களும் சண்டைக்கு எத்தனமாய் தெக்ளாரிடுங்கோளென்று சொன்னதற்கு அவர்கள் சொன்னது: நாங்கள் அவர்களுக்கு அனுகூலமாயிருக்கிறதில்லை என்று சொன்னார்கள். ஆனால் எங்களுடனே கூடிக்கொண்டு இங்கிலிசுக்காரர்பேரிலே சண்டைபண்ணச் சொன்னதற்கு அதுவும் கூடாதென்று சொன்னீர்கள். அதின்பேரிலே பிராஞ்சுராசா சொன்னது: உள்ளந்தரங்கத்திலே மற்றதாயிருந்தாலோவென்று கேட்டதற்கு அப்படி யிருக்கிறதில்லையென்று சொன்னீர்களே, அப்படியிருக்க, இப்போது எங்களை மோசம்பண்ணலி இங்கிலீசுக்காரர் எங்கள் கப்பலைப் பிடித்துக்கொண்டுவந்தால் அந்தக்கப்பலையும் சரக்கையும் எப்படி வாங்குவீர்கள். வாங்கின மட்டுக்கும் அவர்களுக்கு நீங்கள் அனுகூலமாச்சுதே அந்தக் கப்பலையும் பணத்தையும் நீங்கள் கொடுங்கோள். இல்லாவிட்டால் சண்டைக்குத் தெக்ளேரிடுங்கோளென்று சொல்லியனுப்புவித்தார். அப்படியிருக்கையிலே இனி அந்தப்பணம் வருமென்று கும்பினியார் எழுதியிருக்க, கப்பல்கள் சீர்மையை விட்டு பத்துக் கப்பல்கள் வருகிறதாய்ச் சேதி வந்திருக்க இப்படியெல்லாமிருக்க, இவர் இத்தனை விசனத்துடனே இருப்பானேன் என்று யோசனைபண்ணிப் பார்த்தால் ஒன்றும் புரியாமல் இருக்கிறது. ஆனால், இரண்டு மூன்று காரியத்திலே ஒரு காரியமாயிருக்குமென்று என் மனதுக்கேற்க யோசனை பண்ணின தென்னவென்றால்: ஒன்று உத்தியோகத்துக்குக்

கவனமிருக்கவேண்டும். அல்லது இவரிடத்திலே அநியாயம பண்ணினுரென்று இதுவிசாரிக்கிறதற்கு இரண்டு கொம்மிஸ் ஸேர்கள் வருகிறுர்களென்று ஒரு மாசத்திற்கு முன்னே சொன் ஞர்களே, அது மெய்யாயிருக்கவேணுமே யல்லாமல் அது இத் தனே சண்டைச்சாமான் முஸ்தீதுகள்பண்ணினமே. இதுகள் விருதாவாய்ப்போமே, அவ்விடத்திலே யில்லாமல் இங்கிலீசு புதுராசாவுக்குப் பட்டமானுல் நாமிந்தச் செலவு கும்பினியார் உத்தரவில்லாமல், கோன்சேல் உத்தரவில்லாமல் நாமாய்ச் செய்த காரியமாச்சுதே. இந்தச் செலவு சம்மதிக் குக் கும்பினியார் என்ன சொல்லுவார்களோவென்று இதின்பேரிலே விசாரமாயிருக்கிருர்களென்றும் தெரிய வில்லை. இந்த மூன்று காரியத்திலே ஒரு காரியத்தைத் தொட்டு இவர் விசாரமாய் இருக்கிருரென்று யோசனே பண் ணித் தீர்த்தேன். அப்பால் அவர் மனதுக்குள்ளே யிருந்திருக் கிறது சுவாமிக்குத் தெரியும். இதுவும் கப்பல்கள் வந்தால் அப் போது விசிதமாமென்று யோசனேபண்ணி யெழுதினேன்.

அப்பா, நாம் பாக்குக்கிடங்கிலே யிருந்து புறப்பட்டு நம் முடைய அண்டையிலிருக்கிற சாமய்யன் மகன் கலியாணத் துக்கு வந்து அங்கே முகூர்த்தமானவுடனே வீட்டுக்குப் பதி னெரு மணிக்கு வந்தேன். பகலேக்குமேலே ஐந்து மணிக்கு, சேஷாசலசெட்டியார் வந்து அழைக்க, அவர்கள் இரண்டு பேரையும் கலியாணம் பண்ண வந்திறங்கியிருக்கிற இரண்டு மாப்பிள்ளேமார், காரைக்கால் ராசன்செட்டி மகன், நாகப்பட் டணம் மத்துரைபாலுசெட்டி மகன் இவர்கள் இரண்டுபேரை யும் அழைக்க நம்முடைய தோட்டத்துப் பிறகே யிருக்கிற சுங்குவார் சத்திரத்துக்குப் போய் அவர்கள் இரண்டு மாப் பிள்ளே மாரையும் அழைத்துவந்துவிட்டு அவர் கொடுத்த வெகுமதி வஸ்திரங்களேயும் வாங்கிக்கொண்டு வீட்டுக்கு எட்டு மணி நேரத்திற்கு வந்தோம்.

1746 ஆ ஜுன் ௴ 2உக்கு அக்ஷய ௵ வைகாசி ௴ 23உ வியாழக்கிழமை

இந்த நாள் காத்தாலே துரையவர்கள் வீட்டுக்குப் போய் வடவண்டை வெராந்தாவிலே சாந்தினேர் கார்க்கிற இடத் திலே உட்கார்ந்து இருக்கையிலே மத்தேசு கணக்கெழுதுகிற கடினேக்குப் போகிறவர் என்னேப் பார்த்து. ரங்கப்பிள்ளே, இங்கே வா வென்றழைத்தார். போயாசாரம் பண்ணின மாத் திரத்திலே சீர்மைச் சேதி கேட்டாயாவென்ருர். ஐயா, நான் கேட்ட சமாசாரமெல்லாம் பொய்யாயிருக்கும் சிறிது சரிப்

படாது. தேவரீரவர்கள் வாக்கினாலே மெய்யென்று சொன்னேன். இப்போது கசேத்துப்படித்துப் பார்த்துச் சொல்லுகிற படியினாலே யார் சொன்னாலும் மெய்யாயிருக்குமென்றும் அல்லாமல் பொய் வராது என்றும் சொல்லி அவர் இங்கிலீத்தேர் ராசாகதை சொன்ன வயணம்:

இப்போது இங்கிலீத்தேராவுக்குப் புதுதாய்ப் போகிற ராசா இதுக்கு முன்னாலே நாற்பத்தெட்டாம் வருஷம் இவர்கள் பாட்டன் இங்கிலீத்தேர் ராச்சியத்துக்கெல்லாம் ராசாவாயிருக்கையிலே அப்பவும் ஒரு தொந்தரவுகள் வந்து, நாட்டாருக்கும் ராசாவுக்கும் ஆகாமற்போய், இப்போது புதிதாய் ராசரீகத்துக்குப்போகிற ராசாவுடைய தகப்பனைப் பெற்ற பாட்டனை வெட்டிப்போட்டு, இப்போது தற்காலம் பட்டத்துக்கு இருக்க ராசா பேர்விளங்கன் ஒரு பிரேஞ்சிலே இவர் ஸ்தேட்டாயிருக்கையிலே இவரை யழைத்துக் கொண்டுவந்து பட்டத்துக்கு வைத்தவுடனே முன் வெட்டுப் பட்டுப்போன ராசாவுடைய பிள்ளைகள், இப்பட்டத்துக்கு இருக்கிற ராசாவினுடையதகப்பன் அவர்கள் சிறு பிள்ளைகளானபடியினாலே மறு ராச்சியத்திலே போய்ப் பதுங்கியிருந்துகொண்டு சீவனம் பண்ணிக்கொண்டிருந்தார்கள் இப்படியிருக்கையிலே இப்பட்டத்துக்கு இருக்கிற ராசா தன்னுடைய சீர்மையைப் பலப்படுத்துகிற நிமித்தியம் இர்லாந்தென்கிற ரெய்யோமிலே இருக்கப்பட்ட சனங்களையும் கோஸென்கிற ரெய்யோமிலே இருக்கப்பட்ட சனங்களையும் வருத்தப்படுத்தி அவர்களுடைய திரவியங்களையெல்லாம் அபகரித்து சீரணப்படுத்தியும், இதல்லாமல் இந்த ரெய்யோமிலே இருக்கப்பட்ட பட்டணத்தைப் பிரபலப்படுத்தி மாமூறு பண்ணிவைக்கும் பொறுப்புடன் நாளது வரையில் இந்த இரண்டு ரெய்யோமையும் சீரணிக்கப்பண்ணித் தன்னுடைய ரெய்யோமை மாமூறு பண்ணிக்கொண்டு வருகிறதினாலே அந்த இர்லாந்தென்கிற ரெய்யோமிலே இருக்கப்பட்ட வர்த்தகரும் கோஸென்கிற ரெய்யோமிலே இருக்கப்பட்ட வர்த்தகரும் இருதிறத்தாரும் கூடி யோசனைபண்ணிக் கொண்டு முன்னே வெட்டுப்பட்டுப்போன ராசாவினுடைய பிள்ளைகள் மறு ராச்சியத்திலே பதுங்கியிருந்தவர்களுக்கும் இந்தவர்த்தகர் அந்தரங்கத்திலே எழுதியனுப்பி, நீங்கள் மற்றதைப் பண்ணிக்கொண்டு வந்தீர்களானால் நாங்களும் உங்களுக்குச் சகாயமாயிருந்து அவரைத் தள்ளி விட்டு உம்மைப் பட்டத்துக்கு வைக்கிறோம் என்று எழுதி யனுப்பினபடியினாலே அதின்பேரிலே அவர்கள் யோசனை பண்ணிக்கொண்டு பிராஞ்சு ராசாவை வந்து கண்டு

தங்களுடைய விருத்தாந்தங்களெல்லாம் சொல்லிக்கொண்டார்கள். அதின் பேரிலே அந்த வார்த்தைகளெல்லாம் கேட்டு அவர்களை அனுப்புவித்துக்கொண்டு அதன்பேரிலே இங்கிலிததேராவிலே ........... இர்லாந்தென்கிற ரெய்யோமிலே இருக்கப்பட்ட வர்த்தகருக்கும் கோலேன்கிற ரெய்யோமிலே இருக்கப்பட்ட வர்த்தகருக்கும் பிராஞ்சு ராசா அந்தரங்கத்திலே காகித பத்திரம் எழுதியனுப்பியவர்களை வசப்படுத்திக்கொண்டு இவரையும் வைத்துக்கொண்டு சமயம் பார்த்துக்கொண்டிருந்தார்கள். இதற்கு முன்பாகததானே எம்பரதோர் காலம்பண்ணிப்போனதற்குப் பட்டத்துக்குப் பிள்ளையில்லாமற் போனபடியினாலே அவர் குமாரத்தி (ரெனுதங்கரி) அந்த எம்பரதோர் ராச்சியமெல்லாம் கைவசப்படுத்திக்கொண்டிருந்தபடியினாலே எம்பரதோருக்குப் பிள்ளையில்லாமற்போனால் அந்தப் பட்டத்துக்குடைய வாரிசுக்காரன் துய்க்கி தெ பவியே ரென்கிறவன் பிராஞ்சு ராசாவை வந்தடுத்து எம்பரதோர் பட்டம் தனக்குக் கட்டிக்கொடுத்தால் ஒலாந்தாவண்டையிலிருக்கிற பிளாந்தரென்கிற ராச்சியத்தையும் உமக்குக் கொடுக்கிறோம் என்று சொல்லி உடன்படிக்கைச் சீட்டெழுதிக் கையெழுத்துப் போட்டுக்கொடுத்து அவருடைய படை அறுபதினாயிரம்பேர் சொல்தாதுகளைக் கூட்டிக்கொண்டு அத்துடன் தன்னுடைய படையையும் கூடக் கூட்டிக்கொண்டுபோய் ரெனுதங்கிரியைத் தள்ளிவிட்டு, அந்தப் பட்டத்தைக் கட்டிக்கொண்டுவிட்டார். பட்டங் கட்டிக்கொண்ட முன்னிலையாய் ரெனுதங்கிரி மனதிலே துய்க்கி தெ பவியேருக்குப் பிராஞ்சு ராசா அறுபதினாயிரம் பேர் சொலுதாதுகளை படை கூட்டியனுப்பாவிட்டால் அவன் வந்து பட்டங்கட்டிக்கொள்ளமாட்டானே இத்தனையும் பிராஞ்சு ராசாவல்லவா பண்ணுவித்தாரென்கிறதாய்ப் பிராஞ்சு ராசாவுக்கு ரெனுதங்கரிக்குச் சண்டை தெக்ளேரிட்டு சண்டை நடக்கையிலே ரெனுதங்கரிக்கும் மத்தத்தாய் இங்கிலீசுக்காரர் படை யனுப்புவித்து, பிராஞ்சுக்காரருடனே சண்டை பண்ணினபடியினாலே அப்போது பிராஞ்சு ராசாயிருந்துகொண்டு இங்கிலீசுக்காரர் அவர்களுக்கு மத்தத்தாய் நம்முடனே சண்டைக்கு வரலாமாவென்று ஆக்கிரமப்பட்டு இங்கிலீசு ராசாவுக்கு எழுதியனுப்புவித்த உங்களுக்கும் நமக்கும் சண்டையிருக்கிறது. சண்டைக்கு வரலாமென்கிறதாய் தெக்ளாரிட்டு சண்டை நடந்து இங்கிலீசுக்காரருககு வருஷத்திலே ஆறேழு கோடி எடுக்கிற சமயிக்கு என்கிற ராச்சியத்தைக் கட்டிக்கொண்டதுமல்லாமல் இங்கிலீசுக்காரருடைய ராச்சியங்களிலே அனேகம் பட்டணங்களையும் கட்டிக்கொண்டு, அனேகம் கிராமங்களையும் பிடித்துக்கொண்டு,

புதுசாய் வந்த ராசாவைப் பயணப்படுத்தி, தாமும் மற்றதைக் கூட்டி யனுப்புவித்தவிடத்திலே, முன்னெழுதப்பட்டிருக்கிற கோலெஸன்கிற ரெய்யோமிலே இருக்கப்பட்ட வர்த்தகரும் அந்த ராச்சியத்திலே யுண்டாகிய குடியான பெர்ணுடோர் சகலமானபேரும் எதிர்கொண்டுவந்து ராசாக்களுக்குப் பண்ணுகிற மரியாதைகள் என்ன உண்டோ அந்தப்படிக்கு வெகுசாய் சங்கைபண்ணி யழைத்துக்கொண்டுபோய் இவரை தங்கள் ரெய்யோமுக்கும் ராசாவாக வைத்துக்கொண்டு இங்கிலித்தேராவுக்கு இராசதானி பட்டணமாயிருக்கிற லோந்துருவிலே ராசாவாயிருக்கிற ராசாவின்பேரிலே அவர்கள் ஒரு புறத்திலே சண்டை பண்ணினபடியினாலே லோந்துருவிலே இருக்கப்பட்ட சனங்களுக்குள்ளே சிறிது பேர் புதிதாய் வருகிற ராசா சொன்னபடி கேட்டு நடந்துகொள்ளுகிறோமென்று சேதி எழுதியனுப்பினார்கள். இதுகளெல்லாம் தற்காலம் ராசரிகம் பண்ணுகிற ராசாவாயிருக்கிறவன், இதுகளெல்லாம் யோசனை பண்ணிக்கொண்டு, இனிமேல் நிர்வாகத்துக்கு வரமாட்டாதென்கிறதாய் யோசனைபண்ணி, அதின்பேரிலே முன்னாலே தாலிருந்த பழையபட்டணத்தே போய்ச்சேர வேணுமென்கிறதாய் ஓடிப்போகிறதற்கு எத்தனமாகி அவனுடைய தட்டுமுட்டுச் சகல சமஸ்த சறஞ்சாமம் பண்ணிக்கொண்டு தயாராயிருக்கிறேனென்றும் மழைகாலமானபடியாலே இப்போது சண்டை நிறுத்தியிருக்கிறார்களென்றும், சண்டை நிறுத்தியிருக்கிறவேளையிலே எழுதிவந்தபடியினாலே அவனுடைய பட்டணத்துக்கே ஓடிப்போனானே அல்லவோ என்றும் அவர்கள் கையிலேதான் அகப்பட்டுக் கொண்டானோ என்னமாயிருக்கிறதோ தெரியாது என்றும், ஒலாந்தாவுக்கு ராசாயில்லாதபடியினாலே ஒலாந்தாக்காரர் இங்கிலீசுராசாவை அடுத்துக்கொண்டு அவர்களுக்குச் சமய சந்துக்கட்டாயிருக்கிற வேளையிலே பணங்காசுகளைக் கொடுத்தும் படைகளைக் கூட்டியும் அவர்களை முன்னிட்டுக்கொண்டு நாளது வரைக்கும் அவர்கள் சந்திலே அவர்கள் ஆதரவாய் வைத்துக்கொண்டு இவர்களும் ராசரீகம்போலே பண்ணிக்கொண்டிருந்தவர்கள், இப்போது புதிதாய் வருகிற ராசாவை அனுசரி பண்ணிக்கொள்ளாமல் பழய ராசாவைத்தானே அடுத்துக்கொண்டு புதிதாய் வருகிற ராசாபட்டத்துக்கு வராதபடிக்கு எந்த உபாயமுண்டோ அந்தப்படிக்கெல்லாம் விரோதம் பண்ணிக்கொண்டுநாளது வரையில்பழய ராசாவைத்தானே அடுத்துக்கொண்டிருந்தபடியினாலே இப்போது அவர்தானே புதுதாய்ப் பட்டத்துக்கு வருகிறபடியினாலே இனிமேல் ஒலாந்துக்காரருக்கும் அவர் ஆசரா கொடுத்து நடந்தாரென்கிறதினாலே இனிமேல் ஒலாந்தாக்காரருடைய காரியம் பழயபடிக்கு நடவாதென்

றும், வரவர நாளுக்குநாள் சீரணித்துபோமென்றும், இதல்லாமல் ஒலாந்தாவுக்கு அடுத்தாப்போலயிருக்கிற எம்பிரதோராச்சியம் பிராஞ்சாவைச் சேர்ந்தப்படியினாலேயும் இங்கிலீசுக்காரருடைய ராச்சியமும் அனேகமாய் பிராஞ்சாவைச் சேர்ந்தபடியினாலேயும் ஒலாந்தாக்காரருக்குத் தலையெடுக்கக் கூடாதென்றும் இப்போது ஒலாந்தாவுக்குப் போகிற கப்பலெல்லாம் பிளாந்தொருஎன்கிற கோட்டை ஓரமாய்ப்போய் அப்புறம் ஒலாந்தாவுக்குப் போகவேண்டியதானபடியினாலே அந்தக்கோட்டையிலே எப்போதும் பிராஞ்சுக்கார் பண்டியனேகமாய் இருக்கிறபடியினாலே எந்த வேளையிலே வருகிறதோ அந்த வேளையிலே ஒலாந்தாக்காரர் கப்பலைப்பிடித்துக்கொள்ளலாமென்றும், பின்னையும் இப்படி அனேகவித உபாயத்திலே ஒலாந்தாக்காரக்குப் பலவீனமாயிருக்கிறபடியினாலே இப்போது ஒலாந்தாக்காரருக்கு இருக்கிற தாபந்தமும் விசாரமும் இன்றுமட்டு, இனியம்மட்டென்று ஒரு மிதத்துக்குள்ளே சொல்லப் போகாதென்கிறதாய்க் கசேத்திலே எழுதிவந்ததென்றும், இதல்லாமல் பிராஞ்சுராசா ரெனுதங்கிரியிருக்கிற ராசதானிப் பட்டணம் தவிர மற்ற ராச்சியமெல்லாம் கட்டிக்கொண்டாரென்றும், இந்த வீதத்துக்குள்ளே சகலராச்சியமும் பிராஞ்சு ராசா கட்டிக்கொண்டபடியினாலே அவருக்கு இப்போது இருக்கிற சந்தோஷமும் உற்சாகமும் கீர்த்தியும் ஈரோப்பு ராச்சியங்களிலே ஒரு ராசாவுக்குமில்லையென்கிறதாய் கசேத்திலே அந்தப்படிக்கு எழுதிவந்ததென்றும், இதல்லாமல் கும்பினியாருடைய சீனத்துக்கப்பல் மூன்றும் முசே லபூர்தோனே அவர்களது சீனத்திலிருந்து வந்த கப்பல் ஒன்றும் மணிலாவிலேயிருந்து வந்தகப்பல் ஒன்றும் ஆக ஐந்து கப்பலையும் கொண்டுபோய் பத்தாவியிலே ஒலாந்தாக்காரருக்கு வித்த சம்மதியும் இங்கே இங்கிலீசுக்காரர் கப்பல்கள் வந்து இந்தியாவிலே பிராஞ்சுக்காரர் கப்பல்களைப் பிடித்துக் கொண்டு இவ்விடத்திலே நடக்கப்பட்ட அலங்கோலங்களையும் பிராஞ்சுக்காரர் யென்னப்பட்ட சாதி யென்னப்பட்டவர்களுக்கும் வரப்பட்ட தாழ்ச்சியினைக்கும்பினியார் போய் ராசாவுடனே விண்ணப்பம் பண்ணிக்கொண்ட விடத்திலே பிராஞ்சு ராசா மிகுதியும் ஆக்கரமப்பட்டு அதின்பேரிலே அவர்களுக்குத் தக்கபடிக்கு நடப்பிப்போம் என்கிறதாய் சொல்லி அப்பால் ஒல்லாந்துக்காரருக்கு ஸ்தானாபதிகளைக் கொண்டு சொல்லியனுப்புவித்தது என்னவென்றால் நீங்கள் சொன்னது நாங்கள் இங்கிலீசுக்காரருக்கு மத்ததாகி போகிறதில்லை யென்று சொல்லிப்போய் அவர்கள் நம்முடைய கப்பலைப் பிடித்துக்கொண்டுவந்தால் அறிந்திருந்து எப்படி கொள்ளுவீர்களென்றும் கொண்டு அவர்களுக்கு ஆசரா கொடுத்தமட்டுக்கும் நீங்களந்த சீனத்துச் சரக்குக்கு கொள்

முதலும் பிராஞ்சாவிலே விற்கிறபடிக்கு ஆதாயமும் கப்பல் கிரயமும் கப்பலின் செலவு ஆள் மாகாண முதலாகிய சகல செலவும் இதல்லாமல் மணிலா கப்பலிலே வந்த பணமும் அந்தக் கப்பல் கிரயமும் அந்தக் கப்பல் செலவும் இதுகளெல்லாம் நம்முடைய, ஸ்தானபதி வந்து சொன்ன மாத்திரத்துக்குள்ளே கொடுத்து அனுப்புவித்தாலாச்சுது. இல்லாவிட்டால் சண்டைக்குத் திக்கிளேரிட்டு சண்டைக்கு வரச் சொல்லச்சொல்லி அனுப்பினார். ஆனபடியினாலே இனிமேல் சீனத்துப் பணமும் மணிலாப் பணமும் வருமென்றும் அதற்குச் சந்தேகமில்லையென்றும் இப்படியாக எழுதி வந்த பின்னையும் அனேகமாய் கசேத்திலே எழுதிவந்த வயணமெல்லாம் சொன்னார். அதிலே சாரசமாயிருக்கிறது மாத்திரம் தோன்றின மட்டும் சூட்சமமாய் நாலு வார்த்தைச் சுருக்காய் சுருக்கமாய் எழுதினேன். அதற்கு நானிருந்து கொண்டு இங்கிலிசுக்காரர் உம்முடைய மனதுக்கு வேசடைவர நடப்பித்தபடியினாலே அவர்களுக்கு அங்கே மூல ஆனிவரத்தக்கதாக சுவாமி ஆக்கினைகொடுத்தார் என்றும், பின்னையும் அவர்மனதுக்கு உற்சாகம் வரத்தக்கதாய் அவர் மனோபாவத்துக்கேத்தாப்போலே சொல்லவேண்டிய படிக்கெல்லாம் சொன்னேன். அதினாலேயவருக்கும் உற்சாகமாய் இங்கிலீசு சண்டை கப்பல்காரர் இவ்விடத்தில் படாய்ப் பண்ணிக்கொண்டு தலைவிசிறிக்கொண்டு திரிந்தார்களே அவர்களினிமேல் என்னமாய்ப் போவார்களோ, என்ன கஸ்தி யனுபவிப்பார்களோ, என்னவென்று முகத்தைக் காட்டிக்கொண்டு இந்த வட்டங்களிலே திரிவார்களோ, என்னமாய்ப்போய் சீமைக்குச் சேரப்போகிறார்களென்றும் இப்படியே அனேகமாய்ப் பரியாசமான வார்த்தைகளாய் எகத்தாளியாய்ச் சொன்னார். நானும் அவர் சொல்லுகிற சாடைக்கு இவர் மனோபாவப்படிக்கு வயணமாய்த்தானே சொன்னேன். நான்சொல்லுகிற வார்த்தைகளெல்லாம் அதிச உற்சாகமாய்த்தானே அதுக்கதுக்கு அவரும் பிராஞ்சு ராச்சியத்தினுடைய சரித்திரங்களையும் சொல்லி இங்கிலீசு ராசியத்து ராசாவுக்கு ஒரு அதிகாரமும் இல்லாமல் பரன்மேந்துகளுடைய ஆதீனத்துக்குட்பட்டு அவர்கள் சொல்படி கோட்டு அவர்கள் உத்தாரத்தின் பேரிலே நடந்து கொள்ளுகிறபடியினாலே ராசரீகம் பண்ணுகிறவனுக்கும் ஒரு அதிகாரமும இல்லாதபடியினாலே இப்படி நாற்பதுக்கும் நாற்பத்து ஐந்து வருஷத்துக்கொருதரம் பட்டத்திலே இருக்கிறவன் 'எடுபட்டுப்போய் பின்னையொரு ராசா வந்து உட்கார்ந்து இருக்கிறது. இப்படி எந்நாளும் இங்கிலீஷ்தேர் ராச்சியத்துக்குண்டான சட்டமென்று சொன்னார். அதற்கு நானிருந்துகொண்டு உங்கள் ஆயிசுக்குள்ளே தானே முன்னேயிருக்கிற ராசா எடுபட்டுப்போய் பின்னையொரு ராசா வந்து

இப்போது அந்த ராசா எடுபட்டுப்போய், பழயராசா பிள்ளை மறுபடியும் பட்டத்துக்கு வரலாச்சுதே என்று சொல்லி ராசரீகம் பண்ணுகிறவனுக்குச் சுதந்திரமில்லாமல் பரனமேந்துகளுடைய ஆதிக்கமாயிருந்து 'அவர்கள் சம்மதியான பேரை தள்ளிவிடவும் இருக்கிறபடியினாலே இப்படியெல்லாம் நடக்குதென்று சொன்னேன். அது மெய்தான் இந்த இரு நூறு வருஷத்துக்குள்ளாக ஐந்துதரம் இப்படி நடந்ததென்று சொன்னார். அதின்பேரிலே இத்தனை யெல்லாம் சொன்னீர்களே நமக்குக் கப்பல் வருகிற சேதியென்ன ஒன்றும் தெரியவில்லையே, அது தயவு பண்ணிச் சொல்லவேணுமென்று கேட்டேன். அதற்கு அவர் நகைத்துக்கொண்டு கையினாலே அமர்த்தி, அப்புறம் ஓரடி நடந்தார். அதின்பேரிலே நானிருந்துகொண்டு, ஐயா, நீங்களித்தனைநேரம் சொன்ன வார்த்தைகளெல்லாம் கேட்டுகர்ணாமிருதம் பொழிந்தாப்போலேயிருந்த என்னுடைய சந்தோஷம் ஒரு மிதத்துக்குள்ளேயில்லை. இனி ஒரு வார்த்தை கப்பல்வருகிற சந்தோஷக்கபுறுமாத்திரம் கேட்டதுண்டானால் இனிமேலதைவிட வேறே எனக்கு ஒரு சந்தோஷமுமில்லை என்று சொன்னேன் அந்தமட்டிலே நின்று திரும்பிப்பார்த்து, ஏழெட்டு நாளைக்குள்ளே உன்னுடைய மனதுப்படிக்கே கப்பலும் வரப்போகுது அப்போது நீ சந்தோஷத்தை யடையப்போகிறாயென்று உத்தரவு சொன்னார். அதின் பிற்பாடு ஒரு அச்சிக்குதிரை நமக்கு வேண்டியிருக்கிறது என்று ஒரு குதிரை வாங்கித்தர வேணுமென்று சொன்னார். அப்படியே வாங்கித்தருகிறேன் என்று சொன்னேன். அதின் பேரிலே இது சமயமாயிருக்குதென்று சொல்லி தடி அருணாசலத்தை விட்டுவிட வேணுமய்யாவென்று உத்தாரங் கேட்டேன். அதற்கு அவர் சொன்னது: ரங்கப்பா, இதோ ஒரு பெத்திசியோம் தடி அருணாசலத்துமேலே வேங்கடேசய்யன் எழுதிப்போட்டான் பார்த்தாயா? இப்படி வெகு குற்றம் அவன் பேரிலே யிருக்க அவனை எப்படி விடுகிறதென்று சொன்னார். அதற்கு நானிருந்துகொண்டு நேற்றுதான் கும்பினீருக்கு ஆயிரம் வராகன் அபராதம் கொடுத்திருக்கிறான். இந்தக் குற்றத்துக்கெல்லாம் கொடுத்தது ஆனபடியினாலே தயவு பண்ணி தடைபண்ணாமல் விட்டுவிடவேணுமென்கிறதாய்ச் சொன்னதற்கு இவனும் அரும்பாதத்தையும் பங்காயிருந்து கொண்டு கும்பினீர் பணமெல்லாம் அவன் கசேரிடத்துக்குள்ளே இருந்துகொண்டு அந்தப்படிக் கொள்ளையிட்டான். இவன் குவாடு தெமக்செனிலே யிருக்கிற பார்ப்பாரைச் சேர்த்துகொண்டு இந்த அடுக்கிலே இவன் கொள்ளையிட்டான். இந்தப்படிக்கு இரண்டுவிதத்திலேயும் கும்பினீர் பணமெல்லாம் லக்ஷம் வராகன் மட்டுக்கும் கொள்ளையிட்டிருக்கிறார்கள். இவர்களுக்கென்ன, நாலாயிரம் ஐயாயிரம் கொடுக்கப்போகாதா என்று சொன்னார். அதன்பேரிலே நானிருந்து

கொண்டு அவர்களுடைய அடிமையாயிருக்கவே யிருக்கிறார்கள். நீங்கள் எப்படிச் சொன்னால் அப்படி நடந்துகொள்ளுகிறார்கள். இந்த வேலை தயவுபண்ணி விட்டுவிடத் தக்கதாய் உத்தாரங் கட்டளை யிடவேணுமென்று கேட்டேன். ஆனால், உன் நிமித்தியம் அவனை இப்போது விட்டுவிடுகிறோமென்று சொல்லி உத்தாரங்கொடுத்து விட்டுவிடச்சொன்னார்கள். அதின்பேரிலே நயினாருக்குச் சொல்லியனுப்பி, விட்டுவிடச் சொன்னேன். அந்த மட்டிலே விட்டுவிட்டார்கள் பிற்பாடு, சாவடி மணியம் முருகப்பிள்ளையை அழைத்து அவன் வீடு வாசல் முத்திரித்திருக்கிறதையும் முத்திரையை விட்டுவிடச் சொல்லி உத்தாரங்கொடுத்தோம் ... ... ... ... சாயங்காலம் நயினார்வந்து, சாத்துகான் பட்டாணி வியாச்சியக்காரன் சானுகான்பாபி என்கிற பட்டாணிகள் முன்னாலே ஓடிப்போனபடியினாலே அவனுடைய பெண்டுகள் பிள்ளைகளைக் காவல் பண்ணிவைத்திருக்கிறதே அவர்களுக்கு இருபது நாளாய் சாப்பாட்டுக்கில்லாமல் பட்டினியே கிடந்து செத்துப்போகிறார்களென்றும், அவனது குதிரை ஒன்றிருக்கிறது. அதற்கும் இருபது நாளாய் தீனி போடுகிறதற்கு அவகாசமில்லாமல் வீணாய்ச் செத்துப்போகிறது. இதல்லாமல், அவர்களை வீட்டிலே ஒரு சேவகனைக் காவல் வைத்திருக்கிறதே அவனுக்கும் மாசம் பதினெட்டு பணம் சம்பளம் கொடுக்கவேண்டியிருக்கிறதே என்றும், அவர்களைத்தொட்டு ஒன்றும் சாரமா யிருக்கவில்லையென்றும் துரையவர்களுடனே வந்து சொன்னார் அதின்பேரிலே அப்படியானால் அவர்களை என்ன செய்கிறது. விட்டுவிடுங்கோளென்று உத்தாரங் கொடுத்துவிட்டபிறகு என்னை யழைத்து அவன் குதிரை ஒன்றிருக்கிறதே அதை நம்முடைய பேரைச்சொல்லாமல் விலை சதிராய் வாங்கிக் கொடுக்கச்சொல்லிச் சொன்னார்கள். நல்லதென்று சொல்லி வந்துவிட்டேன்.

நான் துரையவர்களண்டையிலே போய் பேசிக்கொண்டிருக்கையிலே சூரத்திலேயிருந்து இரண்டு பேர் சோடாக்காரர் சிர்மைக் கடுதாசியும் பின்னையும் வெள்ளைக்காரர் அவரவருக்குக் கடுதாசியும் கொண்டுவந்தார்கள். அந்தக் கடுதாசியிலே சேதிகள் இன்னதென்று இந்த மட்டுக்கும் வெளியானதில்லை.

இந்த நாள் காலமே பின்னையும் நடந்த சேதி யென்னவென்றால்: துரையவர்களிருந்துகொண்டு, பாக்கு விலை என்னமாயிருக்கிறதென்று கேட்டார்கள். கூடலூரிலே பாக்கு வந்து அவணம் ஒன்றுக்கு ஐந்து வராகனாயிருக்கிறதென்று சொன்னேன். ஆனால் வர்த்தகர் வந்து ஏன் பாக்கு கேட்கவில்லையென்று கேட்டார். அது நான் விசாரிக்கவில்லையென்று

சொன்னேன். அதின்பேரிலே சாவடி மணியக்காரரை அழைத்து இனிமேல் கூடலூரிலே யிருந்து ஒருத்தரும் கொட்டைப்பாக்கு கொண்டுவரப்போகாது என்று வழிச்சாரிக்குச் சொல்லியனுப்பிக் கட்டுப்பண்ணச் சொல்லியும், கடைக்காரரை யழைப்பித்து இங்கிலீசுக்காரருக்கும் நமக்கும் சண்டையாயிருக்கிறபடியினாலே அந்த ஊரிலேபோய் பாக்கு மற்றது வாங்கிக்கொண்டுவந்து இந்த ஊரிலே விற்கப்போகாதென்று சொல்லச்சொல்லியும், சாவடி மணியக்காரரை அழைத்து உத்தாரங்கொடுத்து பிறகு ரேவு கணக்குப்பிள்ளை ராமச்சந்திரய்யனை அழைத்து ஆராகிலும் கூடலூரிலே யிருந்தும் தெற்கேயிருந்தும் கொட்டைப்பாக்கு ஏற்றிக்கொண்டு வந்தார்களானால் இவ்விடத்திலே இறக்க உத்தாரமில்லை என்கிறதாய்ச் சொல்லி மறுபடியும் திருப்பிவிடச்சொல்லி உத்தாரங்கொடுத்து, பாக்கு இனிமேல் வெளியே இருந்துவராமல்படிக்கு கட்டுபண்ணிவித்தார்கள்.

1746 ஆ ஜூன் மீ 3 உக்ஷய ௵ வைகாசி மீ 24 உ சுக்கிரவாரம்

இற்றைநாள் காலமே வில்லியநல்லூரிலே ரத உற்சவத்திற்காக இந்தப் பட்டணத்திலுள்ள சகல சனங்களும் வேடிக்கைப் பார்க்கப்போனார்கள். பட்டணத்திலே வீட்டுக்கொருத்தர் இரண்டு பேர் தவிர மற்ற சனங்களெல்லாம் போய்விட்டபடியினாலே பட்டணத்திலே எந்த வீதியைப் பார்த்தாலும் விறிச்சென்றிருக்கிறது.

இற்றைநாள் காலமே துரையவர்கள் பாக்குச் சேதிக்குக் கூடலூரிலேயிருந்து கொட்டைப்பாக்கு வராமல் கட்டுப்பண்ணி நடப்பித்த காரியம் பார்க்கப்போனால் முன்னெழுதப்பட்டிருக்கிற யோசனை சிர்மையிலேயிருந்து இப்படிப்பட்ட சந்தோஷ வார்த்தைகளெல்லாம் கசேத்திலே எழுதிவந்திருக்க இவரிப்படி விசாரத்தை அடைந்து மனமடிவாயிருப்பானேனென்று நான் யோசனைபண்ணியிருந்த மூன்று காரியத்திலே உத்தியோகத்துக்குச் சலனமென்கிறதுமல்ல. இவரிடத்திலே நடப்பித்த காரியங்களை விசாரிக்கிற நிமித்தியமாய் இரண்டு பேர் கொமிசாயிருகள் வருகிறார்கள் என்று ஒரு மாசத்திற்கு முன்னே சொன்னார்களே அதுவுமல்ல, இந்த இரண்டு காரியமுமல்ல. தோற்றுப்போச்சுது. இதல்லாமல் இன்னமொரு காரியம். கும்பினியார் உத்திரவு இல்லாமல் சண்டை முஸ்தீதுக்காக இத்தனை சாமான்கள் முஸ்தீது பண்ணியிருக்கிறோமே அந்தப் பணமெல்லாம் நம்முடையபேரிலே எங்கே விழப்போகிறதோ என்கிற விசாரமோ அல்லவென்று பின்னை

என்னத்தினாலே — விசாரப்பட்டுக் கொண்டிருக்கிறாரோ அதொன்றும் தெரியவில்லை. அதுவும் கிறமெணா காரியங்களிலே வெளியாம்.

1746 ஆ ஜூன் ௴ 8௳க்கு அக்ஷய ௵ வைகாசி ௴ 29௳ புதன்கிழமை.

இந்த நாள் நடந்த அதிசயமென்னவென்றால்: பெருமாள் ரதத்தின்பேரிலே ஏறித் தெருவீதி யெழுந்தருளினபோது பெரிய ராச வீதி, கடைத்தெருவே புறப்பட்டு, அப்பால் தம்பி நயினார் தெருவிலே போகையிலே பெருமாள் நாயக்கன் விட்டண்டையிலே ரதத்தின் உச்சியிலே குடை கட்டியிருக்கிறது. தென்னமரம்பட்டு குடையற்று விழுந்தது பூமியிலே விழுகிறதற்கு முன்னமே தாழேயிருந்த மனுஷர் பிடித்துக்கொண்டார்கள். ஆனால், பட்டணத்திலுண்டான சனங்கள் பார்த்தவர்கள் எல்லோரும் தாபந்தப்பட்டார்கள். இப்படி நடந்ததினால் பட்டணத்துக்கு ஏதாகிலும் ஒரு அரிஷ்டம் காட்டவேணுமென்றும் அல்லது பிரபுவுக்கு ஏதாகிலும் காணவேணுமென்று சொல்லுகிறவர்களும், சிறிதுபேர் கோவிலுக்கு அபிமானமாயிருக்கிற பேருக்காகிலும் ஏதாகிலும் காணவேணுமென்று சொல்லுகிறார்கள். அவர்களும் ஆற்காட்டு சுபாகிரிப் பண்ணுகிற நபாபுக்கு ஏதாகிலும் ஒரு தொந்தரவு காணவேணுமென்று சொல்லுகிற பேரும், கோவிலுக்குத்தான் என்ன தொந்தரவு காணுதோ என்று சொல்லுகிறபேரும் இப்படி நாலுவிதமாய்ச் சனங்கள் சொல்லிக்கொண்டார்கள், என்ன நடக்குமோ சுவாமிக்குத் தெரியும்.

1746 ஆ ஜூன் ௴ 9௳ க்கு அக்ஷய ௵ வைகாசி ௴ 30௳ வியாழக்கிழமை

இந்த நாள் காலமே இந்தப் பட்டணத்திலே நடந்த அதிசயமென்னவென்றால்: முன் 25 உக்கு சனிவார நாள் ராத்திரி பனிரெண்டு நாழிகைக்கு மேல் பதினைந்து நாழிகைக்குள்ளே சேஷாசலசெட்டி குமாரத்திகள் இரண்டு பெண்களுக்கும் ஒரு முகூர்த்தத்திலே கலியாணம் முடிந்தது. அந்த இரண்டு பெண்களுக்கும் மாப்பிள்ளை, ஒருத்தன் திருமலைராயன் பட்டணம் ராச்சண்ண செட்டியார் குமாரன், ஒருத்தன் மதுரைவாலி செட்டியார் குமாரன் நாகப்பட்டணத்திலே இருக்கிறவன். ஆனாலிந்த இரண்டு பெண்களுக்கும் ஒரு முகூர்த்தமாய்ச் செய்கிறவர் கலியாணச் செலவு ரொம்ப சுருக்கத்திலே வீ...... க்குள்ளே அடக்கிவிட்டார். இந்தக் கலியாணத்துக்கு இற்றை நாள் வியாழக்கிழமை சாயங்காலம் ஆறு மணிக்கு (ா) துரை

யவர்கள், மூசே துய்ப்ளேய்க்ஸ் அவர்களும், அவர்கள் பெண் சாதியும், மூசே துபுலா, மதாம் தேப்ரேமன், மூசே லோஸாக்கும் மதாம் கோர்னேத்தும் இவர்களெல்லாம் வந்து அரை நாழிகை உட்கார்ந்து பிறகு எழுந்திருந்து வீட்டுக்குள்ளே முதல் கட்டிலே போய் மாப்பிள்ளையையும் பெண்ணையும் பார்த்துவிட்டு மறுபடியும் பந்தலிலே வந்து உட்கார்ந்து தித்திப்பு மேசையிலே உட்கார்ந்து தித்திப்பு சாப்பிட்டு அரை நாழிகையிருந்து பிற்பாடு புறப்பட்டு வளவுக்குப் போய்விட்டார்கள். வருகையியே சபுறுசங்கு 21, உட்காரச்சே 21, சாப்பிடச்சே 21, எழுந்திருக்கச்சே 21, போகச்சே 21. இந்தப்படிக்கு நாலு தரம் சபுறுசங்கு சுட்டார்கள். ஆனால் (ா) துரையவர்கள் வந்தபடியினாலே வெகுமானம் கொடுத்த வயணம் (ா) துரையவர்களுக்கு ஆயிரம் ரூபாயும் மதாமுக்கு நூறு ரூபாயும் அந்தரங்கத்திலே கொடுத்துவிட்டுப் பந்தலிலே பாக்கு வெற்றிலை பன்னீர் புஷ்பமாத்திரம் கொடுத்தார்கள்.

1746 ஆ ஜூன் மீ 11 உக்கு அக்ஷய ஹூ ஆனி மீ முதல் தேதி சனிவாரநாள்

இந்தநாள் காத்தாலே ஆறு மணிக்கு, சேஷாசலசெட்டியார் வந்து துரையவர்களண்டைக்குபோய் உத்தாரங்கேட்டு வாங்கிக்கொடுத்து ஊர்கோலம் வருகையிலே துரையவர்கள் பேட்டிபண்ணிக் கொண்டவுடனே ஏழு பீரங்கி போடவேணுமென்றும், வெகுமதி வஸ்திரம் கொடுப்பிக்கவேணுமென்றும் சொன்னார் அதற்கு நானிருந்துகொண்டு, மூசே போவலியேர் நாள் முதற்கொண்டு, மூசே லெனுவார், மூசே தும்மா இவர்கள் நாளையிலே உங்கள் வளவிலே கலியாணம் ஆனதுண்டோ, (அப்போது பீரங்கியில்லை) மூசே தும்மா நாளையிலே, பீரங்கி போட்டதுண்டோ என்று கேட்டால் அதற்கு அவர் சொன்னது: மூசே லெனுவார் நாளையிலே ராத்திரியிலே போய்ச் சந்தித்தோம், ஆனபடியினாலே பீரங்கியில்லை. மூசே தும்மா நாளையிலே பீரங்கி போட்டார்களென்று சொன்னார். எனக்கு ஞாபகமிருக்கிறதென்றால் இவர்கள் வீட்டுக்கலியாணத் தூர்கோலம்போது புல்லாங்குழலும் தம்பூரும் பல்லக்குக்கிட்டே அடித்துக்கொண்டு வந்து துரையவர்கள் கிட்டே வந்தபோது வெகுமதி வஸ்திரங்கள் கொடுத்தது மாத்திரமேயல்லாமல் பீரங்கி போட்ட ஞாபகமில்லையென்று சொன்னேன். அதற்கு மூசே தும்மா நாளையிலே பீரங்கிபோட்டார்களென்று சொன்னார். ஆனால், துரையவர்களுக்குத் தெரியப்படச் சொல்லுவோம் வாருமென்று துரையவர்கள் வீட்டுக்கு ஏழு மணி நேரத்துக்கு வந்து துரையவர்கள் உடுத்திக்

கொண்டு சாலையிலே உட்கார்ந்த மாத்திரத்திலே நானும் சுங்கு சேஷாசல செட்டியாரும் கறுத்தம்பிநயினாரும் போய் சலாம் பண்ணினோம். துரையவர்கள் என்னைப் பார்த்து, எங்கு வந்தீர்களென்று கேட்டார்கள். சங்குராமன் இன்றைக்கு ஊர்கோலம் வருகிறானே உங்கள் உத்தரவு கேட்க வந்தானென்று சொன்னேன். அப்படிச் செய்கிறதுதானே என்று சொன்னார். அதற்கு நானிருந்துகொண்டு சொன்னது: மாப்பிள்ளைகளும் பெண்களும் இவ்விடத்துக்கு வந்தால் நீங்கள் நடப்பிக்கவேண்டிய மரியாதைப்படிக்குத் தயவு பண்ணவேணுமென்று கேட்கிறாரென்று சொன்னதற்கு, என்ன நடக்கவேணுமென்று கேட்டதற்கு, பீரங்கி சுடவேணுமென்று கேட்கிறாரென்று சொன்னேன். அதற்கு அவர் இருந்துகொண்டு முன் நடந்ததாவென்று என்னைக் கேட்டார். அவராலே மூசே தும்மா நடப்பித்தார் என்று சொல்லுகிறார். எனக்கானால் ஞாபகமில்லை. தம்பூரும் புல்லாங்குழலும் ஊர்கோலத்திலே பல்லக்குப் பிறகே அடித்துக்கொண்டு வர உத்தாரங்கொடுத்து வீட்டுக்குத் துரையவர்களண்டைக்கு வந்தால் வெகுமதி வஸ்திரமும் கொடுத்ததும் எனக்கு ஞாபகமிருக்கிறது. அப்பால் என்ன நடந்ததோ நான் அறியேனென்று சொன்னேன். அதற்கு துரையவர்கள் சொன்னது: நான் வந்த பிற்பாடு கனகராயமுதலியார் வீட்டிலே கலியாணம் வந்தது. அப்போது பீரங்கிக்கு உத்தாரங் கொடுக்கவில்லை. அப்படியிருக்க, இப்போது சண்டைநாளாயிருக்கிறதினால் உத்தாரங் கொடுக்கப்போகாது. பீரங்கி என்கிற பேச்சு இந்தக் கலாபச் சமயத்திலே பேசப்போகாது என்று சொன்னார். அந்தப்படி சுங்கு சேஷாசல செட்டியாருடனே சொன்னேன். அதற்கு அவர் நீங்கள் தயவு பண்ணால் எனக்கு இதைத் தொட்டு ரொம்ப மேன்பாடாயிருக்குமென்று ரொம்பவும் தெரியச் சொல்லிக்கொண்டார். அதற்கு துரையவர்கள் சொன்னது. இதென்ன பிரதிஷ்டை, கும்பினீர் கடனைச் செலுத்திப்போட்டு பங்காளிகள் கணக்குத் தீர்த்துப்போட்டல் அது பிரதிஷ்டையென்று சொன்னார். அதற்கு நானிருந்துகொண்டு தம்பூரும் புல்லாங்குழலும் உத்தாரம் கொடுக்கவேணும் மாப்பிள்ளை இரண்டு பேரும் தலா நவ்வாலு கஜம் விழுக்காடு சகலாத்து எட்டு கஜமும் இரண்டு கலியாணப் பெண்களுக்கும் இரண்டு சேலையும் இரண்டு ரவிக்கையும் கொடுக்கவேணும் என்று சொன்னேன். நல்லது சகலாத்து என் வசத்திலே இருக்கிறது. சேலையும் ரவிக்கையும் நீர் தருவிக்கிறது. சேலையும் ரவிக்கையும்நீர்யழைப்பியுமென்று சொன்னார். நல்லது என்று சொல்லிப்போட்டு சேஷாசல செட்டியுடனே அவர் கனகராயமுதலியார் வீட்டுக் கலியாணத்துக்கு உத்தாரங் கொடுக்கவில்லையென்று சொன்ன மட்டுக்கும் மேலகிறிச்சுக்கொண்டு சலாம் பண்ணிக்கொண்டு வாரு

மென்று சொன்னேன். அசந்தாப்போலே சலாம்பண்ணிக் கொண்டு வந்துவிட்டார்.

நானும் சலாம்பண்ணிக்கொண்டு இப்பாலே நானிருக்கிற பாக்குக் கிடங்குக்குவந்து சேஷாசலசெட்டியாரை ஊர்கோலத் துக்கு முஸ்தீப்பு பண்ணச் சொல்லியனுப்பி ராத்திரி ஏழு மணிக்கு துரையண்டைக்குப் போஸ்தாய் யோசனைபண்ணி சொல்லிப்போட்டு அனுப்புவித்தேன். அருணுசலசெட்டிக்குச் சொல்லி அனுப்பி இரண்டு சேலையும் இரண்டு ரவிக்கையும் அழைப்பிக்கச் சொன்னேன். சீதா வேங்கடாசல செட்டிக்குச் சொல்லி சேஷாசலசெட்டி வீட்டிலே தானேயிருந்து அவ் வைந்துவராகனிலே இரண்டு சேலையும் இரண்டு வராகனுக்கு இரண்டு ரவிக்கையும் அழைப்பித்தோம் இந்தப்படிக்கு எட் டுக் கிசம் சகலாத்தும் இரண்டு சேலையும் இரண்டு ரவிக்கை யும் ராத்திரிக்கு துரைவீட்டுக்கு வந்த விடத்திலே மாப்பிள்ளை களுக்கும் பெண்களுக்கும் கொடுப்பார்கள்.

இந்த நாள் ராத்திரி எட்டு மணிக்கு, சுங்குசேஷாசல செட்டிவீட்டுக் கலியாண மாப்பிள்ளைகளும் கலியாணப்பெண் களும் துரையவர்கள் வீட்டுக்கு வந்தார்கள். இதற்கு முன் ஏழு மணிக்கு நான் கணக்கு ரங்கப்பிள்ளையைப் பாக்கு கிடங் கண்டையிலேயிருந்து அழைப்பித்து, பெண்களுக்கும் ஆக கொண்டுவந்த இரண்டு பட்டுச்சேலையும் இரண்டு ரவிக் கையும் அவர் கையிலே கொடுத்து சகலாத்து இருக்குதா என்று கேட்டேன். அவர் என் வசத்திலே இல்லை யென்றுர். ஆனல் துரை வசத்திலே இருக்குதோ என்னமோ தெரியாது என்று சொன்னுர். அதன் பிற்பாடு இந்தப் பட்டுச்சேலையை யும் ரவிக்கையையும் கொண்டுபோய் தீயோகு கையிலே கொடுத்த மாத்திரத்திலே தீயோகு போய் துரையுடனே சொன்னுன் ரங்கப்பிள்ளையை யழைக்கச்சொல்லென்று சொன் னுர். என்னை வந்து சேவகன் அழைத்தவுடனே:—

நான் போய் சலாம் பண்ணினவுடனே சகலாத்துக் கோட்டையிலிருந்து என்னை அழைப்பித்து வைக்காமல் போனியென்று கேட்டார். நான் காலத்தாலே கோட்டைக்குச் சீட்டெழுதுவித்துக்கொண்டு வரட்டாயென்று கேட்டதுக்கு இங்கேயிருக்குது கவையில்லையென்று சொன்னீர்களே என்று சொன்னதற்கு இப்போது கொர்னே பேருக்கு சீட்டெழுதி வைத்துக்கொண்டு வாயென்று சொன்னுர். அதின் பிற்பாடு மத்தேசுவை யழைத்துவரச்சொல்லி சீட்டெழுதுவித்து கையெழுத்துவாங்கி கோட்டைக்கு அனுப்புவித்தால் கோட் டையிலே புசே ... ... ... ... ... ...
கொர்னே சீட்டை வாங்கிக்கொண்டு எட்டு அடிக்கிற வேளை

யாச்சு காலத்தாலே ஆகுதென்று சொல்லி யனுப்பினான். அதின்பேரிலே துரையுடனே அப்பு போய் கபுறு சொன்னதற்கு ரங்கப்பனுக்குடனே சொல்லு என்று சொன்னான் என்று அப்பு வந்து சொன்னான். அதின்பேரிலே அருணாசல செட்டியுடனே சொல்லி சால்வை வர்ணம் சிப்பம் ஒன்று கொண்டுவரச்சொல்லி அதிலே ஒன்பது கெசம் கிழித்து இரண்டு துண்டாக்கி இரண்டு மாப்பிள்ளைகளுக்கும் முஸ்தீது பண்ணுவித்தோம். இந்தச் சகலாத்து முஸ்தீது ஆகிறதற்குள்ளே மாப்பிள்ளைகள் ஊர்கோலம் சென்னப்பட்டணத்து வாசல் பெரிய தெரு வீதியில் உத்திராப்பெத்துசெட்டி வீடு கடந்து, துரை வீட்டைப் பார்த்தாப்போலே திரும்பி நின்று, துரை வீட்டைப்பார்த்து, மேளதாளங்கள், தீவட்டிகள், வெள்ளைக்காரர் இரண்டு தம்பூரும் அடித்து, ஒரு புல்லாங்குழலும் ஊதிக்கொண்டு வரத் திரும்பினவுடனே சகலாத்து வரவில்லையென்று வேதகிரீசுரன் கோவில் பார்த்தாப்போலே நயினிப்பிள்ளை வீட்டு நெடுந் தெருவுக்கு நேராய் வந்து சமுத்திரத்தைப் பார்த்துக் கிழண்டை புறப்பட்டுவரச் சொல்லச் சொல்லியனுப்புவித்தேன். அவர்கள் சின்ன துரை வீட்டண்டை ஓரமாய்ப் புறப்பட்டு, பிற்பாடு கோன்சேல் வீட்டுக்கு மூசே பெடுந்தல்மே குடியிருக்கிற வீட்டுக்கு நடுவே யிருக்கிற சந்து வீதியிலே புறப்பட்டு, துரை வீட்டுக்கு வருகிறதற்குள்ளே அருணாசலசெட்டி கொண்டுவந்த சகலாத்து முஸ்தீதானபடியினாலே துரையவர்களண்டைக்குப் போய் முன்னே சகலாத்து சேலையெல்லாம் முஸ்தீது ஆச்சுதென்று கபுறு சொன்னதற்கு, சகலாத்து உன் வீட்டிலேயிருந்து அழைப்பித்தாயோ வென்று கேட்டார். ஆமையாவென்று சொன்னேன். அதின்பேரிலே மாப்பிள்ளைகளும், பெண்களும் ஊர்கோலத்துடனே துரை வீட்டண்டையிலே வந்து மாப்பிள்ளையும் பெண்களும் இறங்கி துரையவர்கள் அம்மான் பிள்ளையும் வெள்ளைக்காரர் இருக்கையிலே வந்து சலாம்பண்ணி நின்றவுடனே, துரையவர்களும் அம்மாளும், மாப்பிள்ளைகளையும் பெண்களையும் பார்த்துச் சந்தோஷமாய்க் கலியாணச் சேதி சிறிது கேட்க, அப்பால் மாப்பிள்ளைகளுக்கும் பெண்களுக்கும் பாக்கு வெற்றிலை பன்னீர் கந்தவடியும் கொடுத்து, மேலே எழுதப்பட்ட சகலாத்து ஒன்பது கெசமும் இரண்டு பட்டுச்சேலையும், இரண்டு ரவிக்கையும் வெகுமதி கொடுத்து ஆசீர்வாதம் சொல்லிச்சுகமாயிருக்கச் சொல்லியனுப்பினார்கள். அவர்களுமனுப்புவித்துக்கொண்டு அப்பால் அவ்விடம் விட்டுப் புறப்பட்டு நம்முடைய தெருவுக்கு வந்து, நம்முடைய வீட்டிலேயும் வெகுமதி வாங்கினார்கள். அப்பால் பத்து மணிக்கு வீட்டுக்குப் போனார்கள்.

1746 ௵ ஜூன் ௴ 12 ௳க்கு அக்ஷய ௵ ஆனி ௴ 12 ௳ ஆதிவாரம்

இந்த நாள் காத்தாலே மூசே துபோசேத்தும் அழைத்தனுப்பினவிடத்திலே அவனண்டைக்குப் போய் அவன் மூசே துபுலா கரைவட்டி சம்மாதிக்கு அவன் எழுதிக்கொடுத்த சீட்டைக் கொடுத்து அதிலே என்னைக் கையெழுத்து போடச்சொன்னான். அதிலே ஒரு வருஷத்துத் தவணை யெழுதி கையெழுத்துப் போட்டேன். அந்தப்படிக்கு வெள்ளைக்காரருக்கு அக்ஷய ௵ முதற்கொண்டு எழுதிக்கொடுக்கிற ரசீதுகளுக்கும் சீட்டுகளுக்கும் நேமித்த தஸ்திரத்திலே வயணமாம்படியே எழுதியிருக்கும். அது பார்த்தால் அந்த வயணம் எல்லாம் விசிதமாய்த் தெரியும். அதின் பிறகு மூசே துபோசேத்து சொன்னதென்ன வென்றால்: சீர்மையிலிருந்து போன வருஷம் ஆவணி ௴ புறப்பட்ட கப்பல் ஐந்தும் மசுக்கரைக்கு வந்து 1746 ௵ பிவ்ரியே ௴ 3 ௳ வந்து சேர்ந்தது என்றும், அந்தக் கப்பலிலே இங்கிலீசுக்காரர் பேரிலே சண்டை பண்ணச் சொல்லி மூசே லபோடதுனேத்து ஒடுதிவந்ததென்றும், அந்தப்படிக்கு முஸ்தீது பண்ணிக்கொண்டு, சீர்மையிலிருந்து வந்த கப்பல்களுடனே தான் முஸ்தீது பண்ணி, கப்பல்களும் ஏகத்துக்குப் பயணம் பண்ணிக்கொண்டு, மே ௴ 30 ௳ புதுச்சேரி வந்து சேருகிறோமென்று சீர்மையிலிருந்து மசுக்கரைக்குச் சண்டைபண்ணச் சொல்லி, கப்பல்கள் வருகிறதற்கு முன்னமே சேதி கொண்டுவந்த இசபெத்து என்கிற பேருடைய கப்பல் ஷலுப்பின் பேரில் மூசே துப்ளெய்க்சு குவர்னதோருக்குக் காகிதம் எழுதி ஷலுப்பைப் பயணம் பண்ணி யனுப்பிவித்தான். அந்த ஷலுப்பு ஒன்றரை மாசத்திற்கு முன்பாகக் காரைக்காலுக்கு வந்து அந்தக் காகிதத்தைக் கொடுத்துவிட்டு மறுபடி மசுக்கரைக்கு அவ்விடத்திலிருந்து பயணம் போகையிலே வேதாரணயத்துக்கப்புறம் கிழக்கரைக்கு நேராய்ப் போகையிலே இங்கிலீசுக் கப்பல்க்காரர் வந்து சுற்றிக்கொண்டவுடனே அந்த ஷலுப்பிலேயிருந்த மனுஷர் கரையிலே யிறங்கி அந்த ஷலுப்பை கொளுத்திப் போட்டார்களே, அந்த ஷலுப்பிலே இந்தக் கப்பல் சேதிகளெல்லாம் வயணமாய் எழுதி வந்ததென்று அதிலே கப்பல்கள் வந்தால் முன்னே காரைக்கால் துறை பிடிக்குமென்று அதிலே சிறிதுபேர் வியாதிஸ்தர் வருவார்கள். வெள்ளிப்பெட்டிகள் அவ்விடத்திலே யிறக்கிப் போடுவார்கள். அதினாலே இறக்கிப் போட்ட மனுஷருக்குப் பதிலுக்குக் கப்பல் மேலே ஏற்றுகிறதற்கு வெள்ளிப் பெட்டி மற்றது அங்கேயிருக்கிறபடியினாலே அந்த விடத்துக்குப் பலன் வேணுமென்

கிறதைக் குறித்து இங்கேயிருந்து சொல்தாதுகளையும் மாபேப்
சிப்பாய்களையும் பயணம் பண்ணி யனுப்பினாரென்றும்; ஆன
படியினாலே கப்பல்கள் வருகிறதற்கு இனிமேல்
அட்டியில்லை இந்த நாழிகைக்கு வந்தாலும் வருமென்றும் இப்
போது பத்து நாளாய் குவர்னதோர் நித்தம் சமுத்திரத்தின்
பேரில் தியானமாயிருக்கிறாரென்றும், மெத்த இந்த சூன் மீ
30உ யிலே இந்தத் துறைக்குள்ளே கப்பலிருக்கு மென்றும்
இப்படி யனேகவிதமாய் அவ்விடத்துச் சமாசாரங்களெல்லாம்
லோகாபிராயமாய்ப் பேசியிருந்து. பெரிய துபாசித்தனம் ஏன்
உனக்குக் கொடுக்கவில்லையென்று கேட்டான். எனக்கென்னத்
துக்கு அந்த உத்தியோகம். இப்போது எனக்கு என்ன மரியாதை
தாட்சியாயிருக்கிறது அரிகை நடக்கிறது. பல்லக்கு நடக்கிறது
துரையவர்களுடைய தயவு பரிபூரணமாயிருக்கிறது. சகல மேன்
பாடும் நடக்கிறது. அப்படியிருக்க, எனக்கு அந்த உத்தியோ
கம் கவையில்லை. உங்களுடைய தயவெல்லாம் பரிபூரணமா
யிருக்கும்போது தாட்சியென்ன? இதல்லாமல் வர்த்தகம் பண்
ணிக்கொண்டிருக்கிறதற்குச் சமானமில்லையென்று சொன்
னேன். அதற்கு அவன் சொன்னது: இதுவும் வர்த்தகத்துடனே
சேர்ந்ததுதான். அதிசயம் வருகிறதெல்லாம் நல்லதல்லவா?
வர்த்தகம்தான் எப்போதும் பண்ணுகிறப்போலே யாச்சுதே
இதுவும் கூட இருந்தால் பின்னையும் பத்துப் பணம் விசே
ஷித்து வரும். இதற்கு ஏன் நீ விதண்டாவாதமாய்ப் பேசுகி
றாய் அப்படிப் பேசாதே பலவந்தமாய் வந்தால் ஏன் வேணு
மென்று சொல்லுகிறாய் உன்னைத்தவிர சமர்த்தன் ஒருத்தரு
மில்லை. ஆனால் கிறிஸ்துவர்களுக்குள்ளே வெளிக் காரியத்துக்
கெல்லாம் எண்ணப்பட்டவனாயிருந்தால் அப்படியே கொடுப்
பார்கள். இந்த ஊரிலே யிருக்கிறவர்கள் கிறிஸ்துவரெல்
லாம் பிச்சைக்காரர். வெளியிலே இவர்கள் பேர் சொன்னால்
பிச்சைகூடப் போடார்கள். சின்ன முதலி ஆனால் இந்த
உத்தியோகத்துக்கு கப்பாசல்ல. ஆனபடியினாலே கிறிஸ்து
வரிலே ஆகிலும் தமிழரிலே கெட்டிக்காரர் நீ ஒருத்தன்
தவிர வேறே யில்லையென்று மூசே தூமா நாளையிலேதானே
நேமிக்கப்பட்டுச் சொல்லப்பட்டிருக்கிறது. இப்பவும்,
மூசே துப்ளேய்க்கும் அப்படியே சொல்லியிருக்கிறார். கோன்
சேல்காரர் அத்தனை பேரும் உனக்கு இந்த இடம் வரவேணு
மென்று சுவாமியைப் பார்த்துப் பிரார்த்திக்கிறார்கள். ஏனென்
றால், நீ அவரவர் மனது வர நடந்துகொள்ளுகிறபடியால் அவ
ரவர்கள் உமக்கு இந்த இடம்வந்தால் அவரவர் காரியங்க
ளெல்லாம் செய்துகொடுப்பீரென்று அவரவருக்குத் தீர்ப்
பரியமாயிருக்கிறார்கள். இதல்லாமல் குவர்னதோர் கோன்
சேலியேர்கள் நேற்று மாசி மாதத்துக் கடைசியிலே தயங்கம்
பாட்டியிலே யிருந்து சீர்மைக்குப் போன கப்பலின்பேரிலே

இங்கே யிருந்து கும்பினியாருக்குக் காகிதம் எழுதி யனுப்பினார்கள். அதிலே பெத்ரு செத்துப்போனானே அவனிடத்துக்கு வைக்கிறதற்கு அவர்கள் வமிசத்துக்குள்ளே யிருக்கிற அவன் தம்பி முதலான பேர் இந்த இடத்திற்குப் பாத்திரரல்லவென்றுப்போலேயும் கிறிஸ்துவரிலே ஒருத்தரும் வேறேயில்லையென்றுப்போலேயும், தமிழரில் இரண்டொருத்தர் உண்டென்றுப்போலேயும், அவர்களிந்தியாவிலே கும்பினி வியாபாரம் நின்றிருக்கிறபடியினாலே இதின்பேரிலே தேவையாய்க் கேளாமல் வேண்டாமென்று சொல்லுகிறாரென்றும், இனிமேல் அதற்குக் காரியமெப்படி நடப்பிக்கிறோமென்றும் பொதுவாய்க் கோன்சேல் காகிதமாய் எழுதினதாகவும், அப்புறம் வரச் சொந்தமாய் கும்பினீருக்கு என்ன எழுதினாரோ அது யாருக்கும் தெரியாதென்று சொல்லி, உனக்குப் பணம் உதவாது, உன் பணமெல்லாம் வெளியிலே இறைந்திருக்கிறதென்றும், உனக்குக் கொடுத்தால் தன் சொந்தப் பேச்சுக்குப் பணம் வராதென்றும்; பணத்துக்கு ஆசைப்பட்டு ஆருக்காகிலும் கொடுத்தால் சிறிது கோன்சேல்காரர் சம்மதித்துக் கையெழுத்துப் போட்டார்கள். எப்படியும் உனக்கு வருமேயல்லாமல் மற்றப்படி வேறே காணோம். அது கெட்டியாயிருக்கட்டும். கப்பலில்லாததினாலே வேலையில்லையென்றும் கப்பல் வரட்டுமென்றும் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள் என்றும் இப்படியாகச் சொல்லி சின்ன முதலியாருக்குச் சொல்லச் சொல்லிச் சொன்னது. இது நூறு வராகன் கனகராய முதலியார் கையில் தான் கடன் வாங்கின சம்மதியைச் சம்மதி பண்ணிப்போட்டுச் சீட்டு வாங்க மறந்து போய்விட்டேன். அந்தச் சம்மதியெல்லாம் நானும் சொன்னேன். நீயும் தெரியச் சொல்லுமென்று சொன்னான். நல்லதென்று அனுப்புவித்துக்கொண்டு வந்தேன்.........மூசே போசேத்து வீட்டிலிருந்து துரையவர்கள் வீட்டுக்கு வந்தவுடனே சின்னமுதலியார் மதனானந்த பண்டிதர் முதலான பேரெல்லாமிருந்தார்கள்.

1746 ஆ ஜூன் மீ 13 ௳ க்கு அக்ஷய ௵ ஆனி மீ 3 உ க்கு

இந்த நாள் சோமவாரம் மூசே துபுவா சம்மதி நிமித்தியம் மூசே துப்போசேத்து வீட்டுக்குப்போய்க் கண்டுபேசி அங்கேயிருந்து ஒன்பதரை மணிக்குத் துரை வீட்டுக்கு வந்தவிடத்திலே அங்கே தானப்ப முதலியார், மதனானந்த பண்டிதர், அவசரம் கிருஷ்ணய்யன், கோபாலய்யன் முதலான பேரிருந்தார்கள். அங்கே நானும் போய் உட்கார்ந்தவுடனே சின்ன முதலியார் என்னைப்பார்த்து, இந்த குசிராத்துக்காரர் அசரத்து மாபுசுகான்

காகிதம் ஒரு மாதம் நாற்பது நாளைக்கு முன்னே காரைக்கா லிலே சென்னப்பட்டணத்திலிருந்து குசிராத்திக்காரருடை கொல்லர் முடிப்பு நாகப்பட்டணத்துக்குக் கொண்டுபோகிற தைக் காரைக்காலிலே வாங்கிக்கொண்ட முடிப்பை விட்டு விடச் சொல்லி ஐந்தாறு நாளைக்கு முன்னே காகிதம் வந் தது. அதற்கு துரையவர்களுக்கு குவர்னதோர் உடைமையது விட்டுவிடச் சொல்லவேணுமென்று எழுதினாரென்று சொன்னதற்குப் பதிலுத்தரவு சொல்லாமல் சும்மாயிருந் தார். அது சம்மதியாயச் சும்மா யிருந்தாரங்காட்டுமென் றிருந்தோம். இன்றைக்குத் துரையவர்கள் சொன்னது மாபுசுகானுக்குப் பதில் காதிகம் எழுதி அனுப்பச் சொன்னது எங்களூர் வர்த்தகரது நெல், குங்கிலியம் வந்ததைக் கூடலூ ரார் பிடித்துக்கொண்டார்கள். அதை விட்டுவிடச்சொல்லி, தாக்கீது அனுப்பச் சொல்லி. அசரத்து நபாபு சாயபு அவர் களுக்குக் காகித மெழுதி யனுப்புவித்தோம். அதற்கு அவர் களுக்குத் தாக்கிது பண்ணுவித்து நம்முடைய உடமையை வாங்கிக் கொடாமற்போனார்க ளிப்போதும் சென்னப்பட்ட ணத்தாருக்கு எழுதி யனுப்பிவித்து அந்தச் சரக்கை யழைப் பித்துக்கொடுத்தால் இந்த நவரத்தின முடிப்பும் கொடுத்து விடுகிறோமென்று எழுதி யனுப்பச்சொல்லி உத்தாரங்கொடுத் தாரென்றும், அந்தப்படிக்குக் காகிதம் எழுதியனுப்பிவிக் கிறோம் என்றும் சொன்னார். வந்து இது நிமித்யம் காத்துக் கொண்டிருந்த குசிராத்துக்காரர் பத்து பேருண்டு அவர்க ளுடனே மதனந்த பண்டிதர் முன் மாபுசுகான் காகிதம் வந்து துரைக்குப் படித்துக் காண்பித்தவுடனே அவா உத்தரவு சொல்லாமலிருந்ததைத் தானே சம்மதியாயிருக்கிறாரென்று குசிராத்துக்காரருடனே தன் சொந்தப் பேச்சுக்கும் துரை பேச்சுக்கும் ஏதாகிலும் கொடுக்கவேணுமென்று சின்ன முத லியார் ஆலோசனையின் பேரிலே பேசினான். அதற்கு அவர் களும் ஏகதாகச் சம்மதித்தார்களாம் அதிலே துரையவர்களிப் படி எழுதச் சொன்ன மாத்திரத்திலே இந்தச் சாடையை துரைக்குச் சொன்னார்கள். அதற்கு அவரிடம் கொடாமல் போனாரென்று சேதி கேட்டேன். அப்பால் துரை வீட்டி ருலிந்து சென்னப்பட்டணத்து ஆணிக்காரப் பார்ப்பான் வீட் டிலே முகூர்த்ததிற்குப்போய் அப்பால் விட்டுக்குப்போய் நாலு மணிக்கு நம்முடைய அக்கிராகரத்துக்குப் போய் பதினைந்து நாளைக்குமுன்னே குளம் சேறெடுத்துவிட்ட இரண்டாம் நாள் போய்ப் பார்த்தபோது சலம் கலங்லாயிருந்தது இப்போது தண்ணீர் தெளிந்தாப்போலே யிருக்கிறதென்று சொன்னது பொய்யோ மெய்யோ வென்று பார்க்கப் போனதற்குத் தண் ணீர் நன்றாய் தெளிந்திருந்ததைப் பார்த்துச் சந்தோஷ மாச் சுது. அப்பால் அவ்விடத்திலே வேங்கட தீக்ஷதரைக் கண்ட

விடத்திலே அவர் ஆளாக்கி சீனிவாச பண்டிதர் கடைசி குமா
ரன் வேங்கட்டராயனுக்குக் கலியாணம் முடிந்ததென்றும்,
கோபாலய்யங்கார் வந்து சொன்னாரென்றும் சொன்னார். அதின்
பேரிலே கோபாலய்யங்காரை, என்ன கலியாணம் சம்பிரமா
வென்று கேட்டதற்குக் கலியாணம் சம்பிரமமாய் முடிந்தது.
பிராமணர் இந்த ஐந்தாறு நாளும் நித்தியம் ஆயிரம் பேருக்கும்
பிராமண போசனம் விழுக்காடு ஆறாயிரம் ஏழாயிரம் பேர்
சாப்பிட்டார்கள் என்றும், வந்தவர்களுக் கெல்லாம் புடவை
சீலை தாராளமாய்க்கொடுத்தார்கள் என்றும், கலியாணத்துக்கு
உத்திரமல்லூர் மீயாசாயபு சேஷாத்திரி பிள்ளை, அவர் தம்பி
நாச்சண்ண பிள்ளை முதலான குஞ்சு குழந்தைகள் கூட வந்
திருந்தார்கள். வைசாக உற்சவம் கெருட சேவையும், முகூர்த்
தமும் ஒரு நாளானபடியினாலே இவர்கள் பந்துக்கள் கலியா
ணம் என்று வந்தவர்கள் சிறிதுபேர், திருநாளுக்கென்று வந்
தவர்கள் சிறிதுபேர். எல்லாரும் கலியாணத்துக்கு வந்தார்க
ளென்றும் வயித்தீகான் தத்துவாதிகள் திருநாளுக்கு வந்தவர்க
ளெல்லாரும் செம்பை தூக்கிக்கொண்டு வந்தார்க
ளென்றும். இதனாலே செலவு சென்றதென்றும் ஏகத்
துக்கு ஆயிரத்தைந்நூறு வராகன் மட்டுக்கும் செலவு
சென்றதென்றும் இந்தச் சந்தடியிலே செலவுடனே
கூட செலவு என்றும் சீனிவாச பண்டிதர் தம்பி பீமராய
பண்டிதருடைய குமாரன் தன்க்கோடிக்குங்கூட கலியாணம்
முடிந்ததென்றும், சம்பிரமமாய்த்தானே கலியாணத்தை
முடித்தாரென்றும் இந்தச் செலவுக்கு உசேன் சாயபு ஆயிரம்
ரூபாய் கொடுத்தாரென்றும், சயித்தல்லிகான் ஏதோ கொடுத்
தானென்றும். மீயா சாயபு இரு நூறு வராகன் கொடுத்தா
ரென்றும். மற்றது கைப்பணம் போட்டுச் சம்பிரமமாய்ச்
செய்தாரென்றும் சொன்னார். அவர் மகா உதாரி. பின்னை
ஒருத்தரைப்போலே லோபியல்ல. சமயங்களிலே அவரைப்
போலே செலவழித்துக் கீர்த்திபெறமாட்டார்கள். செலவழிக்
கிற சாடையிலே நல்ல மனதல்லவாவென்று நான் சொல்லி
பின்னையும் ஏழாம் நாள் விடாமல் கம்மாளருக்கும், கவரை
களுக்கும், காலாப்பட்டு ஆற்காட்டுக்குச் சம்பதிராயனுக்கும்
எழுதிப்போய் மறுபடி உத்தாரம்வந்து எட்டாம்நாள் ராத்திரி
தேர் நடந்ததென்றும், கும்பகோணத்தில் நடக்கிறபடிக்குக்
கம்மாளருக்கும் கவரைகளுக்கும் சமாதானம் பண்ணினார்கள்
என்றும், இப்படியாக கோபாலய்யங்கார் சொன்னார். அதன்
பேரிலே வேங்கட தீக்ஷதரிருந்து நம்மை உள்ளே அழைத்துக்
கொண்டுபோய் முன் ஏழெட்டு வருஷத்துக்கு முன்னே வந்து
வியாச்சியம் பிடித்துத் தீர்த்துக்கொண்டுபோனவளிலே
ஒருத்தி ஆத்தாள் வந்தாள். என் உடன்பிறந்தாள் இருக்கி
றாளாயென்று விசாரித்தாள்; அதற்கு அங்கே யிருந்தவர்கள்

அவளிவ்விடத்திலேயில்லை. வெகு நாளாச்சுது போய்விட்டு என்று சொன்னார்கள். அதின் பேரிலே திகைத்திருக்கிற சாடையென்னவென்று கேட்டுத் தெரிந்துகொண்டு போனாளென்று சொன்னார். ஆனால், எவர்கள் வந்து போனாலும் போகாவிட்டாலும் இப்போதிருக்கிற துரை அவர்கள் சுபாவம் உமக்குத் தெரியுமே. மூசே தும்மா [illegible] வியாச்சியம் ஒன்றுமில்லையென்றும் தீர்ந்துபோன சம்மதியென்றும் யோசனை பண்ணவேண்டாம். இந்தத் துரையினுடைய சுபாவம் முன்னே காவல் வைத்துச் சாப்பாட்டுக்கு விடாமல் தொந்தரவுபண்ணால் அந்தவசரப்பட்டப் பிறகல்லோ மெய் பொய் தெரிந்துகொண்டு அதற்குப் பிறகும் உமக்கு அவகாசமில்லாமலிருக்கிறது தெரிந்துகொண்டு விடப்போகிறது. ஆனபடியினாலே இந்நேரத்துக்குக் கலியாணத்துக்கு இரண்டு மூன்று நாள் பொறுத்துப் போகிறோமென்கிறதை நாளையதினம் அப்பாலப்போனால் வீதியிலே நடக்கிற சேதி தெரியுமே பார்த்துக்கொள்ளுவோமென்று சொல்லிவிட்டு அவ்விடம்விட்டுப் புறப்பட்டு ஆசாரி தெருவிலே நிற்கையிலே அவரிடம் வந்து அனுப்புவித்துக்கொண்டு பல்லக்கு ஏறி வருகையிலே மேல் காற்று அடித்து (சுருக்கி எழுதமுடியாது.) அந்தக் காற்றிலே அகப்பட்டுக்கொண்டு ஏழரை மணிக்கு வந்துசேர்ந்து தெத்துவாசல்கிட்டே வரும்போது அன்னபூரணி அய்யன் வீட்டு முகூர்த்தம் நாலு நாழிகைக்கு இப்போது சமயம் அவர்கள் மனுஷர் வந்தழைக்க அங்கே பந்தலுக்குப்போய் முகூர்த்தத்திற்கு இருந்து வீட்டுக்கு ஒன்பது மணி நேரத்துக்கு வந்தோம். மற்றப்படி பட்டணம் அதிசயம் ஒன்றும் கேட்கப்படவில்லை. பட்டணத்திலே கப்பல் வரவில்லையென்று சமுத்திரத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிறபேரேயல்லாமல் மற்றப்படி வேறே நினைப்பு இல்லை. ஆனாலிந்தப் பட்டணத்திலுண்டான சனங்களுடைய பாபத்துக்குத் தக்கதாய் ஈசுரன் ஆக்கினை கொடுத்தார். இனிமேலு மிப்படியிருந்தால் தாளமாட்டார்களென்று சுவாமிக்குத் தோற்றியிருக்கிறபடியினாலே இனிமேல் கடாக்ஷித்துச் சுகப்படுத்துவாரென்று தோன்றியிருக்கிறது. அப்பால் ஆண்டவனுடைய சித்தம். அவருடைய அடிமையாயிருக்கிற எங்களுடைய பாக்கியமெப்படியோ அப்படி நடக்கும். ... ... ...

1746 ௵ ஜூன் ௴ 14 ௳ க்கு அக்ஷய ௵ ஆனி ௴ 4 ௳ செவ்வாய்க்கிழமை

இந்த நாள் காலமே ஏழு மணிக்கு, தெற்கே ஒரு கப்பல் கண்டதென்று கொடி போட்டார்கள். துரையவர்கள் சந்தோஷமாய் மேல்வீட்டின் பேரிலே ஏறிப்போய்ப் பார்த்து

வரும்போது கப்பலுக்குக் கட்டுமரம் போய்க்கொண்டுவந்த சேதி அசனுமரைக்காயன் கப்பல் பறங்கிப்பேட்டையிலிருந்து மரக்காணத்துக்கு உப்பு ஏற்றிக்கொண்டு வரப்போகிறுரே மென்று சீட்டு எழுதியனுப்புவித்தான். அதை வாசித்துச் சொன்னவுடனே கேட்டுவிட்டு மனது வேசடையாய் வீட்டுக் குள்ளேபோனுர். மற்றப்படி நானிருக்கிற பாக்குக்கிடங் கண்டையிலே வந்திருக்கும்போது மூசே பிரியேர் என்கிறவன் ராசாவினுடைய பேருக்குத்தேராயிருக்கிற கோன்சேல்கார னும்மூசே தெமரேயும் கூட வந்தார். அவர்கள் என்னண்டைக்கு வந்து, என்ன சமாசாரம் என்று கேட்டார்கள். என்ன சமா சாரமிருக்கிறது. கப்பல் வராதேயிருக்கிற சமாசாரந்தான் பெரிய சமாசாரம் என்று சொன்னேன். அதற்கு அவன் கப்பல்கள் மசுக்கரைக்கு இவ்வருஷம் பெவ்ரியே மீ 3 உ வந்து சேர்ந்தது என்று இவ்விடத்துக்கு மே மீ 30 உ யிலே வந்து சேறுகிறுரேமென்று இவ்விடத்தில் சாமான் கள் தின்பண்டங்கள் முஸ்தீது பண்ணுவிக்கச் சொல்லி (ஈ) துரையவர்களுக்குக் காகிதம் வந்ததாகவும், நேற் றையதினமும் மூசே துபாசேத்து சொன்ன சாடையாய்த் தானே சொல்லி, கப்பல்கள் இனி அட்டியாயிராது என்று பத்து நாளைக்குள்ளாக வரும் அதற்குச் சந்தேகமில்லை என்று சொல்லி உன்னை, கும்பினீர் குர்த்தியேராய் ஏன் ஆக்கவில்லை குவர்னதோர் சீர்மைக்குக்கூட தயங்கம்பாடியிலிருந்து சீர் மைக்குப் போயிருந்த கப்பலிலே எழுதி யனுப்பிவிட்டாரே என்று கேட்டார்கள். அதற்கு நானிருந்துகொண்டு, எனக்கு வர்த்தகம் பண்ணிக்கொண்டிருக்கிறதே நல்லதே யல்லாமல் அந்த குர்த்தியேர் உத்தியோகத்திலே யிருக்கிறது ரொம்ப பெரியதன மல்லவென்று சொன்னதற்கு, நான் அறிவேன், அது ஒன்றும் பணம்கொடுபடவில்லையென்று அட்டியாயிருக்க வேணும் இல்லை என்று கப்பல் வரவில்லையே, அலுவலில்லை யென்று கப்பல் வரட்டுமென்று பார்த்துக்கொண்டிருக்க வேணுமென்று இது இரண்டு காரியத்திலே ஒரு காரியத்தைத் தொட்டு அட்டியாய் நிற்கவேணும். மற்றப்படி சீர்மைக்கு எழுதியனுப்புவித்த மட்டுக்கும் இவராலே தள்ளக் கூடாதென்று சொன்னுர்கள். இந்த மட்டுக்கும் துரையவர்கள் என்னுடனே ஒன்றும் சொன்னதுமில்லை, எனக்கு அது தேவையுமில்லையென்று சொன்னேன். மற்றப்படி இன்றைய தினம் வேறே யதிசயத்தைக் காணேம்.

1746 ஆ ஜூன் மீ 15 உ க்ஷய ஸ்ரீ ஆனி மீ 5 உ புதன்கிழமை

இன்றையதினம் நடந்த வயணம்: திருச்சிராப்பள்ளியார் வேங்கடாசலய்யருடைய எருது ஒன்று வடக்கு சென்னப் பட்டணத்து வாசற்படியண்டை போகிறபோது வெள்ளைக் காரரைக் கண்டு மிரண்டு கொத்தளத்தின்பேரிலே ஏறின வுடனே அந்த வாசலிலே ஒப்பிசியேலாயிருக்கிற சேன்மூாக்கு என்கிற பிள்ளையாண்டான் அதைக் கட்டிப்போட்டு விடுகிற தில்லையென்று சொன்னான் என்று வேங்கடாசல அய்யன் மனிதரும், கிரிமாசி பண்டிதரும் வந்து சொன்னார்கள். அதற்கு நான் கிரிமாசி பண்டிதரைப் பார்த்து, நீர் சொல்லி யும் விடவில்லையா வென்று கேட்டேன். மாட்டைப் பிடித்துக் கட்டினவுடனே நானும் அவ்விடத்துக்கு வந்தேன். என் னுடனே இவர்களெல்லாரும் சொன்னார்கள். அதின் பேரிலே எத்தனையாய்ப் போய்ச் சொன்னாலும் கேட்க மாட்டோ மென்று சொன்னான். துரையிடம் போய் ஒரு வார்த் தைச் சொல்லுங்கோ ளில்லாவிட்டால் விடுகிறதாய்க் காணவில்லையென்று சொன்னான். இதென்ன கொஞ்சக் காரியம், மூசே புரியுடனே சொல்லு மென்று சொன்னேன். நல்லதென்று மூசே புரியுடனே சொன்னவுடனே, மூசே புரி கொடுத்து, கார்திலேயிருக்கிற கப்பித்தானுக்குச் சொல்லி ஒரு சட்டைக்காரனையும் அனுப் பிச் சென்னப்பட்டணத்து வாசல் ஒப்பிசியேலுக்குச் சொல்லி, மாட்டை விடச்சொல்லு என்று சொல்லியனுப்பினான். அவன் விடுகிறதில்லையென்று சொல்லியனுப்பினான். அதற்கு மறுபடி மாட்டை விட்டுவிட்டாலாச்சுது, இல்லாவிட்டால் இரட் டிப்பு விலை வாங்குவேன் என்று சொல்லி அனுப்பினான். அதின் பேரிலே சீட்டொன்று எழுதி கிரிமாசி பண்டிதர் கையிலே கொடுத்தனுப்பினான். அந்தச் சீட்டை ஒரு தலையாரிச் சேவகன் வசத்திலே கொடுத்தனுப்பினான். அந்தச் சீட்டைப் பார்த்துக்கொண்டவுடனே மறு காகிதம் மூசே புரி பேருக்கு எழுதிக்கொடுத்து, பிஸ்தோலிலே குண்டுபோட்டு சுட்டு கறியாக்கச்சொல்லி உத்தாரங்கொடுத்தான். அந்தச் சேதி வேங்கடாசலய்யர் மனிதர் வந்து கிரிமாசி பண்டிதருக்கும் சொல்லி நமக்கும் சொன்னார்கள். நயினார் மனுஷர் மூசே புரிக்கு காகிதம் கொண்டுபோய்க் கொடுத்தவுடனே பார்த்துக்கொண்டு போவென்றான். அந்தச் சேதி அவன் வந்து சொன்னவுடனே, என்னகாணும் கிரிமாசி பண்டிதரே, நீங்கள் கபுறு சொல்லுகிறப்போலே போய் துரையுடனே போய்ச் சொல்லுங்கள் என்று சொன்னேன். அந்தப்படிக்குச் சின்ன முதலியாரை அழைத்துக்கொண்டு நயினாரையுங்கூட

கூட்டிக்கொண்டு துரையவர்களுக்குக் கபுறு சொன்னது, மேலே யெழுதினபடிக்கு நடந்த பூர்வோத்திரமாம்படியே சொன்னதற்கு, அந்தப் பிராமணர் யார் என்று கேட்டாராம். அதற்குத் திருச்சிராப்பள்ளியிலிருந்து ரங்கப்பிள்ளை யண்டைக்கு வந்திருக்கிறார்களாம், அது நிமித்தியந்தான் ரங்கப்பன், மூசே புரிகத்துச் சொல்லி யனுப்பினதின் பேரிலேதான் மூசே புரி ஐந்தாறுதரம் சொல்லி யனுப்பினது என்றும் வயணம் சொன்னமாத்திரத்திலே மூச்சு துக்களை யழைப்பித்து அவனுடனே என்னமோ சொல்லியனுப்பினார். அவன் போய் வடக்கு வாசற்படி மட்டுக்கும் போய் அந்த ஒப்பிசியேலையும் கண்டுபேசி மாட்டையறுத்து வேகிறதையும் பார்த்து வந்து கபுறு சொன்னதின்பேரிலே ஐந்து மணிக்கு அவனைக் கோட்டையிலே கொண்டுபோய் காவல் வைக்கச் சொல்லியும் அந்த வாசற்படிக்கு வேறே ஒப்பிசியேலை கட்டளையிட்டு அந்த மாட்டுக்கு உள்ள கிரயம் காவலிலிருக்கிற ஒப்பிசியேலை கொடுக்கச்சொல்லித் திட்டம்பண்ணி நடப்பித்தார். இந்தக் காரியத்தையளவிலே எதற்கு இத்தனை விசாரிப்பு உண்டானது என்று சமஸ்தமான பேரு மாச்சரியப்பட்டார்கள். அதென்ன விசாரிக்கவேண்டியதுதானே, இதற்கு என்ன ஆச்சரியப்படவேண்டியதென்னவென்றால் இவரிந்த மட்டுக்கும் இப்படி விசாரியாததினாலேயல்லவோ ஊரிலே சொல்தாதுகள் பண்ணுகிறதற்கும் வெள்ளைக்காரர் அவனுக்குச் சரிப்போனாப்போலே ஊரிலே காறுபாறுகள் நடத்துகிற சாடையும் இவர் விசாரிப்பு இல்லாததினாலேயல்லவோ அப்படியெல்லாம் நடக்கிறது ஆனபடியினாலே தாகிதென்றளவிலே விசாரிப்பு சுறுக்காய் நடத்தினபடியினாலே கேட்டவர்களெல்லாரும் ஆச்சரியப்பட்டார்கள்.

இன்றைநாள் தேவனாம்பட்டணம் குவர்னதோர் மேஸ்ரயேன் அவர்களுடைய துபாசி ரங்கப்பநாயக்கர் என் பேருக்கு எழுதின காகிதத்திலே (ா) துரையவர்களுக்குத் தங்கள் துரை சொல்லச்சொன்னதாய் எழுதின வயணம்.

உங்கள் துரையவர்களும், துரையவர்கள் பெண்சாதியும், பிள்ளைகளனைவரும் சுகமேயிருக்கிறார்களாவென்று தம்முடைய ரெக்கேத்துச் சொல்லச்சொல்லியும் அப்பால் துரையவர்களை கேட்கும் தெர்சாராய முதலாய்சீமைச்சாராயம் வேண்டியிருந்தால் கேட்டு எழுதியனுப்புவித்தால் அந்தப்படிக்கு அனுப்புவிக்கிறோமென்று உங்களுடைய துரையவர்களுக்கு நாம் சொல்லச்சொன்னதாய்ச் சொல்லி அவர் சொல்லுகிற உத்தரவு எழுதியனுப்பச் சொல்லியும் இந்தக் காகிதம் இரண்டாம்பேர் பார்த்துக்கொள்ளாமல் பறிகரித்துப் போடச் சொல்லியும் எழுதியனுப்பினார். அந்தவயணம்: (ா) துரையவர்களுக்கு இந்தநாள் சாயங்காலம் ஆறரைமணிக்கு வீட்டுக்குள்ளே பெரியசாலை








யிலே உட்கார்ந்து புகைபிடித்துக்கொண்டிருக்கும்போது துரை மேலே அவர்கள் எழுதின வயணப்படிக்குச் சொன்னதற்கு இதற்கு உத்தரம் நாளையதினம் சொல்லுகிறோமென்று சொன்னார். அந்தமட்டுக்கும் அனுப்புவித்துக்கொண்டு வீட்டுக்கு வந்தேன். நேற்று ராத்திரி பதினொருமணிக்கு வளவிலே பீரங்கி தலைவெட்டாய் ஏழெட்டுதரம் சப்தம் கேட்கப்பட்டது.



1746 ஆ ஜூன் மீ 16௳ அக்ஷய ஹு ஆனிமீ 5௳ வியாழக்கிழமை



இற்றைநாள் காலமே லாலாப்பேட்டையிலே நம்முடைய குமாஸ்தாவாயிருந்து ஒரு மாதம், நாற்பது நாளாய் இவ்விடத்திலே வந்திருக்கிற ராயலய்யனை யழைத்து, நீர் லாலாப்பேட்டையிலே ஐயாயிரம் ரூபாமட்டுக்கும் பற்றினதாய்க் கணக்கு வந்திருக்கிறது பாருமென்று காண்பித்தேன். அந்தக் கணக்கை இது உள்ளதுதான் என்று சொன்னார். இதுதவிர எங்கள் உத்திரவில்லாமல் பாக்கு, பஞ்சுநூல், அபினி, மருந்துபெட்டிகள், சிறிது சவளிகளிதுகளெல்லாம் ஏன் மாற்றினீர். உம்முடைய பிரயோசனத்தைக் குறித்து மாற்றினதினாலே எங்களுக்கு அதினாலே வந்திருக்கிற நஷ்டம் ஐயாயிரம் வராகன் மட்டுக்கும் வந்திருக்கிறது. இதல்லாமல் அபினி மருந்தானால் அடவைச் சரக்காய் விற்காமல் கிடக்கிறதே. சவுளிகளிலே சிறிது அடவையாய் விற்காமல் கிடக்கிற நிலுவை சலுவைகள் திரளாய் ஏன், விட்டீர். அவரவர்கள் கவைக்கு அப்போதைக்கப்போது தீர்த்துப் போடாமல் கொடுத்ததும் தெரியாமல் வாங்கவேண்டியதும் தெரியாமல் கணக்கை ஏன் அபந்தரைப் பண்ணிப் போட்டீர்கள். கணக்கு அபந்தரையினாலே முப்பதினாயிரம் ரூபாய் மட்டும் நிலுவை நின்ற ரூபா அடவையின் கீழே நின்று இப்போது கணக்குத் தீர்க்கச் சங்கடமாயிருக்கிறதே. கணக்குத் தீர்க்கிற விடத்திலே உம்மை அழைத்தால் ஏன் போகமாட்டோமென்கிறீர். நான் பணத்துக்கு அவசரமாயனுப்பச் சொல்லியெழுதினால் அவர் புத்திகெட்டுத் திரிகிறார். போகச் சொல்லு போகச் சொல்லு என்று பின்னையும் சிறிது உதாசினமான வார்த்தை ஏன் சொன்னீரென்று கேட்டேன். அதற்கு அட்டாதுட்டியாய் உத்தரவு சொன்னபடியினாலே கன்னத்திலே நாலைந்து போட்டு சாவடியிலே காவல் வைக்கச் சொன்னேன். அதின்பேரிலே இரண்டொருத்தர் பாக்குக் கிடங்குக்கு வந்த பிற்பாடு பிராமணன் பகல்மார் நயினார் வீட்டிலேயிருக்கவும், ராமார் சாவடியிருக்கவும் செய்யவும் வேண்டுமென்று கேட்டார்கள். அப்படித்தானே நடப்பிக்கச் சொல்லிச் சாவடி காவல் சேவகனுடனே சொல்லி யனுப்பினேன். ஆனாலிவன் பணத்தை ஆறுதூறு பண்ணுகிறதுமல்லாமல், நம்மை யுதாசினம் சொன்னதுமல்லாமல், நம்மை யங்கே மனிகைக்காரர் முன்னே ரொம்ப கேலி பண்ணினதற்கு இவனைக் கொஞ்சத்

திலே விடத்தக்கதில்லை. ஆனால், பரமேசுரன் ஆக்கினை இவனுக்கு அப்படிச்சம்பவிக்கும். அதற்குச் சந்தேகமில்லை. ஏனென்றால், எங்கள் தகப்பனாரிடம் வந்து சேர்ந்தபோது அன்னத்துக்கு இல்லாமல், நாலு பொழுது ஆறுபொழுது சாப்பாட்டுக்கு இல்லாமல், கட்டிக்கொள்ளுகிறதற்குப் புடவைக்கு அவகாசமில்லாமல், வீட்டுப் பெண்டுகள் வஸ்திர மில்லாமல் வெளியே புறப்படுகிறதற்குக் காரபனியமாய் வந்தவர்கள். இரண்டாயிரம் மூவாயிரத்துக்கு ஆஸ்தியாகி லாலாப்பேட்டை மளிகை வர்த்தகருக்குள்ளே யெண்ணமாய் பங்கு பயலாய்க்கடை நண்ணி நடக்கக் கடன் கொடுக்க இப்படியெல்லாம் சுகப்பட்டால் அவரைத் தொட்டு சுகப்பட்டார்களோ அவர்களைக் கெடுக்க வேணுமென்று நினைத்தால் சுவாமி அவர்களைக் கெடுத்துப் போடுவார் என்பதற்குச் சந்தேகமில்லை என்கிறதற்கு அத்தாட்சிக்குக் காவல் வந்ததே. இன்னம் என்னென்ன நடக்கவிருக்கிறதோ எனக்குத் தெரியாது. சுவாமிக்குத் தெரியும். அதெப்படியென்றால், இந்தமட்டுக்கும் எனக்குத் தோற்றுவித்து நடத்தினார், இன்னம் என்னென்னமாய்த் தோற்றுவிக்கிறாரோ, நான் அறியேன். அதினாலே சுவாமியுடைய சித்தத்தின்படியே அவரவர் செய்த பாவத்துக்கும் புண்ணியத்துக்கும் தக்கதாய் பலன் கொடுக்கிறதானபடியினாலே ஒருத்தராலே வரப்பட்டதல்லவென்று சகலமான பேரும் அறிய வேண்டியது.

இற்றைநாள் துரையவர்கள் காலிலே சிறங்கு கண்டு நோகுதென்று ஒருத்தரையும் உள்ளே வராமல் கட்டுபண்ணின படியினாலே ஒருத்தரும் துரை வீட்டுக்குள்ளே போகவில்லை. வந்தவர்கள் எல்லாம் சமாசாரம் தெரிந்துகொண்டு அவரவர் வந்தபடியே போய்விட்டார்கள். நானும் பாக்குக்கிடங்கிலேயிருந்தாப்போலே வீட்டுக்குப் பனிரெண்டு மணிக்குப் போனேன்.

இந்நாள் பகலைக்குமேலே மயிலாப்பூரிலேயிருந்து அருளானந்த உபதேசி குமாரன் இவர்களுக்குச் சென்னப் பட்டணத்து கபுறு விசாரித்து எழுதிக் கொண்டேயிருந்தானே இந்தச் சமாசாரம் சென்னப்பட்டணத்து குவர்னதோரறிந்து மயிலாப்பூர் அமுல்தாரனுக்குக் காகிதம் எழுதியனுப்பின விடத்திலே அவன் பிரான்சுக்காரர் மனுஷராயிருந்தால் பிடித்துக்கொள்ளச் சொல்லி எழுதி யனுப்புவித்தானும். அந்தச் சேதி உபதேசி மகன் கேட்டு இவ்விடத்துக்கு சின்னமுதலியாருக்கு எழுதியனுப்புவித்தான். அந்தச் சேதியை துரையவர்களுக்குச் சொன்ன மாத்திரத்திலே துரை உசேன் சாயபு தாயார் அவர்களுக்கு மயிலாப்பூர் செல்லுகிற படியினாலே அவருக்குக் காகிதம் எழுதியனுப்பின வயணம்: உங்களுக்கு

எங்கள் மனிதர் என்றும் இங்கிலீசுக்காரர் மனுஷர் என்றும் பேதகமில்லையே. அப்பால் பாற்சாபந்தாலே சமஸ்தமான பேரும் வரலாமே. அப்படியிருக்க, உங்கள் அமுல்தார் எங்கள் மனுஷர் மயிலாப்பூருக்கு வந்திருந்து வரப் போக இருக்கிறவர் களைப் பிடிக்கவேணுமென்று சென்னப்பட்டணம் குவர்னதோர் எழுதியனுப்பினால் அந்தப்படிக்குப் பிடித்துக் கொள்ளச்சொல்லி உங்கள் அமுல்தார் உத்தாரங் கொடுத்தார் என்று கபுறு கேட்டோம்.

இந்தப்படிக்கு உங்கள் மனிதன் உத்தாரங் கொடுக்கிறது நியாயமா? இப்போதும் உங்கள் மனிதருக்கு எழுதியனுப்புகிறது. பிரான்சுக்காரர் மனுஷர் வந்திருந்தாலும்போக்கு வரத்தாயிருந்தாலும் அவர்கள் வழி இங்கிலீசுக்காரர் மனுஷர் போகாதபடிக்கு எப்படி தாக்கீது பலனுயெழுதவேணுமோ அப்படி யெழுதி அனுப்புகிறது. இல்லாவிட்டால் உங்கள் மனசிலே இங்கிலீசுக்காரரிடத்திலேதானே பக்ஷமிருந்தால் அதுவும் எழுதியனுப்பினால் எங்கள் மனுஷரை மயிலாப்பூருக்குப் போக வர இருக்கிறவர்களைப் போகவேண்டாம் என்று காகிதம் எழுதி கும்பினீர் சேவகன் கையிலே கொடுதது வக்கீல் சுப்பய்யன் பேருக்குக் காகிதமெழுதி ஆற்காட்டுக்கு இற்றை நாள் பகலுக்குப் பிறகு ஆறு மணிக்கு தவானுகப் போச்சுது.

சம்பா கோவிலிலே சக்ரமேந்து பண்டிகையானபடியினாலே நற்கருணை யெழுந்தருளப்பண்ணிக் கொண்டு வரும் போது வாறு சுற்றிவர கோட்டையிலே பிரங்கி 21 போட குவர்னதோர் மற்றமுண்டான வெள்ளைக்காரர் கிறிஸ்துவர் சமஸ்தமான பேரும் வர நற்கருணை ஆசீர்வாதம் வாங்கிக் கொண்டு துரை வீட்டுக்கு வந்தார். அம்மான், வண்ணான் துரையண்டையிலே யிருக்கிற பிசைக்காரருக்குக் கட்டியிருக்கிற வீட்டுக்குப் போய் அந்தப் பிசைக்காரரை விசாரித்துவிட்டு வீட்டுக்குப்போனான். இந்த நாள் நடந்ததை நான் அறிந்தமாத்திரம் எழுதினேன்............

1746 ஆ ஜுன் மீ 17 உக்கு அக்ஷய ஸு ஆனி மூ 7 உ வெள்ளிகிழமை.

இன்றைநாள் காலத்தாலே துரையவர்கள் வீட்டுக்கு வந்தவிடத்திலே துரைக்கு இடுப்புநோய், தலைநோய், சிறங்கு வேதனையுமாய் வெளியே உடுத்திக்கொண்டு வராதபடியினாலே ஒருத்தரும் போகவில்லை. தர்பாருமில்லை. அவரவர் வீட்டுக்குப் போனார்கள்.

இன்றைநாள் பனிரெண்டு மணிக்கு மாயேயிலிருந்து நாலு பிராமணர். காகிதம் கொண்டுவந்தார்கள். அதிலே பின்னை யொரு அதிசயமுமில்லையென்று சொல்லுகிறார்கள். இனிமேல் கிறபேனு நாள்வட்டத்திலே யறியவேண்டியது அவர்கள் பதிமூன்று நாளையிலே வந்தார்களென்று சொன்னார்கள்.

1746 ஆ ஜுன் மீ 18 உ க்ஷய அக்ஷய ஞூ ஆனி மீ 8 உ சனிவாரம்.

அமாவாசை இற்றைநாளும் துரையவர்கள் இடுப்பு நோயால் உடுத்திக்கொண்டு வெளியே வரவில்லை, சின்ன துரை மற்றுமுண்டான அனைவரும் வந்து சாலையிலேயிருந்துவிட்டுப் போனார்கள்.

இற்றைநாள் பதினொரு மணிக்கு துரையவர்களிருந்து என்னை அழைப்பித்து உசேன் சாயபு நமக்குக் காகிதம் எழுதினார். சுகசிங்கு வியாச்சியம் ஏன் தீர்த்துப்போட்டுவிடவில்லை நித்தியம் ஏன் அட்டிபண்ணுகிறாய். தீர்த்துப்போடலாகாதோ வென்று கேட்டார் தீர்த்திருக்கிறது- அப்படியே இரண்டு மூன்று நாளைக்குள்ளே உம்மிடம் அழைத்து வந்து தீர்த்துப் போடுகிறேனென்று சொன்னதற்கு இப்பொழுது விடிந்தால் அந்திபட்டால் நான் மெத்த வேசாரிலேன். இனி மேல் வையாமல் தீர்த்துப் போடென்று சொல்லி இந்தப்படி நிற்கையிலே சின்ன முதலியார் தான் காகிதம் படித்துச் சொன்ன மாத்திரத்திலே துரைமாத்திரம் அழைத்துக்கேட்டானென்று ஒரு உற்சாகம் வந்து இன்னம் ஏன் தீர்க்கவில்லை. என்ன தாமதம் சொல்லுங்களென்று கேட்டார். அது உமக்குத் தெரியுமா? நீர் சும்மாயிருமென்று சொன்னேன் அந்த மட்டுக்கும் வாயை மூடிக்கொண்டு மதனந்த பண்டிதரும் சின்ன முதலியாரும் என்னுடனே உசேன்சாயபு, துரை கடன் கொடுக்க வேண்டியதற்கு வெகுநாளாய் வராதே போச்சுது. இப்போது கலியாணச் செலவாயிருக்கிறது அனுப்பவேணுமென்றும், நபாபு அன்வர்த்திகான் சுகசிங்கு வியாச்சியம் தீர்த்து அனுப்பாதேபோனீரென்று தம்முடனே சொன்னதாகவும் அதற்கு இது எவ்வளவு காரியம், சீக்கிரமத்துக்குத் தீர்த்து அனுப்பலாகாதா என்று எழுதினதாகவும், இந்தப்படிக்கு, சுகசிங்கு சம்மதிக்குக்கூட எழுதிவந்தபடியினாலேதான் உங்களை துரையவர்கள் என்னை யழைத்தார்கள். இந்தப் பணம் நீ கொடுக்கவேண்டும் என் கையிலேயானால் பணம் ஒத்திகையில்லையென்றும், தமக்கு வரவேண்டிய சம்மதியும் கும்பினிருக்குக் கொடுக்கவேண்டிய சம்மதியும் உட்டங்கித்துச் சொல்லி இந்தப் பணம் நான் சம்மதி பண்ணுகிறேனென்று சொல்லவேணுமென்று சாடை கொண்டுவந்

தாா. நானும் அவர் அடி அறிந்து, நல்லது நானே யவர்களுக்குச் சம்மதி பண்ணிப்போடுகிறேனென்று ஒப்புக்கொண்டேன். இந்தப் பேச்சுக் கேட்கையிலே பட்டு நூல் பணம் தன் கணக் கப்பிள்ளை கேட்கக் கேட்க அட்டிபண்ணிக்கொண்டே வரு கிருன். அவனங்கப்படிக்கு என்னுடனே சொன்னுன் என்று சொல்லி, நல்லது சுகசிங்கு வியாச்சியத்தைச் சீக்கிரமத்துக் குச் தீர்த்துப்போடு என்று சொல்லிவிட்டு நடந்தார். தேவ னும்பட்டணத்து துபாசி ரங்கப்பனுல் சிறிது சேதியவர்கள் துரை உங்களுக்குச் சொல்லச்சொன்னதாய் எழுதினுரே அந் தச் சேதிக்குப் பதில் சேதி எழுதவேணுமேயென்று கேட்டார் அதற்கு மெய்தான், நீர் எழுதுகிறது. சரீர சுவஸ்தமில்லாதிருந் தேன் பதிலுத்தாரத்துக்கு இரண்டு மூன்று நாள் சென்ற தென்று சாராயத்துடனே சேர்ந்ததற்கு தம்முடைய தயவினு லே இந்த வேளைக்கு விஸ்தாரமாய் இருக்கிறது. கப்பல் வராத காலத்துக்கு அப்படி எழுதியனுப்பி யழைப்பித்துக் கொள்ளு கிறேமென்று அவர்கள் எழுதின உபசாரத்துக்குத் தக்கதாய் எழுதியனுப்புமென்று உத்தாரம் கொடுத்தார். அந்தப்படிக் குச் சவாதி எழுதிக்கொண்டு பதிலுத்திரவு எழுதி அவன் சேவகன் கையிலே கொடுத்து அனுப்பிவிட்டேன்..............

1746 ஆ ஜுன்மீ 19உக்கு அக்ஷயஞு ஆனி மீ 9உ ஆதி வாரம் ... ... ... ... ... ... ...

1746ஆ ஜுன்மீ 20உக்கு அக்ஷயஞு ஆனிமீ 10உ சோமவாரம்

இற்றைநாள் பதினெருமணிக்கு ஸ்ரீ குவர்னதோர் அவர் கள் அழைப்பித்து முத்து விலை என்னமாயிருக்கிறது என்று முத்தைக் காண்பித்தார். முத்து இப்போது மெத்த சவுக்கை முகமானபடியினுலே இனிமேல் இருபது நாளைக்குள்ளே வெகு முத்து இந்த வட்டத்துக்கு வரும். வந்தவுடனே வெகு சவுக் கையாய்ப் போகும். அதினுலே இப்போது வாங்கப்போகாது. இப்போதிய விலை அப்போதிய விலைக்கு அரைவாசி திருமுறு காயிருக்கும் என்று சொன்னதற்கு, மெய்தானென்று முத் தைக் கொடுத்துவிடச் சொல்லி மதாமுக்குச் சொன்னுர். அவ ளும் அப்படியே கொடுத்துவிட்டாள். அப்போது துரையவர் கள் சொன்னது: சீனத்துக்குப் போய் வர கும்பினீர் கப்பலை முச்சே பேர்னேத்து மூன்று கப்பலை பிடித்துக்கொண்டதை ஒலாந்தாக்காரருக்கு விற்ற சம்மதியைக் கொடுத்துவிடச் சொல்லி பிராஞ்சு ராசா எழுதியிருந்தசம்மதி, ஒலாந்தாக் கும் பினியார் கொடுக்கிறேமென்று மேல் வாங்கிக்கொண்டார்கள். ஆனபடியினுலே கும்பினீருடைய சீனத்துக் கப்பலும் (சரக்கேச மும்) கும்பினியாரைச் சேர்ந்தது என்று சொன்னுர். அதற்கு மெத்த சந்தோஷமாச்சுது. மணிலா கப்பல் சேதி என்ன ஐயா வென்று கேட்டதற்கு, அது பிராஞ்சு கொடியல்லவே. துலுக் கன் பேரும் துலுக்கன் கொடியுமானபடியினுலே அதுகாரியம் கும்பினியார் ராசாவுக்குச் சொல்லக்கூடாது. அதற்கு வேறே

மார்க்கமா யெத்தனம் பண்ணியிருக்கிறது. சுவாமி என்னமாய் தயவு பண்ணுகிருரோ! எல்லாருடைய அதிர்ஷ்டம் எப்படியோ தெரியாதென்று சொன்னர். ஐயா, கும்பினியாருக்கு வந்தும் பிரயோசனமில்லே. பட்டணத்தில் உள்ளவர்கள் வர்த்தகருடைய வெகுபேருடைய பணம் நஷ்டப்பட்டுப் போகிற படியினலே அந்தப் பணம் வந்தாலும் உங்களுக்குக் கீர்த்தியும் வெகு புண்ணியமும் உண்டென்று சொன்னேன். அதற்கு, அவர் சுவாமியினுடைய சித்தம். எப்படியும் வரப் பார்ப்பாரென்று சொன்னர். அதற்கு கும்பினியாருக்கும் உங்களுக்கும் வெகு கீர்த்திவருமென்று சொன்னதற்கு இங்கிலீசு கும்பினி எடுபட்டுப்போய் வெகுநாளாய் கடன்வாங்கிக் கொண்டுவருகிருர்கள். இப்போதிருந்த பணத்தை ராசாவுக்குக் கடன்கொடுத்தார்கள். அவர் பேச்சு அப்படி எடுபட்டுப் போகிறபடியினலே இவர்களுக்குப் பணம் சேதம் வரும். இத்துடனே முறிந்தபோம். நான் சொன்னேன் என்று கெட்டியாய் மனதிலே வைத்துக்கொண்டு கொஞ்சநாளேக்குள்ளே எடுபட்ட பிற்பாடு மெய்யென்று எண்ணிக்கொள் என்றுசொல்லி ஒலாந்தாக்கும்பினியாருக்கும் வெகு செலவு. அத்துடனே அவர்கள் வியாபாரம் மெத்த மட்டாய்ப் போச்சுது இதல்லாமல் ஒலாந்தாவைச் சுற்றிலும் இருக்கிற பட்டணமும ஒலாந்தாவுக்குப் போகிறவிடத்திலே சமுத்திரமும் ஆறும் ஆனபடியினலே ஆற்றிலே போகிறபோது இருபாரிசமும இருக்கிற பட்டணமும் சீமையும் பிரான்சு ராசாவைச் சேர்ந்துபோனபடியினலே ஒலாந்தாக்காரருக்கும் மெத்த விழிப்புயென்றும் இதல்லாமல் ஒலாந்தாக்காரர்கள் கும்பினீரைத்தானே யிருக்கிறவர்களெல்லாரும் திருடுகிறபடியினலே கும்பினீருக்குக் கஷ்டமும் இருக்கிறபேருக்கு ஆதாயமும் அவர்களுககு வர்த்தகமே யல்லாமல் அந்த ஸ்டேட்டுக்கு ராச்சியமில்லே. ஆனபடியினலே, அதுவும் கொஞ்ச நாளேக்குள்ளே எடுபட்டுப போய் விடும் என்றும் போன வருஷம் பிரான்சு ராசா இருநூறு பட்டணம் பிடித்ததை வேறே ஒரு சாடையை நினேப்பிலே போட்டுக்கொண்டு அந்தப் பட்டணத்தையெல்லாம் மறுபடி கொடுத்துவிட்டபடியினலே இப்போது அந்த நினேப்புப் படிக்கு வராதபடியினலே மறுபடி அந்தப் பட்டணமெல்லாம் பிடிக்கத் துவக்கினபடியினலே இப்போததினலே வெகு திரவியம் செலவும் வெகு மனுஷர் சேதமும் வந்தது. ஆனபடியினலே, பிரபுக்கள் ஒவ்வொரு காரியத்தைக்குறித்து முன் வரும் யோசனே பண்ணுதபடிக்கு நடத்தினல் அவர்களுக்குப் பின்னேயொரு தொடுசுமில்லே. திரவியத்துக்கும் சனங்களுக்கும் சேதம் வருமென்று சொன்னர். அதற்கு நான மெய்தானேயா என்று அதற்குச் சிறிது திருஷ்டாந்தரங்கள் கதைகளாய்ச் சொன்னேன். அது மெய்யென்று சொன்னர்.

... ... ... ... ... ... ... ... ...

1746 ஆ சூன் மூ 21 உக்கு அக்ஷய ஹூ ஆனி மீ 11 உ செவ்வாய்க்கிழமை

இற்றை நாள் பத்தரை மணிக்கு, துரை யழைப்பித்து ஆலம் புரவி சுலுப்பு மாலுமிக்கு அன்பது ரூபாய் அனுப்புவிக்கச் சொல்லியும் சுலுப்பு கப்பலும் தயாராயிருக்கச் சொல்லி யெழுதியனுப்பச் சொல்லிவிட்டு, ரங்கப்பா! நாகப்பட்டணத் துக்கு, செயிலோனிலேயிருந்து ஒரு பிறகந்தென் வந்தது அந்த பிறகந்தென் வரும்போது ஒன்பது கப்பல் கண்டு நீ யாரென்று ரொம்ப கேட்டார்கள். நாங்கள் ஒலாந்தாக்காரர் என்று பசுப் போடு காண்பித்துவிட்டு வந்தேன். அந்த ஒன்பது கப்பல் காரரும் பிரரன்சு கப்பல்கள் என்று அந்த சுலுப்பு கப்பித் தான் நாகப்பட்டணத்துக் குவர்னதோருடனே சொன்னதாய் கோன்சேல்காரரெல்லாரும் அறிந்ததாய்ச் சேதிவந்ததாய் துரையவர்கள் சொல்லி, மூசே லபோர்துனே காகிதத்தைக் காண் பித்து அவர்கள் எழுதின மிதிப்படிக்குச் சரியென்று சுவாமி தயவினாலே இன்று நாளையிலே வரவேணும். இல்லாது இங்கி லீசு கப்பலுக்குக் காத்துக்கொண்டிருந்தால் ஜூலை மீ 15 உயிலே இங்கிலீசு கப்பலுடனே இங்கே வந்து சேரவேணும் என்று மகா உற்சாகமாய்ச் சொன்னார். அதற்கு நானும் உம்முடைய யோகம் என்றும் அதற்கு அவர் மனது உற்சாகம், உற்சாகத் துக்குத் தக்கவார்த்தையாய், அனேகமாய் நானும் சொன்னேன் நான் சொல்லச்சொல்ல அவருடைய உற்சாகம் சொல்லமுடி யாது. இந்த உற்சாகத்தைப் பார்த்து அதிக உற்சாகமுண்டா கத்தக்கதாகச் சுவாமி தயவு பண்ணிவைப்பார் என்று நானும் மனதிலே நினைத்தேன். எனக்கு இந்தச் சேதி வெகு சந்தோ ஷத்தைக் கொடுத்தது. சுவாமி இதைப் பார்க்க அதிக சந்தோ ஷம் கொடுப்பார் என்று என் மனதிலே கெட்டியாய் திட்டம் பண்ணிக்கொண்டேன்...........

ஆலம் புரவிக்கும் ரூபாயும் அனுப்பி, கப்பலும் சுலுப்பும் தயாராயிருக்கச் சொல்லி ஓலை எழுதி அனுப்பினேன். ........

1746 ஆ சூன் மீ 23 உக்கு அக்ஷய ஹூ ஆனி மீ 13 உ பிரகஸ்பதிவாரம்.

இற்றைநாள் காலமே ஒன்பது மணிக்கு, துரை வீட்டிலே போயிருக்கையிலே துரை அழைத்து கும்பினிருக்குப் பணம் கொடுக்கவேணுமே என்ன சொல்லுகிறாய் என்று கேட்டார் என்னையா ஐந்தாறு நாளைக்கு முன்னாலே சொன்னாப்போலே யாச்சுதே. தேவரீர் அடிக்கடி கேட்டால் நான் உத்தரவு சொல்ல வேண்டியது என்ன இருக்கிறது. இன்னம் பதினைந்து

நாளைக்குள்ளே வந்து சேர்ந்ததெல்லாம் இனம் பண்ணிக் கொடுக்கிறோமென்று சொன்னேன். இனிமேல் நான் செய்ய வேண்டிய தென்னயிருக்கிறது என்று சொன்னதின் பேரில், கூற்பாய்றெட்டுக்கு உன்னுடன் சொல்லி எத்தனை நாளாச்சுது. இப்படி எந்தக் காரியம் சொன்னாலும் நீ பணம் கொடாமற்போனாலும் சரக்கு கூட கொடுக்கிறது மோசமானால் அப்புறம் என்ன யோசனையின் பேரிலே யிருக்கிறாய் அதைச் சொல்லு. இல்லையென்று நஷ்டம் வந்தது எனக்குக கொடுக்கிறதற்கு இல்லையென்று சொன்னால் தொந்தரையில்லை என்றும் சொன்னார். அதற்கு நானிருந்துகொண்டு கூற்பாய்றெட்டு அப்போதுதானே வந்திருக்கிறது. மூசே கோர்னே நான் சொன்னபிறபாடு அனுப்பும் என்றும் சொன்னார். அதனாலே அப்படியாயிருக்கிறது. இப்போது வேணுமென்றாலும் அனுப்புவிக்கிறேன் என்று சொன்னேன், அதற்குப் பின்னையும் ஒன்றும் சொல்லாமல் ஏன் அனுப்பாதே போனாய் என்று இதைத்தானே சொல்லிப்போட்டு கும்பினீர் கப்பல் வருகிறமட்டுக்கும் சம்பளமென்னத்தைக் கொடுக்கிறது இந்தச் சம்பளத்துக்கு மாத்திரம் அப்படி இப்படி நடக்கிறது. இன்னுமொரு சம்பளத்துக்கு மேசைமேலே போடுகிற வெள்ளித் தட்டு நகைகளும் என் பெண்டாட்டி உடைமையும் விற்றுக் கொடுக்கவேணுமென்று சொன்னார். அதற்கு நானப்படியேன், சுவாமி வரப்பண்ணுவார், உம்முடைய மனதுக்கு சகல சந்தோஷமும் வரப்பண்ணுவாரென்று சொன்னேன். அதின் பிறபாடு நல்லது இந்தச் சம்பளத்துக்கு ஆயிரம் வராகன் மாத்திரம் எப்படியாகிலும் இனம் பண்ணிக் கொடுக்க வேணும் இதற்கு ஒன்றும் தடை சொல்லாதேயென்று எழுந்திருந்து அப்பாலே போகிறவர் சேஷாசசெட்டி ஆயிரம் ரூபாயும் கொண்டுவந்தால் ஒரு காரியத்துக்கு உதவுமேயென்றார். அவர்களுடைமை ஈடுவைத்து ஒரு மாதத்திலேயே பணத்தைக் கொடுத்து உடைமையை வாங்கிப்போகிறோமென்று சொன்னபடியினாலே வாங்கிவைத்தேன். உடைமையை வேணுமென்றால் கொண்டுவந்து கொடுக்கிறோமென்று சொன்னதற்கு, கவையில்லை வந்தபிறபாடு கொண்டுவந்து கொடு என்று சொல்லி இந்த ஆயிரம் வராகனும் மறந்துபோகாமல் சம்பளத்துக்குக் கொடுத்துவிடுயென்று சொல்லிவிட்டுப்போனார். நானும் இந்த ஆயிரம் வராகனுக்கும் பின்வாங்கினால் நன்றாயிராதென்று, நல்லதென்று ஒத்துக்கொண்டுவந்தேன். காலத்தினுடைய சுபாவத்தை நான் என்ன சொல்லப்போகிறேன். சுவாமியுடைய கடாக்ஷத்தை ஒருத்தராலே தள்ளப்போகாதே ஆனால், சுவாமி இத்தனை கஷ்ட திசை கொண்டுவந்துவிடுகிறது. சுவாமிக்குப் போதாது. என்ன பாவம் செய்தாலும் கடாக்ஷம் வைத்துக் கார்க்கவேணுமேயல்லாமல் பிறர் வாக்கினாலே இப்படிப் பஞ்சச்சொல்லாய்ச் சொல்லவும் அதற்குப்பஞ்சச்சொல்

லாய் நாம் பல்லை யிளிக்கவும் இப்படி சீவனம் பண்ணுகிறதை விட சரீரத்தை விட்டுவிட்டால் தோஷமில்லை. ஆண்டவனுக்கு இன்னம் எப்படியெப்படி நடத்தவேணுமென்று சித்தமாயிருக்கிறதோ அப்படிக்கெல்லாம் நடப்பிக்கிறார். என்று சனங்களுக்குத் தோற்றுதோ. அவனவன் சரிப்போனுப் போலே யெல்லாம் சொல்லுகிறதற்குத் தலைகுனிய வேண்டியிருக்கிறதே என்று அங்கலாய்க்கிறதே யல்லாமல் மற்றப்படி சுவாமியினுடைய சித்தத்தின்படியே எந்தெந்த வேளைக்கு எப்படி நடக்கவேணுமோ அப்படி நடந்த தீருமே யல்லாமல் அணுவணுப் பிரமாண மாகிலும் வித்திபாசம் வராது. லோகத்துக்குள்ளே சந்தோஷம் வந்தால் சமஸ்தமான பேரும் நல்லது என்றும் கெட்டிக்காரன் என்றும் சந்தோஷப்படுகிறதே யல்லாமல், துக்கம் வந்தால் கையிலே ஆகாதவனென்றும், கெடுத்துப் போட்டானென்றும், துன்மார்க்கனென்றும், சொல்லுகிறதே யல்லாமல் சுவாமியினுடைய சித்தத்தின்படியே நடக்குதென்று சொல்லுகிறவர்கள் ஒருத்தருமில்லை. என்மட்டுக்கும் சுவாமியின் பேரிலே பாரத்தைப் போட்டுக் கொண்டிருக்கிறேன். அவர் எப்படி நடப்பித்தாலும் சம்மதியே யென்று கெட்டியாய் எண்ணிக்கொண்டு வீட்டுக்கு வந்தேன்.

இற்றைநாள் சாயங்காலம் சம்சுவாம் பண்டிகை வெஸ்த்ரா ஆனபடியினாலே கோட்டைக்குத் தென்னண்டையிலே கப்புஸ் கோயில் வாசல்படிக்கு மேற்கே வெளியாயிருக்கிறவிடத்திலே சொக்கபானைபோலே கட்டிச் சுடுகிறவாடிக்கைப் படிக்குக் குவர்னதோரும் பாதிரியாரும் கொளுத்தின பிற்பாடு மற்றவும் வரவர அறிக்கைக்காரர் எல்லோரும் கொளுத்தின பிற்பாடு பாறு வந்திருந்தபடியினாலே மூன்று தரம் துப்பாக்கிச் சுட்ட பிற்பாடு கோட்டையிலே இருபத்தொரு பீரங்கியும் கப்பலின் பேரில் இருபத்தொரு பீரங்கியும் சுட்டார்கள் இந்த வேடிக்கைப் பார்க்க வந்த துரைக்காரர் முகம் களையில்லாமல் இருந்ததைப் பார்த்து எனக்கும் இருக்கப்பட்ட சனங்களுக்கும் மகா கிலேசமாயிருந்தது, அதின் பிற்பாடு வீட்டுக்கு வந்தேன்.

1746 ஆ சூன் மீ 24 உக்கு அக்ஷய ஹூ ஆனி மீ 14. உ வெள்ளிக்கிழமை.

இற்றைநாள் காலமே சம்சுவாம் பண்டிகையானபடியினாலே மதாம் துப்ளேக்சு பேர் பண்டிகையானபடியினாலே குஸ்துமா தப்படிக்குப் பொழுது விடியற்காலையிலே மூன்று தரம் துப்பாக்கிச் சுட்டு, ஒரு தரம் இருபத்தொரு பீரங்கி சுட்

டார்கள். அப்புறம் எட்டு மணிக்குப் பூசை சொல்லுகையிலே குஸ்துமா மூன்றுதரம் தட்டாக்கிச் சுட்டு மூன்றுதரம் இருபத்தொரு பீரங்கி விழுக்காடு போட்டார்கள். கப்பல் மேலேயும் இப்படித்தான் போட்டார்கள். மதாம் பண்டிகையானபடியினாலே இருட்டோடே ஏழரை மணிக்குப்போய் சந்தித்தேன். அப்பால் சின்னமுதலி தம்பியவர்களெல்லாரும் போய்ச் சந்தித்தார்கள். பத்தரை மணிக்கு வர்த்தகர் போய்ச் சந்தித்தார்கள். அப்பால் டங்கா சாலையார் மற்றுமுள்ள பேரும் இன்றைக்குள்ளே நாளைக்குள்ளே சந்திப்பார்கள். குஸ்துமாதுபடிக்கு அவரவர் சந்திப்பு ஆச்சுது. பனிரெண்டுமணி மட்டுக்கும் வேறே யதிசயமில்லை. இந்தச் சம்பிரமம் தவிர......................................................

1746 ஆ௵ ஜுன் ௴ 25 உ க்ஷய ௵ ஆனி ௴ 15 உ சனிவாரம்.

இற்றை நாள் காலத்தாலே எட்டு மணிக்குப் பிற்பாடு நபாபு அன்வருத்திகன் அண்டையிருந்து பறங்கிப்பேட்டை அமுல்தாரன் ஷேக்கு மகம்மது ஆதே சாயபுவின் கிராமமாகிய ரெட்டை ஆலக்கிராமத்தின் நெல் புதுச்சேரியிலே கொண்டு வந்து விற்கிறதற்கு எனக்கெழுதியனுப்புவித்ததற்கு நாம் துரையுடனே சொல்லி உத்தாரம் வாங்கிக் கொடுத்து எழுதி யனுப்புவித்ததின்பேரிலே தானியமும், நெல் இரண்டாயிரம் கலம் அனுப்புவித்து அத்துடனே கூட நபாபு சாய புடைய பர்வானா (ர) துரையவர்கள் பேருக்கு நெல்லுக்குத் தீர்வை மாப்பு பண்ணச்சொல்லி ஒரு காகிதம் கொண்டுவந்த வன் வெளியே நின்று சொல்லியனுப்பி, துரையவர்கள் உத் தரம் அழைப்பித்துக்கொண்டுவராமல் தெத்துவாசலிலேயும், ஆரெவரென்று கேளாமலும் போனார்கள். அதினாலே உள்ளே வந்து குங்குவார் கும்பினீரிலே வந்து குதிரை விட்டிறங்கி சின்ன முதலியாருக்குச் சொல்லியனுப்பினர். அவர் வந்த காரியம் என்னவென்று கேட்டனுப்புவித்தார். அது உங்களுடனே சொல்லப்போகாது; கப்பித்தானுடனே ரூபுரூபாய்ச் சொல்ல வேணுமென்று சொல்லி யனுப்புவித்தான். மறுபடியும் காகித மாகிலும் கொடுத்தனுப்பு என்று கேட்டதற்கு, அதற்கு முன் சொன்ன உத்தரவுபடிக்கே சொல்லியனுப்புவித்தான். இந்தச் சேதியாம்படிக்கு, துரையவருக்குச் சொன்னவிடத்திலே துரை யவர்கள் வாசற்படிக்காரன் எப்படிவிட்டான் என்று மூசே புரியே அழைப்பித்து வழுதாவூர் ஒப்பிசியேலுக்குத் தாக்கீது பண்ணுவித்தார். அப்பால் அவர் மனதிலே சுகசிங்கு வியாச்சிய நிமித்தியம் நபாபு பர்வானா கொண்டுவந்தா னென்று தோற்றி என்னை அழைப்பித்துக் கேட்டார்கள் அதின்பேரிலே சுகசிங்கு நிமித்தியம் வந்த குதிரைக்காரனல்ல..

காரைக்காலிலே முசிராத்தக்காரர் உடைமை வாங்கி வைத்திருக்கிறதே அது நிமித்தியம் ஏதாகிலும் வந்ததோ என்னமோ தெரியாதென்று சொன்னதின்பேரிலே துரையவர்கள் லாசரை அழைத்து அந்தச் சிப்பாயியை வரச்சொல்லுவென்று சொன்னார். அதின் பேரிலே அவன் வந்தான். வந்த பிறகு காகிதத்தைக் கொடுத்தான். காகிதம் பார்த்த மாத்திரத்திலே அதிலே தானியத் தீர்வை நிமித்தியம் மாப்பு பண்ணச் சொல்லி எழுதியிருக்கிறது என்று சொன்னதற்கு நகைத்து, கோன்செய் காரிய நிமித்தியம் பெரிய மனுஷர் யோசனை பண்ணாமல் எழுதுகிறது. ஆனால், நபாபு அவர்கள் காரியமானால் நம்முடைய சுயகாரியம். அவர் எந்த வேலை சொல்லி யனுப்பினாலும் நல்ல மனதுடனே செய்வேன். அப்படி எந்த வேளை வேலைவருமென்று காத்துக்கொண்டிருக்கிறேன். ஆனாலிந்தவேலை என்னாலே செய்யக்கூடாத வேலை. ஏனென்றால், ஆசிலுடனே சேர்ந்தது. (ஈ) ராசாவைச் சேருகிறது. ஆனபடியினாலே. தள்ளக்கூடாதென்று சொல்லி அந்தப்படிக்குச் சுவாருக்குச் சொல்லி, காகிதமும் எழுதி யனுப்பச் சொன்னார்

1746 ஆ ஜுன் மீ 26 உ க்ஷய அக்ஷய ஞு ஆனி மீ 16 உ ஆதிவாரம்.

இற்றை நாள் காலத்திலே வேலமுரி வேங்கடய்யனுக்குத் தாது விழுந்துபோயிருக்கிறது என்று நேற்றுச் சனியன்று ராத்திரி மார்க்கசகாய செட்டி சொன்னதின் பேரிலே காலத்தாலே துரையவர்களுடனே எச்சரிப்போமென்று சொல்லியிருந்தேன். நான் பாக்குக் கிடங்கிலே யிருக்கையிலே திருக்காமி செட்டி வந்து துரையவர்களுடனே சொல்லி வேலமுரி வேங்கடய்யன் சரீரம் சுவஸ்தமில்லாமலிருக்கிறானே அவனுக்குச் சென்னபட்டணத்துக்குப்போய் குழந்தை குஞ்சுகளைப் பார்க்கவேணுமென்ற பிரம்மை ரொம்ப இருக்கிறபடியினாலே அந்த வியாதி அதனமாய்க் காணுகிறாப்போலே யிருக்கிறதென்று அந்த பிரம்மையைத் தீர்க்கிறதற்கு உபாயமென்னவென்றால், துரையவர்கள் உன்னைச் சென்னப்பட்டணத்துக்குப் போகச்சொல்லிச் சொன்னார். ஆனால், ஒரு நாள் இரண்டு நாள் மட்டுக்கும் மீனாக்ஷியம்மாள் சத்திரத்திலே யிருந்து சுவஸ்தம்பண்ணிக்கொண்டு நீ போய் விட்டு வா என்றுதுரையவர்களுடைய உத்தாரம்சொல்லி நீங்கள் வந்து சொன்னால் அவனுக்குத் திகில் போய் பிழைத்தாலும் பிழைப்பான். இந்தப்படிக்குத் துரையவர்களுடனே சொல்லி உத்தாரம் வாங்கிவரச் சொன்னார்கள். அதின் பேரிலே திருக்காமி செட்டியையும் அழைத்துக்கொண்டு துரையண்டைக்குப் போனவிடத்திலே துரையவர்களும்,

சின்னமுதலியாரும், மதனந்தபண்டிதரும் உசேன் சாயபுக்கு எழுதுகிற காகிதத்துக்குச் சவாது எழுதுவித்துக்கொண்டிருந்தார்கள். அப்போது என்னை, துரையவர்கள் அழைப்பித்து இந்த உசேன் சாயபு காகிதத்துக்கு எழுதுகிறதற்கு வயணம் சொன்னால் பிடிபடவில்லை; நீ சொல் என்று என்னுடனே சொன்னதென்னவென்றால்: உங்களுடைய பந்துசனங்களுக்கும் உங்கள் சமுசாரத்துக்கும் மராட்டியர் கலாபத்திலே எங்கள் வமிசத்தாராலேயும் என்னாலேயும் நடந்த சகாயமும் உதவி ஒத்தாசைக்கும் இந்த வேளைக்கு அதற்கு நீங்கள் தக்கதாய் எங்கள் காரியங்களுக்கு உதவி ஒத்தாசை பண்ணுகிறதை விட்டுவிட்டு நீங்கள் மாறுபாடாய் நடத்துகிறாப்போலே காணுது. இந்த வயணம் சொன்னார். அந்த நியாயமாம்படியே மதனந்தபண்டிதருடனே சொல்லிக் காகிதமெழுதுவித்து லகோடா பண்ணி மோகரு பண்ணிப் போய்ச் சொன்னேம். உசேன் சாயபு மனுதர் கையில் கொடுத்தனுப்பிவிடுயென்று சொன்னார் நல்லது என்று அனுப்புவித்துக்கொண்டு இப்பாலே வந்தோம் சின்னமுதலியாருங்கொண்டு இந்தக் காகித நிமித்தியம் நேற்று முதல் அலக்கழிந்து சேனை தொந்தரபட்டு ஒரு விதமாக உங்களாலே எழுதப்பட்டுத் தீர்ந்தது என்று சொன்னார். அதேது என்று சின்னமுதலியாரைக் கேட்டதற்கு அவர் சொன்னது: நேற்றையதினம் இந்த தாக்கீதுக்கு வயணம் சொல்லி யெழுதச் சொன்னார்கள் நான் அந்தப்படியே சவாது எழுதுவித்துப் போய்ச் சொன்னவிடத்திலே அவருக்குப் பிடிபடாமல் இரண்டு மூன்று தரம் கோபித்துக்கொண்டு, அப்பால் அம்மானை அழைப்பித்து அவளுடனே சொல்லச் சொல்லிச் சொன்னார் அவளுக்கு என்ன காகித சங்கதிக்கு உத்தரப் பிரதி உத்தரம் சொல்லத் தெரியுமா? அவள் தமிழிலே சொல்லுகிறதற்கும் நான் சொல்லுகிறதற்கும் வெகு வித்தியாசமாய் ராத்திரி உதைத்துக்கொண்டு போகச் சொன்னார். இப்போது நீங்கள் ஒருவிதமாய் முடித்துப் போட்டு, காகிதமும் அனுப்பத் தக்கதாய் வந்தது. இது பரம சங்கடமாய் வந்தது என்று சொன்னார். இதிலே மதனந்த பண்டிதரிருந்துகொண்டு, சாதத்துகான் பட்டாணிக்குத் துரையவர்கள் சானுகான் பாயியைக் காவல் வைத்திருந்ததும், நவாபு அன்வருத்திகான் பாதரவர்கள் வந்தபோது ஓடிப்போய்விட்டானென்றும் சாதத்துகானுக்குச் சானுகான்பாயிபேரிலே பதிமூவாயிரத்தி எழுநூறு வராகனும் ஒரு யானையும் வர வேணுமென்று மராட்டியர் தாமதாமுக்கு இவர்கள் இருவரும் வந்தவிடத்திலேயிருந்தவிடத்திலே இவ்விடத்துப்பிரபுவுடனே சொல்லிக் கொண்டபடியினாலேயும் அவர்கள் நியாயமாகும் படியே விசாரிக்கு மிடத்தில் சானுகான்பாயி பட்டாணி என்கிறவன் கொடுக்கவேண்டிது மெய்யானபடியினாலே பணம்

சம்மதிபண்ணச் சொன்னவிடத்திலே சண்டித்தனம் பண்ணிக்கொண்டிருந்தான் என்கிற வயணமாய் ஒரு மகசர் எழுதுவித்துக் கொடுக்கச்சொல்லியிருந்த காகிதத்தைப் படித்துக் காண்பித்து, துரையவர்கள் அண்டைக்கு வாருங்கோளென்று சின்ன முதலியாரை மதனாந்தபண்டிதர் அழைத்தார். அதற்கு சின்னமுதலியாரிருந்துகொண்டு பிள்ளையவர்கள் அழைத்துக்கொண்டு போவோம் என்றும் கூட இரண்டு பேரும் என்னை அழைத்தார்கள். நான் வருகிறதில்லை நீங்கள் தானே போங்கோளென்று எத்தனையாய்ச் சொன்னாலும் கேளாமல் கூட அழைத்துக்கொண்டு போனார்கள். துரையவர்கள் கிட்டப்போனோம்; போனப்போலே நீங்கள் சொல்லுங்கள் என்று அவர் சொல்ல நான் நீங்கள் சொல்லுங்கோளென்று நான் சொல்ல, இந்தப்படிக்கு அவரை நான் சொல்லவும் என்னை அவர் சொல்லவும் இந்தப்படிக்கு கால் நாழிகை மட்டுக்கும் சொல்ல இதிலே மதனாந்தபண்டிதர் சின்னமுதலியார் இந்த வயணமாம்படியே சொல்லமாட்டார். நீங்கள் சொல்லவேணுமென்று சொன்னார். அந்தமட்டுக்கும் துரையும் நகைத்துக்கொண்டு சும்மாயிருந்து அப்பால் என்னைப் பார்த்து துரை சொல்லென்று சொன்னார். அதின் பேரிலே முன் எழுதின மக்சர் வயணம் அந்த மேலே எழுதியிருக்கிறபடிக்கு மதனாந்தபண்டிதர் பாரிசுக் காகிதத்தைப் பார்த்துப் படித்து சொன்னபடிக்கு துரையவர்களுடனே பறங்கி வார்த்தையிலே சொன்னேன். அதைக் கேட்டு இந்த மகசரிலே மோகறுபண்ணி சாதத்துகான் கையிலே கொடுக்கச்சொன்னார். அந்தப்படிக்கு மோகறுபண்ணி சாதத்துகானுக்குக்கொடுத்துவிட்டார்கள். அதின் பிற்பாடு கொம்மணமுதலி மகளுக்குக் கலியாணம், அவர் விட்டுக்கு எதிர் வீட்டிலே பந்தல்போட்டு முகூர்த்தம நடக்கும் என்று வந்தழைத்தார்கள். அந்த முகூர்த்தத்திற்குப் போய் மறுபடியும் துரை வீட்டுக்கு நாங்கள் வந்த பிற்பாடு நானும் திருக்காமிசெட்டியும் துரையண்டைக்குப் போய் வேலமூரி வேங்கடய்யனுக்குச் சரீரம் பளுவாயிருக்கிறது, முப்பத்தாறு மணி நேரமட்டுக்கும் கெடுவு விட்டார்கள் என்று சொன்னேன். அதற்குத் துரையிருந்துகொண்டு என்ன வியாதியென்று கேட்டார். அசீரணத்தின்பேரிலே கண்டது என்று சொன்னேன். அதின்பேரிலே சுங்கு முத்துராமசெட்டியும், சேஷாசலசெட்டியும் திருக்காமிசெட்டியுடனே சொன்ன சேதி அந்தப் பக்கத்துக் காகிதத்திலே எழுதியிருக்கிறபடியினாலே அதன்படிக்கு அவர்கள் சொல்லச் சொன்னார்கள் என்று சொன்னதற்கு, துரையிருந்துகொண்டு மீனாக்ஷியம்மை சத்திரத்திலே கொண்டுபோய் வைத்தாப்போலே பிழைக்கிறதும், வீட்டுக்குள்ளேயிருந்தாப்போலே சாகிறதுமாய் அவனுக்கு ஊருக்குப் போகவேணுமென்று பிரமை பிடித்துக்கொண்டு இருக்-

திருப்போலே ஆச்சுதே. ஆனபடியினாலே இந்தச் சந்துக் கட்டிலே சத்து சுவஸ்தமா யிருக்கப் பார்த்துக்கொண்டு போய்விட்டாலும் போய்விடுவான். பத்திரமாய்ப் பார்க்கச் சொல்லி முன்னேயிருக்கிற சேவகருடனே சொல்லென்று சொல்லி நீயும் போய்ப் பார்த்துவரவேணும் என்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். திரும்பியும் இன்னும் இரண்டு சேவகரைப்போய் முன்னிருந்த சேவகருடனேகூடப் பத்திரமா யிருக்கச்சொல்லிச்சொல்லென்று சொன்னார். நல்லதென்று சேவகரை இரண்டுபேரை முன்னிருந்த சேவகரையும் அழைப்பித்து இந்த ஆறு சேவகரையும் பத்திரமா யிருங்களென்றும் சொல்லியனுப்பிவிட்டு நானும் சாயங்காலம் வருகிறேன் என்றும் சொல்லி திருக்காமிசெட்டியுடனே சொல்லி யனுப்பிவிட்டேன் நானும் ஐந்து மணிக்குப் போய் பார்த்தவிடத்திலே பெதத்திலும் பிரமையும் ரொம்பக் கண்டிருந்தபடியினாலே அன்னபூரணி அய்யன் வந்திருந்தவன் என்னவென்று கேட்டதுக்கு இரண்டுக்கும்படும் நம்பப் போகாது. ஆனாலும் அவன் பிரமையைத் தீர்த்தால் நல்லது உங்கள் வாயினாலே ஊருக்கு அனுப்பிவிடுகிறேன் என்று சொல்லி பரஸ்தானம் பண்ணுகிற சாவையாய் குதிரை லாயத்து வீட்டிலே கொண்டுபோய்ச் சேர்த்தார்கள். அதின் பிற்பாடு நான் சவாரி புறப்பட்டுப்போய் வீட்டுக்குப் போனேன்.

1746 ஞூ ஜூன் மீ 27 உ க்ஷய அக்ஷய ஞூ ஆனி மீ 17 உ சோமவாரம்

இந்த நாள் தர்பாரிலே காலத்தாலே விசேஷித்து ஒன்றும் நடக்கவில்லை. பகலுக்கு மேலாகநாலுமணிக்குக் கும்பினீர் சேவகர் வந்து சொன்ன சேதி வேலமுரி வேங்கடய்யனுக்கு சிவப்பிராச்சிதம் பண்ணினார்கள். என்று வந்து கபுறு சொன்னார்கள். அதின் பிற்பாடுபோய் விசாரிப்போமென்று ஐந்து மணி சாயங்காலம் வேளைக்கு சுங்குவார் வீட்டுக்கு வந்தேன். அங்கே தெருவிலே சேஷாசல செட்டியும் அன்ன பூரணி அய்யனும் சலத்து வேங்கடாசல செட்டியும், பின்னையும் சிறிது கோமுட்டிகளும் இருந்தார்கள், வேங்கட்டய்யனுக்கு என்னமாயிருக்கிறது என்று கேட்டேன். மேல் சுவாசம் வாங்குது இனிமேல் நாழிகை கெடுவேயல்லாமல் வேறேயில்லையென்று அன்னபூரணி அய்யனும் சேஷாசல செட்டியும் கூடச்சொன்னார்கள். அதின் பேரிலே சேஷாசல செட்டிக்கு உபசாரமாய்ச் சொல்லிப் போட்டு, துரைக்குப் போய் கபுறு சொல்லுவோம் ஆறுமணி நேரம் ஆகுதேயென்று அன்ன பூரணி அய்யனையும் அழைத்துக்கொண்டுவரச்சே கிரிமாசி பண்டித

ரும் கூட என்னுடனே கூட சுங்குவார் வீட்டுக்குப் போகச்சே
தானே வந்திருந்தான். அவனையுங்கூட அழைத்துக்கொண்டு
நெடும் வீதியே கிழக்கே புறப்பட்டு துரை வீட்டுக் கிட்ட
வரச்சே இதிலே சுங்குவார் வீட்டிலே யிருந்து கும்பினீர் சேவ
கர் வந்து வேங்கட்டய்யன் பேச்சு ஆய்ப்போச்சுது என்று
சொன்னார்கள். அதின்பேரிலே துரையவர்கள் அண்டைக்கு
அப்புறம் சொல்லவேணுமென்று அவர் வீட்டண்டையிலே
போகச்சே அவரும் வண்டிமேலே சாரிபோனவர் அப்போது
தான் வந்திறங்கி வீட்டுக்குச் சாயங்காலம் ஆறு மணிக்கு
வந்து சேர்ந்தார். நானும் போய் வேங்கட்டய்யன் சென்று
போன சேதி சொன்னோம். அதற்கு அவர் சொன்னது: இப்புறம்
செய்யவேண்டிய காரியமென்னவென்று என்னைத்தானே
கேட்டார். அதற்கு நாம் சொன்னது: முன்னாலே வேங்கட்டய்
யன் சென்னப்பட்டணத்திலே யிருக்கச்சே சுங்கு முத்துராம
செட்டியார் சேஷாசல செட்டியார் உங்களண்டைக்கு வந்து
நாரணப்ப செட்டியார் கடைப்பணம் எல்லாம் வெங்கட்டய்
யன் அறுபதினாயிரம் எழுபதினாயிரம் வராகன் மட்டுக்கும்
எடுத்துக்கொண்டிருக்கிறான். அந்தப் பணமெல்லாம் எங்க
ளுக்கு வரவேணும். அவனை அழைத்தனுப்புவித்து அந்தப்
பணமெல்லாம் நீங்கள் எங்களுக்கு வாங்கிக் கொடுக்க
வேணுமென்றும் உங்களுடனே கனகராய முதலியார்
முகாந்திரமாய்ச் சொல்லிக்கொண்டார்களே அப்போது
நீங்கள் ருத்ரோத்காரி வருஷம் அர்ப்பசி மாதத்திலே
குவர்னதோருக்குச் சென்னப்பட்டணத்துக்கு வேங்கடய்யனை
அனுப்புவிக்கச்சொல்லி எழுதியனுப்பினதற்கு அவ்விடத்திலே
வேங்கடய்யனை சென்னப்பட்டணம் குவர்னதோர் மேஸ்திரி
பிங்கன் அவர்கள் அழைப்பித்து அனுப்புவித்துப் புதுச்சேரி
யிலேயிருந்து மூசே துய்ப்ளெய்க்சு குவர்னதோர் அவர்கள் சுங்கு
வார் கணக்கு நிமித்தியம் உம்மை யனுப்புவிக்கச் சொல்லி
யும் நீர் சுங்குவார் குமாஸ்தாவென்றும், அந்தக் கணக்குக்கு நீர்
உத்தரவாதம் பண்ணவேணுமென்றும் உம்முடைய பேரிலே
வராகன் வரவேணுமென்றும் இப்படியாக எழுதி வந்தது. நீர்
அவ்விடத்துக்குப் போய் அந்தக் கணக்கை உத்தரவாதம் பண்
ணிப்போடவேண்டும். அப்புறம் வாவென்று சொன்னதற்கு
வேங்கட்டய்யன் அவருடனே சொன்னது: நான் சுங்குவார்
குமாஸ்தாவுமல்ல. நான் அவருக்குக் கொடுக்கவேண்டியதுமில்லை
என்று அந்த வேளைக்கு மார்க்கமாய்த் தப்பித்துக்கொண்டாப்
போலே சொன்னதற்கு அந்தச் சமாசாரம் சென்னப்பட்டணம்
குவர்னதோர் உங்களுக்கு எழுதி யனுப்புவித்தார்களே,
அதற்கு நீங்கள் முத்துராமசெட்டியார் சேஷாசலசெட்டியாரை
அழைத்தனுப்புவித்துச் சென்னப்பட்டணத்திலேயிருந்து இந்
தப்படி எழுதிவந்ததே இதற்குச் சாதகமேதாகிலும் உண்டா
என்று கேட்கிறவிடத்திலே அதற்குச் சாதக பாதகங்கள்

உண்டு. அதுகளெல்லாம் உங்களண்டைக்குக் கொண்டு வந்து விடுகிறேமென்று சொல்லி, அந்தப்படிக்குத்தானே ஆற்காட்டிலே நாரணப்ப செட்டியார் கடைக்கு வேங்கடய்யன் குமாஸ்தாவாயிருந்து முடிப்புப் பிடித்துக்கொண்டு கணக்கெழுதிச் சம்பளமும் வாங்கிக்கொண்டதற்குக் கூடயிருந்த குமாஸ்தாக்களையும் கொண்டுவந்து விட்டுச் சாட்சி பிரதி சாட்சி பிறத்தி மனுஷரையும் கொண்டுவந்து இவர்கள் எல்லாராலேயும் வேங்கட்டய்யன் சுங்குவார் குமாஸ்தா வென்று சொல்லிவித்தார்களே, அப்போது நீங்கள் மாசிறு கடிதாசி எழுதுவித்துச் சொன்ன மனுஷர் கையிலேயெல்லாம கையெழுத்தும் போட்டுவித்து நீங்களும் அந்தக் கடிதாசியிலே கையெழுத்துப் போட்டு இந்தக் கடிதாசியும் மேஸ்திரி பிங்கன் அவர்கள் பேருக்கு நீங்கள் ஒரு கடிதாசியும் இந்த இரண்டு கடிதாசியும் அனுப்புவித்திர்களே, அந்தப்படிக்குத்தானே அந்தக் கடிதாசிகள் மேஸ்திரி பிங்கன் அவர்கள் பார்த்துக்கொண்டு இது நியாயந்தானென்று சொல்லி வெங்கடய்யனே இவ்விடத்துக்கு அனுப்புவித்தார்களே, அதின் பிறகு நீங்கள் என் முகாந்திரமாய்த்தானே மத்தியஸ்தர் ரங்கோ பண்டிதர், ஏகாம்பர அய்யர், கோபாலசுவாமி, வீரராகவ செட்டியார், ஆதிவராக செட்டியார் இவர்கள் ஐந்து பேரும் சொன்னபடிக்குக் கணக்குத் தீர்த்துக்கொள்ளச் சொல்லி, வேங்கட்டய்யனுக்குச் சொன்னதற்கு அதற்கு வேங்கட்டய்யன் சொன்னது: நமக்கு மத்தியஸ்தன் என்னத்துக்கு நான் மத்தியஸ்தர் சொன்னபிரகாரம் கேட்கவேண்டிய தென்னயிருக்கிறது, நானே தாகிலும் சுங்குவார் கேட்டால் நான் உத்தரவாதம் பண்ணவேண்டியது. மற்ற லக்ஷ்மண நாயக்கர் முதலாகிய பங்காளிகளுக்கு நான் உத்தரவாதம் பண்ண வேண்டிய தென்னயிருக்கிறது. அவர்களுக்குச் சுங்குவார் தானே உத்தரவாதம் பண்ணுவார்களென்று சொல்லி, அல்லவென்றால் நான் சென்னபட்டணத்திலே யிருந்து வந்த பிறகு கணக்கப்பிள்ளை யவர்களுடனே கூடயிருந்து கணக்குப் பார்த்தேன். அந்தப்படிக்கு வேணுமென்றால் கணக்குப் பார்க்கிறேமென்று சொன்னாரே, அதன்பேரிலே நாம் அப்படித்தானே கணக்கப்பிள்ளைகளுடனே கூடயிருந்து நீர் உத்தரவாதம் பண்ணவேண்டிய கணக்கு அல்லவா, ஆனபடியினாலே நீர் வகையறுப்பு எழுதிக கொடுமென்று வேங்கட்டய்யனுக்குச் சொல்லியனுப்பி அந்தக் கணக்குகளிலே தபாதுகளில்லாமல் படிக்குச் சோதிக்கச் சொல்லி, கோபால சுவாமிக்கு உத்தாரம் கொடுத்தோமே, அந்தப்படிக்குத்தானே அவர் அந்தக் கணக்கைச் சோதித்து தபாதுகள் எடுத்து எழுதி நம்மோடே சொன்னதற்கு நாம் வேங்கட்டய்யனே அழைத்தனுப்புவித்து இந்தக் கணக்கு எல்லாம் தபாதுகளாயிருக்கிறதே, இதுமேலே எழுதப்பட்ட மத்தியஸ்தர் ஐந்து பேரும் சொன்னபடிக்குக்

கணக்கு தீர்த்தக்கொள் என்று சொன்னதற்கு அப்போது
முன் சொன்னபடிக்குத்தானே தனக்குக் கவையில்லையென்று,
சுங்குவார்தானே உத்தரவாதம் பண்ணுகிறதற்கு நான் அவர்
சொன்னபடிக்குக் கேட்டுக்கொண்டு போகிறவன். எனக்குக்
கவை யென்னவென்று சொல்லிச் சொன்னதற்கு, அதின்
பேரிலே உங்களுக்குக் கோபம் வந்து மத்தியஸ்தர் சொன்ன
படிக்குத் தீர்த்துக்கொள்ள மாட்டோமென்று சொல்ல இவ
னுக்கு என்ன ஞாபகமிருக்கிறது என்று சொல்லி இவனை
யழைத்துக்கொண்டுபோய் கோட்டையிலே கிடங்கிலே
வைக்கச்சொல்லி யுத்தாரம் கொடுத்தீர்கள், அந்தப்படிக்குத்
தானே கோட்டையிலே கீழண்டை வாசற்படியிலே வடவண்
டை பக்கத்திலே ஒரு கிடங்கிலே வந்தவாசி திருவேங்கடப்
பிள்ளையுடனே கூடப் போட்டார்கள் அதின் பேரிலே நானும்
இரண்டொருத்தரோடே சொல்லி இவர் மத்தியஸ்தர் சொன்ன
பிரகாரம் தீர்த்துக்கொள்ள சொல்லிச் சொன்னால் அதற்கு
மாட்டோமென்று சொல்லலாமா என்று இப்பவும் மத்தியஸ்தர்
சொன்னபடிக்குக் கேட்கிறோமென்று சொன்னால் வெளியே விடு
கிறோமென்று நான் சொல்லியனுப்புவித்தேன். இதிலே நீங்களும்
வேங்கட்டய்யனுக்கு என்னைத்தானே போய்ச் சொல்லச்சொன்
னீர்கள். அந்தப்படிக்குத்தானே நான் கோட்டைக்குப் போய்
அவருக்கு ரொம்பவும் தெரியப்படச் சொன்னேன். அதற்கும்
அவர் கேட்கமாட்டோ மென்றிருந்து மூன்று நாள் பட்டினி
யிருந்து அதன்பிறகு நாலாம் நாள் மத்தியஸ்தர் சொன்னபடிக்
குத் தீர்த்துக்கொள்ளுகிறோமென்று சொல்லியனுப்பினபிறகு
நீங்கள் விடுதலைபண்ணி அந்தப்படி தீர்த்துக் கொள்ளச்
சொல்லி உத்தாரம் கொடுத்தீர்களே, அந்தப்படிக்குத்தானே
வெளியே வந்து மத்தியஸ்தர் ஐந்து பேரும் சொன்னபடிக்குக்
கேட்கிறோமென்று சீட்டும் எழுதிக் கொடுத்துத் தன்னுடைய
விவகாரமெல்லாம் மத்தியஸ்தருக்குச் சொல்லிக் கணக்குத்
தீர்த்துக்கொண்டானே, இனிமேல் தொகை ஏடு எழுதி இம்
மாத்திரம் வராகனென்று வேங்கட்டய்யன் பேரிலே தொகை
எழுதி மத்தியஸ்தர் கையெழுத்துப் போடவேண்டியதே யல்லா
மல் வேறெயில்லையே. ஆனபடியினாலே, இந்த வேங்கட்டய்யனை
சுங்குவார் சொந்தமாய் நாரண செட்டியார் கடையிலே முடிப்
புப் பிடிக்கிறதற்கு வைத்துக்கொண்டபடியினாலே அந்தக்
கடைக்கு நாரணப்ப செட்டியார் பங்காளிகளுக்கு உத்தரவா
தம் பண்ண வேண்டியதான படியினாலே வேங்கட்டய்யன்
பேரிலே வரவேண்டிய பணம் சுங்குவார்தானே உத்தர
வாகம் பண்ணவேணும். இப்போதும் அந்தப்படிக்குத்
தானே சுங்கு முத்துராமசெட்டியார் சேஷாசல செட்டியாருக்
குச் சொல்லியனுப்புவிக்கவேண்டியது என்று சொன்னேன்.
அதற்கு, துரையவர்கள் சொன்னது: ஆரை யவர்களண்டைக்கு
அனுப்புவிப்போம், சாவடி துபாசிகளை யனுப்புவிப்போமா

என்று கேட்டார். அன்னபூரண அய்யன், நயினருடைய தளவாய் கிருமாசி பண்டிதர் இவர்கள் இரண்டு பேரும் துரை வீட்டுக்கு என் பிறகே வந்திருக்கிறபோது கிருமாசி பண்டிதரை யனுப்புவிக்கலாமென்று சொன்னேன். அந்தப்படிக்குத் தானே கிருமாசி பண்டிதரை துரையவர்கள் அழைத்து அவருடனே சொல்லியனுப்புவிக்க வேண்டிய பேச்சு சொல்லியனுப்புவிக்கச் சொல்லி என்னுடனே தானே சொன்னார். அப்போது நாம் துரையவர்கள் முன்பாகத்தானே சுங்குவாருக்குச் சொல்லி, கிருமாசிபண்டிதருடனே சொல்லியனுப்பின வயணம்: வேங்கடய்யனனுக்காலம் பண்ணிப்போய்விட்டானே. அவன் கணக்கோடே சேர்ந்ததெல்லாம் தீர்ந்து தொகை ஏடு எழுதி மத்தியஸ்தர் கையெழுத்துப் போடவேண்டியதேயல்லாமல் வேறேயில்லையே. அந்த வேங்கட்டய்யன் என்கிறவன் நாரணப்ப செட்டியார் பங்காளிகளுக்கு உத்தரவாதம் பண்ணவேண்டிய கடைக்கு இவன் குமாஸ்தாவா நீங்கள் வைத்துக் கொண்டதேயல்லாமல் இவன் சொந்தக் காரனல்லவே, ஆனபடியினாலே, அவன் பேரிலேயிருக்கிற பணம் நீங்கள் உத்தரவாதம் பண்ணவேண்டிய தென்கிறது சித்தமாயிருக்கிறதே. ஆனாலும், உங்களுக்குச் சகாயமாய் உங்களுடைய நன்மையைக்குறித்துநாம் சொல்லியனுப்பிவிடுகிறோம் என்னவென்றால்: இந்தவேங்கட்டய்யனுடைய பணமும் உடைமையும் தட்டுமுட்டு சகலமும் சென்னப்பட்டணத்திலே யிருக்கிறபடியினாலே இனிமேல் வேங்கட்டய்யன்சென்றுபோன சேதிகேட்டு அவர்கள் தமையனார் அதுகளை வெளிப்படுத்தாததற்கு முன்னேதானே சென்னபட்டணத்துக்கு உங்கள் வேங்கடாசல செட்டியார் பிள்ளைகளுக்கு எழுதியனுப்புவித்து வேங்கட்டய்யனுடையபணமும்உடைமையும் பத்திரப்படுத்திக் கொள்ளுங்கள். பின்னையும் அவனுடைய உடைமையும் அங்கங்கே இருக்கிறது உங்களுக்கல்லவோ தெரியும் அதுகளையும் பத்திரப்படுத்திக்கொள்ளுங்கள் என்று இந்தப்படிக்குத் துரையவர்கள் சொல்லிவிட்டு வரச் சொன்னார்களென்று சொல்ல, கிருமாசி பண்டிதருடனே சொல்லி யனுப்புவித்தேன் அந்தப் படிக்குத்தானே கிருமாசி பண்டிதர்போய் முத்துராம செட்டியார், சேஷாசல செட்டியாருடனே இந்த வயணமெல்லாம் சொன்னதற்கு அவர்கள் சொன்ன வயணம்: எங்களுக்கு என்ன கவை யிருக்கிறது. நாலு பங்காளிகளுக்குள்ளே நாமும் ஒரு பங்காளியல்லாமல் இந்தப் பாத்திய மெல்லாம் எங்களுக்கு என்ன கவை யிருக்கிறது. அல்லவென்று துரையவர்கள் சென்னப்பட்டணத்துக்கு ஒரு கடிதாசி எழுதிக் கொடுத்ததே யுண்டானால் நாங்களும் எங்கள் பிள்ளையாண்டான்களுக்கு ஓலை யெழுதி யனுப்புவிக்கிறோம் என்று இந்தப் படிக்குக் கிருமாசி பண்டிதருடனே சொல்லியனுப்புவித்தார்கள். அந்தச் சேதியை துரை வீட்டுக்குக் கொண்டுவருகிறதற்

குள்ளே துரையவர்கள் கடிதாசி ஆடுகிறதற்கு உட்கார்ந்த
பிறகு, சாப்பிடுகிறதற்கு எழுந்திருந்தபோது கிருமாசி பண்டித
ருடனே சேஷாசல செட்டியார் சொல்லி யனுப்புவித்த சேதி
யெல்லாம் துரையவர்களுடனே சொன்னேன். அவன் அதற்
குப் பதில் சொன்னது: இந்தப்படிச்சுத்தானே தெளிக்கை
யாய்ச் சொன்னதினாலே பணம் தங்களைவிட்டுப் போகிற
தில்லை. தாங்கள் தான் உத்திரவாதம் பண்ணவேண்டியது. தாங்
கள் எழுதி யனுப்பினாலும் சரி, சும்மா விருந்தாலும் சரிதான்
அவர்களுக்குச் சரிபோனபடிக்கு இருக்கலாம். தங்களுடைய
நன்மையைக்கொண்டு தங்களுக்குச் சகாயமாய்ச் சொல்லி
யனுப்புவித்தேன். அது நல்லதென்று ஒத்துக்கொண்டு நடப்
பித்துக்கொண்டால் நல்லது. அல்ல வென்றம் அசட்டையாய்
இருந்தாலும் அவர்கள் மனசு பிறகு அவர்கள் ரொம்ப பிர
யாசைப்படுவார்கள் என்றும் இந்தப்படிக்கு மறுபடி சொல்லி
யனுப்புவிக்கச் சொன்னார்கள். அந்தப்படித்தானே கிருமாசி
பண்டிதருடனே சொல்லி யனுப்புவித்ததற்கு
முத்துராம செட்டியார் சேஷாசல செட்டியார்
சொன்னது: நல்லது அந்தப்படிக்குத் தானே சென்னப்பட்ட
ணத்துக்கு எழுதியனுப்பிவிடுகிறோமென்று சொல்லியனுப்பு
வித்தார்கள். இதல்லாமல் நான் ஒரு சேதி துரையவர்களுடனே
சொன்னேன். என்னவென்றால்: வேங்கடய்யன் உடம்பு
சொஸ்தமில்லாமல் படுத்துக்கொண்டிருக்கையிலே இந்தச்
சேதியும் பின்னையும் அவனுடைய உடைமை தட்டுமுட்டு எல்
லாம் பத்திரப்படுத்தச் சொல்லியும் சுங்கு முத்துராம செட்டி
யார், சேஷாசல செட்டியார் சென்னப்பட்டணம் வெங்கடா
சல செட்டியார் குமாரர்களுக்கு எழுதியனுப்பினார்களென்று
சேதி கேட்டிருந்தேன் என்று சொன்னேன். அதற்கு, துரைய
வர்கள் சொன்னது: இந்தச் சேதியை நன்றாய் விசாரித்து அந்
தப் பொன் மனுஷனையும் தெரிந்துகொண்டு நன்றாய் சாதக
மாய் வைத்துக்கொள்ளச் சொன்னார். இதல்லாமல் வேங்கட
டய்யன் காலம் பண்ணினவுடனே அந்தச்சேதி துரையவர்க
ளுக்குச் சொல்லப்போகிறபோது, சேஷாசல செட்டியார்
சொல்லியனுப்புவித்தது: சாயங்காலத்திலே வேங்
கட்டய்யன் காலம் பண்ணிப் போனபடியினாலே இனி
மேல் எடுத்துக்கொண்டு போய் மறுபடியும் எல்லா
ரும் வீட்டுக்கு வருகிற மட்டுக்கும் கதவு திறந்து இராதே.
அதற்கு எல்லாரும் வீட்டுக்கு வருகிற மட்டுக்கும் சென்
னப்பட்டணத்து வாசல் திறந்திருக்கவேண்டியதென்று
சேஷாசலசெட்டியார் குமாரக்குச் சொல்லி உத்தாரம்
வாங்கியனுப்பச்சொல்லிச் சொல்லியனுப்பினார்கள் ஆனபடியி
னாலே அந்தப்படிக்குத்தானே துரையவர்களுடனே சொன்ன
தற்கு அந்தப்படிக்குத்தானே திறந்துவைக்கச்சொல்லி புச்சே புரி
யவர்களுக்குச் சொன்னார்: அப்படித்தானே புச்சே புரியவர்கள்

கடிதாசி யெழுதிக்கொடுத்தார். அந்தக் கடிதாசியை சேஷாசல செட்டியார் அண்டைக்கு அனுப்புவித்தேன். மறுபடியவர்கள் எல்லாரும் வருமட்டுக்கும் பதினொருமணி மட்டுக்கும் கதவு திறந்து வைத்துக்கொண்டிருந்து எல்லாரும் வெளியேயிருந்து உள்ளே வந்தபிற்பாடு கதவு சாத்திப்போட்டார்கள். இதல்லாமல் சேஷாசலசெட்டியார் தம்பி ஆதியப்பசெட்டியார் என்கிறவர் தம்முடைய தாயார் கூடலூரிலே யிருக்கிறவளுக்குச் சரீரம் சுவஸ்தமில்லாமலிருக்கிறுளென்று ஆதியப்பசெட்டியார் அவ்விடத்திற்குப் போகவேணுமென்றிருக்கிருர் என்று சொன்னேன். அதற்கு அவர் சொன்னது: அவன் அப்படி போக வேண்டியது என்ன இருக்கிறது. அப்படியே பயணப்பட்டுப் புறப்பட்டுப்போகிறதானுல் கும்பினீர் சேவகரை யனுப்புவித்துப் போகாதபடியினுலே மறித்துப்போடச்சொல்லி உத்தாரங் கொடுத்தார். நாமும் சுங்குவார் கணக்கு நிமித்தியமிருக்கிற கும்பினீர் சேவகருடனே யெல்லாம் பத்திரமாய்ச் சொல்லி வைத்தோம்.

1746 ஆ ஜுன் மீ 28 உ க்ஷய ௵ ஆனி மீ 18 உ செவ்வாய்க்கிழமை

இற்றைநாள் காலமே எட்டு மணிக்கு, கோன்சேல் கூடி பதினொரு மணி மட்டுக்குமிருந்து அப்பால் கலைந்துபோனுர்கள். இந்தக் கோன்சேல் கலைகிறதற்குமுன்னே கொம்மண் முதலி மகன் கலியாண முகூர்த்தத்திற்குப் போய் மறுபடி துரை வீட்டுக்கு வந்திருந்து கோன்சேல் கலைந்து கோன்சேல்காரர் வீட்டுக்குப் போனபிற்பாடு நாங்களும் வீட்டுக்குப் போனேம் ... ... ... ... ... ... ...

இற்றைநாள் கேள்விப்பட்ட சேதி யென்னவென்றுல், சென்னப்பட்டணத்திலே இங்கிலீசுக்காரரிடத்திலே வெகு நாளாய் சமுசாரத்துடனே சரசந்நாயிருக்கிற பிரஞ்சுக்காரனொருத்தன் நம்முடைய புதுச்சேரி துரைக்கு உளவாயிருந்து நாளது வரைக்கும் அவ்விடத்திலிருந்து சென்னப்பட்டணத்துச் சேதியெல்லாம் எழுதிக்கொண்டே யிருப்பானும். இப்படியிருக்கையிலே பிராஞ்சுக் கப்பலைப் பிடித்துக்கொண்டதிலே யிருந்த ஒப்பிசியேல்மாரும் மத்லோத்திலே சிறிதுபேரும் சென்னப்பட்டணத்திலே நாற்பது ஐம்பது பேருக்குமாத்திரம் காவலிலே வைத்திருந்தபேரை இந்த சேர்சேந்து உளவாய் அவர்களை மயிலாப்பூர் மட்டுக்கும் உபாயமாய்க் கொண்டு வந்து விட்டுவிட்டுத் தானறியாதுபோலே யிருப்பானும். இருபது நாளைக்குமுன்னே இருபதுபேரை ஏக முகூர்த்தத்திலே தான் குதிரையேறிக்கொண்டு இவர்களை நாலுபேரும் இரண்டு பேருமாய் மயிலாப்பூர் சேர்த்துவிட்டுப் போகும்போதும்

வரும்போதும் பாளையக்காரர் மனுஷர்களைக் கண்டுபிடித்துக் கொண்டு, குவர்னதோருடனே சொன்ன மாத்திரத்திலே அவனைப் பிடித்துக் காவல்பண்ணி வீடு வாசல் சோதிகும் போது மூசே துய்ப்ளேய்க்சு குவர்னதோர் அவர்கள் அனுப்பின காகிதங்கள் நாலுரெண்டு சாதகத்துக்கு அகப்பட்டது. அவன் வீடு தட்டுமுட்டுச் சமஸ்தமும் எடுத்து கும்பினீரிலே போட்டுக் கொண்டு அவனையும் நாலுதரம் பாரிலேயடித்துக் காலுக்கும் கைக்கும் விலங்கு போட்டுவைத்தார்களென்றும் இனிமேல் தூக்குப்போட உக்தியுச்தமாயிருக்கிறார்களென்றும் எழுதி வந்ததாய்ச் சொன்னார்கள். இது ஊர்ச்சிதமாய் வந்தச்சேதியே யல்லாமல் பின்னையும் ஒன்றும் அபத்தமல்ல.

*1746* ஆ சூலை மீ முதல் உ க்கு அக்ஷய ஸ்ரீ ஆனி மீ 21 உ வெள்ளிக்கிழமை

இற்றைநாள் பத்தரை மணிக்கு, குவர்னதோர் அழைப்பித்து, மூசே பிரதியண்டையிலிருந்து காகிதம் வந்து துணை மனுஷன் அய்யங்கார் என்கிறவன் எழுநூறு வராகன் கொடுக்க வேணுமாம். அது சூன் மீ 30 உ யிலே நானூறு வராகனும் சூலை மீ................யிலே முந்நூறு வராகனும் கொடுக்கச் சொல்லி, தவணைபண்ணி யிருந்தபடிக்குப் பணங் கொடாமல் படிக்குப் பணம் கேட்டால் ரங்கப்பிள்ளைக்குப் பணத்துக்கு எழுதினால் என்னைக் கொடுக்கச்சொல்லி யெழுதியனுப்பினார்கள். நான் அவருக்குக் கொடுக்கவேண்டியதில்லை. அவர் பேரிலே சிதலை யெனக்கு வரவேணும். நான் ஒரு காசும் கொடுக்கத்தக்கதில்லை. நீ என்னசெய்ய வேணுமோ அந்தப் படிக்குச் செய்துகொள்ளுமென்று சுறுக்காய்ச் சொன்னதின் பேரிலே மூசே பிரதி காவல் வைக்கச்சொன்னார். இதிலேயும் இப்படி நடத்தவேணுமோ? ஒருக்காலும் இல்லாத விளைவு விளைந்தும் தானியம் ஒரு மணியளவிலேயல்லாமல் விற்றுப் போட்டும் பணம் கொடுக்க அட்டியென்ன? உன்னுடைய சினேகம் போதும் என்று குல்லாயைக் கழற்றி மெத்த வந்தனம் பண்ணினார். அதற்கு நானிருந்துகொண்டு சொன்னதற்கு, இந்தக் கெடுவு நானூறு வராகன் நீ செலுத்து. இன்னமொரு கெடுவு முந்நூறு செலுத்தச் சொல்லி எழுதினதற்கு அவன் கொடுக்க வேண்டிய நியாயம் அவனுக்குக் காரைக்கால் திருவேங்கடத்துக்குப் பங்கு உண்டு. அவனையும் பங்குவீதமாய்க் கொடுக்கச் சொன்னேன், அந்தப்படி கொடுக்கவேண்டியதா? தேவையில்லையாவென்று கேட்டதற்கு, நல்லதுதா னிந்தநியாயமும் எழுதினேன். அழைத்து, கோபம் பண்ணினதாகவும், மூசே பிரத்க்கு எழுதச் சொன்னார். அதின் பேரில் உனக்கும் அவனுக்கும் பதினாயிரம் காரியம் இருந்தாலும் கும்பினீருக்குக் கவையில்லையே. கும்பினீ

ருக்கு நீ உத்தரவாதியாச்சுதேயென்ருர். அது மெய்தான். ஆனபடியினுலேதான் அவனுக்கு ஆம்படியே சம்மதிபண்ண சொல்லியெழுதி யிங்கே இந்தப் பங்காளி திருவேங்கடத்தைச் சுறுக்கி பண்ணி இருநூறு வராகனுக்கும் உண்டிகை வாங்கிய னுப்பினேன். கறை இருநூறு வராகனும் இரண்டு மூன்று நாளையிலே வாங்கியனுப்பிவிடவேணு மென்றிருக்கிறேனென்று சொன்னதற்கு, நல்லது இப்போதானே போய் காகிதம் எழுதி யனுப்பு. அய்யங்காரைக் காவல் வைத்திருக்கிறதென்று சொல்லி சுறுக்காயிப்போதானே யெழுதியனுப்புவென்று நாலு தரம் ஆறுதரம் சொன்னபடியினுலே, அந்தவேளையிலே சேஷயங்காரைத் தானே காட்டிக்கொடுத்தால் நன்ருயிரா தென்று அவரைத் தொட்டுதானே, அவர் காவலிலேயிருக்க வந்தபடியினுலே, அவர் விவேகமில்லாதே நடப்பித்துக்கொண் டால் நம்முடைய மனுஷனுயிருக்கிறபடியினுலே அதை நாம் மேல்வாங்கிக்கொள்ள வேணுமென்று துரைகளுடனே சொல்லி அந்தக் குத்தகை பணத்துக்கு நாம் உத்தரவாதமானபடியினு லே அந்தப் பணம் நாம்தானே கொடுக்கிருேம் என்று சொல்லி, காரைக்கால் வரை முசே பிரதி அவர்களுக்கும் கடிதாசி யெழுதி அனுப்புவித்தேன்.

1749 ஆ சூலை மூ 1 உக்கு அக்ஷய ஞு ஆனி மீ 21 உ.

இற்றைநாள் சாயங்காலம் காரைக்கால் துபாசி பிரகாச முதலி ஒரு ஓலையும், சின்னக்குழந்தை இரண்டு ஓலையும் அனுப் பினுர்கள். அதிலே எழுதியிருந்த வயணம்: நாம் அவர் பங்கு வீதம் சம்மதிபண்ண வேணுமே, ஆனபடியினுலே இந்தப் பணத்தைக் கும்பினீருக்கு எழுநூறு வராகனும் சம்மதிபண் ணச்சொல்லி எழுதினதின்பேரிலே அவர் முசியே பிரதியண்டை குப்போய் நீர் என்ன செய்யவேணுமோ அதைச்செய் என்று எனக்குத்தான் ரங்கப்பன் பேரிலே பணம் வரவேணும் அப்படியிருக்க அவர் என்னைக் கொடுக்கச்சொல்லி யெழுதினபடியினுலே நான் கொடுக்கத்தக்கதில்லை யென்று சேஷய்யங்கார் சுபாவம் மனுஷரை எடுத்தெறிந்து பேசினுர். அதின்பேரிலே, முசே பிரதி கோபம் பண்ணிக் காவி லே விலங்குபோட்டு, கிடங்கிலே வைக்கச்சொன்னுர் என் றெழுதினுர்கள். அந்தப்படி கிடங்கிலே யிருக்கிற அவரை விடு தலை பண்ணிவிடுகிறது என்று எழுதினுர்கள். உம்முடைய பார மென்று பிரகாசமுதலியார் எழுதினுர். ஆனுல், சேஷய்யங்கா ருக்கு நாம் பண்ணின உபகாரத்துக்கு நம்முடைய பேரிலே பிரதிகூலம் பண்ணினதற்குச் சுவாமி அவருக்கு ஆக்கினை கொடுத்தார்.

1746 ஆ ஜூலை மீ 4 உ க்கு அக்ஷய ஸ்ரீ ஆனி மீ 24 உ திங்கட்கிழமை

இற்றைநாள் சாயங்காலம் சூரத்துசோடா வந்தது. அந்த வர்த்தமானம் இனிமேல் அறியவேண்டியது.

1746 ஆ ஜூலை மீ 5 உக்கு அக்ஷய ஸ்ரீ ஆனி மீ 25 உ செவ்வாய்க்கிழமை,

இற்றைநாள் காத்தாலே குவர்னதோர் அழைத்துச் சொன்ன சேதி யென்னவென்றால்: காரைக்காலுக்குக் கொடுக்க வேண்டிய பணம் எழுநூறு வராகனுக்கு இப்போது நானூறு வராகனுக்குத்தான் உண்டிகை போச்சுதே இன்னும் முந்நூறு வராகன் ஆகஸ்ட் மீ செலுத்துகிறோமென்றல்லோ மூசே பிரதிக்கு நீர் காகிதம் எழுதினீர். அப்படிச் செய்யப் போகாது. இந்த ஜூலை மாசத்திலேதானே முந்நூறு வராகனும் செலுத்திப்போடவேணும் என்று சொன்னதற்கு அவர் கொடுத்த தவணைப்படிக்குச் செலுத்திப்போடுகிறோமென்று சொன்னதற்கு அப்படி கூடாதென்று சொன்னார். அதற்கு நான் உத்தரவு சொல்லாமல் சும்மாயிருந்தேன். அதின் பிற்பாடு சேஷய்யங்காரை வைக்கவேண்டாம், அவன் உன் சொல்லைத் தள்ளிப் போட்டு உனக்கு இத்தனை அப்பிரதிஷ்டை கொண்டுவந்து விட்டவனை வைக்கவேண்டாம். வேறே ஒருத்தனை வைக்கவேணு மென்றார். நானும் என் மனதிலே அப்படித்தான் நினைத்துக் கொண்டிருக்கிறேன். அதுகாரியம் அப்படி நடத்தாவிட்டால் இனிமேலிருக்கிறவனுக்குப் பயம்வராமாட்டாதென்று சொல்லிப்போட்டு வந்துவிட்டேன். மறுபடி என்னையும் சின்ன முதலியாரையும் அழைக்கச்சொன்னார். திரும்பவும் போனோம் போனவிடத்திலே பணம் செலுத்திப் போடுங்கோள் நானும் அப்படித்தானே காகிதம் எழுதிவிக்கிறேன் என்று சொன்னார். நான் கிட்டப்போய் 20உ, 25உயாகிலும் செலுத்திப்போடுகிறோமென்று சொன்னோம். நல்லது உங்கள் நியாயத்தை மூசே பிரதிக்கு எழுதிக்கொள்ளுங்கோள் என்று சொன்னார். நல்லது என்று வந்தோம். இவ்வளவு அவ்வளவு வாங்கிக்கொள்ளுகிறதற்கு மாத்திரம் வரும் தானியம் பேசுகிறதற்கு நாமும் அவன் பண்ணுகிற அநியாயம் இவர் கேட்கிறதில்லையே. நல்லது இந்தப் பணத்தைச் செலுத்திப் போட்டு மெற்றப்பேச்சு அப்பால் பேசிக்கொள்ளுவோம். மூசே பிரதி பண்ணுகிற அநியாயம் காகித முகாந்திரத்திலே யெழுதி முடியாது. இதுகளெல்லாம் அப்பால் பேசிக்கொள்ளுவோம் என்று இரண்டு பேரும் பேசிக்கொண்டோம்.

1746 ௵ ஜூலை மீ 8 உ க்ஷ அக்ஷய ௵ ஆனி மீ 28 உ வெள்ளிக்கிழமை

இற்றைநாள் பதினொன்றரை மணிக்கு ஒரு கப்பல் கண்டது. வெள்ளைக் கொடி போட்டு வருகிறதென்றும் கோட்டையிலே கொடி போட்டிருக்குதென்றும், துரைக்கு கபுறு வந்து சொன்னார்களென்று அருணாசல செட்டி வந்து சொன்னதின் பேரிலே. வெளியே போய் சமுத்திரக்கரையே போய்ப் பார்ப்போமென்று பாக்குக்கிடங்கிலேயிருந்த நான் வெளியே புறப்பட்டவுடனே மலைக்கொழுந்து முதலி இளைய மகன் வறலாமென்கிறவன் என்னைக் கண்டு துரை மெத்தைமேலே ஏறிப் பார்த்துச் சீர்மை கப்பல் வந்ததை நம்முடைய கப்பல் என்று சம்பாகோயில் சுப்பேரியேர் இடத்துக்கு என்னைப் போய்ச் சொல்லச்சொன்னார் என்று சொன்னான். அதின் பேரிலே கடற்கரைக்குப் போனேன். அங்கே முசே லவீல் பாது, முசே ஒசேப் வோரி என்கிற கப்பலை அச்சியிலே பறிகொடுத்து முசே லசினே முதலான பேரிருந்தார்கள். அவர்களை ஆருடைய கப்பல் என்று கேட்டதற்கு முசே லவில் பாது சொன்னது: இந்தக் கப்பல் பங்காளத்து அறம்சாம். இதின் பேர் மரியசுசேப்பு. கப்பித்தான் முசே ஷப்பிந்நோ. இந்தக் கப்பலிலே பலகறை ஏற்றிவருகுது என்று சொல்லி, இது மசுக்கரைக்குப் போயிருந்தது. இந்தக்கப்பல் அவ்விடத்திலேயிருந்து வருகிறதாய்த் தோற்றுதென்று சொன்னான். ஆனாலின்னம் மற்றதுடனே கூட கப்பல் வராமல் இதுமாத்திரம் வரமாட்டாதேயென்று கேட்டேன். அதற்கென்ன சந்தேகம் என்று சொல்லிப்போட்டுப் போய்விட்டார். இப்படியிருக்கையிலே கப்பலுக்குப் போயிருந்த கட்டுமரம் காகிதம் கொண்டுவந்ததென்று சேவகன் வந்து கபுறு சொன்னான் இதிலே அந்தக் காகிதத்தை முசே ஒசே வாங்கிப்பார்த்து, கப்பல் மரியசுசேப்பு என்றும், கப்பித்தான் முசே ஷிப்பிந்நோ என்றும் பலகறையேற்றியிருக்கிறதென்றும், இதற்கு எழுகாத வழியிலே முசே லபோர்தோனே கொம்மாந்தான் கப்பலைகூட ஒன்பது கப்பலை விட்டுப்போட்டு வந்தேனென்றும் இங்கிலீசுக் கப்பலுடனே சண்டைக்கு நிற்கிறார்களென்றும் எதிரி கப்பல்கள் அபசயப்பட்டதாய்க் காணுதென்றும் கபுறு நம்முடைய கப்பல்கள் சாயங்காலம் வருமே நாளைக்கு வருமே என்றும் எழுதியிருந்ததாய்ச் சொன்னான். அந்தச் சேதிகேட்டு வீட்டுக்கு அரைமணி நேரத்துக்கு வந்தேன். ஆனாலிந்தக் கப்பல் கொண்டுவந்த சேதி சுபசேதியானபடியினாலே இந்தப் பட்டணத்திலுண்டான சனங்களெல்லாருக்கும் நிக்ஷேபம் அகப்பட்டாப்போலேயும், நஷ்டப்பட்ட திரவியம் லபித்தாப்போலேயும், மரணத்தை யடைந்தவர்கள் புளகா சீவ வந்தராய் வந்தாப்போலேயும் இப்படியனேக விதமாய் எழுதவேணுமென்றால் எழுத அவரவர்கள் வளவிலே கலியாணங்கள் போலேயும்

புத்திர உற்சவத்திற்குச் சந்தோஷம்போலேயும் இப்படி பட்டணமெல்லாம் தேவாமிர்தத்தைப் பக்ஷித்தாலெத்தனை சந்தோஷமாயிருப்பார்களோ அத்தனை சந்தோஷமா யிருந்தார்கள். இன்றைய சந்தோஷத்தைக் காகிதத்திலே யெழுதி முடியாது, இத்தனை சந்தோஷம் வரக்காரணமென்ன வென்றால், போனவருஷம் சீர்மைக்கப்பல் வராதபடியினாலே யும், இவ்விடத்திலேயிருந்து சீர்மைக்குக் கப்பல் போகாதபடி யினாலேயும், சீனா, மனிலா, அச்சி இவ்விடங்களுக்குப் போன கப்பல்களையும்பின்னையும்சில்லரைக் கப்பல்களையும் இதுகளெல் லாம் இங்கிலீசுக்காரர் பிடித்துக்கொண்டபடியினாலேயும் இந்த வூரிலே கும்பினீருக்குப் பின்னையும் சகலமான வர்த்தகருக்கும் பணத்தவக்கமானபடியினாலேயும், வூரிலே சகல ஜனங் களுக்கும் தொழிலில்லாதபடியினாலேயும், இப்படிக்கொத்த சமயத்திலே கப்பல்கள் வருகிறதென்று முன்னே ஒரு கப்பல் வந்து சேதி சொன்னபடியினாலே பட்டணத்திலிருக்கிற சகல சனங்களும் அத்தியந்த சந்தோஷத்தையடைந்தார்கள். அதின் பிறகு சாயங்கால வேளையிலே சிறிது கப்பல்கள் காணு தென்று கொடி மரத்திலே ஏறிப்பார்த்துச் சொன்னார்கள். அப் படித்தானே ராத்திரி சாமத்துக்கு எட்டுக் கப்பலும் துறைக் குச் சமீபமாய் வந்தது ராத்திரி காலத்திலே வந்தபடியினாலே சரப்பிணையாய் இங்கிலீசுக்காரர் கப்பல் ஏதாகிலும் வருகி றதோ என்னமோவென்று அடிக்கடி கோட்டைக்குத் தெற்கே யிருக்கிற கடலோரத்துக் கொத்தளத்திலே யிருக்கிற பீரங்கி கள் குந்தாணி பீரங்கி முதலானதுகள் ஒரு ஒரு வேட்டாய் சுட்டுக்கொண்டுவந்தார்கள். இதிலே இரண்டு மூன்று பீரங்கி யிலே குண்டு போட்டும் சுட்டார்கள். வந்த கப்பல் பிராஞ்சுக் காரர் கப்பல் என்கிறதற்குச் சமுசயம் இல்லாதபடியினாலே கோட்டையாருக்குத் தெரிந்திருக்கவேணுமென்று கப்பல்காரர் அடிக்கடி கோட்டையார் சுடுகிறதுபோலே கப்பல்காரர் இரண்டிரண்டு பீரங்கி சோடாய்ச் சுட்டார்கள். இந்தப் படிக்கு ராத்திரி பனிரெண்டு மணி மட்டுக்கும் கப்பல்கார ரும், கோட்டையாரும் சுட்டார்கள். அதன் பிறகு இரண்டு மணி யடித்தாப்போலே கப்பல்களுக்கெல்லாம் கொமாந்தனு யிருக்கிற மூசே லபோர்தோனே என்கிற கொமாந்தான் கப்பல் விட்டு இறங்கி துரையவர்களண்டைக்கு வந்து ஒரு மணி நேரம் பேசிக்கொண்டிருந்து மறுபடியும் ஷலங்குமேலே ஏறி கப்பலுக்குப் போனார்கள். இன்றையதினம் இப்படி யிருந்தது. இதல்லாமல் மத்தியானம் ஒரு கப்பல் வந்தவுடனே இவர்க ளது ஆலம்புரவியிலே ஒரு கப்பலும் சுலுப்பும் இருந்ததே அந்த இரண்டு உருவும் இவ்விடத்துக்குக் கொண்டுவரச் சொல்லி, துரையவர்கள் சேதி யனுப்பிவைத்தார்கள். இது இன்றையதின மட்டுக்கும் நடந்தது. மரிய சுசேப்பு என்கிற கப்பல் வருகையிலே காரைக்காலில் பிடித்த ஐம்பது சொல்தாக்

களையும் மூசே மென்லியேயும் ஏற்றிக்கொண்டு புதுச்சேரியிலே இறக்கினான்.

1746 ஆ ஜூலை மீ 9 உ க்ஷய ஸ்ரீ ஆனி மீ 29 உ சனிக்கிழமை

இற்றைநாள் காலமே துறையிலே பார்க்கிறபோது நேற்று மத்தியானம் வந்த ஒரு கப்பலும், வந்த எட்டு கப்பலும் ஆக 9 கப்பலும் கூட இருந்தது. காலமே எட்டு மணிக்கு மூசே லபோர்தோனே ஏறிவந்த கப்பலிலே மாத்திரம் பதினைந்து பீரங்கி போட்டார்கள். மதில் கோட்டையாரும் பீரங்கி போட்டார்கள். அந்தக் கப்பல்கள் சேதி இந்தக் கப்பல்களிலே ஐந்துகப்பல் சீர்மையிலிருந்து 1745 ஆ ஆகஸ்ட் மீ புறப்பட்டு 1746 ஆ பெவ்ரியே மீ 3 உ மசுக்கரை வந்து சேர்ந்து அவ்விடத்திலே நாட்டுக் கப்பல்கள் நாலு கப்பல்களிருந்தது. அதுவும் சண்டை முஸ்தீதாய் முஸ்தீது பண்ணிக்கொண்டு ஆக ஒன்பது கப்பலும் மரிய சுசேப்பு என்கிற பங்காளத்து அரசாங்க கப்பலையும் கூட்டிக்கொண்டு மதகஸ்கார் என்கிற தீவுக்குப் போய் ரஸ்துக்கள் ஏற்றிக்கொண்டு அவ்விடம் விட்டுப் புறப்பட்டுவருகிறபோது காற்றும் புசலும் அகோரமாயெடுத்து அடிக்கையிலே பாய்மரங்கள் முறிந்து சுக்கான்கள் தெறித்து கப்பல்களிலே தண்ணீர் வந்து மொண்டுகொண்டு அவசரமாக வந்தது கப்பல்கள் மூழ்கிப்போச்சுதென்று எண்பித்து அப்பால் சுவாமி தயவினாலே மறுபடியும் காற்று நின்று கடலும் கொந்தளிப்பும் அடங்கி மழையும் விட்டபிற்பாடு கப்பல்கள் யதாஸ்துரீதியாய் நின்றது. அதின்பிற்பாடு கப்பல் பாய்மரம் முதலானதுகளெல்லாம் முஸ்தீப்பு பண்ணிக்கொண்டு புறப்பட்டு வரும்போது மறுபடியும் காற்று மழையும் எடுத்து இரண்டாவதும் அப்படிதானே முஸ்தீப்பு பண்ணிக்கொண்டு செயிலாம் முனையிலே ஒரு மாதம் நாற்பதுநாள் மட்டுக்கும் சென்றது என்றும் அவ்விடம் விட்டுப் புறப்பட்டவுடனே நாகப்பட்டணத்துக்குத் தெற்கே அடுத்தாப்போலே வரும்போது இங்கிலிஷ் சண்டை கப்பல் கண்டவிடத்திலே இருந்தபடியினாலே முசே பெத்தோம் என்கிற காமண்டோர் எஜமானாக யிருந்து இந்தப் பிராஞ்சு கப்பல்களுக்கும் அவர்களுக்கும் நாலாம்நாள் சாயங்காலம் நாலு மணிக்குத் துவக்கினது, ஏழும்மணி ராத்திரி மட்டுக்கும் சண்டை கொடுத்தார்களாம். பிராஞ்சுக் காரருக்குள்ளே மூசே லபோர்தோனே கப்பலும், மூசே லசெல் கப்பலும் சண்டை அந்த ஆறு கப்பலுடனே சேர்ந்து சண்டை பண்ணும்போது பிராஞ்சு கப்பல்களிலே அந்தமட்டுக்கும் ஐயாயிரம் வேட்டு பீரங்கி சுட்டார்களாம். இங்கிலீஷ்காரருடைய ஆறு கப்பலானபடியினாலே அவர்களிலேயும் பலத்த சண்டை

பண்ணினவர்களானபடியினாலே அவர்களும் நல்ல சண்டை கொடுத்தார்களாம். அவர்கள் காற்றுக்கு வசமாயிருந்தார்கள். இவர்கள் காற்றுக்கு எதிராக இருந்தபடியினாலே இவர்களுக்கு வாய்ப்பு போதாதென்றும், அவர்களுக்கு நல்ல வாய்ப்பு என்றும், அதினாலே அவர்கள் தப்பினார்களென்றும் இதிலே இவர்கள் இரண்டு கப்பலிலேயும் மருந்து பீப்பாய் பத்திக்கொண்டதென்றும், அதினால் வெகுபேருக்குச் சேதமென்றும் சண்டை கொடுத்ததிலேயும் வெகு சேதமான படியினாலே வெள்ளி, சகலாத்து, சாராயம், மற்றுமுண்டான சீர்மைச் சரக்குகள் விஸ்தாரமாயிருக்கிறபடியினாலே சயாபசயமெப்படியிருக்குமோ.

சமீபத்திலே பதின்காதவழியிலே புதுச்சேரியிருக்கையிலே நாமிங்கேயிருக்கிறது நியாயமல்லவென்றும், இப்போது எதிராளியும் அபசயப்பட்டுப் பின்தாங்கி இருக்கிறானே இந்தச் சமயத்திலே நாம் பாயெடுத்துப் புதுச்சேரிக்குப் போவோம் என்று பயணப்பட்டு வந்துவிட்டதாயும் அவர்களிலே இரண்டு கப்பலினால் வெகு சேதப்பட்டதென்றும், அந்தக்கப்பல் மூழ்கிப் போய்விட்டதாயும் அல்லது இருந்தாலும் அதிலேயிருந்த மனுஷரும் சேதப்பட்டு அந்த இரண்டு கப்பலும் கவைக்கு ஆகாமற் போமென்றாப்போலே சொன்னார்கள். மற்ற நாலு கப்பல்களும் அதிலேயுண்டான மனுஷரும் வெகு சேதமுண்டென்றும் சொன்னார்கள்.

இற்றைநாள் ஐந்து மணியிலே மூசே லபோர்தோனே இறங்கினான். இறங்கும்போது கப்பலிலே பதினைந்து பீரங்கி போட்டார்கள் கரையிலே யிறங்கின உடனே கடற்கரை வாசற்படியண்டை வரும்போது இவ்விடத்திலே பதினைந்து பீரங்கி போட்டார்கள். பெரியதுரை மூசு தூய்ப்ளேக்ஸ் தவிர மற்ற சின்னதுரை முதலான கோன்சிலியேர், கப்பித்தான்மார் அனைவரும் கடற்கரை மட்டுக்கும் எதிரே போய் அழைத்துக் கொண்டுவந்தார்கள். துரை வீட்டுக்குள்ளே வரும்போது துரை சாந்தினேர் கார்க்கிறபடிக் கப்புறம் வந்து ஒருத்தருக்கொருத்தர் கட்டிக்கொண்டு உள்ளே சாலையே போனாப்போலே பதினைந்து பீரங்கி போட்டார்கள். அப்பால், துரையவர்களுக்கும் மூசே லபோர்தோனேயும் வராந்தாவுக்கு அப்புறம் இருக்கிற வெளியே போய்ப் பேசியிருந்தார்கள். இந்தக் கப்பலிலே வந்த வெள்ளிமார்க்கு நாற்பதினாயிரம், பொன் லக்ஷம் ரூபாயிருக்கும் வந்தது இதல்லாமல் சகலாத்து வந்ததும், சாராய பீப்பாய்கள் வந்ததும் இவ்வளவென்று தெரியாது. பவழப்பெட்டி வந்ததும் வராததும் நன்றாய்த் தெரியவில்லை. மூசே தூலோராழுக்கு இரண்டு பிள்ளைகள் இதிலே வந்தது. ஒரு பிள்ளைக்கு வயது இருபத்தொன்று. ஒரு

பிள்ளைக்கு பதினெட்டு என்று மூசே மீரா சொன்னான். இன்னும் ஒரு பிள்ளை சீர்மையிலே மூசே தும்மா விடத்திலே யிருக்கிறதாம்.

இந்தப்படிக்கு மூசே மீரா சொன்னான். இதல்லாமல் இற்றைநாள் ராத்திரி ஏழு மணிக்கு காரைக்காலிலிருந்து படகின் பேரிலே நூற்றிநாற்பது சொல்தாதுகளுடனே மூசே பிரி வந்து சேர்ந்தார். நானும், சின்னமுதலியாரும், மூசே துலோரா முடைய குமாரர்கள் வந்ததற்கு மொபராக்குச் சொல்லிப் போட்டுவந்தோம். இதிலே சின்னதுரைக்கும் மூசே கிலியாருக்கும் உத்தியோகம் பறிகரிப்பு எழுதிவந்ததென்று சொல்லு கிறார்கள். இற்றைநாள் வெள்ளிப்பெட்டிகளையும் காயக்காரர் சிறிதுபேரையும் இறக்கினார்கள்.

1746 ஆ௳ ஜூலை ௴ 10 ௳க்கு அக்ஷய ௵ ஆனி ௴ 30 ௳ ஆதிவாரம்.

இற்றைநாள் விடிந்தபிறகு காயக்காரரும் சிறிது சகலாத்துக் கட்டுகளும் இறக்கினார்கள். இற்றைநாள் காலத்தாலே நானும் சின்ன முதலியாரும் மூசே லபோர்நோனே யண்டை போய்ச் சந்தித்து உபசாரமான வார்த்தைகள் சொல்லிவிட்டு வந்தோம்....

1746 ஆ௳ ஜூலை ௴ 11 ௳க்கு அக்ஷய ௵ ஆனி ௴ 31 ௳ ஸோமவாரம்.

முன் வையாசி ௴ 7௳ பொம்மராசாப்பாளையத்திலிருந்து வெகுமானம் கொண்டுவந்திருக்கிற சிங்கர ஆச்சாரியார் அய்யங்கார் இவர்களை இற்றைநாள் பத்து மணிநேரத்தில் மறுபடி பொம்மராசாப்பாளையத்துக்கு வேங்கட்ட நரசிங்கராசாவுக்குப் பெரிய குதிரை க, அனுரிதானு சாமெவார் க, குசிராத்து பட்டுக்கா க, மொக்குமிச்சிரா க, சிறபெசு க. இந்த நாலு நகையும் கட்டிப் பெரிய குதிரை நமக்குக் கனகராய முதலியாருக்கும் பங்கா யிருந்ததை நாம் சொந்தமாய் தீர்த்துக்கொண்ட குதிரையையும் கூடக்கூட்டி அவரண்டையி லிருக்கிற பிராமணன் நாராயணப்பட்டனுக்கு இரண்டு கிசம் உயர்ந்த சிகப்பு மெல்லீசு சகலாத்தும், அவர் பெண்சாதிக்குப் பத்தொன்பது ரூபாயிலே ஒரு கலபறிக்கிச் சேலையும் ரவிக்கையும், அவர் ராயசம் பெத்தஅய்யவாருக்கு இரண்டு கிசம் மொக்கா சட்டம் செகப்பு ரெவ்வண்டு கிசம் சகலாத்தும் கட்டிவந்த சிங்கராசாரியார் அய்யவார் அய்யங்காருக்கும் பேருக்கு ஒரு சகலாத்துக்குல்லாயும் வழிச்செலவுக்கு

ஆறு ரூபாயும் கொடுத்து அவர் பிறகேவந்த பிரமச்சாரி பிராம் ணனுக்கு நாலரை ரூபாய் சட்டம் மட்டத்தாபித்தாக சமை யல் பண்ணியிட்ட பிராமணனுக்கு இரண்டு ரூபாயிலே ஒரு சோமன் சோடும், அவன் பிறகேவந்த சேவகனுக்கு அரை வராகனிலே ஒரு பாகையும், எட்டு பணத்திலே ஒரு துப்பட்டி யும் இந்தப்படிக்கு அவரவருக்கு வெகுமானமும் பண்ணி ராசா வுக்கும் நாராயணப்பட்டனுக்கும் பெத்த அய்யவாருக்கும் காகித மெழுதிக்கொடுத்து நம்முடைய ராமகிருஷ்ண சாஸ்திரி யார், வரதய்யங்கார், ராயலய்யன், இரண்டு சேவகரையும் கூட கூட்டி ராசாவுக்கு வைத்தியம் பார்க்கிறதற்கு ஆறுமுகப் பண்டித பண்டாரத்தையும் பயணம்பண்ணி யனுப்புவித் தோம். அவர்களும் அனுப்புவித்துக்கொண்டு ராத்திரிக்கு நம்முடைய அக்கிராகரத்திலே யிருந்து அப்பால் பயணம் சாகிப்போனார்கள்.

1746 ஆ ஜூலை மீ 12 உ க்ஷய ஞு ஆனி மீ 32உ செவ்வாய்க்கிழமை

இற்றைநாள் காலையிலே முசே நேம்ரோ குவர்னதோர் வீட் டுக்குப் போனவன், கதவு சாத்தியிருக்கிறது. நானிருக்கிற பாக் குக்கிடங்கிலே வந்தேன் வந்த விடத்திலே என்ன சமாசாரம் சீர்மை கப்பல்கள் வந்ததேயென்று கேட்டேன் உனக்கு ஆறும் இன்னம் ஒன்றுஞ் சொல்லவில்லையாவென்று கேட்டேன். அதற்கு அவன் சொன்னது: முசே துப்ளேய்க்கு சீர்மைக்கு எழுதிக்கொண்டான். தான் புதுச்சேரியிலே இருக்கமாட் டேன், எனக்கு புதுச்சேரி ஒத்துவரவில்லை. ஆனபடியினாலே, பங்காளம் குவேர்னமாவாக்கி அதின்கீழே புதுச்சேரி மற்று முண்டான தெல்லாமாக்கி என்னை பங்காளத்திற்குப் போய் இருக்கச்சொல்லி உத்தாரங் கொடுத்தனுப்புவைக்கவேணும். இல்லாவிட்டால் பங்காளம் தனியே குவேர்ன்மாவாக இருக்க வேணும். இந்த குவர்னதோருக்குக் கொடுக்கிற சம்பளம் தானே அந்த குவர்னதோருக்கும் நடக்க, அந்தக் கணக்கு வழக்கு அப்படிதானே சீர்மைக்கு உத்தரவாதம் பண்ணத் தக்கதாகவும், இப்போது மசுக்கரை எப்படியோ அப்படிதானே ........மும் அலாயுதா குவர்னதோராயிருக்கவும் அதிலே தன் சீவனிருக்கிற மட்டுக்கும் குவர்னதோராயிருந்து விழுந்து போகவும், அந்தப்படிக்குச் சிறிது பணம் கோந்திரோலேர் செனரல் அவர்களுக்கும் செலவழித்து எழுதியனுப்பினதாக வும், முசே துப்ளேயிருந்து, பங்காளம் குவர்னதோராயிருக்க வும், அது பிரத்தியேகமாய் சீர்மைக்கு உத்தரிக்கவும், புதுச்சேரிக்கு அக்கரையில்லாமற்படிக்குக் கும்பினியார் எழுதினார்கள் என்றும், அந்தச் சேதிக்குப்பிறகே ஏழு கப்பல் வருகிறதென்றும், அந்தக் கப்பலிலே வருகிறதென்றும் இவன்

சிவன் உள்ள மட்டுக்கும் பங்காளம் துரைத்தனம் பண்ணு வார் என்றும், இப்படியாக மூசே துப்ளேக்சுக்கு எழுதிவந்த தாய்ச் சொன்ன பிறகு இவ்விடத்துக்கு மாயேயிலிருக்கிற மூசே துப்ரோமன் தம்பி மூசே லர் என்கிறவன் இப்போது மாயே யிலே யிருக்கிறனே அவனிடத்துக்குக் குவர்னதோராயிருப் பான் என்றும், மாயேயிக்கு அவனுக்கு இரண்டாவதாக இருக் கிற மூசே லுமேபத்து அவ்விடத்துக்கு திரேக்தோரா யிருப் பாரென்றும் இப்படியாகச் சொன்னுன். சீர்மையிலே அழி சபாக்கம் மூசே தும்மாவுக்கு என்று தீர்த்து அவன் ஜீவ னிருக்கிற மட்டுக்கும் வருஷத்திற்கு ஐயாயிரம் ஏய்க்கு தெ பிருன் கொடுக்கவும். அவன் ஜீவன் போனபிற்பாடும் கும்பினியாருக்குச் சேருமென்றுப்போலேயும் அந்தப் படிக்கு அழிசபாக்கம் மூசே தும்மா கையிலே குத்தகை யாக ஐயாயிரம் ஏய்க்கு தே பிரான்சாய் தீர்த்துக் கொண் டார்கள் என்றும், மூசே தும்மா பேச்சு சீர்மையிலே மெத்த ஆதிக்கமா யிருக்கிறதென்றும், இதல்லாமல் கும்பினீரிலே பணம் இல்லாமல் ராசாவைக் கேட்டும் கும்பினியார் பணம் வாங்கிஞர்க ளென்றும், ராசாவுடைய உத்தரவுபடிக்குப் பனிரெண்டு கொம்மிசேர்மார்கள் வந்து கும்பினீர் திரேக்தேர் மார்கள் கணக்குகளெல்லாம் விசாரித்தார்களாம். மூசே தும்மாவுடைய கணக்கும் விசாரித்தார்களாம். காரியம் விசா ரிக்கையிலே அவர் பத்து பணம் விசேஷித்துச் செலவழித்த சாடையின் பேரிலேதானும், அழிசபாக்கமு மிவர் ஜீவனிருக் கிற மட்டுக்கும் இவருடையதாகவும் இவருக்குப் பிற்காலம் கும்பினியாரைச் சேரத்தக்கதாகவும் தீர்த்ததென்றும் இப் போது மூசே தும்மா பேச்சு மெத்த எண்ணமாயிருக்கிறதென்றும், இப்போது மூசே லபோர்தோனே காரியம் அந்தப் பனிரெண்டு பேர் கொம்மிசேர்மார்கள் விசாரிக்கிறுர்களென்றும், இது இளப்பம் காணுமென்றும் சொன்னுன். அதற்கு நான் சொன னது: பணம் விஸ்தாரமாய் செலவழித்தால் அதுவும் என்ன மாய்ப்போம் என்று சொன்னேன். அது மெய்தான் கோன்திரோ லேர் செனராலுக்கு விசேஷத்துக் கொடுக்கிறபடியினுலேதா னிவர்கள் எப்படி எழுதுகிறுர்கள். அப்படியெல்லாம் உத்திரவு வருகிறது என்று சொன்னுன். அப்பால் சீர்மை பேச்சுகளும் இந் தூர் பேச்சுகளும் லோகாபிரமமாய்ப் பேசினேம். அதல்லாம் எழுதவேணுமானுல் இருபது காகிதம் செல்லும். அதினுலே கிரிகையில்லை, சாரமாயிருக்கிறதை மாத்திரம் எழுதினேன்.

இற்றை நாள் ஒன்பது மணிக்கு, கோன்சேல் கூடினுர்கள். காரியமென்ன வென்று தெரியவில்லை.

கப்பலிலேயிருந்து இறங்கின வெள்ளைக்காரரில் ஐம்பது ஐம்பது பேர் விழுக்காடு சென்னப்பட்டணம் வாசல் முதலான வாசல்களுக்கெல்லாம் அனுப்பினுர்கள்.

காலத்தாலே கூடலூர் தேவனாம்பட்டணத்திலே பீரங்கி சப்தம் கேட்டது. இங்கிலீசுக்காரர் கப்பல் நாகப்பட்டணத்துக்கப்பாலே நின்ற கப்பல்கள் கூடலூர் தேவனாம்பட்டணம் துறை வந்ததாகவேணுமென்று ஆலோசனை பண்ணினார்கள். அவர்கள் யோசனைக்குத் தோற்றினபடிக்குச் சொன்னார்கள்.

கப்பல் வந்த சேதியும் இங்கிலீஷ் கப்பலுடனே சண்டை போட்டதும் அவர்களபசயப்பட்டதும், தங்கள் கப்பல் ஜெயமாய் புதுச்சேரி துறை வந்து சேர்ந்தது என்று மோபார்க்கு காகிதம் மீருகுலாமுசேனுக்குத் துரை எழுதியனுப்பினார். நானும் எழுதியனுப்பினேன். மீருகுலாமுசேனுக்கு எழுதின காகிதத்திலே அவருக்குக் கொடுக்கவேண்டிய லக்ஷம் ரூபாயும் பிறகே வருகிற ஏழு கப்பலும் வந்து சேர்ந்தவுடனே கொடுத்து விடுகிறோமென்றும் இந்த மட்டுக்கும் உண்டான வட்டி கொடுத்துவிடுகிறோமென்றும் எழுதினார்கள்.

இதல்லாமல் உசேன் சாயபுக்கு எழுதின காகித வயணம்: தங்களுக்குப் பத்துக் கப்பல் வந்தது. இங்கிலீஷ்காரர் சண்டை கொடுத்து அபசயப்பட்டதும் உங்களுக்குக் கொடுக்கவேண்டிய பதினாயிரம் வராகனும் கொடுத்துவிடுகிறோமென்றும், அதற்கு மனுஷரை அனுப்பச் சொல்லியும் காகிதம் துரை காகிதமா யெழுதியனுப்பினார்கள். கூடலூர் தேவனாம்பட்டணத்திலே யிருக்கிறவர்கள் எல்லாரும் புதுச்சேரிக்குக் கப்பல் வந்த சேதி கேட்டு பயந்து அவரவர்கள் வலசை வாங்குகிறார்களென்று போக்கு வருத்து மனுஷர் சொன்னார்கள்.

1746 ஆ ஜூலை மீ 13 உ க்ஷய அக்ஷய ஞூ ஆடி மீ முதல் உ புதவாரம்

இற்றை நாள் முன் தஞ்சாவூரிலிருந்து அன்னப்ப செட்டி கைக்கும் ரங்கோ பண்டிதருக்கும் ஆகாமல் உடையார்பாளயத்திலே வந்திருந்து, அவ்விடத்திலிருந்து இவ்விடத்திற்கு வந்திருந்து இப்போது அன்னப்பசெட்டியை முன் ஆனி மீ 10 உ காவல் வைத்து, உத்தியோகம் மானோஜி அப்பாவுக்குக் கொடுத்து இவரையும் இவர் தம்பி அங்கேயிருக்கிறவன் சேத்துக்கோ சாமியையும் மானோஜி அப்பாவையும் கண்டு பேசி வரச்சொல்லி எழுதினபடியினாலே இவர் போய் அவ்விடத்துக் காரியங்களை சுவஸ்தம்பண்ணிக்கொண்டு அப்பால் குமாரனையும் சமுசாரத்தையும் அழைப்பிப்போமென்று அவர்களையெல்லாமிவ்விடத்திலே வைத்துவிட்டு, தாமாத்திரம் தஞ்சாவூருக்குப் போகிறதாய் என்னண்டைக்கு வந்து

பயணமனுப்புவித்துக்கொண்டு நாளையதினம் பயணம் போகிறேமென்று சொல்லியனுப்புவித்துக்கொண்டு போனார்.

இற்றைநாள் சாலத்தாலே முசே லபோர்தோனே ஒழுகரைக்குப் போகவேணுமென்று போகையிலே வில்லியநல்லூர் வாசற்படிக்காரர் அலேடத்துக் கூப்பிட்டு வரிசை நின்றார்கள். அதற்குத் தன்னுடைய சேவகனுக்குச் சொல்லி வாசற்படிக்காரனுக்குச் சொல்லச் சொன்னதற்கு, நானுடுத்திக்கொண்டு வரவில்லை ரெப்ரெஜான் தானேடே குல்லாவோடே புறப்பட்டேன். ஆனபடியினாலே, வரிசை வைக்கவேண்டாமென்று சொல்லியனுப்பினானும். அதற்கு அவன் கேளாமல் வரிசைவைத்துத் தம்பூர் அடித்தார்கள் அப்பா லவர் ஒழுகரைக்குப் போய் மறுபடியும் வழுதாவூர் வாசற்படியாலே வருகையிலே அங்கேயும் அலேடத்துக் கூப்பிட்டு வரிசைவைத்தார்கள். அவர்களுக்கும் தன் சேவகனைக்கொண்டு முன்போகையிலே வில்லியநல்லூர் வாசற்படிக்காரனுக்குச் சொல்லியனுப்பினபடிக்கு வழுதாவூர் வாசற்படிக்காரனுக்கும் சொல்லியனுப்பினான். அதின் பேரிலே வரிசைக் கலைத்துப்போட்டுச் சும்மாயிருந்தார்கள் இவன் வந்துவிட்டான். அப்பால் கோட்டைவாசற்படியண்டையிலே வரும்போதும் வரிசைவைக்க ஆரம்பித்தார்கள். அங்கேயும் அப்படிச் சொல்லியனுப்புவித்தான். அவர்களும் வரிசை வைக்காமல் சும்மாயிருந்தார்கள். அதின்பேரிலே முசே லபோர்தோனே, முசே துக்கேனை யழைப்பித்துச்சொன்ன தென்னவென்றால்: உங்கள் குவர்னதோர் அமுலிலே வந்திருக்கிறபடியினாலே உங்கள் சொல்தாதுகளும் இருக்கிற வரிசையிலே வேணுமென்றால் சின்னதுரைக்கு அடிக்கிற தம்பூர் அடிக்கிறார்கள். எங்கள் சொல்தாதுகளை எங்கள் மாயே கப்பித்தான் நிற்க வரிசையிலே ... ... ... குவர்னதோருக்கு ... ... என்று கேட்டானும், அதற்கு முசே தெக்கசேன்... .. தில்லையென்று சொன்னானும். அந்தப் பேச்சை முசே லபோர்தோனே துரையுடனே முசே துக்கேன் என்னைத் தம்பூர் ராம்பிலி அடித்தால் கிவர் றது. அது உமக்குச் சம்மதியில்லாமற்போனால் நீர் வரத் தேவையில்லையென்று சொன்னான் என்று குவர்னதோருடனே சொன்னதற்கு முசே துக்கேனை யழைத்து, தம்பூர் ராம்பிலி அடிக்கிறது சம்மதியானால் உன்னுடைய தளத்தினுடைய வரிசைக்குள்ளே வருகிறது. இல்லாவிட்டால் நீ வரிசை வரவேண்டாமென்று சொல்லக் காரியமென்னவென்று கேட்டாரானபடியினாலே நான் அப்படிச் சொல்லவில்லையென்று சொல்லி நான் சொன்னபடிக்குச் சொல்லுகிறேன் கேளுங்கோளென்று சொன்னான், அதெப்படியென்றால்: நீர் வந்தால் தம்பூர் ராம்பிலியடிக்கிறதேயல்லாமல் தம்பூர்ஷாம் அடிக்கிறதற்கு ஒட்டுகிறதில்லையென்று சொன்னதேயல்லாமல் வரவேண்டாமென்று சொன்னதில்லையென்றும், அதற்கு குவர்ன

தோர் முசே துப்ளேய்க்சு உடனே கண்டு பேசி உத்தரவு வாங்கிக்கொள்ளுங்கோளென்று சொன்னேனேயல்லாமல் பின்னை வேறேவிதமாய்ச் சொல்லவில்லையென்று சொன்னதற்கு முசே துப்ளேய்க்சு குவர்னதோர் ஆலோசனையாய் மனதிலேயென்றதற்கு இவன் சொல்லான் ஆனபடியாகிலும் முசே லபோர்தோனேக்குப் பிரித்து அர்த்தமாய் முசே லபோர்தோனே பெரிய மனுஷன்போய்ச்சொல்லுவானா, நீ பேச்சைதிருப்புகிறாய். காவலிலே போய் இருவென்று கோட்டையின் பேரிலெ மணிக்கூண்டிலே காவல்வைக்கச் சொன்னார். அதற்கு முசே லபோர்தோனே மேல் கிறிச்சுக்கொண்டு காவல் வைக்கவேண்டாம் என்று சொல்லாமல் காவல் வைக்கட்டும் என்று சும்மா யிருந்தான். அதன் பேரிலே காவல் வைத்தார்கள். முசே லபோர்தோனே மனதிலே தானே ஒரு பட்டணத்துக்குக் குவர்னராயிருக்க, இதல்லாமல் சண்டைக்கும் கப்பல்களுக்கும் ராசாவுடைய உத்தாரப்படிக்குக் கொமாந்தானாயிருக்க நமக்கும் குவர்னதோருக்கும் அடிக்கிற தம்பூர்ஷாம் அடிக்கப் போகாது என்கிற விசனம் முசே துய்ப்ளேக்சுக்கு. நாம் பட்டணத்துக்கு அதிகாரி. நமக்கு இவன் கரையிலே இறங்கினால் தாழ்த்தி, கப்பலின் பேரிலே ஏறினால் இவன் எசமானிவனுக்கு இத்தனை பிடாயியாயில்லாமல் இவன் தமக்கு சரியா ஒப்பிசியேமார் பதினெட்டுப்பேரை வைத்துக்கொள்ளலாம் என்றும் சாப்பிடும்போது துரோம்பேத்து ஊதுகிறதும் ஒருவிதம் டோல் அடிக்கிறதும் இப்படி அனேகப் மேன்மை பண்ணுகிறானென்று முசே துய்ப்ளேக்ஸ் மனதிலே குறைக்கு... ... ...மேன்பாட்டை அடக்கி... ... ... ... ...யிருக்கிறாப்போலே... ... ... ... ... ... ...

1746 ஆ ஜூலை மீ 14 உ க்கு அக்ஷய ஸ்ரீ ஆடி மீ 2 உ வியாழக்கிழமை

இற்றைநாள் காலத்தாலே முசே துக்கேனை காவல் விட்டுவிட்டார்கள். முசே லபோர்தோனே கப்பல்கள் பேரிலே இருந்தவர்களிலே சிறிது பேரை இறக்கி வாசற்படிக்கு ஐம்பது பேர் நாற்பது பேருமாய் வைத்த சொல்தாதுகளையும் ஒப்பிசியேமாரையும் அழைப்பித்து (ா) துரையவர்கள் வீட்டுக்கு எதிரே பெரிய வரிசை வைத்துப் பார்த்து அந்த வரிசை நடுவே தானிற்க. அவரவர் குவர்னதோருக்குப் பண்ணுகிறபடி பேட்டி சலாம்படிக்கு இவருக்கு நடப்பித்தார்கள். அதின் பிற்பாடு வரிசை கலைத்துவிட்டுப் போகச்சொல்லச் சொல்லிவிட்டு, தான் விடுதியா யிறங்கி யிருக்கிற முசே தெசடேதென் வீட்டைப் போனான். இந்த வரிசைக்கு முசே லபோர்தோனே இருந்ததே யல்லாமல் முசே துப்ளேய்க்சு போகவுமில்லை, பார்க்கவுமில்லை. வரிசை கலைந்துபோகிறமட்டுக்கும் முசே துப்ளேக்சு தான் எண்பித்து அதின் பிற்பாடு வரிசை கலைந்துபோன சாடை பார்த்

துக்கொண்டு எழுந்திருந்து, உடுத்திக்கொண்டு வெளியே எப்போதுமிருக்கிற சாலையிலே வந்திருந்தார். அதின் பிற்பாடு சின்னதுரை மற்றுமுண்டான பேரனைவரும் வெளியே காத்துக் கொண்டிருந்தவர்களெல்லாம் உள்ளே போய் காண்பித்துக் கொண்டார்கள். அதின் பிற்பாடு மூசே லபோர்தோனேயும் வந்து கண்டு பேசிவிட்டுப் போனார். மூசே துப்ளேக்சுக்கும், மூசே லபோர்தோனேயுக்கும் மனதுக்குள்ளே ஒன்றுக்கொன்று போதாமல் சர்ச்சையாயிருக்கிறது. மூசே துப்ளேய்க்சு மனதிலே தனக்குக் கீழ்ப்படிந்து நடவாமல் தனக்குச் சமானமாய் ஒப்பிசியே மாரையும் வைத்துக்கொண்டு தானிருக்கிற விடத்திலே சொல்தாதுகளைக் காவலும், அப்பால் ஒப்பிசியேமாருக்குக் காவலும் மாப்பிள்ளையும் அனேகஞ் சம்மதியெல்லாம் பின்னை யும் தன்னையெண்ணாமல் நடத்தலாமாவென்று எந்தக் காரிய மும் தன் மனதுபடியே நடத்துகிறானென்று இவர் மனதிலே கோபமும் மூசே லபோர்தோனே மனதிலே நம்மைப்போலே இவன் இவனைப்போலே நாம் அவனுக்கு நடக்கிற மரியாதை யெல்லாந்தான் நடப்பித்துக் கொள்ளவேணுமென்கிறது. சண்டைக்கு எசமான் தான் தன் மனதின்படியே நடத்துகிற தேயல்லாமல் இவனைக் கேட்டா நடத்துகிறதென்று மூசே லபோர்தோனே நினைப்பு. இப்படி பரஸ்பரம் ஒருத்தருக் கொருத்தர் இருக்கிறபடியினாலே விரோதத்தின பேரிலே நடக் கிறது. இனிமேல் என்னமாய் நடக்குமோ தெரியாது.

இற்றை நாள் ஒன்பது மணிக்குத் தஞ்சாவூரிலிருந்து வந்த ரங்கோ பண்டிதர் தமக்குக் காரியம் எல்லாம் அனுகூல மாயிருக்கிறதென்றும், தம்மை வரச்சொல்லி, தஞ்சாவூரிலே யிருந்து தங்கள் தம்பிமார் காகிதம் அனுப்பினதாய் ஊருக்குப் போகிறோம் என்று சொல்லி யனுப்புவித்துக்கொண்டு போனார். இரண்டு மூன்று வருஷத்துக்கு முன்னே அன்னப் ப்செட்டி கைக்கும் இவருக்கும் ஆகாமலிருந்து அவ்விடத் திலே யிருக்கிறதற்குக் கூடாமல் உடையார்பாளையம் கருப் பூரிலிருந்து இந்தூருக்கு வந்து இரண்டு வருஷமிருந்தார். முன் ஆனி மாதம் 10 உ அன்னப்பசெட்டியைக் காவல் வைத்து அவர் தட்டுமுட்டுச் சமஸ்தமானதும் பிரதாப சிங்கு ராசா யெடுத்துப்போட்டுக்கொண்டு அவன் மைத் துனன் சுல்தான்சி அப்பா, அண்ணன் தம்பிமார் வீட்டில் பண்டிதர் முதலானபேரையும் அவர்கள் முத்தாலிக்கா எத்தனை பேருண்டோ அத்தனைபேரையும் காவல் வைத்து அவர்கள் தட்டுமுட்டுச் சமஸ்தமானதும் எடுத்துப்போட்டுக் கொண்டதுமல்லாமல், அவர்கள் கணக்கு வழக்கு இன்னம் பார்க்கிறார்கள் என்று அன்னப்பசெட்டி யிருந்த உத்தியோகம் மானோசி அப்பாவுக்குக் கொடுத்தார்கள் என்றும், தாம் வந் தால் தமக்கு ஏதாகிலும் ஒரு சுபை மற்றது கொடுக்கிறோம்

என்றும், தம்முடைய தட்டுமுட்டு வீடு வாசல் எடுத்துப் போட்டுக்கொண்டதையெல்லாம் மறுபடியும் கொடுக்கிறோமென்று ராசா குரு சேத்துசாமியும் இப்போது காற்பாரியாயிருக்கிற மானேசி அப்பாவும் சொன்னார்களென்று தன் தம்பிமார் எழுதியனுப்பினார் என்று சொன்னார்.

லக்ஷ்மண நாயக்கரும் சுங்கு முத்துராம செட்டியாரும் தங்கள் குமாஸ்தா அத்தபல்லி வேங்கட்டராம செட்டிபேரிலே வரவேண்டியதும், பின்னையும், தராக்ஷிபாலிசெட்டி பேரிலே வரவேண்டிய பின்னையும் கடன்காரர் பேரிலே வரவேண்டியதும் வாங்கிக் கொடுத்தால் தர்பார் கரசுக்கும் ராசாவுக்கும் 100-க்கு 30 விழுக்காடு வந்த பணத்திலே கொடுக்கிறோமென்று இதற்கு ஒன்பது மாதம் மீத்துவைத்து உடன்படிக்கைச் சிட்டு ரங்கோ பண்டிதருக்கும் எழுதிக் கொடுத்தார்கள். ரங்கோ பண்டிதரும் அவர்களுக்கும் எழுதிக்கொடுத்துப் போகச் சொன்னார்கள். நானும் ரங்கோ பண்டிதருடனே சொன்னது: நரசப்ப நயக்கர் குமாரன் வந்து திருக்காஞ்சியிலே ஒரு மாதமாய் வந்திருந்தவனை தஞ்சாவூருக்கு அழைத்துக்கொண்டுபோய் ஒரு சேர்வையாகிலும் பத்துப்பேருக்குக் குறிக்காரனாகிலும் ஒரு உத்தியோகம் வாங்கிக்கொடுக்கச் சொல்லச் சொன்னேன். அவரும் நல்லதென்று சொன்னார். அதன்பேரிலே நாலு நகை வெகுமானமுங் கொடுத்துப் பயணம் அனுப்புவித்தோம். அவரும் வில்லியநல்லூருக்குப் போய் அங்கே இருந்து அப்பால் போகிறதாய் அனுப்புவித்துக் கொண்டு போனார். இவர் வீட்டுக் குஞ்சு குழந்தைகள் அனைவரும் இங்கேயிருக்கிறார்கள். இனிமேல் இவர் இவ்விடத்துக்குப் போய் எழுதியனுப்புவித்த பிறகு போகிறதாய் தாம் ஒண்டியாய்ப் போனார்.

1746 ஆ ஜூலை மீ 15 உக்த அக்ஷய ஸ்ரீ ஆடி மீ 3 உ வெள்ளிக்கிழமை

இற்றை நாள் தேவனாம்பட்டணத்துச் சேதி யென்னவென்றால்: நாகப்பட்டணத்துக்குச் சமீபத்தில் பிரான்சுக் கப்பலுடனே சண்டை தொடுத்து அவ்விடம் விட்டு முறிந்து போனவன் இந்த மட்டுக்கும் வந்து சேராமற்போனபடியினாலே தேவனாம்பட்டணம் கூடலூரிலேயிருக்கிற வர்த்தகர் குடிகள், அவரவர் தட்டுமுட்டுகள், பணங் காசுகள், பெண்டுகள், குஞ்சுகள், குழந்தைகள் அனைவரையும் பறங்கிப்பேட்டைக்கு அனுப்பிவிட்டு ஆண்பிள்ளைகள் மாத்திரம் இருக்கிறார்களென்றும் தேவனாம்பட்டணத்து குவர்னதோர் மேஸ்திரி அயின என்கிறவருடைய துபாசி ஒருகண்டி ரங்கப்பநாயக்கன் தன் பெண்சாதி பிள்ளைகள் தட்டுமுட்டுகளைப் பறங்கிப்

பேட்டைக்கு அனுப்பின பிற்பாடுதான் மற்றபேரெல்லாம் அனுப்பினது என்று தேவனும்பட்டணம் கூடலூரிலே யிருக்கப்பட்ட சனங்களும் துரைகள் மற்றுமுண்டானபேரு மிருக்கிற பயம் சொல்லிமுடியாதென்றும் முன் பறங்கிப்பேட்டையிலே யிருந்து மராட்டியர் கலாபத்துக்கு வந்திருந்த வர்த்தகர் செய்தொழிற்காரரிலே ஒலாந்தாக்காரன் பறங்கிப்பேட்டைக்குப் போனபோது சிறிதுபேர் போனவர்கள்போக மற்றவர்கள் நின்றவர்கள் எல்லாம் அவ்விடத்துக்குத்தானே சாடாவாய் பறங்கிப்பேட்டைக்குக் குடியாய்ப் போய்விட்டார்கள் என்றும் கூடலூர் தேவனும்பட்டணம் பாழடைந்து இருக்கிறதென்றும் பறங்கிப்பேட்டை முன் எப்படி வருகிறதென்று சம்மதியா யிருந்ததோ அப்படி கலையா யிருக்கிறதென்றும் சென்னப் பட்டணத்திலே யிருக்கிறவர்கள் எல்லோரும் தத்தளிக்கிறுர்களென்றும் அவரவர் பெரிய மனிதர் ஆற்காடு அந்த வட்டங்களிலே வியாபார மிருக்கிறவர்கள் தங்கள் தட்டுமுட்டுகள் ஆற்காட்டுக்கு அனுப்பி வைக்கிறுர்களென்றும் மற்ற பேர்களும் எச்சரிக்கையா யிருக்கிறுர்களென்றும் இந்த ஊர்ச்சித கபுறு வந்ததாய்ச் சொன்னுர்கள். இதல்லாமல் சங்கரபாரிக்கு குமாரன் சம்புதாசு ஆற்காட்டுக்குப் போய்ச் சேர்ந்து நாலைந்து நாளாச்சுதென்றும் அவனைந்து குழந்தைகளும் போகிறவர்களா யிருக்கிறுர்களென்றும் சேதி வந்தது. இதல்லாமல் குவர்னதோர் மாசு தைரியமில்லாதவனுன படியினுலேயும் ரொம்ப அலைச்சல்படுகிறுனென்றும் கோட்டை மற்றதெல்லாம் முஸ்திப்புபண்ணுகிறுர்கள். கப்பலை துறைகிட்டப் பிடித்து அதிலே மருந்து குண்டுகள் ஏற்றுவித்துக்கொண்டிருக்கிறுர்களென்றும் துரையா யிருக்கிறவன் இடத்திலே தைரியம் போதாததினுலே பட்டணத்திலே யிருக்கிற பிரசைகள் ரொப்பவும் தத்தளிக்கிறுர்களென்றும் இப்படியாக ஊர்ச்சித சேதியெழுதி வந்தது. இதல்லாமல் பிரான்சுக்காரர் கப்பல்கள் காலி குழும்பு குடாவிலே யிருக்கிற சேதி ஒலாந்தாக்காரருடைய சலுப்பு கண்டு வந்து நாகப்பட்டணத்துக்கு கபுறு வந்து சொல்லி அந்தச் சேதி பிரான்சுக்காரரும் அறிந்து இங்கிலீசுக்காரரும் அறிந்து பிரான்சுக்காரர் தங்கள் கப்பல்கள் வருகிறதென்றும் சேதி கேட்டுச் சந்தோஷமாயிருந்தார்கள். இங்கிலீசுக்காரர் திகிலடைந்து தேவனும்பட்டணம் கோட்டையிலிருந்து மூசே பர்னேத்துடைய வெள்ளிப்பெட்டி இருப்பதும் கும்பினீர் கட்டும் ஆயிரத்துச் செலவானமும் சென்னப்பட்டணத்துக்கு யனுப்பினுர்கள். இப்போது தேவனும்பட்டணத்துக் கோட்டையிலே ஊரிலே யிருக்கிற வர்த்தகருடைய சரக்குகளைக் கட்டுப் போட்டு தேவனும்பட்டணம் கோட்டைக்குக் கொண்டு போய்ச் சேர்க்கிறுர்களாம். வெள்ளைக்காரர் அவரவர் கூடலூரிலே வண்டிப்பாளயம் தேவனும்பட்டணம் இந்தப் பிராந்தி

யங்களிலே யிருக்கிற பொது .......சேர்க்கிறார்கள் என்று ..... மனுஷர் போய்ப் பார்த்துவந்து சொன்னார்கள்.

1746 ஆ ஜுலை மீ 16 உக்கு அக்ஷய ஷு ஆடி மீ 4 உ சனிவாரம்

இற்றைநாள் காலமே சீர்மையிலிருந்து வந்து ஐந்து கப்பலிலே ஒரு கப்பல் கப்பித்தான் பேர் விளங்க நோயாயிருந்து மரணத்தையடைந்தான். அவன் கப்பலிலே அரை கொடி போட்டு ஒரு மினீத்துக்கு ஒரு பீரங்கி விழுக்காடு அவனை அடக்குகிறமட்டுக்கும் போட்டு அப்பால் ஒரு வரிசைக் கப்பல்களெல்லாருந் தீர்த்தார்கள். இன்றைய சாயங்காலம் ஐந்தரை மணிக்கு அவனை அடக்கினார்கள்.

இதனால் ஒன்பது மணிக்கு துரையவர்களுடனே பேசியிருக்கச்சே துரையவர்கள் சொன்னது: மூசே லபோர்தோனே ஒரு வித மனுஷன் செகெரேத்தில்லாதவன். பப்பியதோரென்று இவன் மசுக்கரையிலே பண்ணின அநியாயத்துக்கு அந்தவூரிலே யிருக்கிறவர்கள் சீர்மைக்கு மினிஸ்தருக்குப் பெத்திசாமெழுதிக் கொண்டதற்கு இவனை தூக்குப்போடுறதாயிருந்தது. இவன் அதிர்ஷ்ட மின்னம் சிறிது நாளிருக்கிறபடியினாலே கோந்திரோலேர் செனரால் தம்பி மூசே புல்லி என்கிறவன் காசு வாங்குகிறபடியினாலே விஸ்தாரமாய் இத்திரவியம் செலவழித்துத் தப்பித்துக்கொண்டு ஒரு ஸ்த்தாதுரு ஏழு கப்பல் கொண்டுக்கொண்டு சிறிது அருபிதேசம் பிடிக்கிறோமென்று வந்து அதுவும் பிடியாமல் கும்பினியாருக்கு இந்த ஏழு கப்பலைத் தொட்டு அனேகம் செலவு உண்டாக்கி நஷ்டம் உண்டாக்கினான். மகா மோசக்காரனென்று இப்படி அனேகவிதமாய் என்னமாய்ச் சொன்னார். அதற்கு நான் அவர் மனோரதானுசாரமாய்ச் சொல்லிக்கொண்டு வந்ததுமல்லாமல் பி புவை வெகு ஸ்தவுத்தியமாய் இந்த சமயத்திலே பட்டணத்தை நிருவாகம் பண்ணினதும் உம்முடைய கைப்பணம் இரண்டு லக்ஷம் வராகன் மட்டுக்கும் கொடுத்துப் பட்டணத்திலுண்டான சனங்களுக்கு ஒரு ஆயாசமும் தோற்றாமல் வியாபாரம் நடக்கிற நாளையிலே எப்படி நடக்குமோ அப்படி நடத்துவித்த ராணியும் முன் துரைத்தனம் பண்ணின பேர் சாடையும் அவர்கள் நிருவாகமும் இனிமேலைக்கு வரப் போகிறவர்களுக்கும் உம்முடைய சமர்த்து வராதென்று இங்கிலீசுக்காரர் கலாபம்வந்துபட்டணத்துக்கு வருகிற கப்பல்களை யெல்லாம் பிடித்துக்கொண்டதுமல்லாமல் வருகிறவாறு பண்ணைகளைத் தடைபண்ணிக்கொண்டிருந்த மகா இக்கட்டு வேளையிலே நிருவாகம்பண்ணினீரே உம்மைப்போலே நிருவாகம் இந்தியாவிலே ஒருத்தருமில்லை. இனிமேல் உம்மைப்

போலே கொடுத்தவரை கும்பினியார் சம்மதிக்கமாட்டார்கள் என்று அனேக விதமாய் ஸ்தவுத்தியமாய் வெகுநேரம் பேசியிருக்கும்போது மூசே லபோர்தோனே உபேக்ஷை பண்ணிப்போட்டு இங்கிலீசுக்காரர் கப்பலை விட்டுவிட்டானில்லாவிட்டால் அவர்கள் கப்பல் எல்லாம் பிடிபட்டுப் போமென்று இனிமேல் ......கும்பினியார் ஒப்பிசியேல் எல்லாரும் என்ன... .... ...
ஆனால் மூசே லபோர்தோனே... ... .... .... ...
யும் சொன்னார். திரவியம் சரக்குகள் விஸ்தாரமாயிருந்தபடியினாலேயும், மூன்று வராகனுக்குத் தீனி சிறுவாட்டுமனுகை யில்லாதே போனபடியினாலேயும் வந்துவிட்டேனென்று சொன்னார். அதினாலே அந்த நியாயம் ஒத்துக்கொள்ளவேண்டியதாமே. ஆனபடியினாலே போச்சுது. இனிமேல் அப்படி விட்டுவரப் போகாது. அவர்கள் கையிலே இவர்கள் சேர்த்துத் தீருகிறது. இல்லாவிட்டால், இவர்கள் கையிலே அவர்கள் சேர்த்துத் தீருகிறதென்றேயல்லாமல் வேறே நியாயம் செய்யப்போகாதென்று சொன்னார். அதற்கு நானும் அவர் மனோரதானுசாரமாய்ச் சொல்லிவந்தேன். அப்பால் சென்னப்பட்டணத்திலேயிருந்து மூன்று கப்பல் பங்காளத்துக்குத் திரவியம் ஏற்றிக்கொண்டுபோச்சுதென்று சொன்னேன். இப்போது வந்த கப்பலிலே ஒரு கப்பல் குறைவுபட்டிருக்கிறதே அந்தக் கப்பல் மேலாக பங்காளத்துக்குப் போயிற்று. அந்தக் கப்பலுக்கு இந்தக் கப்பல் மூன்றும் எதிர்க்கமாட்டாது. அவன் பிடித்துக்கொண்டு வருவான். அது தப்பிப்போக மாட்டாதென்று சொன்னார். இப்படியநேகவிதமாய்ப் பேசியிருந்தோம் இதிலே சாரமாயிருந்ததைமாத்திரம் எழுதிவித்தோம்.

1746 ஆ ஜூலை மீ 16 உக்கு அக்ஷய ஞு ஆடி மீ 4 உ சனிவாரம்.

இற்றைநாள் ராத்திரி கேட்ட சேதியினால் தேவனாம்பட்டணம் துறை வர்த்தகரவரை யழைப்பித்து அவர் தட்டுமுட்டுகள், பணங்காசுகள், குஞ்சுகுழந்தைகளை எங்கெங்கேயனுப்பவேணுமோ அந்தப்படிக்கு அனுப்புவித்துககொள்ளுங்கோளென்று நிறு உத்தரவு கொடுத்திருந்தபடிக்கு அவரவர் அனுப்பிவித்ததாய், அவரவர் போனதாய், தேவனாம்பட்டணம் கூடலூரிலேயிருந்து வந்த வீராசெட்டி தம்பி சொன்னதாய் குருவப்பசெட்டி சொன்னான். காலத்தாலே இறந்துபோன சிர்மைக்கப்பல் கப்பித்தானை சாயங்காலம் அடக்கம் செய்யும்போது இரு நூறு சொல்தாதுகள் வரிசைவைத்துக் கொண்டு ராசாவுடைய கொடி, தம்பூர், புல்லாங்குழலுடனே மூசே லபோர்தோனே கப்பல் கப்பித்தான்மார் சமஸ்தமான பேரும் போயிருந்து பிரேதத்தையடக்கம் செய்கிறமட்டுக்கும் கூட இந்தச் சம்பிரமத்துடனே புதைக்கும்போது மூன்று

வேட்டு சொல்தாதுகள் துப்பாக்கிச் சுட்டதின் பிற்பாடு கப்பல்கள் எல்லாம் இருபத்தொரு வேட்டு விழுக்காடு தீர்ந்தார்கள். கோட்டையிலேயும் ஏழு பீரங்கி போட்டார்கள்.

1746 ஆ ஜூலை மீ 17 உக்கு அக்ஷய ஞு ஆடி மீ 5 உ ஆதிவாரம் நாள்

காலத்தாலே ராமகிருஷ்ணப்பிள்ளை என்கிறவர் சிவகெங்கை நாலுகோட்டுடையாத தேவன் பிரதானியாயிருக்கிறவர் நந்தகோபால் வம்சம் அவரண்டையிலிருந்து ராமலிங்கய்யனென்கிறவனும் தஞ்சாவூர் காத்தவராயபிள்ளை யண்டையிலிருந்துவந்த பிராமணனொருத்தன் அவன் பேர் ... இவர்கள் இராமகிருஷ்ணப்பிள்ளை குமாரனுக்குப் பெண் கேட்கிற சாடையாகவும் பிரான்சுக்காரருடைய சினேகம் தங்கள் சமஸ்தானத்துக்கு வேணுமென்றும், இதற்குச் சுந்திரபாண்டியன் பட்டணமாவது தொண்டியாவது கொடுக்கிறோமென்றும், இது கிரயத்துக்கு வேணுமானாலும், குத்தகையாகவேணுமானாலும், அல்லது பத்ரிக்கு இடங்கொடுத்துத் தீர்வை, மற்றது சலக்கரணையாய்க் கவுல் கொடுக்கிறோமென்றாகிலும் இப்படி யெந்த விதம் வேணுமானால் அந்தவிதம் பிரான்சுக்காரருக்குக் கொடுக்கிறோம் என்றும், தங்களுக்குச் சண்டை சாரி வந்தால் மருந்து குண்டுகள் கொடுத்து மற்றதாயிருந்தால் சரியென்றும், நம்முடைய வர்த்தகம் சமஸ்தானத்தில் நடக்கவும் அவ்விடத்தில் நம்முடைய மனுஷரிருக்கவும், தர்மத்துக்கு இரண்டாயிரம் பொன்னுக்குக் கிராமம் விடுகிறோமென்றும், தமக்கும் நமக்கும் பந்துத்துவம் சினேகமும் விருத்தியாக நடக்கவேணுமென்றும் ஓலையும் எழுதி மேலே எழுதப்பட்ட இராமலிங்கய்யனையும் அனுப்பினார். அவர்கள் வந்து நாலு நாளாச்சுது. அவர்கள் வாக்குமூலமும் கேட்டு ஓலையும் இராமகிருஷ்ணப்பிள்ளை அவர்கள் பேருக்கும், அதற்குத் தக்கதாய் ஓலையும் எழுதிக்கொடுத்துத் தஞ்சாவூர் காத்தவராயப்பிள்ளைக்கும், இராமகிருஷ்ணப்பிள்ளை அவர்களுக்கும் இன்னபடி எழுதினோமென்று ஓலையும் எழுதிக் கொடுத்து இராமலிங்கய்யனுடனே சொல்லி தக்க சேதியும் சொல்லி, காத்தவராயப்பிள்ளைக்கும் சொல்லத்தக்க சேதியும் அவர் பிராமணனுக்குச் சொல்லி, இராமலிங்கய்யனுக்கு இரண்டு கிசம் மஞ்சள் சகலாத்து வெகுமானமும் கொடுத்துப் பயணம் அனுப்புவித்தோம். அவர்களும் இற்றை நாள் அனுப்புவித்துக்கொண்டு பயணம் சாகிப்போனார்கள்......

*1746* ஆ ஜுலை மீ 18 உக்கு அக்ஷய ஸ்ரீ ஆனி மீ 6வ சோமவாரம்

இற்றை நாள காலத்தாலே சின்னதுரையாயிருக்கிற மூசே லேது பெண்சாதி ஏழு மணிக்கு நோயாளிக்கிடங்கிலே மரணமடைந்தவளை வீட்டுக்கு எடுத்துவந்து அப்புறம் அவர்கள் சாதி ஆசாரத்தின்படிக்கு வாசற்படியெல்லாம் கறுப்புக் கட்டி பிரேதத்தின் பேரிலே கறுப்பு போத்திச்சுற்றி மெழுகுதிரி கொளுத்தி வைத்தார்கள். அப்பால் பெரிய துரை பெண்சாதி முதலாகிய சமஸ்தமான பேரும் வெள்ளைக்காரரும் போய் விசாரித்து வந்தார்கள். அப்பால் சாயங்காலம் எடுக்கும்போது பெரிய துரை மூசே லபோர்தோனே சமஸ்தமான பேரும் வந்தார்கள். நூறு சொல்தாதுகள் இரண்டு பாரிசமும் வரிசையாக நின்றார்கள். மூன்று மணி துவக்கி இரண்டு மினிட்டுக்கு ஒவ்வொரு பீரங்கி விழுக்காடு கரையிலேயும், கடலின் பேரிலேயும், கொமாந்தான் கப்பலிலேயும் அரை கொடி போட்டுச் சுட்டுவந்தார்கள். அப்பால் நாலு கோன்சேல்காரர் பிரேதத்தை யெடுத்துப் போகிற பெட்டியைக் கறுப்புப் பட்டுச் சுருட்டிலே கிழித்த துண்டு மார்பிலே பட்டை போலே முடிந்து போட்டுக்கொண்டு தொட்டுக்கொண்டு போனார்கள். அந்தப் பெட்டியைச் சொல்தாதுகள் எடுத்துக்கொண்டு போனார்கள். பிறகே குவர்னதோர் முதலாகிய சமஸ்தமான வெள்ளைக்காரரும் வெள்ளைக்காரிகளும் பிரேதத்தின் பிறகே போனார்கள். பிறகே புருஷனாகிய இருக்கிற மூசே லேது மாத்திரம் கூடப் போகவில்லை. பெண்கள் போகவில்லை. குமாரன் போனான். இந்தப்படி வீட்டிலே யிருந்து கப்சுகோவில் மட்டுக்கும் கூடப்போய் அவ்விடத்திலே செய்யவேண்டிய சடங்கெல்லாஞ் செய்து அடக்கின பிற்பாடு துப்பாக்கி இரண்டு வரிசை தீர்ந்த பிற்பாடு ஒவ்வொரு துப்பாக்கியாய்ச் சுட்டார்கள் அப்பால் கோட்டையிலே பதினைந்து பீரங்கியும், மூசே லபோர்தோனே இஸ்தாதுரு எட்டுக்கப்பலும் ஏக வேளையிலே பதினைந்து பீரங்கி விழுக்காடு சுட்டார்கள். முன் பிரேதத்தின் பிறகே போனவர்கள் குவர்னதோர் முதலாகிய சமஸ்தமான பேரும் மறுபடி வரும்போது பல்லக்கின் பேரிலே அவரவர் ஏறிக்கொண்டு வந்து மூசே லேதுவுக்கு உபசாரம் சொல்லிவிட்டு அவரவர் வீட்டுக்குப் போனார்கள். நாங்களும் அந்தப்படிக்குப் போய்க் காண்பித்துக்கொண்டு வீட்டுக்குப் போனோம். ஆனாலிவளைக் கலியாணம்பண்ணின நாள் முதற்கொண்டு புருஷனுக்குச் சுகமில்லை. இவளுடைய போராட்டம் ஒருவரும் இவள் வீட்டுக்கு வரப்போகாது. ஒருவர் வீட்டுக்கும் இவள் போகிறதில்லை. புருஷனையும் போகவிடுகிறதில்லை. பெற்றப்பிள்ளைகள் பெண்கள் முதலாக முகந்துக்குமுன்னே வரப்போகாது. இவளும் ஒரு

வித பயித்தியம் போலே ஊர் நடத்தை ஒருவிதமும், இவள் நடத்தை ஒருவிதமுமாயிருக்கும். புருஷனும் இவள் நடத்தைக் குப் பயப்பட்டு இவள் மனதின்படிக்கு நடந்தால் அப்படியும் இவர்பேரிலே குறையாய் கோபமாய் சிறமாறு பண்ணுகிறதும் ஒரு வேளை யிழுத்துவிடுகிறதும் அடிக்கிறதும்கூட வுண்டா யிருக்கும். அதுகூட லச்சைக்குப் பயப்பட்டுச் சகித்துக்கொண் டிருக்கிற நாளையிலே ஏழெட்டு வருஷத்துக்கு முன்பாக அந் தப்பயித்தியம் ரொம்ப உபரித்துப் புருஷனைக் கீழே தள்ளி மினியைப் பிடித்துக் கடித்தும் வெளியிலேவந்து இந்தச் சேதி மூசே தும்மா குவர்னதோர் அவர்களுக்குச் சொல்லியனுப்பின மாத்திரத்திலே அதற்கேற்ற பேரை யனுப்பி ஒஸ்பித்தாலிலே கொண்டுபோய் ஒரு வீட்டிலே வைத்து அன்று முதலின்றைய வரைக்குமிருந்து சரீரத்தைக்கூட அவ்விடத்திலேதானே விட்டு விட்டனள்.

இற்றைநாள் ஆற்காட்டிலேயிருந்து ஒட்டைமேலே நபாபு காகிதம் வந்தது. அந்தக் காகிதச் சேதி யென்னவென்றால்: ரூபா முத்திரை கொடுக்கும்போது ஆலம்புரவி டங்காசாலைக் குக் கப்பலொன்றுக்கு ஐம்பதினாயிரம் வராகனுக்கு வெள்ளி கொடுக்க உடன்படிக்கையாச்சுதே, இப்பவும் உங்களுக்குச் சீர்மைக் கப்பல் வந்ததென்று கபுறு கேட்டு மிகுகியும் சந் தோஷமாச்சுது இப்பவும் கப்பலுக்கு ஐம்பதினாயிரம் வரா கனுக்கு வெள்ளி கொடுக்கவேணடியபடிக்கு அனுப்பவும், அதற்குள்ள வராகனனுப்பிவிடுகிறோம் என்று எழுதினார், இந்தச் சேதி துரையவர்களுக்குப் படித்துச் சொன்னதற்கு அவர் பதில் காகித மெழுதியனுப்பச் சொன்னேன். அந்த வய ணம் முன் கப்பலுக்கு ஐம்பதினாயிரம் வராகனுக்கு வெள்ளி ஏழு வராகன் இரண்டு பணம் விழுக்காடு கொடுத்து வந்தது மெய்தான். அது சொறுகாறனுக்கும் எங்களுக்கும் வெகு சினேகமாய் அவர்கள் காரியத்திலே வெகுசாய்க் கரித்து நடந் துகொண்டு வந்தபடியினாலே அந்தப் படிக்குக் கொடுத்து வந் தோம். அவர் விழுந்துபோய்விட்ட பிறகு கொடுத்ததில்லை. இப்பவும் எங்களுக்குக் கப்பலிலே கொஞ்சம் வெள்ளி வந்தது. அந்த வெள்ளி செலவு நிமித்தியமாய் டங்காசாலையிலே ரூபாய் போட்டுத் தீர்த்துப்போட்டோம். பிறகாலே ஏழு கப்பல் வரு கிறது. அதிலே வேணுமானால் தங்கள் நிமித்தியம் வந்த திலே ஏழு வராகன் இரண்டு பணம் விலைப்படிக்குக் கொடுக்கிறோம். கப்பல் வந்தவுடனே அந்தச் சேதி எழுதியனுப்புகிறோம் என்று பதில் காகித மெழுதியனுப்பச் சொன்னார். அந்தப்படிக்குக் காகிதம் எழுதியனுப்பினார்கள். விலை ஏழு வராகன் இரண்டு பணமாக எழுதியிருக்கிறபடியி னாலே இப்போது வெள்ளி இருக்கிற சவுக்கை ஏழு வராகனுக்கு ஒரு பணம் குறைவாக இருக்கிறபடியினாலே காகிதம் பார்த்த

மாத்திரத்திலே நபாபு மறுபடி வெள்ளிப்பேச்சு எடாப்போலே காண்கிறது. அது ஏனென்றால்: முன் உடன்படிக்கை வெள்ளி யேறினாலும் குறைந்தாலும் ஏழு வராகன் இரண்டு பணம் என்று மோரா கடாவி யிருக்கிறபடியினாலே அவர்கள் மறுபடி இந்தச்சேதி எழுதார்கள் என்று தோற்றுகிறது ...

உசேன் சாயபு மருமகன் அசரத்து சாயபு என்கிறவன் துரை சொந்தத்துக்கு உசேன்சாயபு பதினாயிரம் வராகன் கடன் கொடுத்திருக்கிற சம்மதி வாங்கிக்கொள்ளுகிறதற்கு வருகிறேனென்று எழுதியனுப்பினான் ... ... ...

1746 ஆ ஜூலை மீ 19உ க்கு அக்ஷய ஞு ஆடி மீ 7உ அங்காரகவாரம்

இற்றை நாள் பின்னையொரு அதிசயமுமில்லை. நான் காலத்தாலே மூசே லப்பார்தோனே சிறிது சரக்குநிமித்தியம் கண்டு பேசவேணுமென்று வரச் சொன்னபடியினாலே அவன் வீட்டுக்குப்போய் அங்கேயிருந்து துரைவீட்டுக்கு வந்தேன். அவருக்குச் சலாம்பண்ணி பாக்குக் கிடங்கிலே வந்திருந்து வீட்டுக்குப் போனேன். ஆனாலிற்றைநாள் மத்தியானம் குவர்னதோர் பெண்சாதிக்கு மூசே லபோர்தோனே மத்தியானம் விருந்து பண்ணிவித்து, கப்பலிலே யெல்லாம் ஏக வேளையிலே இருபத்தொரு பீரங்கி சுட்டார்கள்.

1746 ஆ ஜூலை மீ 20உக்கு அக்ஷய ஞு ஆடி மீ 8உ புதவாரம்

இற்றைநாள் கனகராயமுதலியார் தம்பி தானப்பமுதலி வரவில்லை என்றும் மதனாந்தபண்டிதர் வந்துசொன்னார். என்ன நிமித்தியம் வரவில்லை. சரீரம் லகுவில்லையோவென்று கேட்டேன். அதற்கு அவர் சொன்னது: அவர் மனதிலே உத்தியோகத்தைக் கொடாமல் கூலிக்காரன் கதையாய் முடித்துவிடுகிறார் என்று வேதனைப்பட்டு வரவில்லை என்று சொன்னார். அதற்கு நான் சொன்னது: அதற்கென்ன, அவர்கள் உத்தியோகம் அவர் கைவிட்டுப்போகிறதா, ஒரு நாள் ஏறக்குறைய நியமிக்கப்படுதென்று சொன்னேன். அதற்கு அவரப்படி இதுவரைக்கும் தோற்றியிருந்தது. இப்போது அப்படி தோற்றாதபடியினாலேதான் வரக்கூடாதென்று சொல்லப்போகாதென்று சரீரம் லகுவில்லையென்று ஒரு மார்க்கமாய்ச் சொன்னது. அதற்கு நானிருந்துகொண்டு, மெய்தான், திரிகிறவனுக்காகிலும் உற்சாகமாயிருக்கும், துரையப்படி செய்யவேண்டியதே சரியென்று சொன்னேன். அதன் பிறகு மீரான்சாயபு காகிதம்

வந்து ஐந்தாறு நாள் ஆச்சுது அதற்குத் ஜாதுங்காணோம், பிராதுங்காணோம் என்று சொல்லி, சின்ன முதலியார் உம்மை யழைத்துக்கொண்டுபோகச் சொன்னார் என்று சொன்னார். நம்முடைய வேலையா அது, அவருடைய வேலை. துரை சொல்லுகிறது பிடிபடாதுபோனால், துரை யென்னை அழைத்துத் தெரியப்படச்சொல்லச் சொன்னால், சொல்லுவேன். அதுவேயல்லாமல், மற்றப்படி என்னுடைய வேலையா, போமென்று சொன்னேன். அந்த மட்டுக்கும் மகனுந்த பண்டிதரும் அவசரம் கிருஷ்ணய்யனும் துரைவிட்டே போனார்கள். அதன்பிறகு துரை என்னை யழைத்து, நான் போனவுடனே தேவனாம்பட்டணம் துறை துபாசிக்கு உன் காகித மெழுதியனுப்பு என்று அவர்கள் துரைக்கு சிகப்பு சாராயம் வேணுமாவென்று கேட்டு எழுதியனுப்பச்சொல்லி எழுதியனுப்பு என்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். காடா நாலு கொடுத்து, காங்குசாயம் நன்றாய்ப் போடுவிக்கச் சொல்லச் சொன்னார். நல்லதென்று சொல்லி, நாலு காடாவும் வாங்கிக்கொண்டேன். அப்பால் நாகப்பட்டணம் அந்த வட்டங்களிலே யிருந்து ஏதாகிலும் சேதி வந்ததுண்டாவென்று கேட்டார். இங்கிலீசுக்காரர் கப்பல் திருக்கணாமலையிலே யிருக்கிறதென்றும், அவ்விடத்திலே கப்பல்கள் வேலை செய்வித்துத் தயார்பண்ணிக்கொள்ளுகிறதென்றும், ஒலாந்தாக்காரர் நாகப்பட்டணத்தார், மற்றதுபண்ணி அமாவுக் கயிறுகள், வெண்பாய்கள் முதலான கப்பல் சாமான்கள்கொடுத்து உதவி ஒத்தாசைபண்ணினார்கள் என்றும், சிறிது சாயக்காரரை நாகப்பட்டணத்திலே யிறக்கி விட்டதாய்ச் சொல்லுகிறார்கள். மெய்யென்றும் பொய்யென்றும் தெரியாதென்றும் சொன்னதற்கு மெய்தானிந்தச் சேதி யென்று சொன்னார். அப்பால் சென்னப்பட்டணம் சேதியானால் பட்டணத்துக்கு வடவண்டையிலே யிருக்கிற தென்னை மரங்கள் தோட்டங்களெல்லாம் வெட்டுகிறதும் அவர்கள் இருக்கிற சாக்கிரதையும் பயமும் இதுகள் சொன்னதற்கு, மெய்தானென்று ஒத்துக்கொண்டார். அப்பால் உசேன சாயபுக்கு நாம் பதினாயிரம் வராகன் கொடுக்கவேணுமே அவர்ககள் மருமகன் சத்து சாயபு வந்தால் வட்டிப் பேச்சுப் பறிகரிக்கத் தக்கதாக எப்படி பார்க்க வேணுமோ அப்படிச் செய்யென்று சொன்னார். நல்லது, அப்படி பேசிப் பார்த்து அதிலே நடக்கிற உத்தரவு சொல்லுகிறேனென்று சொன்னேன். இதிலே நாலத்து ரெண்டுபேர் வெள்ளைக்காரர் கப்பல் கப்பித்தான்மார்கள் வந்தார்கள் அதிலே நான் அனுப்புவித்துக் கொண்டு வந்தேன். தேவனாம்பட்டணம் ரங்கப்ப நாயக்கனுக்குக் காகித மெழுதி யனுப்பினேன். நொல்ல ரங்கனை யழைத்து நாலு காடாவும் தீர்த்துவரச் சொன்னேன். நல்ல சாயமாய்ப் போட்டு வரச் சொன்னேன்.

இற்றைநாள் பங்காள அரம்சாம் மரிய சோசேப்பு என்கிற கப்பலை பங்காளத்துக்கு ரவானைப்பண்ணியனுப்பினார்கள். சன்னடக்கு முஸ்திப்பாயிருக்கிற எட்டுக் கப்பலிலே ஒரு கப்பலிலே தீனி, தண்ணீர், சன்னட முஸ்திப்புகள், சாமான்கள் எல்லாம் ஏற்றிவந்த கப்பலை, அப்படி பறங்கிப்பேட்டை யிந்த அத்தற்குள்ளே திரிந்து ஏதாகிலும் சின்ன கப்பல்கள் சுலுப்புகள் பாறுபடகுகள் இங்கிலீசுக்காரருடையதானாலும் அல்லது அவர்களும் தேவனாம்பட்டணம், கூடலூர், சென்னப்பட்டணம் போகிறதாயிருந்தாலும் புதுச்சேரிக்குக் கொண்டுவந்து சேர்க்கச்சொல்லி உத்தாரங் கொடுத்து அனுப்பினார்கள். அந்தக் கப்பலுக்கு கப்பித்தான் மூசே லகத்தினே என்று சொன்னார்கள். இதல்லாமல் பின்னையென்ன உத்தாரங்கொடுத்தனுப்பினார்களா தெரியாது, வெளிக்குச் சொன்ன சேதியிது. அப்பால் அந்தரங்கம் தெரியாது. தெரிந்த மட்டுக்கும் எழுதினேன் ......

**1746 ஆ ஜூலை மீ 21 உ க்த அக்ஷய ஸு ஆடி மூ 9 உ வியாழக்கிழமை.**

இற்றைநாள் காலத்தாலே எட்டுமணிக்கு துரையவர்கள் வீட்டுக்குப் போனேன். அவரும் மூசே லம்போர்தோனேயும் பேசியிருந்தார்கள். அப்போது காண்பித்துக்கொண்டேன். அப்பால் கோன்சேல்காரர் எல்லாரும் வந்தார்கள். கோன்சேல் கூடினார்கள். கோன்சேலிலே மூசே லம்போர்தோனே கூட இருந்தார். அப்பால் அரை நாழிகை மட்டுக்கும் கூட இருந்து சிறிது பேச்சுகள் பேசிக்கொண்டு அவர் மாத்திரம் வெளியே புறப்பட்டுப்போனார். மற்றப்படி துரையும் மற்ற கோன்சேல்காரரும் கூடியிருந்தார்கள். என்ன நடந்ததோ, என்ன யோசனையோ தெரியாது. அப்பால், பாக்குக் கிடங்கிற்கு வரும்போது மதனாந்த பண்டிதரிருந்துகொண்டு மீர்சாயபு முதலாகிய பெரிய மனுஷருடைய காகிதங்கள் வந்திருக்கிறதே அதற்கு உத்தரவு பிறக்கவில்லையா என்று கேட்டார். சின்னமுதலியார், என்ன இன்றைக்கும் வரவில்லையோ என்று கேட்டேன். அவர் மனது பார்த்தால் வருகிறதாய்க் காணவில்லை. உத்தியோகங் கொடாமல் இழுத்துவிடுகிற சாடையாயிருக்கிறதென்கிற வேசடையினாலே வரவில்லை ஏற்பட்டாலேயல்லால் வருகிறதாகக் காணவில்லை. இப்போதிருக்கிற சாடை, அப்படியிருக்கிறதல்லவென்று பிரபு அழைத்தனுப்பினாலும் ஐந்தாறு நாள் மட்டுக்கும் இடமுண்டாயிருக்கும்போலே யிருக்கிறது என்று சொன்னார். அப்படியா என்று சொன்னேன். அதன் பிறகு நீங்களாகிலும் ஒரு பேச்சு காகிதங்களுக்கு உத்தரவு எழுதவேணுமே என்று சொல்லப்போகாதோவென்று கேட்டார். அது என் வேலையா என்று சொல்லி, பாக்குக் கிடங்குக்கு வந்துவிட்டேன்.

மதனாந்த பண்டிதர் தாற்பரியமென்னவென்றால், சின்ன முதலியார் பெரிய துபாசித்தனம் பண்ணினால் தன் பேச்சு நன்றாய் நடக்கும். பின்னை யாராகிலுமானால் தன்பாரிசுக் காகிதம் உத்தரவு கேட்டுக்கொண்டு அப்பாலே இருக்கச் சொல்லுவார்கள். எழுதவேணுமானால் அந்தப்படிக்குத்தானிவரானால் பிரபுவினுடைய நோக்கம்கூட இன்னதென்று தெரியாதே பேசவேண்டிய பேச்சு மின்னதென்றும் இதற்கு உத்தரவு இன்னதெழுதவேணுமென்கிற சாடையும் தெரியாதே. அதினாலே தம்மைத் தழுவிக் கொண்டு திரிந்தால் வருகிற பேச்சு மூச்செல்லாம் தன் மார்பத்திலே நடக்கும். அந்தந்தக் கார்யம் தக்கதாய் எவ்வளவாகிலும் பற்றலாமென்கிறதும் மற்றப்பேச்சு மேல்வட்டமாய் நடக்குமென்கிறதினாலேயும் சின்னமுதலியாரிருக்க வேணும் என்கிறதேயல்லாமல் பின்னை யொருத்தர் பெரிய துபாசித்தனத்துக்கு வருகிறது சம்மதியில்லை. மதனாந்த பண்டிதர் சுபாவமும் சின்னமுதலியார் சுபாவமும் ஒரு சாடையெப்படியென்றால், இவரும் ஒரு காசுக்கும் பீ தின்பார். அவரும் அப்படித்தான். இப்படி அனேக திர்ஷ்டாந்தரங்களுண்டு. அதுகளெல்லாம் வெளியாய் எழுதலாம். ஆருமறியாத காரியமானால், பட்டணத்திலுண்டான சிறுபிள்ளைகள் கூட அறிந்திருக்குமென்றால் அப்பால் அதை விஸ்தரித்து எழுதத்தக்கதில்லையே. விவேகிகளாயிருக்கிறவர்களிதிலே தெரிந்துகொள்ளலாம். இதல்லாமல் வெறுவாயை மெல்லுகிறவனுக்குப் பிடி அவல் அகப்பட்டால் பொழுது விடிந்தாலும் மெல்லுவானென்கிற கதையாய் கனகராய முதலியார் நாளையிலே இவர் காரியத்துக்கு மாத்திரம் இவர் பார்க்கிற போது வைக்கல்கட்டு, கத்திரிக்காய்கூட வாங்கினவர். சின்ன முதலியாரிடத்திலே சகல காரியத்துக்கும் மந்திரியாயிருந்தால் எப்படி நடத்துவாரோ தெரிந்துகொள்ளவும். அப்பால் நான் விஸ்தரித்து எழுதவேண்டியதென்ன இருக்கிறது. சின்ன முதலி நினைப்பு இப்படியிருந்தால், இரண்டிலே ஒருகாரியம் ஏற்படவேணுமென்கிற நினைப்பினாலே வீட்டிலே இருக்கிறான். சுவாமியினுடைய சித்தம் எப்படியோ, அறியவேண்டியது. ... ... ... ...

இற்றைநாள் ராத்திரி மூசே லபோர்தோனேக்கு: துரை பெண்சாதி விருந்துபண்ணிவித்து ஆடல் பாடல்கூட நடத்துகிறாளென்றும் சொன்னார்கள். முன் குரோதன ௵ மார்கழி மீ 25உ கும்பினீர் கப்பல் மரிய சேரத்தருது என்கிற பேருடையது. அந்தக் கப்பல் இந்தத் துறையிதுஅல்லா. மறுபேர் வைத்துத் துலுக்கக் கொடிபோட்டு, பறங்கிப்பேட்டை முதல் லிபேக்கு தெண்பித்து ஆலம்புரவித் துறையிலே போய் வைத்தப்பிடித்து உப்பு ஏற்ற வந்ததென்று எண்பித்து, கொஞ்ச

முப்பும் வாங்கி ஏற்றிக்கொண்டு சலாம்பண்ணிக்கொண்டிருந்தால் அதின்பேரில் நாமும் எப்போது எழுதியனுப்புகிறோமோ அப்போது வரலாமென்று மதுக்குமுன்னே யிந்தக் கப்பலுக்கு கப்பித்தான் முசே கோசாரா என்கிறவனிருந்தான். அவனை மாலும்யாய் வைத்து நகோதா ஒரு சோனகனைப் போட்டு அனுப்பச்சொல்லச் சொன்னர். அந்தப்படிக்குப் பறங்கிப்பேட்டையிலிருந்து வந்திருந்த காசிலேலவ்வை மரைக்காயர் என்கிறவனை துரைகிட்டக்கொண்டுபோய்விட்டு, அவருத்தாரம் வாங்கிக்கொடுத்து, கப்பலுக்குக் கீத்துரு மீராமதத்து என்றுபேரும் கொடுத்து, கப்பலை ஆலம்புரவிக்கு அனுப்புவித்தது.

இற்றைநாள் ஆலம்புரவியிலிருந்து உப்பு ஏற்றிக்கொண்டு இவ்விடத்துக்கு நாளது தேதி வந்து சேர்ந்தது. இந்தக் கப்பல் ஆலம்புரவிக்குப் போய் சேர்ந்தபிறகு ஒரு பாய்மர சுலுப்பு இமாம்க்குசு என்று பேரிட்டுக்கொண்டு அதுவும் அவ்விடத்திலேதானே போயிருந்தது அதற்குக் கப்பித்தான முசே கோசாரா தம்பி முசே கோசரா என்கிறவன். அந்த சுலுப்பு ஒரு நாள் முந்திவந்து சேர்ந்து இந்தச்சேதி துரையவர்களுக்குக் கபுறு சொன்னோம்.... ... ... ... ... ...

1746 ஆ சூலை மீ 24 உக்ஷ அக்ஷய ஞு ஆடி மீ 10 உ சுக்கிரவாரம்,

இற்றைநாள் நடந்தசேதி யென்னவென்றால்: மயிலாப்பூரிலிருந்து முத்துப்பேட்டை, அதிராம்பட்டணம், அந்த வட்டத்துக்குப் போகிறது இந்தத் துறைக்கு நேராய்ப் போகையிலே ஒரு வத்தல்காரன் போய் அந்த இரண்டு சம்பான்காரனையும் பிடித்துக்கொண்டு வந்தார்கள். அந்தச் சம்பான்களுக்கு எசமானனாக வந்த இரண்டு கண்டலையும் கரையிலேயிறக்கிவந்து துரை விட்டண்டையிலே வைத்திருந்தார்கள். அவர்களை அழைப்பித்துக் கேட்கிறது பகலைக்கு மேலாக இரண்டரை மணிக்கு, துரை அழைப்பித்து அவர்களை அவர்கள் வாக்குமூலம் எல்லாம் கேட்டுச் சொல்லுகிறதிலே அவர்கள் வாரினமம் பார்க்கிறதிலேயும் அவர்கள் ஓலைகள் பார்க்கிறதிலேயும் இங்கிலீசுக்காரர் உடைமையல்ல என்கிறதும், சென்னப்பட்டணத்திலிருந்து புறப்பட்டதல்ல என்கிறதும் சாடை தோற்றப்பட்டபடிக்குத் துரையுடனே சொன்னமட்டுக்கும் இதிலே விசேஷத்துப் பின்னை யொன்றுமில்லாதபடியினாலேயும், இரண்டு சம்பானிலேயும் கூட ஐம்பது அறுபது வராகன் நூறு வராகன் தட்டுமுட்டுக்கு இல்லாததினாலேயும் இதிலே ஒரு சம்பானிலே ஏற்றியிருக்கிற புடவை தட்டுமுட்டு நம்முடைய ஆலம்புரவியிலேயிருக்கிற கப்பல் நகோதா காசிலேலவ்வை மரைக்காயனது

என்று அவன் ஆலம்புரவியிலிருந்து ஒரு பறங்கி யெழுத்துக்
காகிதம் ஒன்று எழுதியனுப்பினபடியினாலே அந்தக் காகிதத்
தைப் பார்த்த பிற்பாடு இதிலே காரியமில்லையென்று துரைய
வர்கள் மூசே லம்பார்தோனைக்கூட என்னைப் போய்ச் சொல்லி
விட்டுவிடச் சொல்லச் சொன்னார். அந்தப்படிக்கு நான்
போய்ச் சொன்னமாத்திரத்திலே அவன் தன் கப்பல் ஒப்பிசி
யேல்மாருக்கு விட்டுவிடச் சொல்லிக் காகித மெழுதிக்
கொடுத்தார். அந்த இரண்டு தோணிக்காரர் கையிலேயும்
கொடுத்து அவர்களைப் போகச் சொல்லிச் சொன்னோம். அவர்
கள் பயணமாய்ப் போய்விட்டார்கள். அப்பாலந்தக்கபுறவந்து
துரைக்குச் சொன்னேன். அதிலே தேவனாம்பட்டணம் துரை
துபாசிக்குஅவர்கள் துரைக்கு, செகப்பு சாராயம் வேண்டியிருந்
தாலனுப்புவிக்கிறோமென்று எழுதியனுப்பின காகிதத்துக்கு மறு
உத்தரம் அவர்கள் துரை சொன்னதாய் மறு காகிதம் வந்த
தைச் சொன்ன வயணம்: துரையவர்களுக்கும் அவர் பமிலுக்
கும் தம்முடைய சலாம் சொல்லச் சொல்லி, இந்த வேளைக்கு
இருக்கிறது இனிமேல் தேவையானால் அப்படியே எழுதி
யனுப்பியழைத்துக்கொள்ளுகிறோம் என்று எழுதிவந்ததாய்ச்
சொன்னேன். நல்லதென்று சொன்னார் அதின்பேரிலே துரை
சொன்னது: எனக்குக் கும்பினீர்பேரிலே பணம் வரவேண்டி
யிருக்கிறது. அதற்கு இங்கிலீசு சட்டம் முப்பது நாற்பது
கட்டு கும்பினிரிலேயிருக்கிறதே அதையும் இப்போது கப்ப
லிலே தெமிபென் என்கிற மட்ட சகலாத்து நூறு கட்டும்
வந்திருக்கிறது. அதையும் நான் எடுத்துக்கொள்ளுகிறேன்.
அதை விற்றுக்கொடுக்கவேணும் என்று சொன்னார். நல்லது
என்று சொன்னேன். மட்ட கட்டு என்னவிலையாய் விற்றார்
கள். லேந்திரேன் என்ன விலையாய் விற்றார்கள் என்று
கேட்டார்கள். முன்னே விற்றபோது மோக்கா சட்டனுக்
கும் மட்டத்துக்கும் கொஞ்சம் ஏறக்குறைய விற்றது
என்று சொன்னேன். ஆனால் மோக்கா சட்டம் கட்டுக்கு
என்ன ஆதாயம். கட்டுக்குப் பதினைந்தும் இருபதும் ஆதாய
மாய் விற்றார்கள். வேளைக்குத் தக்கனாப்போலேயிருக்கும். சில்
லரையாய் விற்றால் முப்பது மட்டுக்கும் விழும்படியாமென்று
சொன்னேன். சில்லரையிலே விற்கிறது இல்லை. வகுப்பாய்
விற்கிறதேயல்லாமல் சில்லரையிலே விற்கப்போகாதென்று
இங்கிலீசு எப்படியென்று கேட்டார். சென்னப்பட்டணத்திலே
கொள்விலை கட்டு 1 க்கு ஆறு ரோலுக்கு மூன்று சிப்பத்துக்கு
நாற்பத்தைந்தரை விழுக்காடு தொண்ணூற்றியொன்று வரா
கன் கிரயம நூற்றெட்டோ நூற்றிப்பனிரெண்டோ என்று
சொன்னேன். நான் கொள்ளுகிறேன் என்று அபத்தம் சொல்
லாதே. உண்டான விலை விற்கிறபடிக்குச் சொல்லு. நீங்கள்
கொண்டுபோகிற ஆதாயம் நான் கொண்டுபோகப் போகாதா

என்று கேட்டார். இதென்ன, ஒரு வேளையைப்போலேயிருக்குமோ. அந்தந்த வேளைக்குக் கிராக்கிக்குத் தக்கதாக விலை என்று சொன்னதற்கு இப்போதிருக்கிற விலையை எழுதியனுப்பித் தெரிந்து சொல்லென்று சொன்னார். நல்லதென்று சொல்லிவந்தேன். இதிலே காசிலேலலவ்வை மரைக்காயர் கப்பலிலே யிருந்து இறங்கிவந்தேன். இதிலே அவனைப் பேட்டி பண்ணிவித்ததென்று அவனைக் கண்டமாத்திரத்திலே ஒரு சம்பானிலே உன்னுடையது ஏதாகிலும் தட்டு முட்டு ஏற்றினையா, மெய்தானென்று சொன்னான். அதின்பேரிலே ஆலம்பரவிக்குப் போனபிறகு கப்பலுக்கும் சுலுப்புக்கும் சென்ற செலவு பிராஞ்செழுத்திலே எழுதிவந்து கொடு என்று சொன்னார். நல்லதென்று சொல்லி வந்தேன் ... ... ...

இற்றைநாள் பகலைக்கு மேலாக மதனாந்த பண்டிதன் ஒரு விசித்திரம் பண்ணினான். அதென்னவென்றால்: சின்னமுதலியார் வீட்டிலே யிருந்துகொண்டு வியாதியென்று பேரிட்டுக்கொண்டு பிரபுவினுடைய நினைப்பு அறியவேணுமென்றிருக்கிறவனுக்கு ஆப்பித்தனாய் அவனைப் பட்டத்திலே வைத்துத் தான் மந்திரித்தனம் பண்ணவேணுமென்று முழுமனதுடனே ஆசைப்பட்டுக்கொண்டிருக்கிற மதனாந்த பண்டிதன் துரையண்டைக்குப் போய்ச் சொன்ன சேதி: கணக்கு ரங்கப்பிள்ளை துபாசித்தனம் நடத்தச் சின்னமுதலியாருக்குச் சரீர சுவஸ்மில்லை. அவர் சொன்னது: ஆனந்தரங்கப்பிள்ளைகூட அழைத்துப்போய் கேட்டு ஆற்காட்டுக் காகிதத்துக்குப் பதிலுத்தரவு எழுதியனுப்பச் சொன்னார் என்று இவர் சொன்னதற்குத் துரை பதிலுத்தரவு சொன்னது: இது என்ன பெரிய காரியங்களா, கொஞ்சம் பேச்சு. இதற்கு உத்தரவு எழுதியனுப்பச் சொல்லி அன்றுதானே சொன்னேனேயென்று சொன்னார். அந்தமட்டுக்கும் இவன் புறப்பட்டு வந்துவிட்டான். இதிலே இவனுக்கு அவர் நினைப்பு இன்னதென்று வெளியாகாமற் போனதொன்று. இதென்ன பெரிய காரியமா. மீர்சத்துக்குப் பதிலுத்தரவு பில்லுகிஸ்தி கொடுத்துவிடச் சொல்லித் தாக்கீது பண்ணினோம் என்று எழுதுகிறதற்கு என்னவென்று சொன்னாரே இதிலே இவர் கக்கின மட்டும் வந்துவிட்டான். தானிப்படி கேட்டோமென்று இந்தப் பேச்சை ரங்கப்பிள்ளை அறியப்போகாதென்று கணக்கு ரங்கப்பிள்ளைக்கு ரொம்ப உபசாரமாய்ச் சொல்லிக்கொண்டானாம். அதற்கு அவர் நானேன் அவருடனே சொல்லுகிறேனென்று சொல்லிவிட்டு அருணாசலசெட்டியுடனே நடந்த சேதியை யென்னுடனே சொல்லச்சொல்லிச் சொல்லியனுப்பினார். மதனாந்த பண்டிதர் இத்தனை பிரயாசைப்பட்டுக்கொண்டு திரிகிறார். ஆர் பெரிய துபாசித்தனத்துக்கு வந்தாலும் நமக்கு என்ன ... ... ...இப்படி பின்னையும் அவரவர்களுக்குச் சின்ன

முதலியாரை பெரிய துபாசித்தனமாக வைக்கத்தக்கதாக எந்தப் பிரயத்தனமுண்டோ அந்தப் பிரயத்தனத்திலே மிகுதியும் பிரயாசைப்படுகிறார். அவர் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்கிறாப்போலே காணுதேயல்லாமல் அவர் மனதின்படியே நடக்கிறாப்போலே தோன்றவில்லை. அப்பால் சுவாமியினுடைய சித்தத்தின்படி நடக்கும் என்கிறதற்குச் சந்தேகமில்லை

அப்பால் நான் துரையுடனே ரங்கப்பநாயக்கன் காகிதச் சேதி சொல்லியிருந்தேனே அதன்பிறகு அவர் எழுதினதிலே இந்தியக் கப்பல் எத்தனை சீர்மைக்கப்பல் எத்தனை என்றெழுதியனுப்பச் சொல்லி எழுதினாரென்று சொன்னேன் அதற்கு வந்த ஒன்பது கப்பலும் சீர்மைக் கப்பல் என்றெழுதியனுப்பச்சொன்னார். நல்லதென்று வந்தேன், ராத்திரி பத்து மணிக்கு அழைத்தனுப்புவித்துக்கொண்டு தேவனாம்பட்டணம் குவர்னதோர் துபாசிக்குக் காகித மெழுதியனுப்புவித்தாயா வென்று கேட்டார். இன்னம் எழுதியனுப்பவில்லை. நாளைக்கு எழுதியனுப்புவோமென் றிருக்கிறோமென்று சொன்னேன். அதற்கு அப்படி யெழுதவேண்டாம் வந்த கப்பல்கள் சீர்மைக் கப்பல்கள் என்றும் நாட்டுக் கப்பல் என்றும் தெரியவில்லை பார்க்கிற சாடையிலே நாலுகப்பலிலே மாத்திரம் துலுக்கக்கிளாசுகளிருக்கிறார்களென்றும், அதினாலே அந்த நாலு கப்பலும் நாட்டுக்கப்பலாய்க் காண்கிறது என்றும் மற்றக் கப்பல் சீர்மைக்கப்பலாய்க் காண்கிறதென்றும் எழுதியனுப்புவிக்கச்சொல்லிச் சொன்னார். அந்தப்படிக்கு நல்லதென்று சொல்லிவந்தேன்... ...

1746 ஆ ஜூலை மீ 23 உக்கு அக்ஷய ஞ ஆடி மீ 11 உ சனிவாரம்

இற்றைநாள் நடந்த சேதி: காலமே தேவனாம்பட்டணம் குவர்னதோர் துபாசிக்கு நேற்று ராத்திரி துரையவர்கள் சொன்னபடிக்கு எழுதியனுப்புவித்தேன் மற்றப்படி வேறே அதிசயத்தைக் காணோம். இராமகிருஷ்ணசெட்டி வீட்டிலே மலையப்பசெட்டி இரண்டாவது விவாகத்தினுடைய குமாரனுக்கும் சிதம்பரசெட்டி மகளுக்கும் சோபனமும் நடந்தது. அங்கே போயிருந்து வீட்டுக்குப் போனேன்.

1746 ஆ ஜூலை மீ 24 உக்கு அக்ஷய ஞ ஆடி மீ 12 உ ஆதிவாரம் நடந்த சேதி

என்ன வென்றால்: உசேன் சாயபு மனுஷர் ஆற்காட்டிலிருந்து துரைக்குக் காகிதம் கொண்டு வந்தார்கள். அதிலே எழுதியிருந்ததென்னவென்றால்: மங்காபிள்ளை யென்கிறவன்

எங்கள் அமுல்தாரன். அவன் முகம் தப்புவித்து ஒழுகரை என்கிற உங்கள் கிராமத்திலே வந்திருந்த விடத்தில் எங்கள் மனுஷர் வந்து பிடித்தால் அந்தக் கிராமத்தார்கள் தள்ளிவிட்டார்களாம் அந்த நபரை யனுப்பச்சொல்லி யிருந்தது. அந்த வயணம்: மதனாந்தபண்டிதன் துரைகணக்கு ரங்கப்பிள்ளை துபாசித்தனத்தில் சொன்னதற்கு லாசனுக்குச் சொல்லி முன் எழுதின படிக்கு எழுதி யனுப்பச்சொல்லி உத்தாரங்கொடுத்தார் சின்னமுதலியார் இந்தமட்டுக்கும் வந்ததில்லை. சரீரம் சுவஸ்தமில்லை என்று வீட்டிலேதானே பாயைப் போட்டுக்கொண்டு யிருக்கிறான். இற்றைநாள் ராத்திரி குவர்னதோருக்கு மூசே லபோர்தோனே விருந்து பண்ணிவித்தான். கூத்தும் ராத்திரி நடந்தது.

1746 ஆ ஜூலை மீ 25 உ க்கு அக்ஷய ஹு ஆடி மீ 13 உ சோமவாரம்

பின்னை ஒரு அதிசயமும் காணோம். மலையப்ப முதலியும் மதனாந்தபண்டிதனும் வந்தார்கள். துரை அலுவலின் பேரில் இருக்கிறபடியினாலே வெளியிலே உட்கார்ந்து வீட்டைப் போனார்கள். ... ... ...

1746 ஆ ஜூலை மீ 26 உ க்கு அக்ஷய ஹு ஆடி மீ 14 உ செவ்வாய்க்கிழமை

நடந்ததென்னவென்றால்: கணக்கு ரங்கப்பிள்ளையை தானப்பமுதலியாரண்டைக்கு அனுப்பி, கூடலூரிலே ஐந்தாறு வுருயிருக்கிறதாய்ச் சேதி கேட்டோம். அது ஆராருடைய கப்பல்கள், எவ்விடத்திலிருந்து வந்ததுகள். விசாரித்துச் சொல்லி யனுப்பச்சொல்லு என்று சொல்லியனுப்பினாராம். அதற்குத் தானப்பமுதலி கணக்கு ரங்கப்பிள்ளையுடனே சொன்னது. எனக்கு மனுஷர் ஆர் இருக்கிறார்களென்றும், இதுதான் எனக்கு வேலையென்றும் சொல்லி மறபடியும் கூடலூருக்கு ஆளனுப்பி விசாரித்துச் சொல்லுகிறேனென்று சொல்லுமென்று சொல்லி யனுப்பினாராம். அந்தப்படிக்குத் துரையுடனே சொல்லச் சொன்னபடிக்குக் கணக்கு ரங்கப்பிள்ளையுடனே சொன்னார். அதற்கு, துரை சும்மா கேட்டுவிட்டுப்போனார். நான் துரையண்டைக்குப் போகவேணுமென்று பயணமாய்ப் போனவுடனே அவரை, சலாம்பண்ணிவிட்டுச் சாந்தினேர் கார்க்கிற வராந்தாவிலே உட்கார்ந்திருக்கையிலே மதனாந்த பண்டிதர் சொன்னது: சின்னமுதலிக்கு நாமெத்தனையாய்ச் சொன்னாலும் மடையனாகவிருக்கிறான். சொன்னபடி கேட்கவில்லை. உன் தமையனாரின் உத்தியோகத்திலேதானே லக்ஷாந்திரம் சம்பாதித்துக் கீர்த்திப் பிரதிஷ்டையடைந்து இதிலே சகல






மும் அனுபவித்தார். அப்படிப்பட்ட உத்தியோகமிருக்கையில் விழுந்துபோன மாத்திரத்திலே கையிலே ஆகாதென்று விட்டு விட்டார்கள் என்றால் அதைவிட அப்பிரதிஷ்டை வேறே வேணுமா. அப்புறம் இத்தனை மேன்பாடும் விருதாவாய்ப் போம். உம்மை யார் ஊரிலே சட்டைபண்ணுவார்கள். இதல்லாமல் உங்கள் தகப்பனார், பாட்டனார், மையனார் பாரம்பரியமாய் உத்தியோகம் பண்ணிக்கொண்டு உங்களாதீனமாயிருக்கிறதை, நீர் விட்டுவிடுகிறீர். உம்முடைய வமிசத்தை நீர்தானே கெடுத்துப்போடுகிறீர் என்றும், பிரயாசமில்லாமல் அயிசுவரியமும் அதிகாரமும் வருமா என்றும் என்னாலே ஆனதெல்லாம் சொல்லிப் பார்த்தேன் பின்னையும் அவரவரைக் கொண்டு சொல்லத்தக்கனவையெல்லாம் சொல்லிவித்தேன். ஆரென்ன சொன்னாலும் தனக்கு உத்தியோகம் நிருவாகமாட்டாது. நான் வியாதியஸ்தன். என்னாலே நிருவாகத்துக்கு வார்த்தைமேல் வாங்கிக்கொண்டு அப்பால் கையிலே ஆகாதவனென்று போகிறதைவிட்டு மேன்பாடாய் உத்தியோகம் கவையில்லையென்று போகிறது நல்லதல்லவா என்று கேட்கிறார். அவருக்குத் திகில் பிடித்திருக்கிறது. இரண்டு மூன்று தரம் காகித வயணஞ் சொல்லத் தெரியாமலும் உங்களையழைப்பித்தபோது இவரைக் கோபம் பண்ணினதுசேனே உண்டு இந்தக் கொஞ்ச காரியத்துக்கு இப்படி கோபம் பண்ணுகிறவன் இனிமேல் அப்போது பெரிய காரியங்களிலே என்னமாய் நடந்தான் என்கிற திகில் பிடித்திருக்கிறது என்றும் பின்னையும், அனேகவிதமாய்ச் சொன்னார் அதற்கு நான் சொன்னதற்கு வரவேண்டாமென்றுப்போலே தீருமாவென்று சொன்னேன் நீங்களும் கூடவிருந்தால் இருக்கிறோம் என்று சொல்லுகிறார் இன்றையதினம் துரைக்குத் தன்னாலே நிருவாகத்துக்கு ஆகாதென்று அம்மாளண்டையிலே இருக்கிற போட்டியிலே இன்னாரியுடனே சொல்லி, அம்மாளுக்கும் சொல்லி, துரைக்கும் சொல்லச் சொல்லுகிறேனென்று சொன்னார். அப்படியிருக்கிறது அவ்விடத்து அபிப்பிராயம். துரையவர்கள் அபிப்பிராயம் இன்னதென்று ஒருத்தருக்கும் தெரியாததினாலே இப்படி மயங்குகிறார்கள். சின்ன முதலியார் சாடை என்னவென்றால்: முன் ... ... ...

1746 ஆ ஜூலை மீ 27 உக்கு அக்ஷய ஸ்ரீ ஆடி மீ 15 உ புதவாரம்

இற்றைநாள் நடந்த அதிசய மென்னவென்றால்: தேவனாம்பட்டணத்திலே, முன்னே இங்கிலீசுக்காரரிடத்திலிருந்து அப்பால் மதாம் ஒலாக்து முகாந்திரமாய் இந்தூருக்கு வந்து அவளுடனே மூச்சே லபோர்தோனே தொடுப்பாயிருக்கையிலே அந்த அனுசாரியிலே மூச்சே லபோர்தோனேயிடமாய்த் திரிந்த அவன்

சீர்மைக்குப் போகையிலே அவன் தம்பி மூசே லவீல்பாத இடமாய் வைத்துப் போனபடியினாலே அது முதல் நாளது வரைக்கும் அவர்களிடத்திலேதானே தொழில்துறை வாங்கிக் கொடுத்துக் கொண்டு அதிலேதாகிலே பத்துப் பணம் சம்பாதித்துக் கொண்டு சத்துருவாயிருக்கிறான். இப்போது மூசே லபோர்தோனை ஒன்பது கப்பலுக்கும் சண்டைக்கும் கொமாந்தானாய் வந்திருக்கிறபடியினாலே இந்த வேளையிலே நாலு பணம் சம்பாதிக்கலாம் என்று மூசே லபோர்தோனையண்டையிலே திரிகிறான். இவனிடத்திலே தேவனாம்பட்டணத்திலே யிருந்து வந்திருக்கிற வடுகன் ஒருத்தன் வெகு நாளாய்த் திரிகிறவனாம். அவன் தேவனாம்பட்டணத்தாருக்கு இவ்விடத்திலே யிருந்து நடக்கிற சேதிபாதி யெல்லாம் சொல்லியனுப்புகிறானென்று தம்பிச்சா முதலி மருமகன் மலைக்கொழுந்து முதலி என்கிறவன் துரை யண்டையிலே வந்து தேவனாம்பட்டணம் இங்கிலீசுக்காரருடைய மர்மங்கள் விசாரித்து அப்போதைக்கப்போது அந்தரங்கமாய்த் துரைக்குக் கபுறு சொன்ன சேதி நயினியப்ப முதலி யென்கிறவனண்டையிலே யிருக்கிற வடுகன் தேவனாம்பட்டணத்தாருக்கனுகூலமா யவ்விடத்திலே நடக்கிற சேதிபாதியெல்லாம் போய்ச் சொல்லுகிறானென்றும், அவனுடனே பின்னை ஆரோ தமிழன் கணக்கன் என்று சொல்லுகிறார்கள். அவனையும் ஆக இரண்டு பேரையும் இற்றை நாள் ராத்திரி கோட்டையிலே கஷோரிலே போட்டார்கள். பின்னையும் இரண்டு பேர்கள் அவர்களும் தேவனாம்பட்டணம் என்று சொல்லுகிறார்கள். அவர்களைச் சாவடியிலே வைத்தார்கள். இன்னம் மலைக்கொழுந்தன் என்கிறவன் துரை கையிலே நூறு ரூபாயும் வாங்கிக் கொண்டு இரண்டு மூன்று சேவகரையும் அழைத்துக்கொண்டு போனான் அது எதற்கோ. அந்த ரூபாய் யாருக்குக் கொடுக்கிறதற்கோ இல்லையென்று பரிதானம் கொடுத்துச் சென்னப்பட்டணம் தேவனாம்பட்டணம் சமாசாரங்கள் அறியும் பொருட்டாகப் போனானென்பதெல்லாம் இரண்டு நாள் ஏறக்குறைய விசிதமாம்.—

1746 ஆ ௵ ஜூலை மீ 28 உ க்கு அக்ஷய ௵ ஆடி மீ 16 உ வியாழக்கிழமை.

இற்றைநாள் குவர்னதோர் என்னை யழைப்பித்தார். ஒரு தேங்காய்க் குடுக்கையிலே ரசமும் ஐந்தாறு ஓலைச் சுருளும பத்துப்பனிரெண்டு ஏடு சேர்த்த சின்னச்சுவடிபோலே கணக்கு எழுதியிருக்கிறதும் என்கையிலே கொடுத்துப்போகிற வேறும் உருவிலே கப்பல்காரர் வாங்கினார்களாம். இது யாருடையதோ விசாரித்து எந்த ஊராருடையதோ கொடுத்தனுப்பிவிடு. பேர கப்படாவிட்டால் உனக்கு எப்படி சம்மதியோ அப்படிச் செய்

என்று சொன்னார். அதின்பிறகு ஒரு நாழிகை பொறுத்து ஒரு தெலுங்கோலை கொடுத்து என்னைப் படிக்கச்சொன்னார். அந்த ஓலை தேவனாம்பட்டணம் துரை மேஸ்திரியண்டையிலே யிருக்கிற ஒருசண்டி ரங்கப்பநாயக்கனண்டையிலே யிருக்கிற பசுமார்த்தி சிங்கண்ணசெட்டிக்கு ஷை தகப்பன் சென்னப்பட்டணத்திலிருந்து யனுப்பின ஓலை. அந்த ஓலை எழுதியிருந்த வயணம்: முல்லங்கி கிருஷ்ணம செட்டி செத்துப் போனவனுடைய மகனைச் சென்னப்பட்டணம் குவர்னதோர் அழைப்பித்து வெகுமானம் கொடுத்தனுப்பினதாகவும், கோட்டைக்கு அசிரதை கட்டுகிறார்களென்றும், வடவண்டை பாரிசம் மரமட்டைக்காயெல்லாம் வெட்டினார்களென்றும், தங்களவர்களாரோ செத்துப்போய்விட்டார்களென்றும், அவர்களாஸ்தி யிருநூற்றிருபது வராகனிருந்ததற்கு அவர்களுக்கு நூற்றியைம்பது வராகன் போக மற்றது எழுபது வராகனிருக்கிறதென்றும். இப்படி பின்னையும் அவர்கள் கிரகத்திய சமாச்சாரம் விஸ்தாரமாயெழுதியிருந்த வயணம் எல்லாம் படித்துத் துரைக்குச் சொன்னோம். துரை இந்தச் சேதியை ஆருடனேயும் சொல்லவேண்டாமென்று சொன்னார். நானேன் அப்படிச் சொல்லுகிறேனென்று அதற்கு அவர் மறுபடி இந்த உத்தரவு சொல்லாமல் சொன்னேன். இது கூனிமேட்டுப் பால்காரனைப் பிடித்து அவன் கையிலேயிருந்த காகிதமெல்லாம் பிடுங்கிக்கொண்டு வந்தார்களென்று சொல்லக் கேட்டிருந்ததற்குத் திருஷடாந்திரம் சரியாயிருந்தது.

1746 ஆ ஜுலை மீ 29 உக்கு அக்ஷய ஸு ஆடி மீ 17 உ வெள்ளிக்கிழமை

இற்றைநாள் ராத்திரி குவர்னதோர் அழைப்பித்து, திருக்கழுமலை, யாழ்ப்பாணம் வழியறிந்தவனாக ஒருத்தனைச் சம்பாதிக்கச் சொல்லி உத்தாரம் கொடுத்தார். நல்லதென்று வந்தேன் ... ... ... ...

இற்றைநாள் சாயங்காலம் கோபாலகிருஷ்ணய்யனும் ஷை தமையன் சீதாராமய்யனும் ஊர்வந்து சேர்ந்தார்கள். இவர்கள் முன் ஊர்விட்டு ஓடிப்போனது குரோதன ஸு கார்த்திகை மீ 20 உ இற்றைநாள் ராத்திரி துரைகையிலே உத்தாரம் வாங்கிக்கொண்டு திரும்பினவுடனே மூசே வோஸ்த்சு வட்டச்சம் மதி வட்டமும், முதலும். வட்டியும் என்பேரிலே பற்றெழுதிக் கொள்ளும். என் கையிலேயிருக்கிற ஐந்நூறு வராகன் வட்டச் சிட்டுக் கொடுத்து விட்டுவிடு என்று சொன்னார். ஆனால், ஐம்பது வராகன் அதனமாய்ச் சரக்கு விலையிலே போட்டிருக்கிறதேயென்று கேட்டேன். அதற்கு மூசே லோஸ்த்சு சொன்னது: அந்த ஐம்பதுக்கும் கூட வட்டமும் வட்டியும் துரைக்குச்

செலுத்தினேன். நீர் அவர் கணக்கிலே ஒத்துக்கொள்ளு மென்று சொன்னான். ... ... ... ... ... ...

1746 ஆ ஜுலை மீ 30௳க்கு அக்ஷய ஞு ஆடிமீ 18௳ சனி வாரம்.

இற்றைநாள் காலத்தாலே முசே லவில்பாது யழைத்தனுப்புவித்தான். முன் ஆயிரத்தி யெழுநூற்றி நாற்பத்தி மூன்றும் வருஷம் ஒக்தோபர் மீ 22௳. மொக்காவுக்குக் கப்பல் பாயெடுத்தபோது எண்ணூறு வராகனுக்குச் சரக்கு முசே பொக்காசு கப்பித்தானாக அந்தக் கப்பலுக்குப் போகையிலே அவனவனும் முசே லவில்பாகு கொடுத்து அமானிதச் சீட்டு வாங்கிக் கொண்டதினாலே நானூறு வராகன் பங்கு வருகுதானபடியினாலே அதின் பிற்பாடு இவர் மனிலாவுக்குப் போயிருந்தபோது இவர் புரோக்குய்றேதோராய் குவர்னதோரானபடியினாலே அந்த வருஷம் விற்று வந்ததிலே குவர்னதோருடைய பங்கு கொடுத்தது என்னூற்றி எண்பத்தி மூன்று ரூபாயும் பணி ரெண்டு அணுவும் கொடுத்துபோக அந்தச் சம்மதி சரியாய் வந்தபடியினாலே இற்றைநாள் முசே லவில்பாது அழைத்து நீரும் நாமும் 1743 ஆ மொக்காவுக்குப் பங்காய்ப் போட்ட சம்மதி தீர்த்து ஆயிரத்தி முந்நூற்றி நாலு ரூபாயும், மூன்று பணமும், ஆறு காசும் வாங்கிக்கொள்ளும் என்று சொன்னான். அந்தப்படிக்குக் கோபாலகிருஷ்ணய்யன் எண்ணி வாங்கிக் கொண்டு ஆதிநாராயணபிள்ளை வசம் ஒப்புவித்துக் கணக்கு எழுதுவித்தான். அதின்பிற்பாடு முசே லகத்தினே, முசே துபுவா அவன் தம்பி ருசெல்லியேர் பின்னையும் இரண்டு பேர் கப்பல் காரர் கூட இருக்கையிலே நானும் முசே லவில்பாதும் காம்பிராவிலே யிருந்து புறப்பட்டவுடனே முசே துபுவா என்னைப் பார்த்துக் கும்பினீர் கொடுத்தாயே ஆனைப்போலே ஆச்சுதே, இனி மேல் எங்களுடைய காரியங் கவைகளுக்கும் ரொம்ப ஆதரவாய் நடப்பிப்பீர் என்று முழுமனதுடனே நம்பியிருக்கிறோம். உமக்கு மொபார்க்கு இருக்குதென்று நம்மை வந்து கட்டிக் கொண்டு முத்தமிட வந்தான். அவர்களாசாரப்படிக்கு அதற்கு நான் உபசாரமாய்ச் சொல்லி அரத்தாங்கீகாரமாய் முத்தமிட வந்ததை மார்க்கமாய்த் தெரியாதபடிக்குப் பறி கரித்து அதற்கு நான் சொன்ன உத்தரவு: இந்த உத்தியோகம் எனக்கு என்ன ஆதாயம் கொடுக்கிறது. மேன்பாட்டிலே அரிகைப் பல்லக்கு துரைகளுடைய தயவினாலே அதிகாரமுங் கூட நடக்கிறது. உங்களுடைய தயவெல்லாம் பரிபூரணமா யிருக்கும்போது சகல பேரமும் குவர்னதோருடைய சொந்த பேரம். கும்பினீர் பேரத்திலேயும் பாதிபேர் மட்டுக்கும் என் வசமாய் நடக்கிறது. இதல்லாமல் ஒன்றதிலேயும் இல்லா மலும் திரும்பியும் எல்லாவற்றிலும் பார்த்தாப்போலே

இருக்கிறப்போலேயும் இருக்கிறேன். அந்த உத்தியோகம் வந்த கும்பினீர் கோந்துராந்தும் வர்த்தகரும் போக்குவருத்துக் காகிதங்களுடைய எம்பராசு மாத்திரமேயல்லாமல் வேறேயில்லை. கும்பினீர் கொந்துராந்திலே வருஷத்திலே இரண்டாயிரம் வராகன் ஆதாயம். அப்போதே அதற்குச் செலவு சித்தாயங்கள் சமஸ்தமுமுண்டாயிருக்கும். அதற்குப் பதிலாய் நான் பின்னையும் சற்றுப் பிரயாசைப்பட்டேனேயானால் இரண்டாயிரத்துக்கும், நாலாயிரத்துக்கும், ஆறுயிரமாய்ச் சம்பாதிப்பேன். சுவாமி கடாக்ஷமும் உங்களுடைய தயவும் பரிபூரணமாய்க் கிடைத்ததேயானால் அதுவே போதும். இந்த உத்தியோகம் எனக்குக் கவையில்லை என்று சொன்னேன். அது மெய்தான். ஆனாலுனக்குக் கன்னியாகுமரி முதல் இங்கும் பங்காளம் கொல்கொண்டா மேற்கே மைசூர் மட்டுக்கும் உனக்கு விவேகமில்லாதவர்களில்லை. இந்த வட்டாரங்களிலே உன்னுடைய காகிதம் பத்திரங்கள் போனால் எதேச்சேரிடாதவர்களில்லை. நீ வேண்டிய சரக்கு யழைக்கிறது இந்தப் பட்டணத்தில் ஒருத்தருக்கும் அவ்வளவு போதாது. மற்றப் பேருக்கெல்லாம் இந்தக் குண்டுக்கு வெளியே ஒருத்தருக்கும் பழக்கமில்லை. ஆனால் நீ சம்மதித்து இந்த உத்தியோகத்திலே யிருந்தால் கும்பினியாருக்கும் நல்ல வேலை நடக்கும். அதைத் தொட்டுக் கும்பினியாருக்கு ஆதாயமுண்டாயிருக்கும். கும்பினியாருக்கு ஆகாத வேலை ஒன்றுமில்லை என்று சொன்னேன் அந்த மாத்திரத்திலே பின்னையும் இருந்த வெள்ளைக்காரரிந்துகொண்டு அப்படிக்கு......... தானே, பிரார்த்தித்துக் கொடுக்கிறதுதானே என்று கேட்டார்கள் அப்படிதானே அந்தரங்கத்திலே நடந்திருக்கிறது என்று இனிமேல் பகிரங்கமாமென்றும், சம்பாக்கோயில்காரர் மெத்த கஸ்திப்படுவார்களென்றும் சொன்னான். அதற்கு முசேலவில்பாது இருந்துகொண்டு சம்பாக்கோயில் பாதிரிகளபிப்பிராயமென்ன வென்றால் ஒரு கிறிஸ்துவனிருந்தால் அவ்விடத்திலே நடக்கிற சமாசாரமெல்லாம் தங்களுக்குக் கபுறு ஆமென்றும் ஊரிலே யுண்டான பேரெல்லாரையும் தங்களுடைய ஆக்கினைக்குள்ளாகக் கொண்டுவரலாமென்று இதைக் குறித்துத்தான் அவர்கள் கிறிஸ்துவனைப் போடவேணுமென்று பிரயாசைப்பட்டு லூய் கத்தோர்ஜ் நாளையிலே காகிதமொன்று கும்பினியார் பேருக்கு உண்டாக்கிக் கொண்டு கும்பினியார் இவ்விடத்திப கோன்சலுக்கு எழுதிக் கொடுத்ததைக் கொண்டுவந்து கொடுத்து அந்நேரத்துக்குத் தக்கதாப்போலே நடப்பித்ததைத் தொட்டுத்தான் நயினியப்பிள்ளைக்கு வெகு பொல்லாப்பெல்லாம் வருத்துவித்தார்கள். அதைத்தொட்டுத்தான் சம்பாக்கோயிலார் பேச்சு அபத்தக்காரரென்றும், இவர்களைத் தொட்டுப் பட்டணம் பூராவும் ஆகாமலும் சாடாய்ப் போச்சுதென்றும், அப்பாலவ்விடத்துக் கோன்சேலுக்கு எப்

படி சம்மதியோ அப்படி நடப்பித்துக்கொள்ளச் சொல்லி மினிஸ்தர்கள் எழுதியாச்சுதென்றும், அதைத் தொட்டென்ன கும்பினீர் காரியத்துக்கு எப்படி யுக்தமாய் நடப்பித்துக் கொள்ளவேணுமோ அப்படி நடப்பித்துக்கொள்ளுகிறதேயல்லாமல் சம்பாக்கோயில் பாதிரிகள் பேச்சுக் கலைக்கு வராது. ஆனாலும், அவர்களும் சும்மாயிரார்கள். அவர்கள் கையிலே ஆனமாத்திரம் போகாதபடி பார்ப்பார்கள். ஆகாமற்போனால் சீர்மையிலேயும் பிரயத்தனம்பண்ணிப் பார்ப்பார்கள். அவர்கள் சுபாவம் எல்லாருக்கும் வாடிக்கையாயிருக்கிறதுதானே என்று சின்னமுதலியார் ஒரு பூறு அவனுக்குப் பின்னை ஒன்றும் தெரியாது. ஒரு கோழித்தலைவந்தாலும் விடாமல் வாங்குகிறவனென்றும் மூசே தும்மா நாளையிலேதானே ஏற்பட்டு, கனகராயமுதலிக்குப் பிறகு ரங்கப்பனென்று தீர்த்திருக்கிறதென்றும், பின்னையும் பல சேதியாய்ப்பேசியிருந்து அப்பால் நாகப்பட்டணத்தாருக்கும் இங்கிலீசுக்காரருக்கும் ஒப்புறவென்றும், அவர்கள் திருக்கணுமலையிலே வேலை செய்கிறார்கள் என்றும் இனிமேல் மூசே லபோர்தோனே இஸ்தாநுருகள் தேடிப் போகிறதென்றும், இத்துடனே இங்கிலீசு சண்டைச் கப்பல்களைச் சரியாய்த் தீர்த்துப்போடும் என்றும், சென்னப்பட்டணத்தை வாங்கி நாலு நாளாகிலும் நம்முடைய நிசான் போட்டுவிட்டாலாங்காட்டும் இந்த ராச்சியத்துக்குப் பிரதிஷ்டையென்றும், அந்த ராச்சியத்துக்கு இங்கிலீசு ராசாவை பட்டத்துக்கு வைக்கிறதே பிரதிஷ்டை. அந்தப்படிக்கு இந்த மட்டுக்கும் நடந்திருக்குதோ. இன்னம் ஒரு மாசத்திலே அப்படி நடக்குமோ தெரியாது இதுதான் நடக்கவேணுமென்றும் இப்படி அனேக நேரம் பேசியிருந்து வந்துவிட்டேன்.

1746 ஆ ஜுலை மீ 31 உ க்கு அக்ஷய ஸ்ரீ ஆடி மீ 19 உ ஆதிவாரம்

குவர்னதோர் மூசே லபோர்தோனே மற்றுமுண்டான பேருக்கும் மூசே பரிதியும், மூசே தெப்ரேனும் விருந்து பண்ணின படியினாலே எல்லாரும் ஒழுகரையிலே யிருக்கிற பரிதி தோட்டத்துக்கு விருந்துக்குப் போனபடியினாலே இவ்விடத்திலே பின்னை ஒரு அதிசயம் தெரியவில்லை. எல்லாரும் சாப்பிட்டுச் சாயங்காலம் ஆறு மணிக்கு வந்தார்கள். ராத்திரி மூச்சு தெப்ரேனி வீட்டிலேயிருந்து மேல் எழுதப்பட்டவர்களுக் கெல்லாம்.—

1746 ஆ ஆகஸ்ட் மீ 1 உ க்கு அக்ஷய ஸ்ரீ ஆடி மீ 20 உ திங்கட்கிழமை

காலமே குவர்னதோர் அழைப்பித்த மொக்கர் அரம்சாம் நெப்புதான் (Neptuue) முதலான யாத்திரை பாக்கியும் ரக்

தாக்ஷி ஞு மாசி மாதத்திலே போன வெள்ளைக்காரன் நெப்பு
தானும் பாங்கரத்து குசலாமத்து என்று மீர்குலாமுசேன்
பேரிட்டு அவர்கள் கப்பலொன்று அனுப்பினதற்கு இரண்டா
மாத்திரை யிதுவும் எதெதற்குப் பதினாயிரத்தியெண்ணூற்றித்
தொண்ணூற்றிரண்டு ரூபாய் வந்தது இதுவும் மூசே லோஸ்
திசுக்கு வட்டத்துக்குக் கொடுத்த வராகன் ஐந்நூறுக்கு வட்-
டம் பதினெட்டு இம்லேறுணூசுப் பத்தும் வட்டியும்கூட
இரண்டாயிரத்தி நூற்றிமுப்பத்தொன்பதுகூட ஏகத்துக்குப்
பதின்மூவாயிரத்தி முப்பத்தொரு ரூபாயும் உன் கணக்குக்கு
அந்தச் சம்மதி வரவுவைத்துக்கொண்டு என்பேரில்பற்றுஎழு
திக்கொள்ளென்று சொல்லி மசுக்கரைக்கு நீ அமானிதம்
போட்டதும் விற்றுவந்திருக்கிறது. அதுவும் கணக்குப்
பார்த்து எழுதிவைத்துக்கொள்ளுகிறேன் என்று சொன்னான்.
இன்னம் ஆரார் பேரிலே வரவேணுமென்று கேட்டார் மூசே
லொஸ்திசு சம்மதி இன்னம் ஐம்பது வராகன் புடவை சம்
மதி பாக்கி வரவேணுமென்று சொல்லி அதுகூடகூட்டிக்
கொண்டுவிட்டீர்களாயென்று கேட்டேன். அதற்கு அவர்
சொன்னது: நான் கூட்டிக்கொள்ளவில்லை என்று சொல்லி,
மூசே லொஸ்திசுவை அழைத்து வரச்சொன்னான்.
அவன் வந்தவுடனே கணக்குப் பாக்கி ஐம்பது வராகன்
கொடுக்கவேணும், அது ரங்கப்பனுக்குக் கொடுத்துவிடு என்று
சொன்னான். நல்லதென்று இப்புறம் வந்து எனக்கு இந்தச்
சம்மதி சரக்கு அனுப்பினதிலே நஷ்டம் வந்ததே ஆனபடி
யினாலே இந்த ஐம்பது வராகனிருக்கிறது கொடுக்கத்தள்ளாதா
தயவுபண்ணவேணும் என்று மோகக்கட்டையைப் பிடித்துக்
கொண்டு வேண்டிக்கொண்டு, முன் இருபத்துநாலு வராகன்
மூன்றுவருஷம் மறு இடம் கஞ்சுபோடுவித்துக் கொடுத்தது
கூட எழுபத்துநாலு வராகனுக்கும் இருநூற்றிமுப்பத்தேழு
ரூபாய்க் கொடுத்து மனம் பொறுத்துக்கொள்ளச் சொன்னான்.
நல்லதென்று, ரூபாயை வாங்கிக்கொண்டு இந்தப் பதினாலு
வராகனும் உம்முடைய நிமித்தியம் விட்டுவிட்டேனென்றும்
உம்முடைய தயவு இருந்தால் சம்பாதித்துக்கொள்வேன் என்றும்
சொல்லி ரூபாயை ஆதிநாராயணப்பிள்ளையண்டைக்கு அனுப்பி
விட்டு, துரையண்டைக்குப் போனேன். அவரோடு உட்
பெத்திசியோம் காகிதத்தில் கையெழுத்தும் போடச் சொன்னார்.
போட்டபிறகு சின்ன முதலியாருக்கு என்ன வியாதியென்று
கேட்டார். நான் அறியேன் என்று சொன்னேன். அதற்கு
அவர் சொன்னது: முன்னேவந்த வியாதியா வென்று கேட்
டார். அப்படிதான் சொல்லுகிறார்கள் என்று சொன்னேன்.
ஆனால், உனக்கு வந்த வீதம் ரூபாய் அவனுக்கும் வந்திருக்
கிறது அதற்கு ரூபாயை அனுப்புவோம் என்று
கேட்டார். உம்முடைய கணக்குப்பிள்ளை கையிலே
கொடுத்து அனுப்புகிறதுதானே என்று சொன்னேன்,

அதற்கு அவர் ஒரு சேவகன் கையிலேகூடக் கொடுத்து அனுப்பப் போகாதா. அந்த ஆயிரம் வராகன் வரவேணுமே, அதைப் பிடித்துக்கொண்டு மற்றதையனுப்பவேணும். அதற்கு அவன் கையிலே சரியாய் செலுத்திறேனுமென்றும் இந்த ரெப்படுத்தி சியோமிலே கையெழுத்து வாங்கிவரவேணும் என்றும் சொன்னார். அதற்கு உங்கள் மனதிலே தோன்றினபடிக்குச் சொன்னால் நான் போகிறேனென்று சொன்னேன். அதற்கு அவர், நீ போகிற காரியம் அல்ல. ஆகிலும், என் நிமித்தியம் போய் முன் சம்மதி ஆயிரம் வராகனுக்கு இப்போது மூவாயிரத்தி இருநூறு ரூபாய் பிடித்துக்கொண்டு மற்ற ரூபாயைக்கொடுத்து கையெழுத்து வாங்கிவரவேணுமென்று சொன்னார். நல்லதென்று சொன்னேன். அப்பால் பெதுருக்கு எத்தனை ரூபாய் கூடினது என்று கேட்டார். எனக்கு வீதப்படிக்குத்தானே பதினாயிரத்தி யெண்ணூற்றித் தொண்ணூற்றிரண்டு ரூபாய். அதற்கு மூவாயிரத்தி இருநூறு ரூபாயை நீர் பிடித்துக் கொண்டால் நீக்கு அவருக்குக் கொடுக்கவேண்டியது ஏழாயிரத்தி ஐந்நூற்றித் தொண்ணூற்றிரண்டு ரூபாய் கொடுக்கச்சொல்லி ரங்கப்பிள்ளை பேரிலே சீட்டுக் கொடுத்தால் நான் போய் கையெழுத்தும் வாங்கிக்கொண்டு வபணமும் சொல்லி விட்டுப் பணமும் செலுத்திவிட்டு வாரேனென்று சொன்னேன். அந்தப்படிக்குக் கணக்கு ரங்கப்பிள்ளை பேரிலே தானப்ப முதலிக்கு ஏழாயிரத்தி அறுநூற்றித் தொண்ணூற்றிரண்டு ரூபாய் கொடுத்தனுப்பச்சொல்லிச் சீட்டெழுதிக் கையெழுத்து வாங்கிவரச்சொல்லி ரெப்படுந்திசியோமஸ்த்ரமும் கொடுத்தார். அருணாசலசெட்டி கையிலே மேலே எழுதப்பட்ட ரூபாயை ஒப்புவித்து, சின்ன முதலி கையிலே கொண்டுபோய் ஒப்புவித்து நான் வருகிறேன் என்று சொல்லுமென்று சொல்லி யனுப்புவித்தேன். அவனும் போய்ச் சேர்ந்து ரூபாயை ஒப்புவித்துப் பேசியிருக்கிற ..... னபோனேன். போனமாத்திரத்திலே அருணாசலசெட்டியைப் போகச்சொல்லி, நானும், சின்ன முதலியாரும், பாரமுநாதப்பிள்ளையும், அழகப்பனும் இருந்தோம். அப்போது சின்னமுதலியுடனே துரையவர்கள் மொக்கா இரண்டு யாத்திரை சம்மதிப்பணமும் உம்முடை வசத்திலே செலுத்தி ரெப்படுத்திசியோம் காகிதத்திலே கையெழுத்தும் வாங்கிவரச்சொன்னான் என்று சொன்னேன். பாரமுநாதப் பிள்ளை கையிலே வயணம் எழுதிவைக்கவேணும், எனக்குத் தெரியாதே என்று சொன்னார். அப்பால் பாரமுநாதப்பிள்ளை கையிலே இரண்டு யாத்திரையும் பதினாயிரத்தி எண்ணூற்றிரண்டு ரூபாயும் வரவெழுதிவித்தேன் நாலு சரக்குத்தானேயிருக்கிறது என்று கேட்டார். அதற்கு, நீர் முன் துரைக்குச் சொன்ன சம்மதிக்கு ஆயிரம் வராகன் கொடுக்கவேணுமே அதற்கு மூவாயிரத்தி இருநூறு ரூபா பிடித்துக்கொண்டு மற்ற ஏழாயிரத்தி அறுநூற்றித்தொண்ணூற்றிரண்டு ரூபாயும்

ஒப்புவித்துப் போட்டுக் கையெழுத்தும் வாங்கிவரச் சொன்னாரென்று சொன்னேன். அதற்கு அவர் இன்னும் வெள்ளைக்காரர் பேரிலே நிலுவைவரவேணுமே அதை வாங்கிக்கொடுத்து எடுத்துக்கொள்ளப்போகாதா, இதிலே எடுத்துக்கொள்ளவேணுமோ என்று அவர் தாபங்கப்பட்டுச் சொன்ன வார்த்தைகள் மிதமில்லை. அப்பாலந்த ரெப்பெடுத்திசியோம் காகிதத்திலே நாலுவிடத்திலே கையெழுத்துப்போடச் சொன்னால் அந்தச் சம்மதியிவருக்கும் வாடிக்கையில்லை யாததினாலே இதற்கு ஆதாய மென்ன, முதலின்ன தென்று சொல்லச் சொல்லி ரொம்ப தகரார்பண்ணிக் கேட்டார். அதற்கு நானிருந்துகொண்டு, ஆதாயமின்ன தென்றும் முதலின்ன தென்றும் ஏற்படாது. வந்த பணத்துக்கு அவர் வரவுவைத்த பணம் பங்கு விதப்படிக்கு இதிலே எழுதினது என்று வயணம் சொன்னாலும் தெரிந்துகொள்ள மாட்டாமல், பின்னையும் அனேக நேரம் ஒருதரத்துக்குப் பத்துதரமாய் வயணம் கேட்டு வருத்தத்தின்பேரில் கையெழுத்துப் போட்டார். அதின் பிற்பாடு மூன்று சாக்கு முத்திரையும், ஒரு சாக்கு முத்திரையில்லாமலும் இருக்கிறதே அந்தச் சாக்கை நிறுத்தி ஒப்புவித்துப்போட்டுப் போம். இல்லாவிட்டால் ஒரு மனுஷனை உம்முடையவனாக கிட்டேவைத்து நிறுத்து ஒப்புவிக்கச் சொல்லிச் சொல்லிப் போட்டுப் போம் என்றார். எனக்கென்ன கவலையா, துரையவர்கள் கொடுத்ததை உம்முடைய வசத்திலே ஒப்புவித்தேன். நீர் கையெழுத்துப் போட்ட காகிதத்தை அவர் வசத்திலே ஒப்புவித்துப்போட்டு, நாம் விட்டுக்குப் போகிறோமேயல்லாமல் நாமென்ன உத்தரவாதியாயென்று சொன்னதற்கு, நீர் கொண்டுவந்த மட்டுக்கும் நீ ரெண்ணி ஒப்புவியும் இல்லாவிட்டால் எனக்குக் கவலையில்லை என்று சொன்னார். அதின் பிற்பாடு அருணாசல செட்டியை வைத்துக்கொண்டு எண்ணி ஒப்புவித்துப்போட்டு வரச் சொன்னேன். அந்தப்படிக்கு எண்ணி ஒப்புவித்துப்போட்டு வந்தேனிதின் பிற்பாடு துரைக்குப் போய் கபுறுசொல்லி மீர்குலா முசேனுக்கு ஐயாயிரத்தி இருநூற்றி யிருபத்தி ஒரு ரூபாய் மொக்காச் சம்மதி கொடுத்து ரெப்பெடுத்திசியோம் காகிதத்திலே கையெழுத்து வாங்கி வரச்சொன்னார். சதாசிவய்யன் வசமாக ஒப்புவித்துக் காகிதத்திலே அவர்கள் தகப்பனார் கையெழுத்து வாங்கிவரச் சொன்னேன். அந்தப்படிக்கு ரூபாயைக் கொண்டுபோய் ஒப்புவித்து அவர் தகப்பனார் கையெழுத்து ரெப்பெடுத்திசியோம் காகிதத்திலே போடுவித்துக் கொண்டு வந்து கொடுத்தார். இப்படிக்கு மொக்கா சம்மதி அரம்சாமிலே பங்கு இருந்தபேருக்கு அமானிதச் சரக்குக் கொண்டுபோய் விற்று மொக்கா கோந்துவாரிலே கபேக்கு (coffee) ஆக முதலிட்டது எல்லாம் ஆறு மாதம் 20 நாளைக்குள்ளே வட்டிகூட அவரவருக்குக் கொடுத்தார்கள்.

1746 ஆ ஆகஸ்டு மீ 2 உ க்ஷ அக்ஷய ஹு ஆடி மீ 21 உ மங்களவாரம்

இற்றைநாள் நடந்த சேதி என்னவென்றால்: மாயேயிலிருந்து நாலு பிராமணர் காகிதம் கொண்டுவந்தார்கள். பனிரெண்டாம்நாள் வந்து சேர்ந்தார்களாம். அவசரத்தின் பேரிலே வந்துசேர்ந்தோமென்றார்கள். அவ்விடத்துக்கு ஒரு கப்பல் வந்ததாம். அதற்கு ஆடு, பன்றி, கோழி, தண்ணீர் சிறிது ஏற்றினார்களாம். அதிலே சிறிது போய் கப்பல் சேர்ந்ததாம். சிறிது சேராமற்போச்சுதாம். மறுபடி வந்துவிட்டதாம். அவ்விடத்திலே மழைகாலமானபடியினாலே காற்று கடலு மழையும் ஆனபடியினாலே கடல் கொந்தளிப்பினாலே ஏற்றக் கூடாமற்போச்சுதென்றும், அந்தக் கப்பலிலே வந்த வெள்ளைக்காரனிலே ஒருவன் கரையிலே இறங்கினவன் மறுபடியும் கப்பலுக்குப் போகக் கூடாமல் கரையிலேதானே போய் விட்டானென்றும், அவ்விடத்துக்கு வரவேணுமென்றும் சிறிதுதூரம் வந்து காலவீங்கி நடக்கமாட்டாமல் மறுபடி போய்விட்டான் என்றும், அந்தக் கப்பல்காரர் கொடுத்தக் காகிதங்கள்கூடக் கொண்டுவந்தோமென்று சொன்னார்கள் ...

1746 ஆ ஆகஸ்டு மீ 3 உ க்ஷ அக்ஷய ஹு ஆடி மீ 22 உ புதவாரம்

இற்றைநாள் முசே லபோர்தோனேயும் குவர்னதோர் துய்ப்ளெக்சும், மத்தியானம் முசே லவீல்பாது வீட்டிலே விருந்து சாப்பிட்டு மூன்றுமணி நேரம் முசே துய்ப்ளெக்சும் முசே லபோர்தோனேயும் அவ்விடம்விட்டு வரும்போது முசே லபோர்தோனே பல்லக்கு முன்னேயும், முசே துய்ப்ளேய்க்சு பல்லக்கு பின்னேயும் ஊர்க் கடற்கரை வாசற்படியிலே புறப்படுகையிலே இரண்டுபேரும் கூட வந்தபடியினாலே தம்பூர்ஷாம் என்கிறதை அடித்தார்கள். அப்பால் துவாலண்டையிலே போயிறங்கி முசே லபோர்தோனே இங்கிலிசு சண்டைக் கப்பல் கொம்மாந்தான் முசே பெந்தோம்பேரிலே சண்டைக்குப் போகப் பயணம் முசே துய்ப்ளேய்க்சு கையிலே யனுப்புவித்துக் கொண்டு நடக்கையிலே இருபத்தொரு பீரங்கி போட்டார்கள். அப்பால் துரை கூடப்போய் ஷலங்கின்பேரிலேகூட ஏற்றுவித்தார்கள் அப்போது ஒருதரம் கட்டி முத்தமிட்டுக் கொண்டு ஷலங்கிலே யேறி ஷலங்கைத் தள்ளினவுடனே திரும்பவும் இருபத்தொரு பீரங்கி சுட்டார்கள். மூன்றலே கடக்குந்தனிலும் துரையிருந்து, அங்கே யிருந்து அனுப்புவித்துக்கொண்டு புறப்பட்டு வீட்டேவந்து சாரிபோனார். இவர் இறங்கினவுடனே தம்பூர்ஷாம் அடியாமல் பதினைந்து

பிரங்கி சுட்டார்களென்றும் மூசே தும்மா நாளையிலே தம்பூர் ஷாம் அடித்து இருபத்தொரு பீரங்கி போட்டதினாலே அந்தப் படிக்கு மூசே துப்ப்ளேய்க்கு நடப்பிக்கவில்லையென்று இது நடந்த காரியம் சேனையுண்டு. அந்தக் குறை நிவர்த்தியாகத் தக்கதாக, இப்போது தம்பூர்ஷாமும் அடிப்பித்து இரண்டு தரம் இருபத்தொரு பீரங்கி விழுக்காடு போடுவித்துத் தாமும் கூடப்போய் ஷலங்கு மூன்றலை கடக்குந்தனிலுமிருந்து வந்தார் என்றும், அவரவர் சொல்லிக் கொண்டார்கள். சிறிதுபேர் தம்பூர் சாடை தாம்கூட வந்ததினாலே அடித்தார்களென்றுப்போலேயும் அதொரு சாடை பண்ணினார் என்றும் சொல்லிக்கொண்டார்கள். அப்பால் மூசே லபோர்தோனே கப்பலின் பேரிலே போனவுடனே பீரங்கி போடவில்லை. எதனாலே போடவில்லையென்றால், தன் வீட்டுக்குத் தான் போனபடியினாலே போடவேண்டாமென்று சொன்னானும் காட்டியம் என்று சொல்லிக்கொண்டார்கள். சிறிதுபேர் சண்டைக்குப் போகிறோமே எதிராளியைச் செயித்துப் பிற்பாடு ஆகுதென்று நிறுத்திப்போட்டார்களென்றும் அவரவருக்குத் தோன்றினபடிக்கெல்லாம் சொல்லிக்கொண்டார்கள்.

இப்போது இங்கிலீசுக்காரர் சண்டைக்கப்பல் திருக்கணமலையிலேயிருந்து வேலைபார்க்கிறார்களென்று அங்கே போய் சண்டை பண்ணி அவர்களை தாங்கள் செயித்து மூசே பெத்தோம் என்றிருக்கப்பட்ட கொம்மாந்தான் முதலான பேரைப் பிடித்துக்கொண்டு வருகிறதேயென்றும் அவர்கள் அகப்படாவிட்டால் அவர்களை மூழ்கடித்து அவர்கள் பேரில்லாமல் பண்ணிப்போட்டுவருகிறது இல்லாவிட்டால் தாங்கள் அந்தப் படிக்கு அவர்கள் கையில் ஆகிறதென்று தீர்த்துக்கொண்டு போகிறேன் என்று மூசே லபோர்தோனே கொம்மாந்தான் எல்லார் முன்னேயும் சொன்னான். (ஈ) துரையவர்களும் அப்படிதானே சொன்னார். மற்றுமுண்டான வெள்ளைக்காரரும் அப்படிதானே சொன்னார்கள். நடக்கவேண்டிய நியாயமும் அப்படிதானென்று சமஸ்தமான பேருக்கும் தோன்றியிருக்கிறதும் அப்படிதான் நடக்கப்போகிறதும் இந்தக்கப்பல் எட்டுககும் ஏற்றின சண்டைச் சாமான்கள், கோடாலி, ஈட்டி, ஏணி, மண்வெட்டி, கூடை முதலியன என்றால் அப்பால் எழுதவேண்டியதில்லையே. அதிலே அறிந்துகொள்ளவேண்டியது விவேகிகளாயிருக்கிறவர்களுக்குத் தெரியும். அப்பால் அதனுடனே சேர்ந்து ஆடு, பன்றி, கோழி, மாடு, கருவாடு, ரொட்டி, குழம்பு சாராயம், அரிசி, பருப்பு முதலியதும், நெய், எண்ணை, விறகு முதலான சாமான்களென்னென்ன உண்டோ அதுகளெல்லாம் எட்டுக்கப்பலுக்கு ஏற்றினது கடற்புளுகு மலைப்புளுகு என்று சொல்லுவார்களே அந்தப்படியேயல்லாமல் மித்துக்குள்ளே

யில்லை. இப்போது சண்டைக்கு வந்த கப்பலுக்கு ஒன்பதுக்கு நாலாயிரம் ஐயாயிரம் ரூபாய் ஏறக்குறைய மாசம் 1-க்கு லக்ஷம் ரூபாய் செல்லும் என்று பார்த்தார்கள். எத்தனையதமமாய்ப் பார்த்தாலும் எண்பத்தையாயிரம் ரூபாய் செல்லுமென்கிறதற்குச் சந்தேகமில்லைபோலே யிருக்கிறது.

இதற்கு அதளமாய்ப் பார்த்தாலும் செல்லுமேயல்லாமல் குறைச்சலாய்ப் பிடியாது. இப்பவும், இந்தக் கப்பலுக்குத் தின்பண்டம் சமஸ்தமும் ஏற்றியும் ரொக்கம் கொம்மாந்தான் கப்பல், லஷில் என்கிற கப்பலுக்கு நாலாயிரம் ரூபாயும் மற்ற ஏழு கப்பலுக்கும் மூவாயிரம் வீழுக்காடு ஒரு பெட்டியிலே போட்டு அந்தக் கப்பலுக்கு அனுப்பினார்கள். இந்தக் கப்பலிலே வந்த சனம் மூவாயிரத்தி முந்நூறுக்கு நோயாளிகளும் செத்தவர்களும் ஈடாய் இருநூற்றி நாற்பது சொல்தாதுகளும், ஐம்பது சட்டைக்காரரும், சிறிது ஒபிசியேமாரும் இவ்விடத்திலேயிருந்து கப்பலுக்கு ஏற்றினார்கள். திருக்கணாமலைக்குப் போகிறபடியினாலே வழிகாட்டுகிறதற்கு இரண்டு தண்டல்களை அமர்த்தி மீ 1 க்கு இருபத்து மூன்று ரூபாய் வீழுக்காடு ஒவ்வொருத்தனுக்கும் சம்பளம் நிர்ணயம்பண்ணி துரையவர்கள் கிட்டக் கொண்டுபோய் விட்டு, அவருக்குச் சொல்லி, அவர் உத்தாரப்படிக்கு மூசே லபோர்தோனே கையிலே ஒப்புவித்து அவர்களைத் தம்முடைய கப்பலிலே ஏற்றிவிட்டார். அவர்கள் சண்டைக்குப் போகிற கப்பலாச்சே என்று பயப்பட்டபடியினாலே, சண்டையானாலே உங்களைப் பாதிரியும் கப்பல் வைத்தியரும் அடிக் குத்தலிலே வைக்கிறது. அத்துடனே கூட உங்களையும் கூட வைக்கிறோமென்றும் உங்களுக்குச் சம்பளம் அல்லாமல் நல்லவெகுமானமும் கொடுக்கிறோம் என்றும் துரையவர்களும் மூசே லபோர்தோனேயும் ரொம்பப் பரவசம் சொன்னார்கள். இதல்லாமல் கப்பலுக்குக் கப்பல் ரெவ்வெண்டு கூலியாள்களும், நவ்வாலு பட்டணவரையும், ஒரு கட்டுமரமும் அனுப்பினார்கள். லங்கைமுனை யானபடியினாலே, கப்பல்கள் ஆற்று முனைகள், மலைகள் இது பார்க்கிறதற்கும், ஆழம் அப்போதைக்கப்போது அறிகிறதற்குமாக இவர்களை ஏற்றிக்கொண்டு போனதற்கு இவர்களுக்கு ரொம்ப வழக்கமானபடியினாலேயும், அவர்களுக்கு வழக்கமில்லாததினாலேயும் பாறுபடகிலே சபுறு பண்ணினவர்களைத் தேடி யழைத்துக்கொண்டு போனது மூசே லபோர்தோனே துரை கையிலே யனுப்புவித்துக்கொண்டு பதினைந்தாம் நாள் மூசே பெய்த்தோமென்கிற கொம்மாந்தானைக் கொண்டுவந்த பிற்பாடு உமக்கும் நமக்கும் சந்தோஷம் இப்போது எத்தனை உபசாரம் செய்யவேணும். என்னை யனுப்புவியுமென்றும் கேட்டானென்றும் .வெள்ளைக்காரரெல்லாரும் சொன்னார்கள். · இவர்களுக்குக் கஷ்டகாலம் போய்

நல்லகாலம் வந்தபடியினாலே இவர்களைச் செயித்து வருவ தற்குச் சந்தேகமேயில்லை அந்தப்படிக்குப் பரமேஸ்வரன் கடாக்ஷிக்க இருக்கிறார். அந்தப்படிக்கே நடக்கப்போகிறது. வந்தவுடனே சமஸ்த சனங்களும் ஆனந்தத்தையடையப்போகி றார்கள்.

1746 ஆ ஆகஸ்டு மீ 4 வ க்ஷய வ ஆடி மீ 23வ பிரகஸ்பதிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே ஆறு மணிக்குச் சந்தா சாயபு மகனும், படே சாயபு மகனும், உசேன் சாயபுமருமகன் அசத்து சாயபும், பின்னையும், அவர்கள் நாலுபேருமாக பாங்கு ஷலங்கின்பேரிலேயும் மற்றப்பேர் எல்லாரும் விடி ஷலங்கின் பேரிலேயும் இந்தப்படிக்கு ஐந்து ஷலங்கின்பேரிலே போனார் கள். இவர்கள்போய் லஷீல் என்கிற கொம்மாந்தான் கப்பலின் பேரிலே ஏறிப்போனப்போலே சின்ன கப்பித்தான் எதிராக வந்து அழைத்துப்போனான் கப்பலிலே இரண்டு புறமும் இருநூற்றி ஐம்பதுபேர் மாத்திரம் வரிசைவைத்துத் தம்பூரும் பீலியும், புல்லாங்குழலும், துரோம்பேத்தும் ஊதிவித்துச் சம்பிரமமாய் மகாமரியாதைபண்ணி, சங்கைபண்ணி, அப்பால் தான் எதிரேவந்து கட்டிக்கொண்டு அழைத்துக்கொண்டு போய்த் தன் காம்பிரா புதிதாய்ப் பொன் ரேக்குப் போட்டு சுருட்டித் திரையினாலே சிங்காரித்து இருக்கிறவிடத்திலே நாற்காலைக் கனமே போட்டிருக்கிறதிலே உட்காரவைத்து வெகு மரியாதையுடனே சிறிது உபசாரமான வார்த்தைகள் சொல்லி, அப்பால் இவர்களுக்கு உபசாரமான வார்த்தைகள் சொல்லி, லோகாப்பிரமமாய்ப் பேசியிருந்த பிறகு கிளாசுகள், கயிறை அவிழ்க்கிறதுமாய், கயிறைக் கட்டுகிறதும், பாய் அவிழ்க்கிறதுமாய் கட்டுகிறதும், பின்னையும் கப்பல்வேலைகள் என்னென்ன உண்டோ, அந்தச் சாடை வேலையெல்லாம் அப்போது சுறுக்காய் சுறுக்காய் நடத்தச் சொல்லி அந்த வேடிக்கைகளெல்லாம் காண்பித்து அதின் பிற்பாடு முதல் தட்டும் இரண்டாம் தட்டுமட்டுக்கும் காண்பித்து, அப்பால் பீரங்கிகள் முதலாகிய ஆயுத முஸ்தீதுகளெல்லாம் வரிசை வரிசையாய்க் காண்பித்து அப்பால் மறுபடியும் காப்பித்தான் கம்பிராவிலே வந்து உட்கார்ந்த பிற்பாடும் மூசே லபோர்தோனேய்க்குச் சந்தாசாயபு மகன் நூற்றிப்பத்து நூற்றிருபது ரூபாயிலே ஒரு சீரொப்பாவும், படேசாயபு மகன் ஒரு சீரொப்பாவும் கொடுத்தார்கள். மூசே லபோர்தோனே சந்தாசாயபு மகனுக்கு ஒரு துப்பாக்கி பக்கி னேத்து போட்டதும், படேசாயபு மகனுக்கு ஒரு துப்பாக்கியும் இரண்டு துப்பாக்கியும் விலை உயர்ந்ததாயிருக்கும். அந்தப்

படிக்குக் கொடுத்து, மறுபடியுமட்டுக்கும் வந்து அனுப்பிவித்து இவர்கள் கிழே சலங்கின் பேரிலே இறங்கின உடனே தான் அப்பால் போய் கப்பலுக்கு எல்லாம் இருபத்தொரு பீரங்கி விழுக்காடு நாலு கப்பலிலே ஏக வேளையிலே போடுவித்தான். அப்பால் எல்லோரும் தொப்பியைக் கழட்டி வீவுருகுவாய் முக்கால் கூவிக்கப் பண்ணுனபடி மெத்த மரியாதையும் சங்கையும் பண்ணினுன் இவர்களும் அதற்கு யோக்கியர் தான் போய் கப்பல் ஏறின உடனே, நின்ற வரிசையும் தம்பூரும் அடித்த படிக்கு மறுபடியும் இறங்கின பிற்பாடு பாறுகலைந்தார்கள் அதின் பிற்பாடு கரையிலே இறங்கிவிட்டே அவரவர் போனுர்கள்.

முசே லபோர்தோனே இஸ்தாதுரு எட்டுக் கப்பலும், பதினுெரு மணிக்குப் பாயெடுத்து இங்கிலீசுக்காரர்பேரிலே சண்டைக்குக் காவி குழம்பு, யாழ்ப்பாணம், திருக்கணுமலைக்குப் பயணமாய்ப்போனுர்கள். போகும்போது கொம்மாந்தான் கப்பலிலேமாத்திரம் பதினைந்து பீரங்கி போட்டார்கள். கோட்டையிலேயும் பதினைந்து பீரங்கி போட்டார்கள்.

1746 ஆூ ஆகஸ்டு மீ 5உக்கு அக்ஷய ஸு ஆடி மீ 24 உ வெள்ளிக்கிழமை

அதத்துசாயபுக்கு, சீதா அனுப்ப வேணுமென்று சொன்னதற்கு அரும்பாத்தைக்குச் சொல்லியனுப்பச் சொன்னுர். அந்தப்படிக்குச் சொல்லி யனுப்புவித்தேன்.

1746 ஆூ ஆகஸ்டு மீ 6உக்கு அக்ஷய ஸு ஆடி மீ 25 உ சனிக்கிழமை

இற்றை நாள் பதினுென்றரை மணிக்குக் குவர்னதோர் முசே துப்ளேய்க்ஸ் அழைப்பித்துச் சிறிது சரக்குக் கூட்டச் சொல்லி லீஸ்துரு எழுதிக்கொடுத்து ஒக்தோபர் மீ கடசாரத்துக்குக் கூட்டிக் கொடுக்கச் சொல்லச் சொன்னுர். நல்லதென்று சொன்னேன். அப்பால் குவர்னதோர் திரும்பியும் அழைப்பித்து ஒரு கோடி புறக்காளா எத்தனை மெல்லியதாய், எத்தனை நாணயமாய் அகப்பட்டாலுஞ் சரிய சென் என்கிறதும் ஒரு கோடி எத்தனை விலை உயர்ந்ததாயிருந்தாலும், எத்தனை நாணயமாயிருந்தாலும் சரி அந்த இரண்டு மாசத்திலேயே அழைப்பிக்கவேணுமென்று சொன்னுர். அவர் சொன்னபடியினுலே அப்படிக்கு லீஸ்துரு எழுதுகிற தஸ்திரத்திலே தினுசு வயணமெல்லாம் கண்டெழுதியிருக்கிறது.

இற்றைநாள் என்னையழைத்து, துரை இருபதினுயிரம் ரூபா திருவதி பாலுசெட்டி குமஸ்தாவுக்குக் கொடுக்கிறேன்.

மற்றது இனிமேலாகிறதென்று சொல்லி வேங்கடாசல செட்டிக்குச் சொல்லச் சொன்னார். அந்தப்படிக்குச் சொன்னேன். அவர் நல்லது என்று சொன்னார். அந்தப்படிக்கு இருபதினாயிரம் கொடுத்தார். அவன் வாங்கிப்போனான். துரை என்னுடனே சொன்னது: சலது வேங்கடாசல செட்டி இந்த ரூபாயை ஆருக்குக் கொடுக்கிறான் அல்லவென்று சென்னப்பட்டணத்துக்கு அனுப்புகிறானா? கனகராய முதலிக்குக் கொடுக்கவேண்டிய சம்மதிக்குச் சின்னமுதலிக்குக் கொடுக்கிறானா? அறிந்து சொல்லச் சொன்னார்.

இற்றைநாள் பதினொரு கட்டுக்கு எண்பது கோடி காடா காங்கு தீரச்சொல்லச் சொன்னார். நல்லதென்று சொன்னேன். அந்தப்படிக்குக் கணக்கு ரங்கப்பிள்ளையை அழைத்து என் வசத்திலே ஒப்புவித்துப் போடச் சொன்னார். அவன் என்னண்டைக்கு வந்து நாளையதினம் ஒப்புவித்துப் போடுகிறேன் என்று சொன்னான். நானும் நாளைக்குக் கட்டு எடுத்துகிடங்குக்கு அனுப்புமென்று சொன்னேன். நல்லதென்று சொல்லிவிட்டுப் போனான் ... ... ... ... ...

இற்றைநாள் சிறிது காடா நம்முடைய கிடங்குக்காரர் வசத்திலே துரை கணக்கு ரங்கப்பிள்ளை முத்திரை போட்டு ஒப்புவித்து மற்றதும் நாளையதினம் ஒப்புவிக்கிறேனென்று சொன்னார்.

17:6 ஆ. ஆகஸ்டு மீ 7 உக்கு அக்ஷய ௵ ஆடி ௴ 26உ ஆதிவாரம்,

இற்றைநாள் குவர்னதோர் என்னை அழைப்பித்து மசுக்கரைக்கு 1744 ஆண்டு ஒத்தோபர் மாதத்திலேயே உன் அமானிதமாய் முசே டய்ஸி வசம் கொடுத்தது எத்தனை கட்டென்று கேட்டார். இரண்டுகட்டு தொளாயிரத்துச் சிலவாலம் வருமென்று சொன்னேன். ஆனால் அந்தக் கணக்கை எழுதி வாவென்று சொன்னார். அப்போது எழுதிவைத்து பகுந்தராப்படிக்குத் தொளாயிரத்தி அறுபத்து மூன்றும். பணம் இருபத்தொன்றும், காசு முப்பத்தெட்டும் பிரான்சு எழுத்திலே எழுதிவித்தேன். நாளையதினம் கொண்டுபோய்க் கொடுக்கத் தக்கதாகவைத்தேன் ..... மதாம் துய்ப்ளேய்க்சு அழைத்து ஆயிரம் கமிசு சலவை $9\frac{1}{2}$ நெடு முழத்திலே தைக்கவேணும், அந்நூறு கமிசும் சேர்த்துப் போடச்சொன்னார்.

அதற்குப் புடவை உம்முடைய கையிலே வாங்கிக்கொள்ளச்சொன்னார் துரையவர்களென்று சொன்னான். நல்லதென்று

சொன்னேன். இதல்லாமல் எழுத்து துப்பட்டி ரெண்டுகோடி வேணும். அதுவும் உம்முடைய கையிலே வாங்கிக்கொள்ளச் சொன்னார் என்று சொன்னான். நல்லது அனுப்புவிக்கிறேன். இந்தப்படிக்குத் துரையவர்கள் எனக்கும் லீஸ்துரு எழுதிக் கொடுத்து உத்தாரங் கொடுத்தார் என்று சொன்னேன்.

இதன் பிறகு மூசே துய்பிளாம் தனக்கு ஆயிரம் வராகனுக்குக் காங்குப்புடவை வேணும், அது கமிசாகத் தைக்கிறது என்று சொல்லியது. உனக்கும் எனக்கும் பேர்பாதி பங்காயிருக்கட்டும். மசுக்கரையிலே நல்ல விலைக்கு விற்கும் என்று சொன்னான். அதற்கு நானும் நல்லதென்று சொன்னேன். ஒக்தோபர் மாதத்திலேயே முஸ்தீதாகவேணும் என்று சொன்னார். அந்தப்படிக்கு யோசனை பண்ணிச் சொல்லுகிறேன் என்று சொன்னேம். அதற்கு அவன் சொன்னது: தனக்குச் சரீரம் சுவஸ்தமில்லையே. மசுக்கரைக்குப் போனால் சுவஸ்தமாமென்றும் இந்தச் சரக்கை நான் கூடக்கொண்டு போகிறேனென்றும் சொன்னான். இது மூசே போர்சேத்து கூடப் பேசினான். முந்நூறு வராகன் புதனன்றைக்குக் கொடுக்கிறோமென்று சொன்னான்.

இற்றைநாள் காலத்தாலே கோன்சேய் வீட்டிலே குவர்னதோர் தவிர மற்றப்பேர் எல்லாரும் கோன்சேல் கூடி பதினொரு மணிக்குக் கலைந்துபோனார்கள்.

1746 ஆ ஆகஸ்டு மீ 8 உ க்ஷய வருஷம் ஆடி மீ 27உ சோமவாரம்.

இற்றைநாள் காலத்தாலே நேற்றையதினம் நம்முடைய சொந்தமாக முன் 1744 ஆ ஒக்தோபர் மீ 18 உக்கு ரக்தாக்ஷி வருஷம் ஐப்பசி மீ 6உ மசுக்கரைக்கு மூசே புள்ஸி வசமாய் அனுப்பின இரண்டு கட்டுக் கணக்கு நேற்று எழுதி வைத்ததைக் கொண்டுபோய் துரை கையிலே கொடுத்தேன். அதை வாங்கிக்கொண்டு சம்புதாசு நமக்குக் கப்பல்கள் வந்த பிற்பாடு என்ன எழுதினாயென்று கேட்டார்தானிது நடுவே நடந்த தப்பிதமெல்லாம் க்ஷமை பண்ணவேணுமென்றும், சிநேகம்புரோவிருத்தியாய் நடபிக்கத் தக்கதாகத் துரைக்குத் தெரியப்படச் சொல்லி நடத்தவேணுமென்றும், இத்தியாதி வயணங்கள் எனக்கு எழுதியனுப்பின சாடையை அவருக்கு எழுதியனுப்பினதாய்ச் சொன்னேன் அதற்கு அவர் மறு உத்தரம் என்ன எழுதினாய் என்று கேட்டார். அதற்கு நீ இங்கே வந்தபோது (ஈ) துரையவர்களுடனே சந்தாசாயபு காரியத்துக்கு இலக்ஷம் ரூபாய் உண்டியை கொடுக்கிறோமென்று சொல்லிவிட்டுப் போய் உடனே கப்பல் வராதென்றும்

அப்படியும் இப்படியுமாகச் சரிப்போனபடிக் கெல்லாம் எழுதி அனுப்பிவிட்டு. அப்பால் நானே எழுதின காகிதங்களுக்கு உத்தரவும் எழுதாமலிப்படி நடத்தின சம்மதியெல்லாம் இனிமேல் எப்படி நடப்பித்தால் மறையுமோ அந்தப்படி நடப்பித்தால் (ர) துரையவர்கள் சிநேகமபுரோ விருத்தியாய் நடக்குமென்று அதற்கு எப்படி யுக்தமாய் எழுதவேணுமோ அந்தப்படிக்கு எழுதி யனுப்புவித்தேன் என்று சொல்லி அவருடைய மூன்று படகு செம்மரம் நாகப் பட்டணத்துறையில் இறக்கத்தக்கதாகப் போகுதாம் அதற்குப் பாஸ் போர்ட் வேணுமென்று எழுதி யனுப்புவித்தார் என்று சொன்னேன் இங்கிலீசுக் கொடியின்கிழே யிருக்கிறவர்களுக்கு நாங்கள் பாஸ்போர்ட் கொடுக்கிறதில்லை யென்று சொன்னார். அதற்கு நானிருந்துகொண்டு கூடலூர் துறையிலே யிருக்கிற கிட்டாக் கப்பலுக்கு இங்கிலீசுக்காரருடைய சரக்கு ஏற்றுகிறதில்லை யென்று பிணையாகிலும் உடன்படிக்கையான சீட்டெழுதிக்கொடுத்தால் பாஸ்போர்ட் கொடுக்கிறோமென்று நீங்கள் சொல்லியிருந்தபடியினாலே அந்தப்படிக்கு எழுதி யனுப்பிவிட்டேன் என்று சொன்னதற்கு இதன் பிற்பாடு இப்படி கோன்சேய் பண்ணி தீர்த்தோம் என்றுப்போலே சொல்லவந்தார். அதற்கு நானப்படி சொல்லுகிறதற்கு நேர்ப்பிடியாது தாங்கள் தயவுபண்ணுகிறதே பெருமை யென்று சொன்னதற்கு உத்தரவு சொல்லாமற்போனார் அப்பால் வேங்கட்ட நரசிராசா வென்கிறவனுர், உனக்கேது குதிரையும். கத்தியும், சீரொப்பாவும் அனுப்பினது அவராரென்று கேட்டார் அவர்களுக்கு ரெண்டு லக்ஷம் வராகனுக்கு சீர்மை நடக்கிறது அவர்கள் நபாபுக்கு வருஷத்துக்கு வருஷம் லக்ஷம் ரூபாய் கொடுக்கிறதென்று அவர்களது பாளையப்பட்டு என்றும் மலையுங்காடும் பிரபலமாயிருக்கிறது என்றும், அவர்கள் சீர்மையிலேதான் சென்னப்பட்டணம் பாதிரி தோமாசு கோயில் கட்டியிருக்கிறாரென்றும், அவர்களுக்கும் எனக்கும் மூன்று நான்கு வருஷமாய் சினேகம் நடக்கிறதென்றும் இப்படிப்பட்ட சம்மதிகளும் இதல்லாமல்காவெட்டி ராசாவென்று எசமான் அவருக்குப் பயித்தியம்போலே கண்டபிற்பாடு அவர் மைத்துனன் வேங்கட்ட நரசிங்க ராசா என்கிறவன் அவரிடமாய் இருந்து காறுபாறுபண்ணுகிறான் என்றும், அவருக்கு நீர் வியாதி, சுறுக்காயிப்போ சென்னப்பட்டணத்துக்கு வந்து வியாதிக்கு அவிழ்தம் வாங்கிக்கொண்டு சற்று சுவஸ்தமாய் ஐந்து நாளைக்குமுன்னே பொம்மராசா பாளையத்துக்குப் போகிறானென்ற சேதி வந்தது. நானும் ஒரு மாசத்துக்கு முன்னே ஒரு குதிரைம். சீரொப்பாவும் அனுப்பினேன். அவர்களவ்விடத்துக்குப் போய்ச் சேருகிறதற்கு முன்னே தானே வேங்கட்ட நரசிங்கராசா சென்னப்பட்டணத்துக்கு வந்தபடியினாலே எங்கள் மனுஷர் அவர்கள் சீர்மை திருத்தணி

என்று இவ்விடத்துக்குப் பதின்காத வழியுண்டு. அங்கே போய் இருக்கிறார்களென்றும் எழுதிவந்தது. அவர் பாளையம் போய்ச் சேர்ந்த பிற்பாடு இவர்கள் அவ்விடத்திலிருந்தும் புறப்பட்டுப் பொம்மராசா பாளையம்போய்ச் சேருவார்களென்றும், வெங்கட்ட நரசிங்கராசா மகா குணாட்டியனென்றும், தர்மவானென்றும், மகா நிர்வாகியென்றும், இவர் சமஸ்தானத்துக் காரியம் விசாரிக்கத் துவக்கின பிற்பாடு அநேகம் சீர்மையெல்லாம் கைக்கொண்டார் என்றும், இப்படி அவர்கள் காரியம் ரொம்ப சொன்ன பிற்பாடு அவர்கள் வெகுமானம் நீ அழைபித்துக்கொண்டாயே யல்லாமல் எனக்கும் அவர்களுக்கும் சிநேகம் பண்ணிவித்து வெகுமாசம் அழைப்பியாமற் போனாயே என்று சொன்னார். நல்லதென்றும் மார்க்கமாயல்லோ அழைப்பிக்க வேண்டுமென்று சொன்னேன் அந்தப்படிக்கு அழைப்பிக்க வேணுமென்று சொன்னார். இந்த வெங்கட்ட நரசிங்கராசா சென்னப்பட்டணத்துக்கு வந்தவிடத்திலே சென்னப்பட்டணத்து மேஸ்தர் மாசி குவர்னதோரைச் சந்தித்த விடத்திலே பீரங்கி போட்டு வெகுமானமும் கொடுத்தாராம் சம்புதாசு, வேங்கட்ட நரசிங்கராசாவுக்குத் துரை யுடனே சொல்லி ஆனை வெகுமானம் பண்ணவேணுமென்று போராடினதற்கு, துரை கொடுக்கப்போகாது என்று சொன்னாராம். அதற்கு, சம்புதாசு தான் கொடுக்கிறேன். நீங்கள் கொடுக்கிறதுபோலே கொடுங்களென்று சொன்னதற்குச் செலவு என்று சொல்லுகிறதாயல்லவோ தோற்றிச் சொல்லுகிறாய். செலவுக்குப் பார்க்கவில்லை கும்பினிரிலே இல்லாத வாடிக்கைப் பணணப்போகாது என்று சொல்லி நிறுத்திப்போட்டுவிட்டாராம். பீரங்கி விடுகிறதற்கு ரொம்ப பிரயாசத்தின்பேரிலே போட்டதாம். இந்தப்படிக்கு ஊர்ச்சேதி வந்தது என்று செல்லத்தக்கன பேர் என்னுடனே சொன்னார்கள். இப்பால் பாளையம் போய்ச் சேர்ந்த பிற்பாடு நம்முடைய ராமகிருஷ்ணம சாஸ்திரி வெகுமானங் கொண்டுபோனதைக் கொடுத்து நடக்கிற சேதியறிவேன்.

*1746* ஆ ஆகஸ்டு மீ 8உ க்ஷய வரு ஆடி மீ 27உ சோமவாரம்.

மற்றப்படி இற்றைநாள் திருவாடி தாங்களுக்கு இசமான குமாஸ்தா நாகப்பட்டணத்தில் அரிராம டாக்கர் என்கிறவர் பேரிலே காரைக்கால் கொமான்தான் முசே ரிஷ்த்துக்கு (M. Riche) எட்டு நாளையிலே கொடுக்கச் சொல்லி உண்டிகை ஒன்பதினாயிரத்தைந்நூறு ரூபாய்க்கு எழுதிக்கொடுத்தான். இதற்கு உண்டிகை 100க்கு $\frac{3}{4}$ ஆக எழுபத்திரண்டு ரூபாயாக ஒன்பதினாயிரத்தி அறுநூற்றி எழுபத்திரண்டு ரூபாய்

கொடுக்கச்சொல்லி முசே தொலாராமுக்குக் கொடுத்து ரூபாய் தருவாடிக்கு வாங்கிக் கொடுத்தேன். அந்தக் கபுறு துரைக்கு வந்து சொன்னாப்போலே முசே தோந்தேலும் அவரும் பேசியிருந்தவர் என்னுடனே பதினாலு பதினைந்து குதிரைமணிலா, ஸைகெ ஆசியா, துருக்கி, அரேபியா இப்படிப்பட்ட குதிரையாய் முஸ்தீதாய் வைத்திருந்திரு என்று சொன்னார். நல்லதென்று சொல்லி, நயினார் கிரிமாசி பண்டிதனுடனே சொல்லி, ஊரிலே தமிழர் துலுக்கர் வசத்திலேயிருக்கிற குதிரைகள் ஒண்டுக்கு வெளியே விடவேண்டாமென்று சொன்னார். இப்போது இந்தக் குதிரை முஸ்தீதுபண்ணுகிற சாடை எது நிமித்தியம் என்றால் முசே லம்பார்தோனே வந்தவன் இருபத்து நாலு ஒப்பாஸ்துருமாரை வைத்துக்கொண்டானென்றும். அந்தப்படிக்குச் சிறிதுகள் முஸ்தீதுபண்ணி, சாரி புறப்படுகிறாரென்றும், இது நிமித்தியம் குதிரை சம்பாதிக்கச் சொன்னதென்றாப்போலே ஒப்பாஸ்துருமார்களுக்குச் சட்டைகள் உடுபாவனைகள் தைக்கிறார்களென்றும், இந்தப்படிக்கு மத்தேசு சொல்லி, முசே லம்பார்தோனே நாலு காபிரிகளை துரோம்பேத்து ஊத வைத்தானே அதற்கு என்னமா யோசனைபண்ணியிருக்கிறாரோ எல்லாம் நாலைந்து நாளையிலே வெளியாமென்று சொன்னான்.

ஆற்காட்டிலே பிரான்சுக்காரர் வக்கிலாயிருக்கிற சுப்பய்யன் என்கிறவன் எழுதியனுப்புவித்த வயணம், மதனாந்த பண்டிதரும் மலையப்பமுதலியும் படித்துத் துரைக்குச் சொன்ன காகித வயணம், சென்னப்பட்டணத்துக் குவர்னதோர் மேஸ்தர் மாசு என்கிறவர் நவாபு அன்வர்த்திகானுக்கு எழுதின காகித வயணம்: சென்னப்பட்டணத்தின் பேரிலே பிரான்சுக்காரர் சண்டைக்கு வருகிறதாய் யோசனைபண்ணி அவர்களுக்கு வந்த சண்டைக்கப்பலின் பேரிலே ஏணி தளைக் கட்டுகள், மண்வெட்டி, குந்தாலி, கோடாலி, கூடாரரெட்டிகள் கூடப் பின்னையும் கோட்டையின்பேரிலே சண்டை பண்ணுகிற சாமான்கள் ஏற்றினபடியினாலே இந்தச் சேதி எங்கள் பட்டணத்திலே இருக்கிறவர்த்தகர் மற்றுமுண்டான உத்தியோகஸ்தர், குடியானவர்கள் கேட்டு காபுறாப்படுகிறார்கள். எங்களுக்குச் சந்தேகமாயிருக்கிறது எங்களுக்கும் அவர்களுக்கும் கப்பல்கள்பேரிலே சண்டையானபடியினாலே, கடலின்பேரிலேயே யல்லாமல் கரையிலே கவையில்லை. கரையிலே இருக்கிற பட்டணம் உங்கள் ராச்சியத்துடனே சேர்ந்திருக்கிறது நீங்கள் எசமான்களேயல்லாமல் எங்களுக்குத்தான் அவர்களுக்குத்தான் உங்களுடைய உத்தரவில்லாமல் இவ்விடத்திலே நடக்கப்போகாது. ஆனபடியினாலே, நீங்கள் அவர்களுக்கு எங்கள் பட்டணத்திலே வராதபடிக்குத் தாக்கீது பண்ணவேணுமென்று எழுதிப் போனவுடனேயும், இந்தப்படி வயணமாய்த்தானே

சம்மதி ராயனுக்கு ஒரு காகித மெழுதி யனுப்பினரென்றும், இந்தக் காகிதத்தைச் சென்னபட்டணம் வக்கீல் சம்பதி ராயனுக்குக் கொடுத்து முகவார்த்தையாய்ச் சிறிது சேதி சொல்லிக் காகிதமுங் கொடுத்து உபசாரமாய்த் தங்கள் துரைகள் சொல்லச் சொன்னதாய்ச் சொன்னதின்பேரில், சம்பதிராயன் தன் காகிதம் தான் பார்த்துக்கொண்டு நபாப் காகிதம் கொடுங்கோள். நான் தர்பாருக்கு வந்தவுடனே அசரத்து நபாப் அவர்களும் நாமும் பேசிக்கொண்டு உத்தரவு சொல்லுகிறதே யல்லாமல் இப்போது நபாப் காகிதத்தை நீங்கள் கொண்டு போய்க் கொடுங்கோளென்று சென்னப்பட்டணத்து வக்கிலுடனே சொன்னற்போலேயும், அவன் நபாப் காகிதத்தை நபாபுக்குக் கொண்டுபோய்க் கொடுத்தானென்றும், அந்தக் காகிதம் நபாப் பார்த்தாற்போலே சென்னப்பட்டணத்துக்கு இரண்டு அரக்கர்களையும் புதுச்சேரிக்கு இரண்டு அரக்கர்களையும் அனுப்பி, புதுச்சேரியிலேயும் சென்னப்பட்டணத்திலேயும் நடக்கிற சமாசாரம் அப்போதைக்கப்போது விசாரித்து எழுதியனுப்பச் சொல்லியும் அனுப்பினர் என்றும் இதல்லாமல் நபாபு அவர்கள் சாதத்துப் பந்தலிலே யிருந்து கிட்டாரக் கங்குக்குப் பாயெடுக்கிற மூன்று கப்பலுக்குப் பாஸ் போர்ட் அழைப்பிக்கச் சொல்லி, தாமும் துரையவர்கள், பேருக்குக் காகிதமெழுதி அனுப்பினர் என்றும் இந்தப்படியாக சுப்பய்யன் காகித வயணம் துரைக்குச் சொன்னேன். அந்த மாத்திரத்திலே நகைத்துக்கொண்டு அப்பாலே போனராம். அப்பால் நபாப் மூன்று கப்பலுக்குப் பாஸ்போர்ட் அனுப்பச்சொன்ன காகிதத்தைப் படித்துக் காண்பித்தார்கள். அதற்கு அந்தக் கப்பல் காரர் இங்கிலீசுக்காரர் சரக்கு மற்றது ஏற்றுகிறதில்லையென்று கருறு நாமா எழுதிக்கொடுத்தால் அந்தப்படிக்கே பாஸ்போர்ட் அனுப்புகிறோமென்று மறு காகிதமெழுதி யனுப்புவிக்கச் சொன்னரென்று மதனந்த பண்டிதன் வந்து என்னுடனே சொன்னன்.

இற்றைநாள் ராத்திரி சாயுங்காலமான இரண்டு நாழிகைக்கு இந்த ஊரிலே யிருக்கிற விக்கிரவாண்டி செட்டிகளுக்கு குருவாயிருக்கிற அம்பலத்தாடுமய்யர் மரணத்தை யடைந்தார். இராத்திரி பதினெட்டு நாழிகைக்கு மடத்திலே தானே சமாதிவைத்தார்கள். இவர் தம்முடைய சரீரம் நில்லாதென்றறிந்து இவரோடே கூட பெரிய மனுஷரிடத்துக்குப் போகிறுப்போலே போக்குவருத்தாய்க் கனகசபை தம்பிரானென்றும் சடாதாரியாய் திரிவார். இதல்லாமல் மடத்துக்காரியங்களுக்கும் அவரண்டைக்குப் போகிறதும் மடத்துக்காரியம் பார்த்துக்கொண்டு நாளதுவரைக்கும் திரிந்தவரை 26வ ஆதிவாரம் அம்பலத்தாடு அய்யர் தம்முடைய இடத்துக்கு அவரை நியமித்து, தாம் போட்டுக்கொண்டிருக்கிற ஐந்து கொத்து

ருத்திராக்ஷதாவடத்தை அவர் கழுத்திலேபோட்டு, முன்னே அவருக்குச் சரணம் பண்ணினோம். அப்பால் அந்த மடத்திலேயிருக்கிற பண்டாரங்கள், பின்னையும் இருக்கிற சிஷர்கள் அனைவரும் வந்து சரணம் பண்ணிக்கொண்ட பிற்பாடு நம்முடைய இடத்துக்கு இவரைப் பட்டம் கட்டினாப்போலேயாச்சுதே. நாம் நாளை சாயுங்காலம் கைலாயத்திற்கு எழுந்தருளுகிறோம். அப்பால் அந்தக் காரியங்களை நிருவாகம் பண்ணிக்கொண்டு ஆதீனம்காப்பாற்றிக்கொள்ளுங்கோளென்று சொன்னாராம். அந்தப்படிக்குத்தானே கைலாயத்துக்கு எழுந்தருளினார். இ போது மடத்துக்கு வந்தவன் நாற்பது வயது உண்டு. அவன் நல்ல அந்தஸ்துகாரன். முகக்களை யுண்டாயிருக்கிறவன். நம்ம பட்டத்து யோக்கியமானவனாகத் தோணுது .. ...

இதற்கு எட்டாம் நாள் சோமவாரம் நாள் ராத்திரி வழுதாவூருக்கு முன் தேவனாம்பட்டணம் துரைத்தனம் பண்ணின ஆப்படு (Habbard) துபாசித்தனம் பண்ணின பண்டில் முத்தியாலு நாயக்கர் வந்து மிருசென்கான் என்கிற கில்லேதார் பேட்டி பண்ணிக்கொண்டு அவர் கையிலே குதிரை சிரோப்பா வெகுமானம் வாங்கிக்கொண்டு அங்கே யிருந்து எனக்கு ஒரு காகிதம் தேவனாம்பட்டணத்துக்குப் போகிறோம் என்று ராமபத்திரரெட்டி மனுஷன் கையிலே யனுப்பிவிட்டு மறுநாள் ராத்திரி பத்து நாழிகைக்கு தேவனாம்பட்டணம் போய்ச் சேர்ந்தார்கள். அவர் வந்தகாரியம் தேவனாம்பட்டணத்து துரை (மேஸ்தர் அயின்) யண்டை (Mr. Hinde) க்கு இருக்கிற ஒருகண்டி ரங்கப்பநாயக்கன் கபுறு முன்னமே விசாரித்து எழுதியனுப்பவில்லையென்றும் இவருக்கு ராமேசுவரக்கரை மட்டுக்கும் வாடிக்கையானபடியினாலே மற்றங் காரியமாய் இந்தச் சண்டை வேளையிலே மனிதரை வைத்து விசாரிக்கச் சொல்லித் திட்டம்பண்ணி அழைப்பிப்பானென்று இவரை யனுப்பினதாய்ச் சொல்லிக்கொள்ளுகிறார்கள். இதைவிட காரியமும் வேறே காணவில்லை.

*1746* ஆ ஆகஸ்டு மீ 9 உக்கு அக்ஷய ஞு ஆடி மீ 28 உ செவ்வாய்க்கிழமை.

இற்றைநாள் துரைக்கு தலைநோவாயிருந்து ராத்திரி தூக்கமில்லாததினாலே பதினொருமணி மட்டுக்கும் நித்திரையாயிருந்தபடியினாலே ஆரும் பனிரெண்டுமணி மட்டுக்கும் துரையண்டைக்குப் போகவில்லை. தர்பாரில்லை.

1746 ஆ. ஆகஸ்டு மீ 10 உக்கு அக்ஷய ஸு ஆடி மீ 29 உ புதன்கிழமை.

இற்றைநாள் நடந்தசேதியென்னவென்றால்: இமாம்சாயபு மனுஷன் துரையவர்களுக்குக் காகிதம் எழுதிக்கொண்டு வந்து கொடுத்தான். அதிலே யெழுதியிருந்த வயணம் தங்கள் மனுஷன் ஒருத்தனை திருவேங்கடப்பிள்ளையவர்கள் சாவடியண்டையிலே வெட்டிப்போட்டார்களாம். நன்றாய் விசாரித்து அதுக்கேற்ற யாக்கினைபண்ணவேண்டும் ஆரேது நிமித்தயம் செய்தார்களோ ஆரு இன்னாரென்று விசாரித்து அந்தக் காகிதத்திலேயிருந்ததைத் துரைக்குச் சொன்னமாத்திரத்திலே யென்னை அழைத்து ... ... காலாபேட்டை நாட்டாருடைய காரியமெல்லாம் விசாரிக்கிற மூசே லேகேயி (M. Lahaye) என்னிடம் இந்தக் கொலை செய்தி தெரிவிக்கவில்லையென்றும் சொன்னார் ... ... ... மலையப்பமுதலியையும் மதனந்த பண்டிதரையும்,

முன்னாலே ஒரு காகிதம் வந்துசேர்ந்து சொன்னோமே யென்று சொன்னதற்கு என்னைப் பார்த்து அது எந்த எல்லையென்றுகேட்டார். கும்பினீர் எல்லைதான் என்று சொன்னேன். அதை எழுதியனுப்பி நன்றாய் விசாரித்துச்சொல்லென் றுசொன்னார். நல்லதென்று சொல்லிவந்தேன். அப்பால் நபாபு காகிதமொன்று வந்தது அதிலே கோவனத்திலே யிருந்து தரங்கம்பாடிச் சேரிக்கு கப்பல் போகிறது. துலுக்கர் கப்பல் அதற்கு பாஸ்போர்ட் அனுப்பச்சொல்லியும் அதற்கு கருநாமாவும், இங்கிலீசுக்காரர் சரக்குமற்றது ஏற்றினால் கப்பலும் சரக்கும் அடங்கலும் எடுத்துக்கொள்கிறதென்று எழுதிக்கொடுத்து பாஸ்போர்ட் அனுப்பச்சொல்லி எழுதியிருந்ததைப் படித்துச்சொன்னதின்பேரில் என்னையழைப்பித்து இந்தப் பாஸ்போர்ட் எழுதுகிறதற்கும் கருநாமா எழுதுகிறதற்கும் வயணமும் மூசே துப்புளாமுடைய இடத்திலிருந்துசெக்ரெத்தேர் உத்தியோகம் பார்க்கிற மூசே மீனசு என்கிறவனுடனே சொல்லுகிறதற்கு என்னையும் கூடவைத்துக்கொண்டு சொல்லி எழுதிவித்துவாங்கிக் கொடுக்கச்சொல்லிச் சொன்னார். ... ... ... ... மூசே லேது சின்னமுதலியை முறுகு கிண்டன கூட்டச் சொல்லச் சொன்னாராம். அதைப்போய்ச் சொன்னதற்கு அந்தப்படிக்குக் கூட்டுகிறதானவென்று கேட்டு ஊர்ச்சிதமாய்க் கேட்டு வந்து சொல்லுமென்று சொன்னதற்கு (அந்தப்படிக்கு கூட்டுறவுதானவென்று கேட்டு ஊர்ச்சிதமாய் கேட்டு) சுப்பய்யன் மகன் கிருஷ்ணய்யன் மறுபடி சின்னதுரையைக் கேட்டதற்கு சற்று நேரம் யோசனைபண்ணி ரங்கப்பனண்டைக்குப்போய் கும்பினீருக்கு இருபது கோடி முறுகுகிண்டன கூட்டச்சொல்லு என்று சொன்னாரென்று கோட்டை சுப்பய்யன் மகன் கிருஷ்

ணய்யா வந்து சொல்லி மேலே யெழுதப்பட்ட சேதியும் வந்து சொன்ஞன். ... ... ... ... ... ... ...

1746 ஆ ஆகஸ்டு மீ 11 உக்கு அக்ஷய ஸ்ரீ ஆடி மீ 30 உ வியாழக்கிழமை

இத்தனை நாள் சின்னமுதலி துரையண்டைக்கு வர வேண்டியதென்று வந்து நம்முடைய கிடங்கு திண்ணையின் பேரிலே உட்கார்ந்து இருந்தான். எட்டு மணி நேரம் நானும் வீட்டிலேயிருந்து வந்து கூட உட்கார்ந்திருந்த பிற்பாடு சரீரம் ஆரோக்கியமாயிருக்கிறதாவென்று கேட்டேன். சற்று லகுவாயிருக்கிறது வெளியே புறப்பட்டால் தலை கிறுகிறுவென்று சுற்றுகிறுப்போலே யிருக்கிறது என்று சொன்னர். அப்படியா பலஹீனத்திலே கண்டது என்று சொன்னேன். மெய்தான் முதலியார் காலம்பண்ணிப்போன பிற்பாடு மெத்த பலஹீனமாய்ப் போச்சுதென்று சொன்னர். விசாரமல்லவாவென்று சொன்னேன். இப்படி லோகாபிராமமாய்ப் பேசியிருந்து துரைக்கு ராத்திரி தலைநோவு கண்டதினலே பின்னையும் நாலு நாழிகை தூங்குகிறுப்போலே காண்கிறது. நான் வீட்டுக்குப் போகிறேன் என்று அனுப்புவித்துக்கொண்டு வீட்டே போனர். இவர் வந்த சாடை யென்னவென்றல் நீர் போகாத படியினலே .. ... ... ... ...பாஸ்போர்ட் உத்தியோகம் அவருக்கு கொடுக்கிறதேயானல் ஒரு மாத ... ... ... ... ... ... ... ... ...சொன்னபடியினலே போய்ப் பார்ப்போம் என்று... ... ... ... ...துமுண்டு. ஒரு வேளை வருமென்று இப்படி பலவிதமாய் சஞ்சலத்தின் பேரிலே வந்து துரை பேட்டியில்லாமலே வீட்டே போனன்.

1746 ஆ ஆகஸ்டு மூ 11 உக்கு அக்ஷய ஸ்ரீ ஆடி மீ 30 உ வியாழக்கிழமை

இற்றை நாள் பத்தரை மணிக்கு, குவர்னதோர் அழைப்பித்து அருக்குப் பண்ணவேண்டுமென்று கேட்டார். நல்லதென்று சொன்னேன். ஒரு நாளைக்கு என்ன இறங்கும்படி செய்யலாமென்று கேட்டார். ஒரு நாளைக்கு ஐந்நூறு பிருசுக்கு முஸ்தீதுபண்ணி இறக்கலாமென்று சொன்னேன். அதற்குத் துரை சொன்னது: ரொம்ப பொடுத்தியல்லா புகை நாற்றம் அடிக்கிறது என்றும், அதனுடைய சாடையே அப்படிதானே முப்பது வருஷமாய் எங்கள் வசமாயிருக்கிறது. எப்போதும் செய்கிற சட்டம் ஒரு சட்டம்தான் என்றும் சொன்னர். ஒரு தினுசுதானு? இரண்டு தினுசு உண்டோவென்று கேட்டார். அது பராது என்று ஒன்றுண்டு கேட்டேன்

என்று சொன்னதற்கு நல்லது முஸ்தீது பண்ணச் சொல்லென்று சொன்னார். ஒரு நாளைக்கு ஐந்நூறு பிராசுக்கு இறங்காது. பிரயாசம் இதற்குத் தளவாளங்கள் சேர்க்க வேணும் என்று சொல்லுகிறதற்குச் சமயமாய் இருக்கவில்லை. இன்னமொரு வேளை சொல்லலாமென்று சொல்லி யோசனை பண்ணிக்கொண்டு வந்துவிட்டேன் அப்போது ஒலாந்தாக்காரர் காகிதத்திற்குப் பதில் காகிதத்தைக் கொண்டுவந்து மூசே தெப்பேமேனியும், மூசே மீறேவும் கொண்டு வந்து கொடுத்தார்கள். இது நிமித்தியம் எது என்று பார்த்தால், நாகப்பட்டணத்தார் சுலுப்பும் குரக்குத் தர்பாரும் பதினைந்து நாளையின்போது இவர்கள் கப்பல் பிடித்து வந்து அப்படி எங்கள் ஊரைப்பிடிக்கக் காரியமென்ன வென்று எழுதினாப்போலே காண்கிறது அதற்குப் பதில் உத்தரவு இவர்களும் எழுதி அந்தச் சவாது படித்துப் பார்த்து அதையெடுத்து எழுதி இன்மேலே கோன்சேல்காரர் எல்லாரும் கையெழுத்துப் போட்டு அனுப்புவார்கள்போலே காண்கிறது. இவர்கள் என்ன எழுதினார்களோ தெரியாது. கிறேமேனு அறியவேண்டியது.

இப்படியிருக்கையிலே காலாப்பேட்டையிலே மாரியம்மைத் திருநாள் என்று ஊரார்வந்து துரை உத்தாரம் வாங்கிக் கொடுக்கவேண்டுமென்றமலையப்பமுதலியைக்கெட்டார்களாம். மலையப்ப முதலி, எனக்குத் தெரியாதென்று சொன்னாராம். அதன்பேரிலே கிரிமாசி பண்டிதன் போய் துரையுடனே எச்சரித்ததற்கு ரங்கப்பிள்ளையை அழையுமென்று சொன்னாராம். அதன்பேரிலே என்னைவந்து அழைத்தார்கள். நான் போன உடனே துரையவர்களிருந்துகொண்டு காலாப்பேட்டையிலே ஒருத்தனைக்கொன்றுபோட்ட சேதி விசாரிக்கச் சொல்லிச் சொல்லியிருந்தேன். விசாரித்தாயா என்று கேட்டார் மனிதர் போனார்கள் வந்தவுடனே கபுறு சொல்லுகிறேன் என்று சொன்னேன். நல்லதென்று சொல்லி, அசத்து சாயபுடனே கண்டு பேசினையாவென்று கேட்டார். கண்டுபேசினேன். நான் சுவாத்திரிகனல்லவே என்று சொல்லிப் பின்னையும் அதற்கு அநேகம் சங்கதிகள் சொன்னான். நானும் அதற்குத் தக்கதாக உத்தரவு கொடுத்தேன். அப்பால் ஆற்காட்டுக்கு எழுதினாப் போலே காணுது அந்த உத்தரவுவந்தபிற்பாடு நிஷ்கிரஷையாய் சொல்லுவான்போலே காணுதென்று சொன்னேன். அவர்கள் ஒருவேளை சம்மதியாகாமல்போனால் நின்றநாளைக்குகூட வட்டி கொடுத்துத் தீரவேணுமே இந்த ஒரு மாசத்தை வட்டி என்ன போடவேணும் என்று சொல்ல வந்தார். அதற்கு நான் அவ்வாரத்திற்கு முன்னமே சொல்லுகிறதற்கு இவன் எஜமானனல்லவே என்று சொன்னேன். அதற்குச் சும்மாயிருந்தார். அப்பால் காலாப்பேட்டையிலே என்ன

மோ திருநாளாம். முன்னே நடந்தபடிக்குச் செய்து கொள்ளுகிறோம் என்று கேட்கிறார்களென்று சொன்னதற்கு முன் அந்தப்படிக்குச் செய்துகொள்ளச் சொல்லென்று சொன்னார். அந்தப்படிக்கு, காலாப்பேட்டைக் குடிகளுக்குச் சொல்லிப்போகச் சொன்னேன்,

இற்றைநாள் சாயுங்காலம் ஆறு மணிநேரம் ஏகாம்பரய்யனும், தேவனாம்பட்டணத்திலிருந்து பண்டில் முத்தியாலு நாயக்கன் மனிதன் ஸ்ரீ வைஷ்ணவப் பிராமணனும், நான் துரை வீட்டுக்குப் போய்விடவேணும் என்று தெருவிலே நிற்கும்போது வந்தார்கள். வந்தவர் என்னை அப்பாலே அழைத்துப்போய் முத்தியாலுநாயக்கர் மனிதன் இந்தப் பிராமணன் அவரனுப்புவித்தார். உங்களைச் சிறிது சேதி தெரிந்துகொண்டு வரச் சொல்லியனுப்பினார் என்றும், தேவனாம்பட்டணம் கூடலூராரிருந்தவிடத்திலே இருக்கவில்லை, யாம் ராமாரெல்லாம் ஊரிலே வளைய வளைய வருகிறதுமாகவிருக்கிறது. இவ்விடத்திலே ஏதோ ஏணிகள் ஏற்றுகிறார்கள் என்றும் கூத்துகிறார்களென்றும் இப்படி கோட்டை வாங்குகிற சாமான்களுண்டோ அதுகளெல்லாம் ஏற்றுகிறார்களென்றும் இந்தச் சேதி அவ்விடத்திலே அடிபட்டு அதின்பேரிலேதான் ரொம்ப தத்தளிக்கிறது. அதினாலே முத்தியாலு நாயக்கனும் அறியாமல் குஞ்சு குழந்தைகளுடன் இவ்விடத்துக்கு வந்தோம்.

இதேதாகிலும் உண்டானால் சொல்லியனுப்பினால் பசங்களை அப்புறமனுப்பிவிடுவோமென்றும், உங்களைவிட ஆப்தம் வேறேயில்லை என்றும் இன்று நூதனமல்லவே. இந்தப் பிராந்தியத்துக்கு வந்து பதினைந்து வருஷமாச்சுது. அன்றுமுதல் இன்றையவரைக்கும் ஏக கிரகத்தியாயமாய் நடத்திவருகிறபடியினாலே என்னுடைய சுக துக்கம் உங்களுடையது ஆனபடியினாலே, உங்களுடைய அபிப்பிராயம் அறிந்து நீங்கள் பார்த்துப் பசங்கள் குஞ்சுகளிருக்கட்டும் என்று தெம்பாய்ச் சொன்னால் இருக்கிறோம். இல்லாவிட்டால் பசங்களைக் குஞ்சுகளையெல்லாம் அனுப்பிவிட்டுத் தானும் இரண்டு மூன்று நாளுமிருந்து அப்பாலே போய்விடுகிறோமென்று சொல்லச் சொன்னாரென்றும். இல்லையென்று இந்தப் பிராமணனை உங்களண்டையிலே வைத்துக்கொண்டு, அப்படி ஏதாகிலும் சமயம் உண்டானால் சொல்லியனுப்பச் சொன்னாரென்றும், பின்னையும் இப்படி அநேக விதமாக ஆப்பித்திகரிச் சாடை போலே சொல்லச்சொன்னதாய் ஏகாம்பரஐயர் அந்த வைஷ்ணவனை அழைத்துக்கொண்டு தெருவிலே நின்றாப்போலே போனார். அதற்கு..... நான் அதிலே ஆலோசனை பண்ணிக்கொண்டு சொன்னதற்கு முத்தியாலு நாயக்கன் நல் சாமர்த்தியம் என்னுடனே காண்பிக்கிறான் என்று மனதிலேவைத்துக்

கொண்டு சொன்ன உத்தரம் இவ்விடத்திலே நடக்கிற சேதி எனக்குத் தெரியாது. என்னைப் பிறப்பித்த ஆண்டவனுக்குத் தெரிந்தால் தெரிந்ததேயல்லாமல் மற்றப்படிக்கு மனுஷனுக்குத் தெரிகிறதேயில்லை. அத்தனை பந்தோபஸ்தா என்றால், எந்தச்சேதியும் துரையவர்கள் கோன்சேலிலேகூடச் சொல்லுகிறதில்லை. அவர் அறிந்தது என்னமோ? அவர் எழுதுகிற காகிதமும் இறகும் தீந்தாவும் அறிந்ததேயல்லாமல் மற்றப்பேருக்குத் தெரியாது. இப்போது கப்பல்களுக்கெல்லாம் கொம்மாந்தானய் வந்த மூசே லபோர்தோனேவுக்குச் சொல்லத் தக்கனசேதி சொல்லி இருப்பார். சிறிதுசேதி இனிமேல் நடக்கவேண்டியது அவன்கூட அறியான், துரையவர்கள் அறிந்து, அவர் போட்டுக்கொண்டிருக்கிற குல்லா அறிந்தால் அதை நூறு துணுக்காய்க் கிழித்துப்போடுவார். அப்படியிருக்க, ஆருக்கு இந்தச் சேதி தெரியப்போகிறது—இப்போது நீர் வந்தசேதி யாராகிலும் அறிந்தால் பட்டணத்திலே கபுறு விசாரித்ததற்கு வந்தார்களென்றால், அப்பால் என்னமாகிலும் பொல்லாப்பு நடந்தால் ஒருத்தராலேயும் அதற்கு மனுஷனையில்லை. இதல்லாமல் இந்தப் பட்டணத்திலே நடக்கிற கபுறு துரையவர்களுக்கு முகமும் கண்ணாடியும்போல சொல்லுகிறார் மறுபட்டணத்துக் கபுறுகள் சொல்ல, அப்படிச் சொல்லுகையிலே தம்முடைய பட்டணத்துக் கபுறு சொல்லுகிறது என்ன ஆச்சரியம். நீர் இப்போது வந்து என்னுடனே பேசின சேதி அப்போதே துரையவர்களுக்குக் கபுறு ஆயிருக்கும். நீ ரிங்நேரமே அப்பால் புறப்பட்டுப்போகிறது நல்லதென்று சொன்னேன். அப்படியா? இவ்விடத்துப் பூர்வோத்திரம். ஆனாலிந்த க்ஷணம் அப்பால் போகிறேனென்று சொல்லி நீங்கள் சொன்ன வார்த்தையாம்படிக்கு முத்தியாலு நாயக்கனுக்குச் சொல்லுகிறேன் என்றார். அப்படிச்சொல்லி நம்முடைய தெண்டம் சொல்லும். அவர்கள் தம்பிமாரை தீவிஞ் சினேமென்று சொல்லுமென்று உபசாரமாய்ச் சொல்லியனுப்பி விட்ட பிற்பாடு ஏகாம்பரய்யனைப் பார்த்து முத்தியாலு நாயக்கன் சொல்லியனுப்பினது எப்படியிருக்கிறது என்று கேட்டேன். அவ்விடத்திலே நடந்த சேதிபோலே தோற்றிப் பக்ஷமையாய் நான் உங்களை யறியவேணுமென்று அழைத்து வந்தேன் என்று சொல்ல வந்தார். முத்தியாலு நாயக்கன் வஞ்சனையை நீர் அறியீரா. அவன் வந்திருக்கிற காரியம் ரங்கப்ப நாயக்கன் கபுறு திட்டமாய் விசாரிக்கத் தெரியாது. முத்தியாலு நாயக்கனாலல் முன்னிருந்த வாடிக்கைப்பட்டவன், மகா சதிராளியான், நிர்வாகி. சமஸ்தமானபேரும் சினேகம். அந்தப் பட்டணத்திலே யிருக்கிறவர்களெல்லாரும் சினேகமா யிருக்கிறபடியினாலே கபுறுகளிடமாய் வருமென்றுங் காட்டுமிவரைச் சென்னப்பட்டணத்துத் துரைகள் தேவனும்பட்டணத்துக்கு அனுப்புவித்ததென்று முன்னே தானே நான்

சொல்லியிருந்தேனே. அந்தச் சாடைக்குச் சரியாய்க் கபுறு நமதண்டையிலேதானே இரகிக்கவந்தாரென்று சொன்னேன். அப்படியா, மெய்யென்றிருந்தேன். அது மெய்தான். முத்தியாலு நாயக்கன் வஞ்சனைக்காரன் அல்லவா? ஆனால் நீர் இந்தச் சாடை யறிந்தறிந்து உத்தரம் நன்றாய்ச் சொன்னீர் என்றார். உள்ள தத்துவமும் உம்முடையதுதானென்று சொன்னேன். அந்த மட்டிலே ஏகாம்பரய்யர் வீட்டுக்குப் போனான். நான் துரைவீட்டுக்குப் போகவேணுமென்று புறப்பட்டேன். மழை வந்தபடியினாலே சவாரிப்போனேன்.

*1746* ஆ ஆகஸ்டு மீ *12*வ‌க்கு அக்ஷய ஆடி மீ *31*வ வெள்ளிக்கிழமை.

இற்றைநாள் காலத்தாலே கனகராய முதலி தம்பி சின்ன முதலி துரைவீட்டுக்கு வந்தான். துரையவர்களுக்குத் தலைநோயானபடியினாலே இப்புறத்திலே இருந்துவிட்டே போய் விட்டான். நானும் துரைவீட்டுக்குப் போனவிடத்திலே தலைநோய் என்று சொன்னார்கள். நானும் பனிரெண்டு மணிக்கு வந்துவிட்டேன். மரியசேற்தூறாது என்கிற கப்பலின் பேரிலே கூடாரங்களும், ஈட்டிகளும், மருந்துகுண்டும், பின்னையும் என்னென்ன சாமான்கள் சண்டைச் சாமான்களுண்டோ அந்தச் சாமன்கஙெல்லாம் ராத்திரியிலே ஒருத்தரையும் அறியாமல் ஏற்றுகிறார்கள். ஏணிகள்கூட ஏற்றினார்கள் இனிமேல் எங்கே அனுப்புவார்களோ தெரியாது. இது பார்த்தால் கரையிலே இறங்கிச் சண்டை கொடுக்கிற சாமான்களாய் இருக்கிறதேயல்லாமல் கப்பலின்பேரிலே சண்டை கொடுக்கிறதற்குக் கவையில்லாத சாமான்களானபடியினாலே கரையின்பேரிலே சண்டைக்காக ஏற்றுகிறதாகத் தோற்றுது. கிறமேணு வெளியாகும்,

இற்றைநாள் மத்தியானம் மூன்று மணிக்கு மூசே பரிதி காரைக்காலுக்குப் பயணம் சாகிப்போனான். போகையிலே ஒருத்தர் கையிலேயும் அனுப்புவித்துக்கொள்ளவில்லை. இரண்டாம்பேர் அறியாமல் தானும் தன்னண்டையிலே இருக்கிற நாலு சேவகரும் பல்லக்கும் இந்தமட்டிலே போனான். பறங்கிபேட்டை மட்டுக்கும் கரைவழியேபோ யப்பாலங்கேயிருந்தாப்போலே சலங்கினபேரிலேறி காரைக்காலுக்குப் போகிறதாய் காரைக்கால் திருவேங்கடப்பிள்ளை வந்து கபுறு சொன்னான்.

மத்தியானம் கண்டால் குருவப்பசெட்டி நான் ஸ்நானம் பண்ணுகிறபோது நீங்கள் ஒரு சேதியும் சொல்லுகிறதில்லை. இப்படியுண்டாவென்று வந்து கேட்டான். என்னவென்று கேட்டதற்கு உங்களுக்குப் பெரிய துபாசித்தனம் கொடுக்கிற

தாய் கோன்சேலிலே தீர்ந்ததென்று நான் கபுறு கேட்டேன்
என்று சொன்னான், ஆர் சொன்னார்களென்று கேட்டேன்.
சடையப்பமுதலி மகன் சாமிநாதன் என்கிறவன் கோட்டை
யிலே முசே கொர்னே கோந்துவாரிலே கணக்கு எழுதிக்கொண்
டிருக்கிற கணக்கரண்டையிலே போனானும். அவர்கள் ரங்கப்
பிள்ளைக்கு எப்போது பெரிய துபாசித்தனம் கொடுக்கிறார்கள்
என்றும் கேட்டார்களாம். நானறியேன் என்று சொன்னானும்.
நீங்களறிந்தாலும் சொல்வீர்களென்று சொன்னார்களாம்.
அதின்பேரிலே நீங்களறிந்துதான் சொல்லுங்கோள் என்று
கேட்டதற்கு அவர்கள் சொன்னது: குவர்னதோர் நாலைந்து
நாளைக்கு முன்பாக கோன்சேல் கூடினபோது ரங்கப்பிள்ளை
யைக் கும்பினீர் கொடுத்தியேர் உத்தியோகம் கொடுக்கவேணு
மென்று கேட்டதற்குக் கோன்சேல்காரர் அனைவரும் சம்ம
தித்துக் கையெழுத்துப் போட்டார்களின்மேல் குவர்ன
தோருக்கு எப்போ சம்மதியோ அப்போ கொடுப்பார். சோம
வாரத்தன்றைக்குக் கொடுப்பார்கள்போலே காணுதென்று
சொன்னார்களென்று சாமிநாதன் சொன்னான். இது அபத்தமல்ல.
கெட்டியாய் நடந்த பேச்சு. ஆனபடியினாலே, சோமவாரத்துக்
கென்று கூட நிஷ்க்ருஷையாய்ச் சொன்னார்கள். நீங்கள் வேணு
மென்று ஒளிக்கிறீர்கள். நீங்கள் ஒளித்தாலும் சோமவாரந்
தன்றைக்கு வெளியாகுது என்று சொன்னான். அதற்கு நான்
சொன்னது: அப்படி கோன்சேலிலே தீருகிற பக்ஷத்துக்கு
என்னை அழைத்துக் கேளாமல், என் சம்மதியில்லாமல் பேசு
வார்களாயென்று கேட்டேன். இந்தமட்டுக்கும் கும்பினீர்
வேலையெல்லாம் உமக்குச் சொல்லுகிறாரே அதற்கு உம்மைக்
கேட்டுத்தானோவென்று கேட்டேன். அந்தச் சம்மதி
வேறே. உத்தியோகங் கொடுக்கிற சம்மதி வேறேயென்று
சொன்னேன். அது எப்படியோ, அப்படிதானிதுவும். ஆனபடி
யினாலேயுங்களைக் கேட்கவில்லை. அவர்களாயழைத்துக் கொடுப்
பார்களென்று சொன்னானிது. இன்னும் நன்றாய் அறியவேண்டிய
தென்று சொன்னேன்.

இற்றைநாள் சாயங்காலம் ஆறுமணிக்கும் மாயேயிலிருந்து
அப்பால் வந்து பனிரெண்டு நாளிலெ வந்தார்களாம். அவர்
கள் சொன்ன சேதி: மசுக்கரையிலிருந்து ஒரு சுலுப்பு சண்டை
முஸ்தீதுடனே புறப்பட்டு ஏழு கப்பலை விசாரித்துக்கொண்டு
திரிந்த விடத்திலே இங்கிலீசு ரெண்டு கப்பல் பொம்பாய்க்குப்
போகிறது. எதிர்ப்பட்டாப்போலே யவர்களுடனே சண்டை
கொடுத்தானும். அதிலே ஒரு கப்பலைப் பிடித்துக்
கொண்டானும். ஒரு கப்பல் ஓடிப்போய்விட்டானும். அந்த
ஒரு கப்பலிலேயும் எண்பதினாயிரம் ரூபாய் மட்டுக்கும் அகப்
பட்டதாம். அந்தக் கப்பலும் அந்த சுலுப்பும் மாயே வந்து
சேர்ந்ததாய்க் கபுறு சொன்னார்கள். இந்த தபால் வந்த பிற்பாடு

மூபே பரிதியை, துரையவர்கள் அழைப்பிக்கச் சொன்னதாகவும் சேவகர் எங்கும் போய்ப் பார்த்து வந்து, போய்விட்டான் என்று கபுறு சொன்னார்களாம். அவன் போனது, இவரறியான். அப்படியிருக்க, இவரழைக்கச் சொன்ன சாடை தெரியவில்லை. ... ... ...

*1746* ஆ ஆகஸ்டு மீ *13*உக்கு அக்ஷய ஞு ஆவணி மீ முதல் தேதி சனிவாரம், துவாதசி திருவாதிரை நக்ஷத்திரம்.

இற்றைநாள் வேங்கடாசலம்பிள்ளையவர்கள் சொன்னது: சென்னப்பட்டணமிருந்து ஒயர்வுசு குமரப்ப முதலியார் எழுதி அனுப்புவித்ததாக இங்கிலீசு சட்டம், முதுகு சகலாத்து சிப்பம் 3-க்கு வயணம் :

நாரஞ்சி சிப்பம் க-க்கு பூ வராகன்......24......
சிகப்பு லாக்கிளன்கிற சிப்பம் 1க்கு பூ வராகன் 17
பச்சை சிப்பம்......1க்கு...பூ வராகன்....16 ...
ஆக சிப்பம் 3-க்கு 57 வராகன் விழுக்காடு இதற்குத் தவணை மீ 2.

இந்தப்படிக்கு மளிகை வர்த்தகருக்குக் கும்பினீர் வர்த்தகர் விற்கிற விலை எழுதி வந்ததென்று சொன்னார். ஆனால், கோட்டையார் கும்பினீர் வர்த்தகருக்குக் கொடுக்கிற விலை எழுதாமற் போனான். பாலமுத்து செட்டி முகாந்திரமாய் அறியவேணுமென்று அவருடனே தெரிந்து எழுதியனுப்பச் சொன்னார் ... ... ...

இதல்லாமல் சென்னப்பட்டணத்துச் சட்டம் கும்பினீர் வர்த்தகர் மளிகைக்கு விற்கிறது முதுகில் நீலவர்ணம் சிப்பம் 1 க்கு வராகன் விலை 18, மஞ்சள் வர்ணம் 1-க்கு பூ வராகன் 16½.

*1746* ஆ ஆகஸ்டு மீ 13உ-ந்து அக்ஷய ஞு ஆவணி மீ 1உ சனிவாரம் துவாதசி திருவாதிரை நக்ஷத்திரம்.

இதுவும் கோட்டையார் கும்பினீர் வர்த்தகருக்குக் கொடுக்கிற விலை அறிந்து சொல்லியனுப்பச் சொன்னோம்.—

இற்றைநாள் பதினொரு மணிக்கு வேணை அழைத்தனுப்புவித்துச் சொன்ன சேதி என்னவென்றால்: உனக்கேதாகிலும் பணங்காசு வரவில்லையா? என்று கேட்டார். வரும் என்று சொன்னேன். அப்பால் காலாப்பேட்டையிலே வெட்டுப்பட்ட துலுக்கன் சேதி கேட்டார். அதற்குப் புதைத்திருந்த சவத்தை நரி இழுத்து வெளியே போட்டது.

அந்தக் குடியானவன் பார்த்து, தலையாரியோடே போய்ச் சொன்னதும், அவர்களும் கும்பினீர் சேவகனும் கூடப்போய்ப் பார்த்ததும், அப்பால் லாசருக்குக் கபுறு சொன்னதும், அதின் பேரிலே மறுபடியும் அவருத்தாரப்படிக்கு எங்கள் சாவடிப் பிராமணர்கூடப் பார்த்ததையும் வந்து சொன்ன சேதியும் பின்னையொருவிதமாய் கபுறு வெட்டினவனின்னு னின்னகாரியத்தினலே சம்பவித்ததென்று ஒருத்தருக்கும் தெரியாது. அது வெளியாகவும் இல்லையென்று சொன்னேன். அப்போது எது நிமித்தியம் முசே லகேதந்தக எழுதி யனுப்பாமற்போனுனென்று கேட்டார். அதற்கு நான் தெரியாதென்று சொன்னேன். ஆனல், லகேத்தத்தை அழைக்கச் சொல்லென்று சொன்னர். அதற்குச் சோபுதாருடனே சொல்லி வகையை அழைத்துவரச் சொன்னேன். சேவகன் அழைக்கப் போனுன். இதிலே துரையவர்கள் என்னைப் பார்த்து, லாசருக்கு என்ன வியாதியென்று கேட்டார். எனக்கு நன்ருய்த் தெரியாது என்றும் நேற்றைய தினம் வந்தானே என்றும் சொன்னேன். நான் பார்த்தேன். மகா வியாதியஸ்தன். உத்தியோகத்திலேயே திரியமாட்டானென்று சொன்னுர். அதற்கு நான் உத்தரவு சொல்லாமலிருந்தேன். அந்தச் சாடை பார்த்தால் கோன்சேலிலே தீர்ந்தது நீங்களன்றைக்கு உமக்கு உத்தியோகம் கொடுக்கப்போகிருர்களென்று குருவப்பசெட்டி சொன்ன சாடை சரியாய்க் காணுது.

அப்பால் சேஷாசல செட்டி கணக்குச் சேதி கேட்டார். வேங்கட்டய்யன் கணக்குத் தீர்ந்த சேதியும் சேஷாசல செட்டி கணக்குத் தீர்ந்த சேதியும் சொன்னதற்குச் சிறிது சங்கதி அவர் கேட்க, சிறிது சங்கதி நான் சொல்ல, அப்படி நடந்தது அதின்பிற்பாடு வேங்கட்டய்யனண்டையிலே யிருந்த நரசய்யன் என்கிற ஆசிறுது பிராமணனைக் காவல் வைத்திருந்ததே அந்தப் பிராமணன் கையிலே யிருந்த காகித பத்திரங்கள் எல்லாம் வாங்கிக்கொண்டும், மத்தியஸ்தர் வசமாய் ஒப்புவித்திருக்கிறது. நான் பிச்சைக்காரப் பார்ப்பான். என்னைத்தொட்டு ஆகிறதென்னவென்று சொல்கிருனென்று சொன்னேன். அதற்குத் துரை இருந்துகொண்டு, லக்ஷ்மண நாயக்கரை அழைப்பித்துச் சொல்லி, அவர்கள் போகச் சொன்னல் விட்டுவிடு என்று சொன்னர். அந்தப்படிக்கு அவர்களுடனே சொல்லின விடத்திலே அவனைத்தொட்டு இனிமேல் காரியமில்லை என்று சொன்னுர்களானுலும் உங்கள் வசத்திலே ஒப்புவித்தோம். உங்களுக்குச் சரிப்போனபடிக்கு நடப்பித்துச்சொன்னுர்கள் என்றுசொல்லி யவர்கள் வசத்திலே ஒப்புவித்துப்போட்டோம். அதின்பேரிலே பிற்பாடு கும்பினீர் சேவகர் வந்து அவனை விட்டுவிடச் சொன்னுர்கள். விட்டுவிட்டோம் என்று சொன்னுர்கள். ... ... ...

இற்றைநாள் சாயுங்காலம் ஐந்தரை மணிக்கு, துரை பெண்சாதி என்னை அழைப்பித்துச் சொன்னசேதி: சென்னப் பட்டணத்து டங்காசாலைப் பார்ப்பாருக்குச் சுங்குராமுசெட்டி பணம் கொடுக்கவேணுமே, அந்தப்பணம் ஏன் கொடுக்க வில்லையென்று முத்துராமு செட்டியைக் கேட்டேன். அதற்குக் கணக்குத் திருத்தி, தீர்ந்தால் அப்படியே கொடுக்கிறோம் என்று சொன்னார்கள். அதற்கு உங்களைக் கொடுக்க ஒட்டாமல் பண்ணுகிறது துரை கணக்கு ரங்கப்பிள்ளையும் அருணாசல செட்டியும் அல்லவா என்று கோபித்துக்கொண்டு, நல்லது அவர்கள் நடப்பிக்கிற காரியம் எல்லாம் துரையுடனே சொல்லுகிறோம். இதற்கு ரங்கப்பிள்ளையைக் காபந்துபண்ணி யிருக்கிற மட்டுக்கும் அவனுடனே சொல்லுகிறேனென்று சொன்னேன். அப்பால் எசமானனாக இருக்கையிலே அந்த நாயுடு பேச்சுகள் கேளாமல் தீர்த்துப்போடு சீக்கிரமாக என்று சொன்னான் அம்மாள் கணக்கு. கணக்கு ரங்கப்பிள்ளையும், அருணாசல செட்டியும் இந்தக் காரியத்துக்கு வருகிறதில்லை. நானுங்காட்டும் விசாரிக்கிறது. உங்களுடனே சொன்னவர்கள் தப்பிதமாய்ச் சொன்னார்கள். நீங்கள் நன்றாய் விசாரித்தால் தெரியுமே என்று சொன்னேன். அதற்கு உனக்குத் தெரியா தப்பா என்று சொல்லி உன்பேரிலேயும் துரையுடனே சேனே தாறுமாறாய்ச் சொல்லியிருக்கிறார்கள். உனக்குத் தெரியா தப்பா என்று சொல்லி, இன்னமொரு பேச்சியிருக்கிறது நீ மனதிலே வைக்கவேணும் என்று சொன்னாள். நானென்ன பயித்தியக்காரனா? என்னுடனே சொன் னது வெளியிலே ஒருக்காலும் சொல்லுகிறதில்லை யென்று சொன்னேன். அன்னபூரண அய்யன் என்று பிராமண மேஸ்திரியிருக்கிறானே அவன் தனக்குக் கும் பினீர்கொடுத்தியேர் ஆக்கினால் அய்யாயிரம் வராகன் கொடுக் கிறோமென்றும் எனக்கு வேறே ஆயிரத்தி ஐந்நூறு வராகன் கொடுக்கிறோமென்றும் பேசுகிறான்; அவனுக்குவராகன் வருமா என்றுகேட்டேன். ஆராகிலும்வர்த்தகரிலேயாவது வெளியிலே தலுக்கரிலேயாவது சொல்லாமல் சும்மா பேசுவானா என்று சொன்னேன். ஆனால், கப்பாசல்லவே காரியத்திலே சாக் கிரதை போதாது, பேச்சு வராது. வயித்தியம் பண்ணத் தெரி யுமேயல்லாமல் இந்த வர்த்தகம் உத்தியோகம் பண்ணி யறியானே. நீயானால் இந்த உத்தியோகத்திலே சின்ன பிள்ளையாயிருந்து எங்கள் கையின் கீழே பழகினவன். உனக்குக் கொடுத்தால் அக்காரியம் நிர்வாகத்துக்கு வரும். இதல்லாமல் அப்போது பெதுருக்குக்கூட உனக்குத்தெரிந்தாற் போலே தெரியாதென்று துரை எண்ணிவிட்டுச் சொன்னார். அப்படியிருக்க, லாசறுபோலே துரைக்குப் பக்ஷமுண்டு, ஆனால் அவனுக்கு இந்த உத்தியோகத்திலேயிருந்து நிர்வாகம் பண்ண மாட்டானென்று சொன்னான். அப்படியிருக்க, இந்தப் பார்ப்

பானுக்குக் கொடுக்கிறோமென்று எப்படிச் சொல்லுவான். இவனென்ன நிர்வாகம் பண்ணுவான் என்று சொல்லி இந்தப் பேச்சு என்னண்டையிலே வந்தாற்போலே நான் நிறுத்திப் போட்டேன். இல்லாவிட்டால் பின்னை யாருடனேயாகிலும் சொன்னால் துரை காதிலே விழும். துரை மனது எப்படியிருக்குமோ தெரியாது என்று நானாட்டம் கொடுத்து வருகிறேன். இதல்லாமல் நாங்கள் கிறிஸ்துவர் சொன்ன பேச்சு தப்புகிறதில்லை. உனக்கு இந்த உத்தியோகம் கொடுக்கவேணுமென்று துரையுடனே பேசினேன். உன்னுடனேயும் ஒருநாள் உனக்கு வரப்பண்ணுவேனென்று வார்த்தைப்பாடு கொடுத்து இதற்கு வேறே பேசுவேனா கெட்டியாயுன் மனதிலேயிருக்கட்டும் என்று சொன்னான். இதல்லாமல் நீ எனக்குப் பிள்ளை, துரை மனதிலே நீ பிள்ளையென்று கெட்டியா யெண்ணி என்னுடனே சொன்னாரென்று இப்படிப்பட்ட வார்த்தையாய்ச் சொன்னாள். அதற்கு அம்மா, நானவருக்கடிமை. அவருக்கு நான் திரணம். தித்திக் கொள்ளமாட்டேன். எப்படி என்றால், எனக்கு அவர் பண்ணின சகாயத்துக்கு நான் பிள்ளை பெற்றுப் பேரிட்டால் நானந்தறினாமத் தித்திக்கொண்டாற்போலே மற்றப்படி வேறேயில்லை. என் மனதிலே கெட்டியா யெண்ணியிருக்கிறேன். மற்றப்படி என்னைத்தொட்டு அவருக்கு ஆகவேண்டிய காரியமென்ன என்று பின்னையும் அநேக விதமாய் உபசாரமாய்ச் சொன்னேன். அப்போது துரையவர்கள் பெண்சாதி சொன்னது: துரையவர்கள் மனது பின்னை யாருக்காகிலும் கொடுக்கவேணுமென்று நினைத்தாலும் நினைக்கப் போகிறானென்று லாசறு பேச்சுகூட அன்னபூரணயய்யன் பேச்சுக்கூட நான் துரையோட சொல்லாமலிருக்கிறேன். பணம் ரொம்ப வருகிறது என்றால் மனது கலங்கிப்போவதினால் சொல்லவில்லையென்று சொன்னேன். அதற்கு நானிருந்துகொண்டு துரையவர்களுக்கும் உங்களுக்கும் பறிப்டணம் விசேஷித்து வந்தால் அப்படிச் செய்கிறதே காரியம். எனக்கு நீங்கள் என்ன அத்தாக்ஷி பண்ணினீர்கள். சகல மேன்பாடும் நடத்திவருகிறீர்கள். சகல காரியங்களும் என் முகாந்திரமாய் நடக்கவே நடக்கிறது என்று சொன்னேன். அப்படி ஏன் சொல்லுகிறான். அப்படிச் சொன்னால் துரை கேட்டால் கோபம் வரப்போகிறது. நாமிவனை வைக்கவேணுமென் றிருக்கும்போது இவன் சட்டையாய்ச் சொல்லலாமர் வென்று கோபம் வரும். என்னுடனே இந்த உத்தியோகம் கவையில்லை என்று சொன்னாப்போலே பின்னை யாருடனேயும் சொல்லாதே என்று சொல்லி, இந்தப் பேச்சு நீ யறிந்தது நான் அறிந்தது. உனக்குச் சந்தோஷிக்கக் கபுறு சொல்லுகிறேன், நாலைந்து நாளையிலே உன்னைக் கும்பினீர்க் குடுத்தியேர் உத்தியோகம் துரை கொடுப்பார் என்று சொல்லிப் போ அப்பா என்று சொன்னாள். அதற்கு நான் உபசாரமாய்ச் சொல்லிப்போட்டு வந்தேன். ... ... ... ...

காலாப்பேட்டு வழியிலே கொன்றுபோட்ட துலுக்கன் சம்மதி காலாப்பேட்டைப் பாளையக்காரனைக் கொண்டுபோய்க் காவல் வைக்கச் சொல்லி, துரை உத்தாரம் கொடுத்தார். அந்தப்படிக்கு மத்தியானம் காவல் வைத்தார்கள். ... ... ...

1746 ஆ ஆகஸ்ட் மீ 13 உ அக்ஷய ஷு ஆவணி மீ 1 உ சனிவாரம்.

இற்றைநாள் சாயுங்காலம் ஆறு மணிக்கு நபாபு அன்வர்த்திகானுடைய அறக்காறர் துரையவர்களுக்கு நபாபு காகிதங் கொண்டுவந்தான். அந்தக் காகிதத்தைப் படித்து மலையப்ப முதலியும் மதனாந்த பண்டிதருமாய்ச் சொன்னார்கள். அதிலே என்ன எழுதியிருந்ததென்றால், உங்களுடைய சீர்மை சண்டை கப்பல்கள் வந்ததே, அந்தக் கப்பல்களைப் பார்த்து, பார்சாபந்தரிலே யிருக்கப்பட்ட சாவுகாரர்கள், பின்னையும் உத்தியோகஸ்தர், குடிகள் மெத்தவும் பயப்படுகிறார்கள். அப்படி வராமல்படிக்கு அந்தச் சண்டைக் கப்பல்காரருக்குத் தாக்கீது பண்ணிவைக்கவும் என்று எழுதியிருந்ததற்கு துரை பதிலுத்தரவு எழுதச் சொன்னது: பார்சாபந்தரிலே இருக்கிற பேருக்குச் சண்டைக் கப்பல்களைத்தொட்டு ஒரு பொல்லாப்பும் நடவாது. ஆனால், பார்சாபந்தாவுக்குள்ளா யிருக்கப்பட்டவர்களுக்குப் பொல்லாப்பாய் நடத்தினவர்களைத் தண்டிக்கிற நிமித்தியம் வந்தது. அந்தப்படி நடக்கும் என்று மறு உத்தரவு எழுதச் சொன்னாரென்று மதனாந்தபண்டிதர் ஒன்பது மணிக்கு வந்து கபுறு சொன்னார். அந்தப்படிக்குக் காகிதமெழுதியாச்சுது. காலத்தாலே றவானாகப்போமென்று சொன்னார்

இற்றைநாள் ராத்திரி எட்டு மணிக்கு நாத்திப்பட்டன் என்கிறவன் கூடலூரநக்கு இனிச்சியப்பன் அண்டைக்கு ஓலை கொண்டுவந்தான். அவன் சொன்ன சேதி யென்னவென்றால், கூடலூர் தேவனாம்பட்டணம் நாலு நாளாய்ப் பிடித்து அதலகுதலப் பட்டுத் தமிழர், ஆண்பிள்ளைகள், பெண்பிள்ளைகள், அவர்கள் சமஸ்தமானபேரும் புறப்பட்டுப்போகிறதுமல்லாமல் அவர்கள் சரக்கு வைத்துக்கொண்டிருக்கிறவர்கள் ஒன்று பாதியாய் ஏலம் போட்டவர்களும், கோட்டையிலே கொண்டுபோய் வைத்தவர்களும், புதைத்தவர்களும் கிணற்றிலே தட்டுமுட்டைப் போட்டவர்களும், இப்படி பின்னையும் எத்தனை அவஸ்தைகள் கலாபவேளையிலே நடக்குமோ அத்தனைவிதமாய் நடந்ததாம். அப்பால் புறப்பட்டு வெளியே போனவர்கள் உத்தியோகஸ்தர் நாட்டார்கூட ராத்திரி அப்பால் திருவந்திபுரம் முதலான தி[illegible]க் கிராமங்களிலே போய்ச் சேர்ந்தார்களே யானால் [illegible]ல் குடிகள் வர்த்தகருடைய

சாடை யெழுதக் கவையில்லையே விவேகிகளா யிருக்கிறவர்கள் பார்த்துக்கொள்ளுகிறது. மேலே எழுதப்பட்ட சனங்கள் சமஸ்தமானபேரும் இந்தப்படிக்குத் தேவனாம்பட்டணம் கூடலூரைவிட்டு அப்பாலே போய்விட்டார்கள். நேற்று ராத்திரி மூசே பரிதி இவ்விடம்விட்டு திருவந்திபுரம் போய்ச் சேர்ந்தவுடனே அங்கே கூடலூர் தேவனாம்பட்டணத்திலே யிருக்கிறவர்கள் அவ்விடத்திலே வலசை போயிருந்தவர்கள் பாதி தளத்துடனே வந்தானென்று மிரண்டு திருப்பாதிரிப்புலியூரிலே வந்து விழ, அவர்கள் எல்லோரும் இவர்களும்கூட தேவனாம்பட்டணம் கூடலூரிலே வந்து விழ, அவர்கள்கூட அங்கே கொஞ்ச நஞ்சம் இருந்தவர்கள்கூடத் தத்தளிக்க இது வெள்ளைக்காரர் கேட்டு அவர்கள் பீரங்கிகள் முஸ்திதுபண்ணி அவர்கள் தட்டுக்கெட்டுத் தடவி அவர்கள்பட்ட விசாரமும் காபுராவும் எழுதி முடியாது. இப்படி ஒரு நாழிகையிலே தட்டுக்கெட்டுத் தடுமாற்றமாய் கூடலூர் தேவனாம்பட்டணம் இருக்கப்பட்ட வெள்ளைக்காரர், துரைத்தனத்தார், தமிழர், சமஸ்தமான பேரும் பட்ட அவஸ்தைகள் காகிதத்திலே எழுதவேணுமானால் நூறு காகிதம் பிடிக்கும். ஆனால் சுவாமியினுடைய கடாக்ஷத்தினாலே ஒருத்தருக்கும் சேதபாதமில்லை. சூரிய உதயமானாற்போலே அவரவர்கள் குதிரி நின்றார்கள் என்றும், பரிதி அப்புறம் காரைக்காலுக்குப் போனானென்றும் கபுறு வந்தபடியினாலே அவரவர்கள் நிம்மதியாய் நின்றார்கள் என்றும், அவரவர்கள் ராமாறு வெளியிலே போய் இருக்கிறதும் பகல் மாறு ஊரிலே வந்திருக்கிறதும், ஊரிலே தவலை சொம்பு வேணுமானால் ஒரு உருபடியாகிலும் அகப்படாதென்றும் இப்படிப்பட்ட சேதிகள் அநேகம் உண்டு. அதுகள் எல்லாம் எழுதவேணுமானால் நூறு காகிதமானாலும் எழுதி முடியாது. கலாபப்பட்ட வேளையிலே, அவரவர்கள் அவஸ்தைப் படுகிற வேளையிலே சாடைகள் விவேகிகளா யிருக்கிறவர்களுக்கு நன்றாய்த் தெரிந்து இருக்கிறபடியினாலே விஸ்தரித்து எழுதவில்லை.

**1746 ஆ ஆகஸ்டு மீ 14 உக்கு அக்ஷய ஸு ஆவணி மீ 2உ ஆதிவாரம்.**

இற்றைநாள் ராத்திரி குவர்னதோர் என்னையழைத்துப் பட்டைச் சாராம் நூறு லேகர் வேணுமென்று சொன்னார். அதற்கு நாளில்லையே முன்னே தானே இந்த எத்தனம் பண்ணியிருந்தால் வேணும் என்றால் மட்டுக்கும் எத்தனம் பண்ணலாம் இதற்கு இடம் விஸ்தாரமாய் வேணுமே, இதற்கு வெல்ல சரக்கு வேணுமே. இருந்தாப்போலே வேணுமென்றால் எப்படி கைவிலைக்குச் சாராயம் வாங்கலாம். கூடலூரிலே கோவைச் சாராயமிருக்கிறதென்று கபுறு கேட்டேன். அதற்குப் பிரயத

னம் பண்ணலாம் என்று சொன்னேன் அதற்கு அவர் சொன்னது. அவர்களுத்தாரங்கொடார்கள் இவ்விடத்திலே காய்ச்சித்திரவேணும் இதற்கு சனேரி மித்தை (மோசத்திற்கு) இருநூறு கட்டு காங்குப்புடவை கொடுக்கிறயாவென்று கேட்டார் நல்லதென்று சொன்னேன். ஒக்தோபர் மாதத்திற்கு என்ன கொடுக்கலாம். லிஸ்துரு எழுதிவாவென்று சொன்னார். நல்லதென்று வந்தேன் ... ... ...

1746ஆ ஆகஸ்டு மீ 15 உ-க்கு அக்ஷய ௵ ஆவணி மீ 3உ சோமவாரம்

இற்றைநாள் காலத்தாலே மூசே லதூசு (M. de la Touche) சண்டைக்குப் போய் குழம்பு அராக்கு ஐம்பது அறுபது லேகர் அகப்பட்டதை வாங்கச் சொல்லிப் பறங்கிப்பேட்டைக்கு ஒஸ்திராலிக்குக் காகிதம் எழுதவேணும். இதல்லாமல் புட்டி வெல்லம் ஐந்நூறுக்கு அறுநூறுக்கு அகப்பட்டதை வாங்கச் சொல்லி எழுதி யனுப்புமென்று சொன்னேன் நல்லது என் வசத்திலே யிருந்தது இருபது லேகர் சாராயமிருக்கிறது. அது உனக்குத் தாரேனென்று சொன்னான். என்ன விலையாகக் கொடுக்கிறீர்களென்று கேட்டேன். அதற்கு அவன் சொன்னது: நான் கொண்டது என்ன விலையோ, அந்தவிலை சொல்லுகிறேன். ஆதாயம் கொடுமென்று சொன்னேன். நல்லது விலை சொல்லுமென்று சொன்னேன். நான் கொண்டது ஐம்பது வராகன், அதின்பேரிலே நீ கொடுத்த ஆதாயம் வாங்கிக்கொள்ளுகிறேன் என்று சொன்னான். இந்த இருபது லேகருக்கும் ஆதாயம் தேவையில்லை கும்பினிருக்கு விற்கிறபடிக்குக் கொடுத்துவிடுகிறோம் என்று சொன்னேன். நல்லது இன்னம் ஐம்பது லேகர் மூசே வெர்மேனுது சென்னப்பட்டணத்திலே இருக்கிறது அதை அவர்கள் விடமாட்டார்கள். அதற்குப் பிரயத்தனம் பண்ணி யழைப்பிக்கச்சொல்லி எழுதுகிறேன். பின்னையும், ஏதாகிலும் அகப்பட்டாலும் வாங்கச்சொல்லி எழுதுகிறேன் என்று சொன்னான். அந்தப்படிக்கு இருபது லேகர் நீ யெடுத்துக் கொள்ளுறதானுவென்று கேட்டான். அவசியம் நான் எடுத்துக் கொள்ளுகிறேன். சரக்கு என்னுடையது என்று சொன்னேன். நல்லது என்று சொன்னான். அந்தப்படியே யனுப்புவித்துக் கொண்டுவந்து திரும்பியும் மூசே லதூசு (M. de la Touche) உடனே ஒக்தோபர்மீ க்கு சரக்கு கும்பினிருக்கு கொடுக்கிறோமென்றிருக்கிறது. தைமாதத்திலே இவ்வளவு கொடுக்கலாம் என்று ஒரு லிஸ்தும் எழுதினேன். வீட்டுக்கு வந்தேன்,

1746 ஆ ஆகஸ்டு மீ 16 உ அக்ஷய ௵ ஆவணி மீ 4 உ மங்களவாரம்.

சின்னமுதலி நேற்றையதினம் ஊரெல்லாம் ஆனந்தரங்கப்பிள்ளைக்கு பெரிய துபாசித்தனம் கொடுக்கிறார்களென்று துவனிகள் கிளம்பினதைக் கேட்டு இருவரும் வீராசெட்டி

சங்கரய்யன் இவர்களெல்லோரும் பின்னையும் அவருக்கு ஆபித்தமாயிருக்கிறவர்களெல்லாரும் யோசனைபண்ணி நீர் வீட்டிலேயிருக்கிறதினாலே காரியமாய்க் காணவில்லை. நீர் பத்துப் பணம் செலவழிக்கப்போகாது என்று பார்த்தால் உம்முடைய முகம் என்ன கெருடசேர்வையா—உங்களவர்கள் பாரம்பரியமாயிருந்த உத்தியோகம் உம்முடைய தமையனாரிந்த உத்தியோகத்திலே தானே பத்துப் பணம் சம்பாதித்தது. அப்படிப்பட்டதை விடப்போகாது. உம்முடைய கைவசமாயிருந்தால் கிராமமிப்போ நவாப் அவர்கள் கொடுத்து நடப்பிக்கிறார்களே அதற்குக்கூட டோக்காய் வரும். டங்காசாலையிலே நடக்கிறதற்குக்கூட போராட்டம் வரும் என்றும் அப்பால் பின்னையும் கொடுக்கல் வாங்கல் எந்தக் காரியமாம் கட்டிவராதென்றும் இப்படி அவர்கள் சொன்னதின்பேரிலேயும் வீட்டிலே பெண்சாதி, மைத்துனன்மார், பின்னையும் மருமக்கள்மார், பந்துக்கள் அவர்களுக்கு ஆபித்தமாயிருக்கிறவர்கள் குறுக்கிட்டுத் தரகு நல்ல தம்பிமுதலி முதலானபேர் சொல்லுகிறதினாலே ஆசைபோட்டு மயக்கி முன்பணம் செலவழிக்கப்போகாதென்று நினைத்துக் கொண்டிருந்த நினைப்பு விட்டுவிட்டுப் பணம் செலவழித்துக் காரியம் சாதிப்போமென்று நினைப்பு வந்து சம்பாக்கோவில் சேஷரண்டைக்குப் போய்க் கண்டு பேசினது. ரங்கப்பனுக்கு இந்தப் பெரிய துபாசித்தனம் கொடுக்கிறதாயிருக்கிறது. அப்படி கொடுத்தால் கிறிஸ்துவர்களுக்குக் காரியமில்லை. தமிழருடைய ஆதிக்கமாயிருக்கும். நீங்களிந்தக் காரியத்திலே பிடித்துப் பேசுங்கோளென்று சொன்னவிடத்திலே, அவசியம் அப்படிதானே பேசுகிறேன் என்று சொல்லியனுப்பி நீ வீட்டிலேதானே இராதே. இராத்திரி பகலாய்க் கட்டிக்காத்துக் கொண்டு திரியுமென்று சொல்லியனுப்பி அவர்களும் மதாம் துய்ப்ளேய்ச்சு அண்டைக்குப் போய் தமிழனை வைக்கிற பாவமுண்டா கிறிஸ்துவ மதத்தை உத்தாரணை பண்ணவந்தவள் நீயாச்சுதே உன் நாளிலே பெரிய துபாசித்தனத்துக்குத் தமிழனை வைக்கப்போமாவென்றும் பின்னையும் அனேகவிதமாய்ச் சொன்னவிடத்திலே அவனிந்தச் சேதி நானறியேன். இப்போதும் நான் துரைக்குச் சொல்லுகிறேன். நீங்களும் குவர்னதோரை வைக்கக் கண்டுபேசுங்கோளென்று சொன்னாராம். அந்தச் சேதி சின்னமுதலி சம்பாக்கோவில் வாத்தியாரைக் கொண்டு சொல்லியனுப்புவித்தார்களாம். அதற்குத் துரையவர்களுடனேயும் கண்டுபேசிக் காரியம் அனுகூலம் பண்ணவேணுமென்று சொல்லி யனுப்பிவிட்டு இப்படியெல்லாம் பலன் பண்ணிக்கொண்டு பணம் செலவழிக்கிறதற்குத் தைரியமும் யோசனை பண்ணிக்கொண்டு ராத்திரி பகலாய் துரையைக்கட்டிக் காக்கக் கடவோமென்று யோசனை பண்ணிக்கொண்டு துரைவீட்டை வந்தார்கள். நான் பாக்குக்கிடங்

யிலே இருக்கும்போது என்னையழைத்தார். நான் காரியமிருக்கிறது வரக்கூடாதென்று சொன்னேன். அப்பால் துரை வீட்டை போனார். மதனாந்த பண்டிதனுக்கு இவர் தைரியமாய் உத்தியோகம் பண்ணவேணுமென்று பணஞ்செலவழித்து, உத்தியோகம் வாங்குகிறதாய் நினைப்புக் கொண்டதினாலே வெகு சந்தோஷமும் உற்சாகமுமாய்க் கூடப்போனார். பின்னையும், அவர்களுக்கு ஆப்தமா யிருக்கப்பட்ட வீராசெட்டி, சலது வேங்கடாசலசெட்டி, கும்பினீர் வர்த்தகரிலே யிருக்கப் பட்டபேரிலே நாலத்துரெண்டுபேர் உற்சாகியாய் நாலு நாழிகைக் கெல்லாம் குவர்னதோர் வீட்டுக்கு வந்தார்கள். இப்படி வந்தவர்களை நாலு நாழிகை இரண்டு நாழிகை மட்டுக்கும் இருந்து பதினொரு மணிக்கு வீட்டிற்குப் போனார்கள். இன்றையதினம் துரையண்டைக்குப் போனதே யல்லாமல் பேச்சுவார்த்தையில்லை.

நானும் துரையண்டைக்குப் போய் சலாம் பண்ணிக் கொண்டு வீட்டுக்கு வந்தேன். பின்னே வேறு அதிசயமில்லை....

இற்றைநாள் நபாபுடைய அரக்காருகள் இரண்டுபேர் வந்தார்கள். இவர்கள் துரைக்குக் காகித மற்றது கொண்டு வரவில்லை. இங்கிலிசுக்காரருக்கும் பிரான்சுக்காரருக்கும் சண்டையா யிருக்கிறதே இவர்கள் ஊரிலே நடக்கிற சமாசாரம் தெரிந்து எழுதியனுப்பச் சொன்னாரென்று சின்ன முதலியண்டைக்கு வந்து சொல்லிவிட்டு ஊரிலே திரிகிறார்கள். இனிமேல் இவ்விடத்திலே நடக்கிற சேதியறிய. ... ... ... ...

1746 ஆ ஆகஸ்டு மீ 17உ க்ஷய வரு ஆவணி மீ 5உ புதவாரம்

இற்றை நாள் முசே லம்பார்தோனே தம்பி முசே லவில்பாகு என்னை யழைப்பித்துத் தனக்கு கோஸ்தே மலபாருக்குச் சிறிது சரக்கு வேணுமென்று கூட்டுகிற சரக்கு வயணம் கேட்டான். அதற்கு வயணம் சொன்னேன். அதின் பிற்பாடு எங்களரன் கொடுத்த லீஸ்துருக்கு சீக்கிரமத்துக்குச் சரக்குக் கூட்ட வேணுமதற்கும் இதற்கும் வராகன் நாளைக்கு இருபது இருபத்தையாயிரம் ரூபாய் மட்டுக்கும் அனுப்புகிறேனென்று சொன்னான். நாணீணிப்போகுது, அப்போதுதானே உம்முடைய தமையன் சொல்லிப்போட்டுப் போனானே இல்லையோ ஏன் தாமசம் பண்ணினீர் என்று கேட்டேன். அதற்குத் தன் மனதிலே யிருந்த துக்கத்தை யெல்லாம் வெளியாகச் சொன்னான் அதற்கு உத்தரவு சொன்னேன். அப்பால் அவன் கையிலே அனுப்புவித்துக்கொண்டு வந்தேன் ... ... ... ... ...

ஆறு மணி ஏழு மணி நேரத்துக்குச் சனிவாரம் என்று இவ்விடத்திலேயிருந்து காரைக்காலுக்குப் போன பரிதி காரைக்காலிலேயிருந்து ஒரு படகிலே வந்து சேர்ந்தான். இவன் போன சுறுக்கென்ன வந்த சுறுக்கென்ன வென்று யோசனை பண்ணி இவன் போன சாடையைப் பிடித்து விசாரித்தால் இவனிடத்திலிருந்து காரைக்காலுக்குப் போய் அங்கே காவுத்தாலே சாப்பிட்டு மூசே லபோர்தோனை கப்பலின் பேரிலேயேறி அவனை கண்டு பேசி ராத்திரிக்கு கப்பலின் பேரிலேயே யிருந்து சூரிய உதயத்துக்கொல்லாமிறங்கி காரைக்காலிலே சாப்பிட்டுவிட்டு படகின்பேரிலே யேறி இவ்விடத்திற்கு இற்றைநாள் காலத்தாலே ஆறு மணிக்கு இவ்விடம் வந்து சேர்ந்தார்கள் என்று கபுறு சொன்னார்கள். போனதும் வந்ததும் பார்த்தால் காகித முகாந்திரத்திலே மூசே லபேர்தோனேக்கு எழுதின காரியமல்லவோ அல்லவென்று காகிதங்கள் வழிகளிலே பிடிபட்டாலும் பிடிபடுமென்று சொன்னையே அந்தக் காரியத்தைக் குறித்தோ மூசே லபோர்தோனே அண்டைக்கு அனுப்புவித்ததென்று யோசனைபுரிந்தது. இவன் போனகாரியம் எனக்குத் தோற்றினபடிக்கு எழுதினேன். அதற்கு மெய்யாகிலும் பொய்யாகிலும் இறபேணை தெரிகிறது. இவன் போன காரியமென்னவென்றால், சென்னப்பட்டணத்துத் துறையின் பேரிலேயோ அல்லது தேவனாம்பட்டணத்துத் துறையின்பேரிலேயோ இவர்கள் போகிறதா யோசனைபண்ணி இவர்கள் துறையிலேயிருக்கிற மரியசேர்த்துரு என்கிற கப்பலின் பேரிலேயும் பின்னையும் ரெண்டு சுலுப்பின் பேரிலேயும் மருந்து குண்டுகள் சகல சண்டை சாமான்களும் ஏற்றினபடியினாலே இது எந்நேரம் றவாணுவாகுதோ அந்நேரம் அந்தக் கப்பல்களும் வந்து எவ்விடத்திக்குப் போகவேணுமோ அந்த இடத்துக்குப் போகத்தக்கதாக வரச்சொல்லச் சொல்லி அனுப்பினதாய் அவனுமந்தப்படியே போய்ச் சொல்லி நிஷ்கருஷை பண்ணிக்கொண்டு வந்ததாய்த் தோன்றுகிறது. இந்தப் பரிதி வந்தவன் துரையைக் கண்டு பேசி வீட்டுக்குப் போன உடனே குவர்னதோரும் மூசே தோத்தேலும் தனித்துப் பேசியிருந்து என்னையழைத்து உன்னுடனே சொன்ன குதிரைகள் எல்லாம் தயாராயிருக்கிறதா என்று கேட்டான். நீங்கள் எப்போது கவையாய்க் கேட்கிறீர்களோ அதற்கு ஒரு சாமத்துக்கு முன்னே எச்சரித்தால் அழைப்பித்துத் தருகிறேன் என்று சொன்னேன். அதற்கு அவர் நல்லது தயாராயிருக்கட்டும் என்று சொன்னாராம். மத்தியானத்துக்குமேல் மூசே பரிதியும் துரையவர்களும் கடற்கரைக்குப் போய் அவ்விடத்திலே வெகு நேரம் பேசியிருந்து, துறையிலே அவரவர்களிடமிருக்கிற உருப்படி பாறுகள், சம்பானுகள், தோணிகள் சமஸ்தமும் கேழ்வு உண்டானது கொடுத்துவிடுகிறோம் என்று உடன் படிக்கைப் பண்ணச்சொல்லி மூசே ஒசே என்கிற கடற்கரை

வெள்ளைக்காரனை அழைத்துச் சொன்னாராம். மற்றப்படிக்கு அவன் போயிருக்கிற உருவெல்லாம் பண்ணிப் பார்த்தாலும். இதற்கு முன்னே கும்பினீர் கப்பலும் சுலுப்புகளும் இருக்கிறதின்பேரிலே மூசே பரிசி போய் ஏறிப்பார்த்து வந்தாலும் துரையைக் கண்டதும் கடற்கரைக்கு அழைத்துப்போனதும் இந்தப்படி சாயுங்காலம் மட்டுக்கும் துரையும் மூசே பிரியும் கடற்கரையிலிருந்து வந்த பிற்பாடு பட்டணவரையெல்லாம் பிடித்து ராத்திரி முப்பதும் கூடாரரெட்டுகளும் அதனுடைய சாமான்களும் பின்னையும் சண்டை சாமான்கள் கரையிலே இறங்கி சண்டை பண்ணத் தக்க சாமான்கள் எத்தனை உண்டோ அத்தனையும் ஏற்றினார்கள் என்று கபுறு சொன்னார்கள் இந்தச் சாடை பார்த்தால் சென்னப்பட்டணத்தின்பேரிலேயோ அல்லது தேவனாம்பட்டணத்து மேலேயோ சண்டைக்குப் போகிற சாடையாய்க் காண்கிறது. அதுவும் இறமேணு தெரியும்.

1746 ஆ ஆகஸ்டு மீ 17 உக்கு அக்ஷய ஞ ஆவணி மீ 5உ புதவாரம்.

இற்றை நாள் ஒன்பதரை மணிக்கு பாக்குக்கிடங்குக்கு வந்து குழம்புச்சாராயம் இருபது லேகரும் நீ கெட்டியாய் எடுத்துக் கொள்ளவேணும் என்று மூசே லதூசு கேட்டான். அத்தனை சந்தேகமாய் எண்ணவேண்டாம். அப்படியிருந்தால் நான் கொண்டதாய் ஒரு சீட்டு எழுதித்தருகிறேன் என்றும் நீர் விற்றதாய் ஒரு சீட்டெழுதிக் கொடும் என்றும் கேட்டேன். அதற்கென்ன, பேச்சுப்போதாதா, நான் ஒரு கபுறு கேட்டேன். யாழ்ப்பாணத்திலிருந்து ஒரு உருவினபேரிலே சாராயம் வந்ததாய்க் கேட்டேன். குவர்னதோர் கொண்டாரே ஆனால் இப்புறம் நீர் கவையில்லையென்று சொல்லப் போகிறீர் என்று கேட்கவந்தேன் என்று சொன்னான் அதின் பேரிலே நான் சொன்னது: குவர்னதோர் வேண்டாமென்றாலும் சில்லரையாய் எங்கள் பட்டைச் சாராயம் விற்கிற கடைகளிலேயாகிலும் விற்பேனேயல்லாமல் உம்முடைய கையிலே கொண்டதற்கு விரோதம் சொல்லுவேனாவென்று சொல்லியும், உம்முடைய மனது எப்படி என்பேரிலே பிரீதியாயிருந்து நடப்பிக்கிறீரோ அப்படிதானே என் மனதும் என்று கெட்டியாயெண்ணுமென்று சொல்லி, பின்னையும் சற்றுநேரம் லோகாபிராமமாய் பேசியிருந்து அவரை யனுப்புவித்தேன்.—

இற்றைநாள் காலையில் சின்னமுதலி அன்னபூரண அய்யன் பெரிய துபாசித்தனத்துக்குப் பிரயத்தனம் பண்ணுகிறானென்று கபுறுகேட்டு அன்னபூரண அய்யன் மகனை அவிசாரி என்றும், அவன் பெண்சாதி அவிசாரி என்றும் இன்னசாதி என்றும் ஈனசாதி என்றும் இல்லாமல் துலுக்கன் சட்டைக்

காரனோடே திரிகிறார்களென்றும் தன் தமையனுக்குச் சிறிது கடன் என்பது வராகன் தொண்ணூறு வராகன் மட்டுக்கும் கொடுக்கவேணு மென்றும், அதற்குத் தான் வைத்தியம் பண்ணினதற்கு ஈடென்று சொல்லுகிறாளென்றும் இவளைப்பிடித்துக் காவல் வைக்கிறேனென்றும் இப்படி வாய்கொள்ளாத பேச்சே இந்த மட்டுமே நில்லாமல் வாய்க்கு வந்தபடிக்கு எல்லாம் நாலுபேர் சபையிலே பேசினாராம். அப்போது கிரிமாசி பண்டிதனிருந்துகொண்டு மதனாந்த பண்டிதரைப் பார்த்துச் சொன்னது: அன்னபூரண அய்யன் பெரிய துபாசித்தனம் பண்ணப்போகிறாரென்றாலல்லவோ சின்ன முதலியார் கோபித்துக்கொள்ளுகிறது. அவர் உத்தியோகம் பண்ணாவிட்டால் இவருக்குக் கோபமில்லையே. அவரிந்தச் சோலிக் கோராத படிக்கு நான் சொல்லிப்போடுகிறேன். ஆரென்ன தப்புக் கபுறு சொன்னார்களோ தெரியாதென்று சொன்னானும். அதற்கு மதனாந்த பண்டிதரிருந்துகொண்டு என்னுடனே சொன்னான். ஐம்பதாயிரம் ரூபாய் மட்டும் அமர்ந்திருக்குது. இன்னம் ஆறாயிரம் ரூபா தறுவாடியைக் கேட்டு வாங்கிக் கொடுத்தால் எனக்குப் பெரிய துபாசித்தனம் வரும். அந்தப் படிக்கு அம்மாள் முகாந்திரமாய்ப் பேசித் தீர்ந்திருக்கிற தென்று சொன்னாரென்று சொன்னாராம். இந்தப்படி சின்ன முதலி வீட்டிலே நடந்ததாய் கிரிமாசி பண்டிதன் வந்து சொன்னான்.

(74) ஆ ஆகஸ்டு மீ 18உ க்கு அக்ஷய ஞு ஆவணி மீ வே வியாழக்கிழமை.

இற்றைநாள் மாயே சிப்பாய்கள் இருநூறுபேர் மாத்திரம் வரிசையாய் கோட்டைக்குப் போய் அங்கே வரிசை வைத்து, பேருக்குப் பத்து வெட்டு மருந்து குண்டும் கொடுத்தார்கள். பகலைக்கு மேலாய் நாலு மணிக்குச் சிறிது சிப்பாய்களுக்கு மருந்து குண்டுகளும் கொடுத்தார்கள். காலத்தாலேயும் சாயுங் காலத்திலேயும் வாங்கின பேர்கள் சற்றேறக்குறைய முந்நூற்றைம்பது பேருக்கு உண்டு. இவர்களை நாளைக் காலத்தாலே துறையிலேயிருக்கிற கப்பலின் பேரிலேயும் சுலுப்புகளின் பேரிலேயும் ஏற்றப்போகிறார்கள் என்று சொல்லுகிறார்கள். அப்படி காண்பிக்கவில்லை கரைவழியே போகிற சாடையாய்க் காணுது.

மத்தியானம் துரை அப்துல் சலீலுக்கு ஒரு காகித மெழுதச் சொன்னது: கும்பினிருக்கு வருகிற மாடுகளை உங்கள் ஊர்மை நாட்டார் பிடித்து உழுகிறார்களாம். இப்போது உம்முடைய சினேகத்தைப்பற்றி மனம் பொறுத்தோம். இனிமேல் அப்படி வராமற்படிக்கு உம்முடைய மனுஷருக்குத் தாக்கீது

பண்ணவும் என்று மதனானந்த பண்டிதனுக்குக் காகித மெழுதி யனுப்பச் சொல்லி உத்தாரங் கொடுத்தார். இது பாசரா பிள்ளை வந்து பிராது பண்ணிக்கொண்டதின்பேரில் எழுதச் சொல்லியனுப்பினார். ... ...

1746 ஆ ஆகஸ்டு மீ 19 உத்த அக்ஷய ஞு ஆவணி மீ 7உ சுக்கிரவாரம்

துரையவர்களண்டைக்குப் போனவிடத்திலே குதிரைகள் முஸ்தீதாயிருக்கிறதாவென்று கேட்டார். எப்போது வேணும் என்றால் அப்போது போய் அழைப்பிக்கிறேன் என்று சொன்னேன். அதன் பிற்பாடு மயிலாப்பூர் மமிரேசுக்காரனுடைய கப்பலும் பறங்கிப்பேட்டை மீரான் மரைக்காயன் கப்பலும் தர்னாசரிக்கும் கிட்டாவுக்கும் போகுது பாஸ் போர்ட் வேணுமென்று கேட்கிறார்களென்று சொன்னேன். அதற்கு அவர்கள் இங்கிலீசுக்காரருடைய தட்டுமுட்டுச் சரக்கு ஏற்றுகிறதில்லையென்றும் உடன்படிக்கைச் சீட்டெழுதிக் கொடுக்கவேணுமென்றும் கேட்டார். அதற்கு முன்னமே தானே எழுதியனுப்பி அவர்கள் கையெழுத்தும் மோகறும் போடுவித்து அழைப்பித்தேன் என்று சொன்னேன். செக்ரெத்தேரிடத்திலே யிருக்கிற மூசே மிரேவுக்கு பாஸ் போர்ட் எழுதிக்கொடுக்கச் சொல்லி உத்தாரம் கொடுத்தார். அந்தப்படிக்கு என்னை அழைத்துப் போய்க் கப்பல் பேர் மற்றெல்லா மாயனம் கேட்டெழுதிக் கொண்டு நாளைக்காகிலும் நாளைநன்றைக்காவது பாஸ் போர்ட் தருகிறேன் என்று சொன்னான். அந்தப்படிக்கு பாஸ் போர்ட்டுக்கு வந்த மனிதரை நாளையாவது நாளைநன்றைக்காவது வாருங்கோள் என்று சொல்லி அனுப்புவித்தேன்.

அன்னபூரண அய்யன் பெரிய துபாசித்தனத்துக்குப் பிரயத்தனம் பண்ணினதற்கு அவன் தன்னிருவாகத்தை அறிந்து பிரயத்தனம் பண்ணவேணும். அவன் அதை யோசனை பண்ணாமல் துபாசித்தனம் என்றாப்போலே வராகனைக் கொண்டுவந்து பெட்டியிலே போட்டுக்கொள்ளுகிறதாய் யோசனைபண்ணி, பிரயத்தனம் பண்ணினான். அவனுக்குத்தான் விவேகமில்லையென்று எல்லாரும் சொல்லிக்கொள்ளுகிறதற்குத் தக்கதாய் அவன் பிரயத்தனம் பண்ணினான். அவனைப் பரியாசம் பண்ணும் பொருட்டாயவனை யெடுத்துவிடுகிறவர்களும் எடுத்துவிட்டார்க ளிவனை அம்மாளண்டைக்கு அழைத்துப்போய்விட்ட நாராயணப்பிள்ளையையும் இது நடப்பிக்கலாம் என்று யோசனை பண்ணுகிற துரையவர்கள் பெண்சாதியினுடைய யோசனையும் சொல்லவேண்டியதே யல்லாமல் மற்றப்படியல்ல. ஆனால், பட்டணமிருக்கிற சாடை இப்படி யிருக்கிறபடியினாலே ஸ்வாமி ரக்ஷிக்க

வேணும் அன்னபூரண அய்யனை இன்னும் பிரயத்தனம் விட்டவனல்ல, எத்தனம் பண்ணிக்கொண்டிருக்கிறான். இனிமேல் ஒருத்தர் கைவசமாகுந்தனிலும் ஆரென்ன பரிகாசமாய்ச் சொன்னாலும் அவனுக்குத் தோற்றிவிடப் போவதில்லை. இவனைப்போலே விவேகமில்லாதவன் ஆருமில்லை யென்றாப்போலே தோற்றுகிறது. எல்லாருக்கும் இப்படி ஒவ்வொரு காரியத்திலேயும் விவேகமில்லாமலிருக்கும். அது அதற்குப் பிற்கட்டிகை வந்தபோது அது விளங்கும். ஆனபடியினாலே, தத்காலிதம் இவருடைய பேர் பிரபலமாய் விளங்கிற்றது.

இற்றைநாள் ராத்திரி பனிரெண்டு மணிநேரம் அறுபது சொல்தாதுகளை மரியசேரத்துருது என்கிற கப்பலின்பேரிலே ஏற்றினார்கள். பின்னையும் சண்டை சாமான்கள் என்ன உண்டோ அத்தனையும் ஏற்றினார்கள் கயிறுகள் பின்னையும் இதற்கடுத்த எணிகள் கூடாரங்கள் அத்தனையும் ஏற்றினார்கள். தின்பண்டம், ஆடு, மாடு, பன்றி, கோழி முதலாகியதும், ரொட்டி, சாராயம், உள்பட விஸ்தாரமாய் ஏற்றப்பட்டதென்றும் இனிமேல் ஏற்றத் தக்கதில்லையென்றாப்போலே கடற்கரைச் சேவகர் கபுறு சொன்னார்கள்.

இற்றைநாள் ராத்திரி முத்துசெட்டியும் அருணாசல செட்டியும் வந்து துரை கோறணைக்குச் சகலாத்துக் கேட்டபேருக்கு விற்றுப்போட்டுவிடச் சொல்லியும் உத்தாரங் கொடுத்ததாகவும், நனவு பூச்சிக்கடி யிருக்கிறதை யெல்லாம் போட்டு விற்றுப்போடச் சொல்லியும், இப்படி உத்தாரங் கொடுத்தாரென்றும், அப்படி பிறம்பே போகிறதை முத்து செட்டியைச் சேர்த்துக்கொண்டு பின்னை ஒருத்தரையும் நாடவொட்டாமல் நடப்பிப்போமென்றும் அருணாசல செட்டி வந்து சொன்னான். நல்லது, இந்த வேளை விஸ்தரிக்கலாகாதென்று அப்படியே இருசப்பசெட்டி முத்துசெட்டிக்கும் ஒரு பங்கு கொடுத்து பின்னை ஒருத்தரையும் குவெர்னேரண்டையில் சேரவொட்டாமல் பண்ணி, பின்னை ஒரு கையிலே போகவிடாமல் பண்ணுகிறது நல்லது. நாளைச் சவுத்தி, நாளை நன்றைக்குப் பஞ்சமிதினம், உடன்படிக்கைச் சீட்டெழுதிப் போடுவோமென்று சொல்லி அனுப்பிவிட்டு இந்த வேளை நமக்குப் பணம் ஒத்திகைப்படாத வேளையானபடியினாலே யல்லவோ சொறியாந்தவளை வேஷ்டையாடுதென்று மனதிலே வைத்துக்கொண்டு சுவாமியைப் பார்த்து நொந்துகொண்டிருந்தேன் ... ...

1746 ஆ ஆகஸ்டு மீ 20உ க்ஷய ஹு ஆவணி மீ 8உ சனிவாரம்.

இற்றைநாள் காலமே எட்டு மணிக்கு, துரையவர்கள் வீட்டுக்குப் போய் துரையவர்களுக்குச் சலாம்பண்ணி, சாலையிலே உட்கார்ந்த விடத்திலே (ா) துரையவர்கள் மூசேறந்

தேசு என்னை அழைத்து நேற்றுச் சாயுங்காலம் மூசே லபோர்
தோனே காகிதம் துரைக்கு வந்தசேதி தெரியுமாவென்று கேட்
டார், நீர் சொல்லுமென்று சொன்னேன். அதின்பேரிலே
அவன் சொன்ன சேதி: மூசே லபோர்தோனே அவர்கள் நாகப்
பட்டணம் துறைக்கு நேராக கப்பலைக்கொண்டுபோய் நிறுத்தி
னார்கள். உடனே நாகப்பட்டணம் துறைக் கப்பித்
தான் அவர்கள் ஆலோசனைக்காரரை எதிர்கொண்டு
அனுப்புவித்தான். அவர்கள் வந்து கப்பலின்பேரிலே
இருக்கிற மூசே லபோர்தோனே அவர்களைக் கண்டு ஆலோ
சனைக்காரர் சொன்ன சேதி உங்களுக்கு நாங்கள் பொல்லாப்
பாய் நடந்துகொள்ளவில்லையே. எங்கள் சலுப்பும் மூன்று
பாய்மரம் வைத்திருக்கிற சூரத்துக் கப்பலும் புதுச்சேரி வழி
யாக வருகிறத்திலே நீங்கள் பிடித்துக்கொண்டீர்களே எங்கள்
பேரிலே குற்றமென்னவென்று கேட்டார்கள். அதற்கு மூசே
லபோர்தோனே சொன்னது: எங்களுடனே பகைத்துக்கொண்
டிருக்கிற இங்கிலீசுக்காரர் வஞ்சனையாக இந்தக் கரைக்கு
வந்து, மணிலாக்கப்பலையும் மொரிகியிலே ஒரு கப்பலையும் ஆக
இரண்டு கப்பலையும் பிடித்துக்கொண்டுவந்து உங்கள் கிட்டே
விற்றால் நீங்களிந்தக் கலாபச்சேதி யறிந்திருந்தும் இரண்டு
கப்பலையும் வாங்கலாமா. அதினாலே நாங்களினிமேலே உங்கள்
சலுப்புகள் கப்பல்கள் எங்கே கண்டாலும் பிடிப்போம். விடு
கிறதில்லையென்றுசொன்னார். உடனே அவர்கள் படகிலே ஏறி
நாகப்பட்டணம் வந்து கப்பித்தானைக் கண்டு மூசே லபோர்
தோனே அவர்கள் சொன்ன வயணத்தைக் கப்பித்தானுடனே
சொன்னார்கள். அந்தக்ஷணம் நாகப்பட்டணம் கப்பித்தான்
சின்னதுரை முதலான ஆலோசனைக்காரரை எல்லாம்
அழைத்து, குமுசல்பண்ணி சின்னதுரையும் ஆலோசனைக்கார
ரையும் மூசே லபோர்தோனே அவர்களண்டைக்கு அனுப்பி
வைத்துப் பட்டணமெல்லாம் வெகு நேர்த்தியாய்ச் சிங்கரிக்கச்
சொல்லி வீதிகளுக்கெல்லாம் மகரதோரணங்கள் வாழை
கள் கட்டச்சொல்லி. தெருக்களெல்லாம் சலம் இறைப்
பித்து நடைபாவாடை போடச்சொல்லி. பட்டணம்
கடலோரம் இதுகளிலே யிருக்கிற பீரங்கிகளுக்கெல்
லாம் மருந்து போடச்சொல்லி, சகலமான சாதிக்காரர், வர்த்த
கர், உத்தியோகஸ்தர், சொல்தாதுகள். சட்டைக்காரர்கள்,
கர்னாடகச் சேவகர்கள் சகலமான பேரையும் அலங்கரித்துக்
கொண்டு வரச்சொல்லி, மேளதாளங்களுடனே கூட எல்லா
ரையும் கூட்டிக்கொண்டு கப்பித்தானவர்களும் கடற்கரை
ஓரத்திலே காத்துக்கொண்டிருந்தார்கள். இப்படியிருக்கிறதி
லே நாகப்பட்டணம் சின்ன துரையும் ஆலோசனைக்காரரும்
படகேறி, கப்பலிலேயிருக்கிற மூசே லபோர்தோனே அவர்களைக்
கண்டு அவர்கள் சொன்ன சேதி: உங்கள் மனதிலே அந்த
இரண்டு கப்பலையும் நாங்கள் வாங்கினோமென்கிற கோபமல்ல

வாயிருக்கிறது. நாங்கள் விலைக்கு அல்லவோ வாங்கினோம். அதனாலே நமக்குக் குற்றமென்னவென்று வாங்கினோம். இந்தக் கலாபம் நாங்கள் அறிந்திருந்து உங்கள் கப்பல் என்றும் அறிந்து நாங்கள் வாங்கினது குற்றமுண்டு. அப்போது எங்களுக்கும் இந்த யோசனை தோன்றாமல் போச்சுது. இந்தக்குற்றம் நீங்கள் மனம் பொறுக்கவேணும். அந்த இரண்டு ஓடத்துக்கும் நீங்கள் என்ன விலைக்குச் சொல்லுகிறீர்களோ அந்த விலைக்குள்ள வராகன் பதினைந்து நாளையிலே எங்கள் ஜெருக்கத்திலே அந்தப்படிக்கு இப்போது காகிதமெழுதித் தருகிறோம் என்றும், நீங்கள் மனம் பொறுத்துப் பட்டணத்துக்கு வந்து விருந்து சாப்பிட்டு இனிமேல் எங்கள் கப்பல் சலங்குகளுக்கு எங்கெங்கே போனாலும் பயமன்னியிலே யிருக்கத்தக்கதாக நடத்துவிக்கவேணுமென்றும் சொன்னார். கப்பித்தானவர்கள். உஙகளைக் காணவேணுமென்று வெகு ஆசையுடனே கடற்கரை ஓரத்திலே வந்திருக்கிறார்கள். நீங்கள் தயவுபண்ணி வரவேணுமென்று வெகு வாய்ப் பிரிய வசனஞ்சொல்லி வேண்டிக்கொண்டு சமாதானம் பண்ணி மூசே லபோர்தோனே அவர்களைப்' பட்டணத்துக்கு அழைத்தார்கள். அதன்பேரிலே மூசே லபோர்தோனே குற்றமனம் பொறுத்து கப்பல்காரருக்கெல்லாம் சொல்லியனுப்பி அந்தந்தக் கப்பலிலே அவரவரைச் சாக்கிரதையாயிருக்கச் சொல்லிவைத்துப்போட்டு, தம்முடனே கூடவருகிற பேரையும் கூட்டிக்கொண்டு வெகு முஸ்தீப்புடனே கப்பலைவிட்டுப் படகிலே இறங்கிக் கரைக்கு வந்தார்கள். அப்போது கப்பல் பீரங்கிகளும் கோட்டை பீரங்கிகளும் ஒரு வரிசை தீர்த்தார்கள். அந்தக் கரை ஓரத்திலே நாகப்பட்டணம் கப்பித்தான் அவர்கள் வந்து கண்டு சகல வேடிக்கை நடை பாவாடைமேலே கோட்டைக்கு அழைத்துப் போய் வெகு நேர்த்தியாய் விருந்துபண்ணி வைத்து, தாமும் கப்பல் கிரயம் பதினைந்து நாளையிலே கொடுக்கிறோமென்று காகித மெழுதிக்கொடுத்து மூசே லபோர்தோனே அவர்கள் பயமன்னியிலே சமுத்திரத்திலே சஞ்சரிக்கிறதற்குக் கவுலும் வாங்கிக்கொண்டு, இப்படி பேசிக்கொண்டு, தீனி தின்றுகொண்டிருக்கிறதிலே இங்கிலீசுக்காரர் ஐந்து கப்பல் தென்புறமாகக் காணப்பட்டது. அந்தச் சேதி மூசே லபோர்தோனே அவர்கள் கேட்டு, கேட்டவுடனே சீக்கிரத்துக்குத் தீனி முடித்துக்கொண்டு, கப்பித்தான் முதலானவர்களை அனுப்பிவைத்துக்கொண்டு புறப்பட்டார். கூட கப்பித்தானும் சகல சனங்களுடனே கூட வெகு வேடிக்கையாய்க் கடற்கரை ஓரம் வரைக்கும் கூட வந்து படகிலே ஏறினபிறகு உத்தாரம் வாங்கிக்கொண்டு கப்பல் மேலே போய் ஏறுந்தனியும் கரையோரத்திலே யிருந்து அதின்பேரிலே கோட்டைக்குப் போனார். இரண்டு மணிக்கு மூசே லபோர்தோனே

அவர்களும் கப்பலுக்கு வந்து கப்பலெல்லாம் முஸ்திப்பாச்சுது. மூசே லபோர்தோனை அவர்கள் விருந்துக்குப் புறப்பட்டது முதல் திரும்பவும் கப்பல் மேலே வந்தும் இரண்டு நாழிகை மட்டுக்கும் பீரங்கி சப்தம் ஓய்வன்னியிலாதித்த வண்ணத்திலேயிருந்தது. அப்போது பீரங்கி நாதம் பிறந்தது இத்தனை என்று எண்ணக்கூடாது

இது நாளது மீ ஐந்தாந்தேதி நடந்த சேதி மறுநாள் ஆறுந்தேதி வியாழக்கிழமை உதயத்திலே கப்பல் எல்லாம் சண்டைக்கு ஆயத்தமாய்ப் பாயெடுத்துப் புறப்பட்டார்கள். அந்த வேளையிலே கடிதாசி எழுதி, கட்டுமரக்காரனைப் பயணம் பண்ணிப் புதுச்சேரிக்கு அனுப்பிவைத்துவிட்டுச் சண்டைக்குப்போனார். அந்த மட்டுக்கும் ஏழாந்தேதி வெள்ளிக்கிழமை சாயுங்காலம் காகிதம் வந்ததென்று என்னுடனே துரையவர்கள் கணக்கு மூசே மத்தேசு என்கிறவன் சொன்னான். உடனே வாசுதேவ பண்டிதன் வந்து இங்கிலீசுக் கப்பல் நாலு கப்பல் மூசே லபோர்தோனே பிடித்துக்கொண்டதாக ஊரிலே சொல்விக்கொள்கிறார்களென்று சொன்னார். இப்படிகேள்விபட்டது.

1746 ஆ ஆகஸ்டு மீ 21உக்ரு அக்ஷய ௵ ஆவணி மீ 9௳ ஆதிவாரம்.

இற்றைநாள் பத்து மணிக்குக் கேட்ட கபுறு என்னவென்றால், இங்கிலீசுக்காரர் சண்டைக் கப்பல் முன் 4௳ புதவாரம் நாள் (17 ஆகஸ்டு) வந்து காண்பித்துக்கொண்டது. சாயுங்கால வேளையானபடியினாலே பொழுது விடிந்த பிற்பாடு சண்டை கொடுப்போமென்று பிராஞ்சு சண்டைக்கப்பல்கள் காத்துக்கொண்டிருந்தது. பொழுதுவிடிந்து பார்த்தவிடத்திலே இங்கிலீசு சண்டைக்கப்பல்களைக் காணோமென்று அவர்கள் அந்த வட்டாரங்களிலேதானே திரியும்போது மறுபடி வந்து காண்பித்துக்கொண்டு தாம் அந்தப்படிக்கு அநேகவு காண்பித்து இருக்கிறதாய் (ா) துரையவர்களுக்குச் சேதி வந்ததாய் ஷெ கணக்கன் மூசே மத்தேசு சொன்னான்.

இற்றைநாள் பத்துமணிக்கு, குவர்னதோர் என்னை அழைத்து அருக்கு முஸ்தீது பண்ணிவைக்கிறார்கள். இதற்கு வெல்லச் சரக்குப் போதாது. கூடலூருக்கு எழுதியனுப்பினேன் அவ்விடத்திலே யிருந்துவரும் அந்தச் சேதி உங்களுக்கு எச்சரிக்கிறேன் என்று சொன்னார். ஆனால் அவ்விடத்திலே அகப்படாதே என்று சொன்னார். இவ்விடத்தில் அகப்படவில்லை. கூடலூரந்த வட்டாரங்களுக்கு எழுதியனுப்புவித்தேன். வரும்

என்று சொன்னபிற்பாடு உசேன்சாயபு மருமகன் வட்டிப் பேச்சு என்ன சொன்னானென்று கேட்டார். எழுதின பிற்பாடு அந்த விடத்திலே உசேன்சாயபு சம்மதியாய்ச் சொல்லவில்லை என்று எழுதிவந்ததாயும், தங்களுக்கு வாலிக்கொண்டையைத் தொட்டு நஷ்டம் திரளாய் வந்ததாகவும் இப்படி போக்காய் எழுதியனுப்பினதாய்ச் சொன்னான் என்று சொன்னதற்கு, ஆனாலிந்தக்ஷணமே சிட்டைக் கொண்டுவந்து கொடுத்து அவரவர்கள் வராகனை வாங்கிப்போகச்சொல்லு என்று சொன்னார். அதின்பேரிலே நல்லதென்று தெருவாசற்படியிலே வந்தவுடனே திரும்பியும் அழைக்கச் சொல்லி ஒரு காகிதம் பிடித்து எழுதென்று சொன்னார். அவர் எழுதி வைத்தது 1742-ம்ஆ ஒக்தோபர் மீ 13உ முதல் வராகன் பதினாயிரத்துக்கு ஸு 1-க்கு நூற்றுக்கு வட்டி எட்டாகப் பார்க்கச் சொன்னார். அந்தப்படிக்கு நாளதுவரை பார்க்க ஸு 3, மாசம் 10, நாள் 10-க்கு வட்டி கூடினது மூவாயிரத்தி யெண்பத்தெட்டு வராகனும், இருபத்தொரு பணமும், இருபத்தொரு காசும் கூடிற்றென்று கணக்குச் சொன்னேன். கணக்குப் பார்த்தவுடனே முதலுக்கு ஆதாயமும் பதிமூவாயிரத்து யெண்பத்தெட்டு வராகனும், இருபத்தொரு பணமும், இருபத்தொரு காசு மாச்சுதே இந்தப்படிக்கு அவர்களண்டைக்குப் போய் அவர்கள் கணக்குப் பார்த்துக்கொண்டு சீட்டும் கொண்டுக் கொண்டு அவர்கள் மனிதரையும் வரச்சொல்லு என்று சொன்னார். அதற்கு முன்பாக வட்டி தள்ளிப் போடவேணுமென்று துரை யென்னைப் பேசச் சொன்னபோது மதனாந்த பண்டிதனை விட்டு நான் பேசச் சொன்னதற்கு, மதனாந்த பண்டிதன் பேசினதற்கு அவன் கோபித்துக்கொண்டதும் துரையை நிந்தித்து ஊராருடைய உடைமையை எடுத்துக் கொள்ளுகிறார்கள் என்றும், சுகசிங்கு காசிகான் பணத்தை யெடுத்துக்கொண்டானே அப்படியா இது வென்றும், உசேன் சாயபு ஒரு காசுக்கு லட்சம் வராகன் செலவழிக்கிறவன். என்றும், மதனாந்த பண்டிதன் என்ன எங்களண்டையிலே இருக்கிற ரத்தினசி பண்டிதன் அண்டையிலே நாலு ரூபாய்க்கு சரக்குளுவாயிருந்தவனை என்னண்டைக்கு பைகாமனுப்புகிறது அவனத்தனை நானும் சின்ன மனுஷனா என்று இந்தச் சேதி உசேன்சாயபுக்கு எழுதியனுப்புவித்தேன். பணம் உண்டானது வட்டியும் முதலும் கொடுத்தாலாச்சுது இல்லாவிட்டால் புறப்பட்டு வந்துவிடச்சொல்லி எழுதியனுப்பினதாயும் இப்படி அநேக விதமாய் சின்ன மனுஷன் பேசுகிறாப்போலே என்னுடனே பேசின தீர்மானம், இந்தப்பணம் கொடுத்தாலாச்சுது. இல்லாவிட்டால் நான் போகிறேன் என்று சொல்லென்றும் உசேன்சாயபுக்கு நீ பிள்ளை நானும் பிள்ளையென்றும் இதற்கு முன் துரையுடனே பேசச்சொல்லி சொல்லியிருந்தபடிக்கு நான் துரையுடனே பேசினதிலே ஒரு பேச்சு சொன்னாலும் கலாபத்

துக்கு இடமாயிருக்கும். ஆனபடியினாலே உசேன்சாயபு மகா பெரிய மனுஷன். ஒருவேளையிலே இவன் தான் அறிந்து அறியாமல் பேசினால் அதைச் சமுதாயித்து நடப்பிக்கவேணுமேயல்லாமல் இப்படிப் பதறிச்சொல்லுவார்களா என்று உசேன்சாயபு கேட்பார். அவர்களைத்தொட்டு ஒரு பிரயோசனமும் இல்லாமல் போனாலும் வெகு நாளாயிருக்கிற சிநேகத்துக்கு விருத்தலம் வரப்பண்ணலாகாது என்று யோசனைபண்ணி உசேன்சாயபு அவர்கள் ரொம்ப தாபந்தப்படுகிறார். என்னவென்றால் வாலிகொண்டாபுரம் சீமை, ரொம்பவும் நஷ்டம் வந்தது. செலவானால் வெகு பணம் செலவாகுது. இந்த வேளையினுடைய குணம் இப்படி யிருக்கிறது இல்லாமல் போனால் ... ... னதினபடியே நடப்பிக்கலாம். அவர்களுக்குத்தான் பெரியகாரியமா நமக்குத்தான் பெரியகாரியமாவென்று இப்படி யெழுதிவந்ததாய் அசத்து சாயபு தாபந்தப்பட்டுச் சொன்னாரென்றும் அதற்குப் பின்னையும் அநேகவிதமாய் ஏழெட்டு நாளாய்ப் பஞ்சிட்டுப் பாரம் ஏற்றிக்கொண்டு வந்தபடியினாலே துரையும் அவர்களுக்கு நஷ்டம் வந்ததென்று சொல்லச்சே போராடுவானேன் வட்டியுண்டானது கொடுத்துவிடுவோம் சீட்டுக் கொண்டுவரச்சொல்லென்று சொன்னார். அப்பால் அசத்துசாயபு யண்டைக்குப்போய் துரை வட்டி முதலானது கொடுத்துவிடுகிறோமென்று சீட்டும் மனுஷரையும் கொண்டு அழைத்துவரச்சொல்லிச் சொன்னாரென்று சொன்னேன். அதற்கு அசத்துசாயபு இருந்துகொண்டு இது நிமித்தியம்தான் உம்முடைய மாரிபத்துப் பண்ணினதென்றும் உசேன்சாயபு அவர்களுடைமைக்கு நீர் பாத்திரமென்றும் ஸ்துவத்தியமாய்ச் சொல்லவந்தால் அதற்கு என்ன நாங்கள் உங்களவர்கள் எனக்கு உபசாரம் சொல்லவேண்டிய தென்னவென்று அதற்கு நாலத்தனை உபசாரம் சொல்லி வட்டி இவ்வளவு ஆச்சுதென்று கணக்குப் பாருங்களென்று சொன்னவிடத்திலே மாதம் பிசகாய்ப் பார்த்து அதற்கு இரண்டு நாழிகை பிடித்தது. வருஷமும் மாதமும் நிதானப்பட அதின் பிற்பாடு ௵ மூன்றும் மாசம் பத்தும் கூட்டிக்கொண்டு பதினாயிரத்தக்கு வட்டி மூவாயிரத்தி அறுபத்தி ஆறு வராகன், பணம் பதினாருச்சுதென்று கணக்குப் பார்த்துக்கொண்டு புக்கஞ்சி குமாஸ்தா தறுவாடியண்டைக்கு ஆளனுப்புவித்து அவன் வராமல் அவனண்டையிலே யிருக்கிற கோமுட்டியை யனுப்புவித்தான். பதேசாயபு வீட்டிலேயிருக்கிற மமுதல்லி என்கிறவனை கூடக் கூட்டி, பின்னையும் நாலைந்து பேரையும் கூடக் கூட்டி அவர்களுடனே ஒரு தரத்திற்கு நாலு தரமாய் வராகன் தொகையைச் சொல்லி, துரை எழுதிக்கொடுத்த சீட்டை மமுதல்லி கையிலே கொடுத்து அனுப்பினான். அதற்குள்ளாக மதனாந்தபண்டிதனை அழைப்பித்து, கணக்குப் பார்க்கச்சொல்லி, புதுச்சேரி பிறை வராகனுக்கும் சென்னப்பட்ட

ணம் நக்ஷத்திர வராகனுக்கும் வட்டமுண்டு. நாங்கள் கொடுத்தது பூவராகன் என்று ரொம்பவும் தகராறு பண்ணினுர். அதற்கு முன்னே சீட்டெழுதச்சேதானே நக்ஷத்திர வராகன் கப்படும் அகப்படாததென்று எட்டு மாற்று வராகனென்று தகராறு நடந்ததே எழுதப்பட்டதாச்சே என்று சீட்டிலே எழுதியிருக்கிறபடிக்குப் புதுச்சேரி பிறைவராகன் எட்டு மாற்று அல்லவென்று சொல்லப்போமா என்று கண்டித்த விடத்திலே அவர் சற்று சுறுக்காய்ப் பேச வந்தார். நானும் சற்று சுறுக்காய்ப் பேசி இப்படியெல்லாம் பேசினுல் பொல்லாப்புகள் வரும் முன்னுலேயும் சிறிது துடுக்காய்ப் பேசினீர். நாங்களிதெல்லாம் அவ்விடத்திலே சொன்னுல் விருதாவாய்ப் பொல்லாப்பு வருகுதென்று அதற்கு எப்படி யுக்தமாய்ச் சொல்லவேணுமோ அப்படிச் சொல்லிக் காரியம் குவியக் கொண்டுவந்தோம். பின்னை யொருத்தராகுல் கலாபத்தைக் கொண்டுவந்துவிடுவார்கள் துரை கேட்டாலும் நாம் வட்டிமாப்பு பண்ணவேணுமென்று கேட்டால் உமக்குச் சம்மதியானுல் மாப்பு பண்ணுகிறதுதான் இல்லாவிட்டால் எனக்கு வட்டி தள்ளக்கூடாதென்று உன் பணத்தை வாங்கிப் போகவேணுமேயல்லாமல் உனக்கு அதன் சாஸ்தியேன் சொன்னுய் என்று கேட்டால் நீரென்ன சொல்வீர் அவரிடத்துக்கு அவர் பிரபு ஆமல்லவோ அப்பால் மேல்நடக்கிற யோசனையைப் பண்ணுதே பேசினீர் இனிமேல் அப்படி பேசுகிறது ஞாயமல்லவென்றுப்போல் பயந்து அந்தமட்டிலே புதுச்சேரி வராகன் கொடுத்தாலும் வாங்கிக்கொள்ளுகிறத்தானென்று இவ்விடத்து விலைப்படிக்கு ரூபாயாகிலும் கொடுக்கத்தக்கதாகப் பாரும் என்று சொன்னுன். அப்படியெல்லாம் நடவாதென்று சொன்னேன்.

அப்பாலவர்கள் பனிதரை வாங்கிக்கொண்டு வரச்சொல்லி கூட்டியனுப்புவித்தான் அதின்பேரிலே துரையவர்களண்டைக்குப் போய் அவர்கள் மனுஷர் சீட்டு கொண்டுவந்தார்களென்று சொன்னேன. மேசைமேல் வராகனை கொண்டுவந்து வைத்து எண்பத்தெட்டு வராகன் கொடுக்கவந்தார். அதற்கு மூன்று ஷூம் பத்து மாதத்துக்குத்தான் வட்டி போட்டுக் கொண்டான் அறுபத்தாறு வராகன் கொடுங்கோளென்று சொன்னேன். இதென்ன பெரிய காரியமென்று வாய்ப்பேச்சு மாத்திரம் சொல்லிப்போட்டு பதிமூவாயிரத்தி அறுபத்தாறு வராகன் கொடுத்தார். வராகனை யெடுத்துப்போய் சாலையிலே யிருக்கிறவர்கள் கையிலே கொடுத்துச் சீட்டு வாங்கிவாரேன் என்றதற்கு அவருக்கு வந்த கோபத்தை யெழுதி முடியாது. அவர்கள் பொல்லாதவர்கள் சீட்டைக் கொடுத்தாலேயல்லாமல் வராகன் எடுக்கவேண்டாமென்றுர். அதின்பேரிலே இவர்களண்டைக்கு வந்து சீட்டைக் கொடுங்கள், வராகன் வாங்கி

வந்து தாரேனென்றால் இவர்கள் கொடுக்கமாட்டோமென்றார்கள். சிட்டுத்தாரிக்குப் பராதே எப்படி நான் உத்தரவாதம் பண்ணுகிறேன் என்றாலும்.

1746 ஆ ஆகஸ்டு மீ 21 உக்கு அக்ஷய ௵ ஆவணி மீ 9உ ஆதிவாரம்

மலக்கட்டி கையிலே யிருந்த காகிதத்தை வாங்கிப்போய் கையிலே கொடுத்து, சராபு முத்திரைப்படிக்கு இருக்கிற மூன்று சாக்கு அறுபத்தாறு வராகன் சில்லரையும் கையிலே கொண்டுவந்து கொடுத்து அப்பால் நல்லபாரத்து நேரமாயினதினாலே நம்பமாட்டோ மென்றதினாலேயும் வந்ததே போங்களென்று சொன்னதற்கு உங்கள் மனிதரை யனுப்பி எண்ணி ஒப்புக்கொள்ளுங்கோளென்று சொன்னார்கள். இந்தச் சேதி அவர்களுடனே சொன்னால் சராபு முத்திரைப்படிக்கு இருக்கிறமட்டுக்கும் பிசகு வருமா போங்களென்றாலிவர்கள் கேட்கிறதில்லை. ஆனபடியினாலே, நல்லது நீங்கள் போங்கள் சராப்பை அனுப்பிவைக்கிறோமென்று சொல்லிப்போகச்சொல்லி கும்பினீர் சராப்பைக் கூட்டி யனுப்புவித்தேன். அப்பால் அவர்கள் மனிதர் போகிறோமென்று சொல்லுகிறார்களென்று துரையுடனே சொன்னதற்கு, துரை வாயைத் திறக்கவில்லை. திரும்பியும் நின்றதற்குக் கையை சைகை பண்ணினார். அது பார்த்த இவருக்கு வட்டியிலே தள்ளுபடாமல் போச்சுதேயென்றிருக்கிற கோபத்தினாலே முகத்திலே படபடப்பையும் கோபமும் உத்தாரமும்கூடச் சொல்லுகிறதற்கில்லையென்று சலாம்பண்ணிப் போட்டு வந்துவிட்டேன் அப்பால் சொன்ன மூர்க்கனாயிருக்கிற சராபு செட்டி அசத்து சாயபு அண்டைக்குப் போய் பதிமூவாயிரத்து அறுபத்தாறு வராகனும் எண்ணி ஒப்புவித்துவிட்டு வந்து கபுரு சொன்னான். இதிலே நடந்தது, மெத்த பத்துநாளாய்த் துவக்கியா பத்துக்கு இருக்கவேணுமென்று சுருக்கி யெழுதினேன்.

இற்றைநாள் ராத்திரி கர்சோம்வில் என்கிற சொல்தாது கப்பித்தான் சாராயத்தைக் குடித்துவிட்டுக் கோட்டை பீரங்கி ஒன்பது மணிக்குச் சுட்டாப்போலே இவனிருக்கிற வில்லியநல்லூர் வாசற்படியிலே இரண்டு பீரங்கியிலே இரண்டு குண்டு போட்டுக் கிடித்துச் சுட்டான். அந்தக் குண்டுகளிரண்டும் எல்லப்பிள்ளை சாவடியிலே பிறகு இருக்கிற மரத்தை யடித்துக்கொண்டுபோச்சுது ஒன்று மற்றொன்று பூமியிலே வெகுதூரம் பள்ளம் பண்ணித் தோண்டிவிட்டது என்று சொன்னார்கள். அப்பால் சண்டைத் தம்பூர் அடிக்கச் சொன்னான். அடித்த பிற்பாடு பத்துப் பதினைந்து வேட்டு துப்பாக்கிக் குண்டு போட்டுக் கிடித்துச் சுடச்சொன்னான்.

இப்படியெல்லாம் செய்யப்போகாதென்று வாசற்படியிலே இருக்கிற சார்செந்து சொல்லப்போனால் அவனைக் குத்தப் போனான். சொல்தாதுகள் துப்பாக்கிகள் சுடமாட்டோமென்றால் அவர்களையெல்லாம் பிரம்பினாலே யடித்தான். இப்படியெல்லாம் அவன் சேன தாம்தூம் பண்ணினான். அதின்பேரிலே இந்தச் சத்தங் கேட்டு, துரையவர்கள் அதற்கு துக்கேனை (N. Duquesne) யனுப்பி பிடித்துக்கொண்டு போய்க் காவல் கோட்டையிலே வைத்து, சாந்திநேரும் வைத்தார்கள். இதை ஊதி அவரவர்கள் சொன்னது. தேவனாம்பட்டணத்தின்மேல் சண்டைக்குப் போகிறதற்கு அல்லது சென்னப்பட்டணத்தின் மேலே போகிறதற்குச் சங்கேத்த பீரங்கி போட்டார்களென்று சொல்லுகிற பேரும் மாயே சிப்பாய்களும் சொல்தாதுகளும் வில்லியநல்லூருக்கு அப்பாலே போய்விட்டார்களென்று சொல்லுகிற பேரும் மூசே லபோர்தோனே கப்பல் மாயேயிலே இருக்கிறது இந்த பீரங்கி போட்டாப்போலே கப்பல்கள் அப்படி பாயெடுத்து ஓடிப்போகுது என்று மிவர்கள் கரைவழியாய்ப் போகிறதற்குச் சங்கேத்தமென்று சொல்லுகிறவர்களும் இப்படி நானாவிதமாய்ச் சொன்னார்கள்.

1746 ஆ ஆகஸ்டு மீ 23 உ க்ஷய ஞ ஆவணி மீ 11 உ செவ்வாய்க்கிழமை

இற்றைநாள் சாயங்காலம் ஐந்து மணிக்கு (ஈ) துரையவர்களை அழைத்துவரச்சொல்லி என்னை இருபது குதிரையும் சேகரம் பண்ணச்சொல்லிச் சொன்னார்கள். அப்போது மூசே லபோர்தோனே எட்டுக்கப்பலும் காணுதென்று கபிருன். உடனே வீட்டுக்குவந்து கிரிமோசி பண்டிதரையும் பெரியண்ண நயினாரையும், தலையாரி சேவகரையும் கூட்டிவரச் சொல்லி, குதிரைக்கு அனுப்புவித்து ராத்திரி ஒன்பது மணிக்குள்ளாக ஊரிலே பிடித்துவந்த குதிரை 12. இதுவும் நம்முடைய சொந்தக் குதிரை 2. ஆக குதிரை பதினாலும் சேகரமாச்சுது. உடனே ராத்திரி ஒன்பது மணிக்குத்தானே (ஈ) துரையவர்கள் குதிரை லாயத்திலே கொண்டுபோகச் சொல்லியனுப்புவித்தோம். இப்படியிருக்கையில் கும்பினீர் சேவகன் வந்து துரையவர்கள் கூட்டிவரச் சொன்னார்கள் என்று வந்துசொன்னான். உடனே அங்கிபோட்டுக்கொண்டு துரையவர்கள் கிட்டே போனோம். அப்போது அம்மாள் முகாந்திரமாய் நபாபு சந்தாசாயபு குமாரன் ராசோ பண்டிதனையும் ஒரு துலுக்கனையும் துரையவர்கள் அண்டைக்கு யனுப்புவித்துத் தங்கள் குதிரையை நாம் சோராவாரியாய் பிடித்து வந்தோமென்று ஆவலாதி சொல்லியனுப்பினார். அந்தச் சேதிக்குத் துரையவர்கள் நம்மைப் பார்த்து அவர்கள் பெரிய மனிதராச்சுதே. அவர்களைக் கேளாமல் குதிரையைப் பிடிப்பார்களா. நடந்த சேதி என்னவென்று

கேட்டார். அதற்கு நாம் சொன்ன சேதி: அப்படி அவர்கள் குதிரை பிடித்ததேயில்லை. ராயசம் சீனப் பய்யனையும் கிரி மோசி பண்டிதரையும் அனுப்புவித்து உங்களுடைய சலாம் என்னுடைய சலாம் இரண்டும் கொஞ்சம் கவையாயிருக்கிறது. குதிரை கொடுக்கவேணுமென்று கேட்டார்கள். அதற்குக் கொடுக்கக்கூடாது என்று சொன்னார். ஆனாலும் ஒரு குதிரை யாகிலும் தரவேணுமென்று கேட்டார்கள். அதற்கும் கூடாதென்று சொன்னார். அந்தமட்டுக்கும் அவர் குதிரை வழி போகவில்லை. அந்தத் தெருவிலே ஒரு பிராமணன் குதிரை யிருந்தது. அதைப் பிடித்துவந்தார்களென்று சொன்னோம். உடனே துரையவர்களுக்கு அவர்கள்பேரிலே கோபம் பிறந்து இவர்கள் மெத்த சின்ன மனுஷர். இவர்களுக்குச் சற்றாகிலும் புத்தியில்லை. இவர்கள் எந்த வேளையிலே வந்து எந்தக்காரியம் சொன்னாலும் நாம் செய்துகொடுக்க நமக்கு ஒரு சமயம் என்று குதிரை கேட்டனுப்பினால், தங்கள் குதிரையும் கொடாமல் பிராமணன் குதிரைக்கும் வந்து சொல்லிக்கொண்டார்களே, இவர்கள் மரியாதைத் தெரிந்தது. அந்தக் குதிரையும் நமக்குத் தேவையில்லையென்று சொல்லி மெத்தவும் கோபம் பண்ணி யவர்களை வெளியிலே போகச்சொன்னார்கள். உடனே நாமும் அனுப்புவித்துக்கொண்டு வீட்டுக்குவந்து அருணாசல செட்டி யாரையும் ஒரு சேவகனையும் துரையவர்கள் குதிரை லாயத் திற்கு அனுப்புவித்து அந்தப் பிராமணன் குதிரையை விட்டுப் விடச்சொல்லி, துரையவர்கள் உத்தாரங் கொடுத்தார்க ளென்று சொல்லி யனுப்புவித்தோம். அருணாசலசெட்டியார் குதிரை லாயத்துக்குப் போகுமுன்னே குதிரை பதினாலும் படகு மேலே ஏற்றுகிறார்களென்று கபுருச்சுது. உடனே அருணாசலசெட்டியார் கடலோரத்து வாசல் மட்டுக்கும் போகுமுன்னே எல்லாக் குதிரையையும் ஏற்றினார்கள்.

இந்த மாதவான மாத்திரம் இன்னும் ஏறவில்லை யென்று சொன்னார்கள். அந்தச் சேதிகட்டு, சுறுக்காய் போனார். கடற் கரைவாசல் காக்கிறபேர் விடமாட்டோ மென்றார்கள். அப் படியிருக்கையிலே தென்புறமாய்ப் பத்துபேரும், வடபுறமாய்ப் பத்துபேரும், வெள்ளைக்காரர் துப்பாக்கியுடனே வந்து அவ்வி டத்திலே ஆரைக்கண்டாலும் துப்பாக்கியாலே அடிக்கத் தலை பட்டார்கள். அந்த வேளையிலே அருணாசலசெட்டியார் பயந்து கும்பினீர் சேவகர் கடற்கரையிலே யிருந்து வருகிறபேர் பிறகே அடிபடாமல் தப்பிவந்தது வெகு பிரயாசமாயிருந்தது. இது ராத்திரி பத்து மணிக்கு நாம் சாப்பிடுகிறபோது அருணா சலசெட்டியார் வந்து சொன்னார். உடனே வெளியிலே வந்து கோட்டை சுப்பையன் மகன் கிருஷ்ணய்யனையும் ஒரு சேவ கனையும் கூட்டி மூசே ஒந்தேல் (M. Auteuil) அண்டைக்குப் போய் அவருடனே துரை உத்தாரங்கொடுத்தார் என்று

சொல்லி அந்தக் குதிரையை விட்டுவிடச்சொல்லி யனுப்புவித்தோம். ஒன்பதரை மணிமுதல் பத்தரைமணிக்குள்ளாக வருகிற கப்பல்காரர் கப்பலின் பேரிலே அரைமணிக்கொன்றாக மூன்று பீரங்கி போட்டார்கள். கரையிலேயும் ஒரு பீரங்கி போட்டார்கள். மணிக்கூண்டு மேலே விடியந்தனையும் வெளிச்சங் காட்டினார்கள்.

இதல்லாமல், வடக்கே துரையவர்கள் வீடு, தெற்கே வெள்ளைக்காரர் வீதி, மேற்கே பாதிரிகள் கோவில் இந்த மட்டுக்கும் சந்துசந்துக்கெல்லாம் வெள்ளைக்காரர் சொல்தாதுகளும் காவல் பத்திரமாய் வைத்து ராத்திரி முப்பது நாழிகையும் கோட்டையிலேயிருந்து சகல தட்டுமுட்டுப் பாத்திரங்கள் முதலானதுகளெல்லாம் ஏற்றினார்கள் என்று அவரவர் வந்து சொன்னார்கள். கோட்டை சுப்பய்யன் மகன் கிருஷ்ணய்யன் என்கிறவன் மூசே தோத்தேலண்டைக்குப்போய் அவர் நித்திரை போனபடியினாலே அவருடன்பிறந்தாள் மகன் மூசே தெபுரி என்கிறவருடனே மூசே தோத்தேலண்டைக்கு நாம் அனுப்புவித்தோம், கண்டுபேச வேணுமென்று சொன்னான். அதற்கு மூசே தெபுரி என்கிறவன் சொன்னது: அவர் நித்திரை போகிறார், எழுப்பக்கூடாது. அந்தச் சேதி என்னுடனே சொன்னால் அதற்கு நான் மறு உத்தரம் சொல்லுகிறேன் என்று சொன்னான். அதன்பேரிலே கிருஷ்ணய்யன் அவனுடனே சொன்ன சேதி: சந்தாசாயபு குமாரன் பிராமணன் குதிரையை (ா) துரையவர்கள் விட்டுவிடச் சொன்னார்கள். அந்தச்சேதி பிள்ளை அவர்கள் மூசே தோத்தாலுடனே சொல்லச் சொன்னார்கள் என்று சொன்னான். அதற்கு மூசே தெபுரி என்கிறவர் சொன்ன சேதி: கடற்கரையிலேயிருக்கிற குதிரையிலே ஒரு குதிரை மாத்திரம் விட்டுவிடச்சொல்லிச் சொல்லுகிறார்கள் என்று தமிழன் ஒருத்தன் வந்து (ா) துரையவர்களுடனே கபுறு சொன்னான். அதற்குத் துரையவர்கள் வந்த குதிரையிலே ஒன்றும் விடத் தேவையில்லையென்று உத்தாரங் கொடுத்தார். ஆகையினாலே, ஒரு குதிரையும் விடக்கூடாது என்று நம்முடனே சொல்லச்சொல்லிச் சொன்னான். அந்தச் சேதி உடனே கிருஷ்ணய்யன் வந்து நம்முடனே சொன்னான். அதற்கு நாம் திரும்பவும் கிருஷ்ணய்யனுடனே (ா) துரையவர்கள் உத்தாரங் கொடுத்தாச்சுதே ஒரு கிளையிலே துரையவர்கள் கோபம் பண்ணினால் எப்படியென்று சொல்லித் திரும்பியும் கிருஷ்ணய்யனை மூசே புரியண்டைக்கு அனுப்புவித்தோம். அந்தப்படிக்குக் கிருஷ்ணய்யன் போய் மூசே புரியுடனே நாம் சொன்ன சேதி சொன்னான். அதற்கு மூசே புரி யிருந்து அது கடற்கரையிலே துரையறிந்து உத்தாரங் கொடுத்திருக்கிறார். அதற்கு நாம் பேசிக்கொள்ளுகிறோம். உங்களைக் கோபம் பண்ணத்தக்கதில்லை யென்று சொல்லி யனுப்பினார்.

அந்தச் சேதி கிருஷ்ணய்யன் வந்து சொன்னான். இப்படி யிருக்கிறதிலே கிரிமோசி பண்டிதர் ராத்திரி பதினொரு மணிக்கு வந்து சொன்ன சேதி: தன்னைத் துரையவர்கள் அழைத்துவரச் சொன்னார் என்று அழைத்தான். நல்லதென்று போனேன். துரையவர்கள் வீட்டு வாசலிலே ஐந்தாறுபேர் சொல்தாக்களும் முசே துக்கேனும் நின்று கிட்டே அழைத்து நீ மதாம் துபாசி கந்தப்பன் விடு அறிவாயாவென்று கேட்டார்கள். அறிவேனென்று சொன்னேன். ஆனால், கூடவரச் சொல்லி யழைத்தார்கள். துரையழைத்துவரச சொல்லியிருக்க அவர்களண்டைக்குப் போய்க் கண்டு பேசாமல் நான் எப்படி உங்கள் பிறகே வருவேன் என்று சொன்னேன். அதற்கு முசே துக்கேன் மயோர் (Major Duquesne) சொன்ன சேதி: உன்னை அழைத்துவரச் சொன்னசேதி நம்முடனே சொன்னார் நாம் சொல்லுகிறோம் வாவென்று அழைத்தான். அந்தச் சேதி யென்னவென்று கேட்டேன். அதற்கு அவர் சொன்ன சேதி: உன்னையும் ஐந்தாறுபேர் சொல்தாதுகளையும் கூட்டிக்கொண்டு மதாம் கந்தப்பன் வீடு சோதிக்கச் சொல்லிச் சொன்னார். கூடவாவென்று அழைத்தான். ஆனால், நல்லதென்று எல்லாரும் கூட சற்று இடம் வந்தோம். இதிலே துரையழைக்கிறார் என்று அழைத்தார்கள். நல்லதென்று திரும்பவும் துரையவர்களண்டைக்குப் போனோம். அப்போது துரையவர்கள், அவன் வீட்டுக்குப் போகவேண்டாம் என்று என்னை கிட்டே அழைத்து நீ விடியற்காலம் வழுதாவூர் வாசலிலே இரண்டு மூன்று கணக்கப்பிள்ளைகளையும் கூட்டிப்போய் முசே செவ்மெடுத்தேன் என்ன சொல்லுகிறாரோ அந்தப்படி கேளென்று சொன்னார். நல்லதென்று வந்தேன் என்று சொன்னான். சாயுங்காலம் என்னை துரையழைத்து, சுகசிங்கு வியாச்சியம் தீர்த்துப்போடாதேபோனால் நவாபு காகிதமானால் எந்நேரம் வருகிறதென்று சொன்னார். தீர்ந்திருக்கிறது என்று சொன்னதற்குக் கோபமாய்ச் சொல்லி எப்படியாகிலும் செய்யென்று கோபித்துக்கொண்டார்.

1746 ஆ ஆகஸ்டு மீ 24உக்கு அக்ஷய ௵ ஆவணி மீ 12உ

இற்றைநாள் புதவாரம் நடந்த சேதி யென்னவென்றால்: கிரிமோசி பண்டிதனை, பாளையக்காரன் தளவாயாயிருந்தவனை (ா) துரையவர்கள் அழைப்பித்து நேற்றையதினம் அழைப்பித்தவிடத்திலே ஏன் வராமல்போனாயென்று கேட்டாராம். ராத்திரி பதினொரு மணி மட்டுக்கும் குதிரை நிமித்தியமாய் திரிந்து குதிரையெல்லாம் கொண்டுபோய் கடற்கரையிலே சேர்த்து ரங்கப்பனுக்குப் போய் கபுரு சொல்லிவிட்டு அப்பால் வீட்டுக்குப் போனேன். இதிலே உங்கள் சேவகர் வந்து அழைத்தார்கள். வருகிறதற்குள்ளே

மூசே துக்சேன் எதிரே வந்து இரண்டு மூன்று கணக்கப்பிள்ளைகளை அழைத்துக்கொண்டு வழுதாவூர் ஒபிசியேல் சேன் மர்த்தேன் (St. Martin) அண்டைக்குப் போகச்சொன்னான். அந்தப்படிக்குப் போனேன். ஐந்து மணிக்கு அங்கேயிருந்து இந்நேரமட்டுக்கும் அங்கேயிருந்தேன். இதிலே சேவகன் வந்து நீங்கள் அழைக்கிறீர்களென்று அழைத்தான் என்று சொல்லுகிறவிடத்திலே இதல்லாம் கேளாமல் அவர் கோபம் பண்ணினதும் மிதமில்லை. அப்படி கோபம் பண்ணிக்கிட்டே ஒரு வெள்ளைக்காரன் கையிலேயிருந்தபடி ... ... ... ... ... நடந்தார்கள். நடந்தாப்போலே பிரம்பைக் கொடுத்துவிட்டுக் கோபமாய்த்தானே உலாத்தினார். அந்தமட்டுக்கும் கோபம் சாந்தமாச்சுதென்று இவ்விடத்திலேதானே நின்றார்கள். உலாத்துகிறவர் பிறகே வந்து காலாலே இரண்டொதை போட்டு இனிமேல் என் முகத்துக்குமுன்னே வரவேண்டாமென்று கோபித்துத் துரத்தினார். அந்தமட்டுக்கும் பெரியண்ண நயினாரும் இவனும் வெளியே புறப்பட்டார்கள். பெரியண்ண நயினாரைக் கூப்பிட்டு நீ போய் கடற்கரைக்கு இந்த ஊர் பிரசைகள் போய் விழுகிறார்கள். விழாதபடிக்குத் துரத்திவிடு என்று சொல்லிப் போகச்சொன்னார். ... ... ... ... ... ... ...

நேற்று ராத்திரி வந்து வைத்துப்பிடித்த இஸ்தாது எட்டுக்கப்பலும் துறைக்கு நேராய் வந்து துறை பிடித்தாப்போலே கொம்மாந்தானுடைய லஷில் என்கிற கப்பலிலே மாத்திரம் பதினைந்து பீரங்கி போட்டான். அப்பால் மூசே லபோர்தோனேக்கு சரீரத்திலே சுவரம் கண்டு இருக்கிறது. பேதி கண்டு இருக்கிறது என்று கப்பலிலேயிருந்து இறங்கச்சேரோம் தெ ஷாம்புறு குல்லாவுடனேயும் இறங்கினான். இறங்கின உடனே பல்லக்கிலே போட்டு மூடிப்போட்டுக்கொண்டு வந்து துரை வீட்டிலே இறக்கினவுடனே துரையவர்கள் அதற்கு முன்பாகத்தானே அங்கேதானே யிருந்த பேரையெல்லாம் வெளியே போகச்சொல்லி, துரை வீட்டுக்கு மேலண்டை சந்துலேயும் கீழண்டை சந்திலேயும் தென்னண்டை வடவண்டை இரண்டு பாரிசத்திலேயும் துப்பாக்கிக்காரரை வைத்து மனுஷர் போவோர் வருவோரைத் தடைபண்ணி, பின்னையும் ஒரு மார்க்கமாய்ப் போகச்சொல்லி, திட்டம் பண்ணியிருந்தார்கள். இந்தச் சந்துக்குநேராய் அகறதையண்டையிலே ஒரு துப்பாக்கிக்காரனை சமுத்திரக்கரைக்குப்போகிறவர்களைப போகவிடாமல் தடைபண்ணச்சொல்லியும் அதற்கு நேர்கிழக்கே கோட்டைக்கும் துவானுக்கும் போகிற சாந்தினேர் அகறதையண்டையிலே இரண்டு துப்பாக்கிக்காரரையும் கீழண்டை கோட்டை வாசலுக்குத் தென்னண்டையிலே இரண்டு துப்பாக்கிக்காரரையும் வடவண்டையும் இரண்டு துப்பாக்கிக்காரரையும் வைத்துத் துவானுக்குப் போய்க் கடற்கரை வேடிக்கைப் பாராமல் இந்தப்படிக்குச் சனங்கள்

கடற்கரைக்குப் போக ஒட்டாமல் காக்கிதை பண்ணி, சட்டுபண்ணியிருந்தது. இந்தச் சமயத்திலே முசே லபோர்தோனே மூடுபல்லக்கு பேரிலே துரை விட்டிலே வந்து இறிந்தவன் இரண்டுபேர் கைலாகிலே பிடிக்க துரையவர்கள் அண்டைக்குப் போனான். அவரும் எதிரே வந்து கட்டிக் கொண்டு உள்ளே காம்பிராவிலே யழைத்துப்போய் முசே பரிதியும் துரையும் முசே லபோர்தோனேயும் பேசியிருந்தார்கள். தான்பயணம் புறப்பட்டதும் நாகப்பட்டணத்தார்கள் தனக்கு ராசவட்டம் விட்டு மணிலா கப்பலிலே மோதென்கிறதும் ஷார்லு என்கிற கப்பலும் முசே லவீல்பாது மணிலாவிலேயிருந்து வந்து அப்பால் மெரிகிக்குப் போனதை இங்கிலீசுக்காரர் பிடித்துக்கொண்டதை ஒலாந்துக்காரருக்கு விற்று இருந்தார்களே அதற்கு நமக்குச் சென்ற கிரயம்படிக்குக் கொடுக்கிறோமென்று சொல்லி உடன்படிக்கைச் சீட்டெழுதிக்கொடுத்தும் இங்கிலீசுக் காரர் வந்து முகாவளியாய் தங்கள் கப்பல் பாயெடுத்துச் சண்டைக்கு ஆரம்பித்தாப்போலே ஓடிப்போய்விட்டதும் இது முதலாகிய சேதியெல்லாம் விஸ்தாரமாய்ச் சொல்லி தனக்கு சரீரம் லகுவில்லாமலிருக்கிறதும் சொன்னானும். அதின் பேரிலே விட்டுவிட்டு வரலாகாதென்று சொல்லி அப்பால் சென்னப்பட்டணத்தின் பேரிலே சண்டை செய்யத் தக்கதான திட்டங்களையும் பேசிக்கொண்டிருந்துவிட்டு அப்பால் அந்தப்படிக்குப் பல்லக்கிலேதானே இவர் பழைய விடுதி முசே தெசெடுதேன் வீட்டைப் போனார். இவ்விடத்து மங்கள மேஸ்திரியும் கூடப்போய் இரத்தம் வாங்கினார்களென்று சொன்னார்கள். அப்பால் சாயங்காலம் மங்கள மேஸ்திரிகளும் முசே லபோர்தோனேயும் ரோம் தெ ஷாம்பருடனே வெளியே சவாரி போனார்.

இற்றைநாள் பொழுதவிடிய இரண்டு நாழிகைக்கு வடக்கு சென்னப்பட்டணம் வாசல்படிக்குக் கிழண்டையிலே யிருக்கிற கடற்கரை வாசல்படி வில்லியநல்லூர் வாசல்படி கூடலூர் வாசல்படி, இது முதலாகிய வாசல்படிக் கதவுகளை யெல்லாம் சாத்தி வழுதாவூர் வாசல்படி பெரிய கதவைச்சாத்திப் போட்டு திட்டிவிட்டு அவ்விடத்திலே நேற்று ராத்திரி பாளையக்கார தளவாயாகிய கிரிமோசி பண்டிதனுடனே சொன்னபடிக்கு இரண்டு மூன்று கணக்கப்பிள்ளைகளை வைத்துப் போகிறவர்களை வருகிறவர்களை யெல்லாம் சோதித்தார்கள். சோதிக்கச்சே வருகிற பேர் அந்த பேர் கொண்டுவருகிற ஓலைகளை வாங்குகிறதும் படித்துப் பார்க்கிறதும் கொடுத்து விடுகிறதும் காகிதங்கள் வருகிறதையும் பாரிசும் மாராஷ்டம், தெலுங்கு, பறங்கி யெழுத்துக் காகிதங்கள் வந்தால் வாங்கி வைத்துக்கொள்ளுகிறதும் தமிழானல் படித்துப் பார்க்கிறதும் இந்தப்படிக்கு நடந்தது பனிரண்டுமணி

மட்டுக்கும் அப்பால் அந்தக்கட்டை வேண்டாமென்று ஐந்தாறு தெவுனிவாசல்களும் கதவுகளெல்லாம் திறந்துவிட்டு வழுதாவூர் வாசலும் பெரிய கதவுகளைத் திறந்துவிட்டு சோதனையும் நிறுத்திப்போட்டுவிட்டார்கள். இதன் நிமித்தியமென்னவென்றால் யாரோ காகிதபத்திரங்கள் இங்கிலீசுக்காரருக்கு தமிழிலே எழுதி அனுப்புகிறார்களென்று கபுறு சொன்னதின்பேரில் சோதிக்கச்சொன்னசாடையாய்க் காணுது. இதல்லாமல் நேற்று ராத்திரி முன்மதாம் அண்டையிலேயிருந்து கந்தப்பன் வீட்டை சோதிக்கப் புறப்பட்டபோது திரும்பியும் துரை வேண்டாமென்று நிறுத்திப்போட்டு அதின்பிற்பாடு அல்லவோ தெற்கு வாசலையெல்லாம் அடைத்து வழுதாவூர் வாசலிலே சோதிக்கச் சொன்னதைப் பார்த்தால் கந்தப்பன்பேரிலே யாரோ கபுறு எழுதுகிறானென்று சொல்லி யிருக்கிறபடியினாலே வாசல்படியினாலேயல்லவோ போகவேணுமென்று சோதிக்கச் சொன்னதாய் தோற்றுது. அப்பால் துரை மனதிலேயிருக்கிறது சுவாமிக்குத் தெரியும். நாளையதினம் ராசாவினுடைய பண்டிகையானபடியினாலே இற்றைநாள் சாயுங்காலம் கோட்டையிலே துரை போயிருந்து வரிசைவைத்து மூன்றுதரம் வரிசைவைத்து துப்பாக்கியால்சுட்டு அப்பால் கொத்தளங்கள்பேரிலே யிருக்கிற பீரங்கியெல்லாஞ் சுட்டு அப்பால் கப்பல்கள்பேரிலேயெல்லாம் இருபத்தொரு பீரங்கி விழுக்காடு ஏககாலத்தில் சுட்டபடியினாலே பட்டணம் எல்லாம் எடுத்துக்கொண்டு போகிறாப்போலே வெளியிலேயிருக்கிறவர்கள் சண்டைபோலே தோற்றத்தக்கதாகப் பயங்கரமாய் பீரங்கி வேட்டுக் கிளப்பினதும் மகா தமாஷாய் சம்பிரமமாயிருந்தது.

**1746 ௵ ஆகஸ்டு ௴ 25 ௳ அக்ஷய ௵ ஆவணி ௴ 13 ௳ வியாழக்கிழமை.**

இற்றைநாள் ராசாவினுடைய பண்டிகையானபடியினாலே ஐந்து மணிக்கு மூன்றுதரம் துப்பாக்கி சுட்டு கோட்டையிலே இருபத்தொரு பீரங்கி சுட்டாப்போலே கப்பல்கள் எல்லாம் இருபத்தொரு பீரங்கி விழுக்காடு ஏககாலத்திலே சுட்டார்கள். அப்பால் ஏழரை மணிக்கு துரையவர்கள் கோட்டையிலே போய் பூசை கேட்கச்சே மூன்றுதரம் துப்பாக்கி சுட்டு மூன்றுதரம் கோட்டையிலே இருபத்தொரு பீரங்கி விழுக்காடு போட்டபோது கப்பல்களிலேயெல்லாம் மூன்றுதரமும் இருபத்தொரு பீரங்கி விழுக்காடு சுட்டதினாலே சற்றேறக்குறைய ஆயிரம் பீரங்கி மட்டுக்கும் உண்டு. அப்பால் குவர்னதோர் வீட்டுக்கு வந்தவுடனே சாப்பிடச்சே சாராயம் வாங்கிக்கொள்ளச்சே வீவுறுவாயென்று துரையவர்கள் தொப்பி வாங்கி கூப்பிட்டாப்போலே எல்லாம் ஏக சப்தமாய் வீவுறுவாயென்று கூப்பிட்டாப்போலே கோட்டையின்பேரிலே

இருபத்தொரு பீரங்கி சுட்டார்கள். கப்பல்கள் எல்லாம் இருபத்தொரு பீரங்கி விழுக்காடு ஏக காலத்திலே பத்துப் பனிரெண்டு கப்பல்களிலேயும் சுட்டார்கள்.

கோட்டையிலே சுட்டதும் கொப்பாந்தான் கப்பலிலே சுட்டதும் இருபத்துநாலு ராத்தல் குண்டு ஓடுகிற பெரிய பீரங்கியானபடியினாலே சப்தம் விஸ்தாரமாய்க் கேட்டவர்களுக்கெல்லாம் பயங்கரமாயிருந்தது. ... ... ...

இற்றை நாள் பத்து மணிக்கு மூசேலவில்பாது என்னை யழைத்து, தங்கள் தமையன் மூசேலபோர்தோனே கூட்டச் சொன்ன சரக்கு லீஸ்துரு எழுதச் சொல்லி என் கையிலே வாங்கிக்கொண்டு பதினாயிரம் ரூபாயும் கொடுத்தார்கள். அந்த வயணம் எல்லாம் சரக்கு அவரவர் கூட்டச்சொன்ன வீஸ்துரு எழுதுகிற வீவுறுலே வயணமா யெழுதியிருக்கும் அது பார்த்தால் இந்த வயணம் தெரியும். ... ... ...

இற்றைநாள் பத்து மணிக்கு, கோன்சேல் கூடினார்கள். காரியமென்ன வென்றால், சென்னப்பட்டணத்தின் பேரிலே சண்டைக்குப் போகிற யோசனையாய்த் தோற்றுது. ... ...

இற்றைநாள் ராத்திரி யென்பேரிலே கஸ்தூரி ரங்கய்யன் திரிச்சிராப்பள்ளி வித்துவான் சொன்ன தெலுங்கு குறவஞ்சிக்கு திரிச்சிராப்பள்ளி மங்கபதி அய்யன் வர்ணசுரம் போடுவித்துத் தாசிகளுக்குப் பாடம் பண்ணிவித்ததை முத்தியப்பிள்ளை யவர்கள் தோட்டம் சேடத்தெருவிலேயிருக்கிற தோட்டத்திலே தாசிகளைக்கொண்டு சினேகிதர் சமஸ்தமானபேர் முன்னேயும் அரங்கேற்றிவித்தனர். ... ... ... ...

1746 ஆ ஆகஸ்டு மீ 26 உ அக்ஷய ஸு ஆவணி மீ 14 உ வெள்ளிக்கிழமை

மதாம் அல்பேர் அழைப்பித்து முன்றும் ஸு உன் கையில் நெப்புதான் கப்பல் மோக்காவுக்கு பயணமாகப் போகச்சே வட்டத்துக்கு ஆயிரம் ரூபாய் வாங்கியிருந்தேன். அது மூசே தொத்தேலுக்கு வாங்கிக்கொடுத்தேன். அதற்கு அவன் கொடுக்க வேண்டியது வட்டம் 100-க்கு 8-ம் வேர்ணாசு 100-க்கு 10 ஆக 100-க்கு ஆக ரூபாய் 280 கும்பினியார் கூட்டிக்கொடுத்த வட்டி ரூபாய் 57 ஆக வட்டம் இம் வேர்ணாசுவட்டி உள்பட ரூபாய் 337-ம் ஆக வட்டம் இவ்வேர்ணாசு வட்டி முதலுள்பட 1337-க்கு இப்போது 837 ரூபாய் கொடுத்தான் மற்ற ஐந்நூறு ரூபாயும் அவன்பேருக்கு பிராஞ்சாப் போனாப்போலே

கொடுக்கிறேன் என்றான். ஆனபடியினாலே இந்த ரூபாய் எண்ணூற்றி முப்பத்தேழும் வாங்கிக்கொள்ளும் மற்ற ஐந்நூறு ரூபாய்க்கு நான் கரைவட்டிச் சீட்டெழுதிக் கொடுக்கிறேன் என்று சொன்னான். நல்லதென்று சம்மதித்துக்கொண்டு எண்ணூற்றி முப்பத்தேழு ரூபாயும் வாங்கிக்கொண்டு சீட்டு கேட்டதற்கு பிறகாலேயெழுதி என் சேவகன்கையிலே கொடுத்தனுப்புகிறேன். இந்த ஆயிரம் ரூபாய்க்கும் என் கைசீட்டுக்கூட வாங்காமல் இருந்தாயே நானொருவேளை செத்துப்போய்விட்டால் உன்பணம் போகப்போகிறது என்று என்பெண்களுடனே எல்லாம் சொல்லிவித்தேனென்று சொன்னாள். அதற்கு நானும் உபகாரமாய்ச் சொன்னேன். அப்பால் லோகாபிராமமாய்ப் பேசியிருந்து ஐந்நூறு ரூபாய்க்குச்சீட்டு அனுப்புகிறோமென்று சொன்னபடிக்கு அவள் சேவகனை வாங்கிவரச் சொல்லிவிட்டு வருகையில் இனிமேல் யாருக்காகிலும் கைசீட்டில்லாமல் கொடுக்கவேண்டாமென்று சொன்னாள், நல்லதென்று வந்தேன்.

இற்றைநாள் கோன்சேல் கூடி பனிரண்டு மணி மட்டுக்கும் இருந்து கோன்செல் கலைந்தார்கள். மறுபடியும் பகலுக்கு மேலாய் கோன்சேல் கூடியிருந்தார்கள். இதனுடைய காரியமென்னவென்று யோசனை செய்து பார்த்தால் சென்னப்பட்டணத்தின்பேரிலே சண்டைக்குப்போகிற யோசனையேயல்லாமல் வேறேயல்ல. சென்னப்பட்டணத்தின் மேலே போகிறமட்டுக்கும் எளிதல்லவே. அதினாலே அதற்கு என்ன யோசனை பண்ணவேணுமோ அந்த யோசனை பண்ணுகிறதாய் தோற்றுது. ஆனால் முன் 11௨ (23௨ ஆகஸ்டு) கப்பல்களைக் கண்ட உடனே குதிரையின் மணிமந்தரமாய் ஏற்றினது ஒப்பாஸ்துருமார் மற்றும் உண்டான சாமானெல்லாம் ராத்திரி முப்பதும் ஏற்றினதும் போதாமல் மறுநாளும் சாயுங்கால மட்டுக்கும் மாயே துலுக்கர் மற்றும் உண்டான பேரெல்லாம் ஏற்றின சுறுக்குக்கு தாமதம் வருவானேனென்றால் மூசே லபோர்தோனே சரீரம் சுவஸ்தமில்லாமலிறங்கினபடியினாலே அப்படிப்பட்டதுஎன்று சொன்னார்கள். அவ்விடத்திலே சண்டைக்குப் போகிறவிடத்திலே குதிரைகள் என்னத்துக்கு ஒப்பாஸ்துருமார் என்னத்துக்கு என்றால் சென்னப்பட்டணத்திலண்டையிலே இருக்கிற மயிலாப்பூரிலே இறங்கவும் அதற்கு எசமான் மூசே தொந்தேலும் அவன் பிறகே இருபத்து நாலுபேர் ஒப்பாஸ்துருகள் குதிரைகள் மேலேயும் மாயே சிப்பாய்களும் சிறிதுபேர் பாறுவைத்துக்கொண்டுபோகவும் சிறிது சொல்தாதுகள் கூட பாறேடே கூடப்போகவும் இந்தப்படிக்கு மயிலாப்பூரிலிருந்து சென்னப்பட்டணத்து குவர்னதோரண்டைக்குப் போய் எங்கள் மணிலாக் கப்பலும் அச்சையிலே பிடித்த சீமைக்கப்பலையும் கேட்க அந்தப்படிக்குச் சம்மதித்துக் கொடாமல்போனால் அதின்

பேரிலே அவர்கள்பேரிலே நேரத்தை சுமத்தி அப்பால சண்டைக்கு எத்தனம் பண்ணவும் இந்தப்படி யோசனைபண்ணி நடத்தியது. சென்னப்பட்டணத்துக்கு இன்னம் யோகமிருக்கிற படியினாலே இந்தவேளைக்கு மட்டுப்பட்டுமூசேலபோர்தோனேக்கு சரீரம் சுவஸ்தமில்லாமல் தான் போகாவிட்டால் பின்னையொருத்தரைக் காபந்துபண்ணியனுப்புகிறதற்குச் சம்மதியில்லாமல் போகிறபயணம் தாமசத்திலே நின்றது. மூசே லப்போர் தோனேக்துப் பத்துநாலு பேர் ஒப்பாஸ்துருகளைக் கொண்டுவரலாமா, தனக்குச் சரியென்று சொல்லலாமாவென்றும் மயிலாப்பூரிலிருந்து சென்னப்பட்டணத்திற்குப் போகிறதற்குள்ளே மூசே தோத்தேலுக்கு நடக்கிற பரிட்டவணையும் மூசே லபோர் தோனேக்கு நடக்கிற பரிட்டவணையும் சரியென்பித்து மூசே லபோர்தோனேயைப் பங்கம் பண்ணவேணுமென்று துரை நினைத்து வெளிக்குத் தெரியாதென்றுப்போலே தோற்றி நடத்தினார். அந்தச் சாடையை மூசே லபோர்தோனேயறிந்து மனது புங்கமாய் இவரிந்த வேளைக்குச் சென்னப்பட்டணத்தின்பேரிலே அனுப்பவேணுமென்று யோசனை பண்ணினதை நிறுத்தி இவரைப் பங்கம்பண்ணவேணுமென்று தனக்குச் சரீரம் சுவஸ்தமில்லாமல் போனாலும் பின்னையொருத்தனையாகிலும் கொம்மாந்தானாக்கி அனுப்புகிறதற்கு இவன் சம்மதியாமல் பயணத்தை நிறுத்தினான். ஆனபடியினால் மனிதன் நினைக்கிற நினைப்புக்குத் தெய்வ எத்தனம்கூட யிருந்தாலே நடக்கும். இல்லாவிட்டால் ஒருக்காலும் நடக்காது. ஆனபடியினாலே சென்னப்பட்டணத்தின் பேரிலே போகிற பயணம் நின்று தீர்ந்தவேளைக்கு இனிமேலைக்கு என்ன நடக்குமோ தெரியாது. சுவாமி சித்தத்தின்படியே நடக்கும், மனுஷரெத்தனம் ஒருக்காலும் கவைக்கு வராது இந்த யோசனையைக் குறித்து ஏற்றின குதிரைகளையும் சிப்பாய்களையும் நாளைக் காலையில் இறக்கிப்போடச் சொல்லி நாலாம்பேருக்கு அறிவிக்கப்போகாதென்று பத்திரப்படுத்தி உத்தாரங்கொடுத்தார். இதல்லாமல் நேற்றையதினம் நவாபு அன்வர்திகானுக்கு ஒரு காகித மெழுதியனுப்பின தென்னவென்றால், இது துரையும், மூசே தெலார்சே மதனாந்தபண்டிதனும் மூன்றுபேர் அறிந்ததேயல்லாமல் நாலாம் பேருக்கு அறிவிக்கப் போகாதென்று பத்திரப்படுத்தி எழுதின காகித வயணம். தாங்கள் சென்னப்பட்டணத்தின்பேரிலே சண்டைக்குப் போகிற சேதி அமுலாகரந்தமாய் தங்களுக்குத் தெரிந்து இருக்கிறபடியினாலே தாங்கள் எங்களுக்கு மத்தத்துவருகிறோமென்று முன் போன ஹூல் வந்தபோது சொல்லி இருந்தபடியானாலே நாங்கள் சென்னப்பட்டணத்தின்பேரிலே சண்டைக்குப் போகிறோம். நீங்களும் மூவாயிரம் குதிரைகளுடனே எங்களுக்கு மத்தத்து வரவேணுமென்று எழுதவேண்டிய வயணப்படிக்கு மிகுதியும் உபசார

மாக எழுதியனுப்பினார்கள் என்று மதனாந்த பண்டிதன் வந்து இற்றைநாள் கபுறு சொன்னான்.

1746 ஆ ஆகஸ்டு மீ 27 உ அக்ஷய ஹூ ஆவணி மீ 15 உ சனிவாரம்.

இற்றைநாள் காலையிலே குவர்னதோருடைய உத்தாரப் படிக்கு மாயே சிப்பாய்களும் சமேதார் இரண்டு பேரும் இறங்கினார்கள். குதிரைகளெல்லாம் இறக்கிப்போட்டார்கள். ஒப்பாஸ்துருகள் ஏறியிருந்தவர்களும் இறங்கினார்கள். மூசே தோத்தேல் வந்து குதிரைகள் ஆராருதோ அவரவர்களுக்கு ஆளனுப்பி ஒப்புவித்துப்போடு என்று சொன்னான். பின்னையும் ஒரு நாழிகை பொறுத்து வந்து ஒருத்தருக்கும் கொடுக்கத் தேவையில்லை. எல்லாம் குதிரைலாயத்திலேதானே யிருக்கட்டுமென்று சொன்னாரிந்த யோசனை பார்த்தால் மறுபடியும் அனுப்புகிற யோசனைபண்ணினாப்போலே தோற்றினது. அதெப்படியென்றால் இந்த வார்த்தைச் சொன்னவுடனே துரையவர்கள் கோன்செல்காரரையெல்லாம் அழைக்கச் சொல்லி கோன்செல் கூடி இரண்டு நாழிகைக்குப் பிற்பாடு மூசே லபோர்தோனையை அழைத்து அனுப்பினார்கள். எனக்குச் சரீரம் கேவலம் லகுவில்லை. வரக்கூடாதென்று சொல்லியனுப்பினான். ஒரு காகிதமெடுத்துக்கொண்டு கோன்சேலியேரிலே மூசே தெப்ரெமேனியும், மூசே பெடுத்தேல்மேயும், மூசே போனேவும் இவர்கள் மூன்று பேரும் கோன்சேலிலேயிருந்து புறப்பட்டு மூசே லபோர்தோனே வீட்டுக்குப் போய்க் காகிதத்தைப் படித்துக் காண்பித்துக் கையெழுத்து வாங்கினார்களோ சும்மா வந்தார்களோ தெரியாது. அவனைக் கண்டு பேசிவிட்டு வந்தபிறகு மறுபடியும் கோன்சேல்கூடி கோன்சேலிலே சாமமட்டுக்குமிருந்தார்கள். பனிரெண்டடித்து ஒரு மணிக்குக் கோன்சேல் கலைந்து அவரவர் வீட்டுக்குப் போனார்கள். கோன்சேல்கூடின காரியம் என்னவென்று தெரியவில்லை. கிறேமேனு விசிதப்படும் சண்டை காரியம் தெரிந்திருக்கிறது. வயணமாத்திரம் இனிமேல் அறியவேண்டியது. நானும் அந்த மட்டுக்கும் பாக்குக் கிடங்கிலேயிருந்து வீட்டுக்கு வந்தேன். இனிமேல் நடக்கிற காரியம் அறியவேண்டியது. ... ... மதாம் துய்ப்ளேக்சு அண்டையிலே துபாசியாயிருக்கிற தொப்பை உறவு நாராயணன் என்கிறவன் நான் பாக்குக் கிடங்கில் இருக்கையிலே அம்மாள் பவழத்துண்டு வாங்கப்போகிறாளாம். அதை உங்களுக்குக் காண்பித்து நீங்கள் விலை சொன்னபடிக்கு எடுத்துக்கொள்ளுகிறோமென்று விலை சொல்லச்சொன்னாளென்று ஐந்தாறு பவழத்துண்டு சீராசி மெல்லீசுப் பவழம் கொண்டுவந்து காண்பித்தான். அதைப்பார்த்து, துண்டு விலை 1-க்கு அரை வராகன் விழுக்காடு

வாங்கலாமென்று சொன்ன பிற்பாடு உங்களுடனே தனித்துக் கொண்டு பேசவேணுமென்று இருக்கிறேன். கோபமில்லாமல் ஒரு பேச்சு கேட்கவேணுமென்று சொன்னான். நல்லது கோப மேன் நமக்குள்ளே பேதமா அப்படி ஒன்றும் எண்ணத்தேவை யில்லை. உண்டானபடி சொல்லுமேன் என்று சொன்னேன். அப்பாலே வரவேணுமென்று சொன்னான். பிறகு நின்றதின் பேரிலே அவன் சொன்ன சேதி அன்னபூரண அய்யன் நடபித்த காரியமெல்லாம் சொல்லுகிறேன் கோபமில்லாமல் கேட்க வேணுமென்றும் ஒருத்தருடனே சொல்லப் போகாதென்றும் இப்படிச்சொல்லி அவன் சொன்ன வயணம். அன்னபூரண அய்யன் வந்து என்னுடனே சொன்னதற்கு இந்தப் பெரிய துபாசித்தனம் எனக்கு வாங்கிக்கொடுத்தால் துரைக்குப் பதினா யிரம் ரூபாயும் அம்மாளுக்கு மூவாயிரத்தி இருநூறு ரூபாயும் கொடுக்கிறேனென்று பேசச் சொன்னான். உமக்கு துபாசித் தனம் செய்யத் தெரியுமாவென்று கேட்டேன். கனகராய முதலியாருக்குக் கற்பித்துக் கொடுத்ததெல்லாம் நான்தான். இதல்லாமல் துலுக்கர்களெல்லாம் எனக்குச் சிநேகம். நான் எப் படிச் சொன்னாலும் அப்படியே கேட்பார்கள் என்று இப்படி பல விதமாய் என்னுடனே சொன்னான். அந்தப் பேச்சை நம்பி அம்மாளுடனே சொன்னேன்.

அம்மாளிருந்துகொண்டு ஐயாயிரம் வராகன் துரைக் கும் தனக்கு ஆயிரத்தந்நூறு வராகனும் கொடுத்தால் பேசி வாங்கித்தாரேன் என்றாள். அந்தப்படிச் சொன்னதற்கு அதற்கும் சம்மதித்துக்கொண்டு நானொருதரம் அம்மாளுடனே பேசினாலே அல்லாமல் சம்மதியில்லை என்று சொன்னான். அந்தப் படிக்கும் அம்மாளண்டையிலே கொண்டுபோய் விட்டு அம் மாளும் சொல்லத்தக்கன சேதி யெல்லாம் சொல்லிப் பணம் கொண்டுவந்து கையில் கொடுத்தால் பேசுவேன். இல்லாவிட் டால் பேசுகிறதில்லையென்று சொன்னாள். அதற்கு நல்லது அந்தப்படிக்குத்தானே கொண்டுவருகிறேன் என்று சொல்லி ரங்கப்பிள்ளைக்கு நாளைக்கு உத்தியோகம் கொடுக்கிறார்க ளென்று வதந்தியாயிருக்கிறது என்னம்மாவென்று கேட்ட தற்கு அம்மாளிருந்துகொண்டு அப்படி கொடுத்தால் எனக்கு மிக்க சந்தோஷம்தானே என்று சொன்னான். அதின் பேரிலே போய்விட்டான் என்று ராத்திரி நான் போய்க்கண்டுபேசி னேன். பிள்ளையவர்களுக்குச் சம்மதியாய்ப் பேசுகிறது என்று கேட்டேன். அவர்தான் என்னைப் பேசி வாங்கிக்கொள்ளச் சொன்னவர் என்று சொல்லி, துரையின்பேரிலே பதினாயிரம் ரூபாய் வரவேணும் மற்ற ரூபாய் நீ கொண்டுவந்தால் நான் சொல்லிக்கொள்ளுகிறேன் என்கிறதாகச் சொன்னான். அதன்பேரிலே நான் மெய்யென்று நம்பிப் பேசினேன். இல்லை

யென்று உங்களுத்தரவில்லையென்றால் சருவாத்துமனாகப் பேசப்போகிறதில்லை மடையன், ஊரெல்லாம் விரைத்துப் போட்டான். நானிப்படிப்பட்டவனென்று அறிந்தால் சருவாத்துமனாகப் பேசுகிறதில்லையென்று சொன்னான். அதற்கு நான் சொன்னது: அன்னபூரணய்யன் இந்த உத்தியோகத்துக்குப் பிரயத்தனம் செய்யும்போது நான் அறியப்போகாதென்று குருவப்ப செட்டியுடனே சொல்லி அவனை ஆலோசனைக்கேட்டுக்கொண்டு கங்கிப்பாடி வீராசெட்டி கையிலே ஏதாகிலும் ஆயிரம் ஐந்நூறு வாங்கிக்கொடுத்தால் கொடுக்கவேணுமென்று பேசிக்கொண்டு திரிந்தான். இந்தச் சாடை குருவப்ப செட்டி என்னுடனே சொன்னான். அதின்பேரிலே ஆங்காட்டு குருவப்பசெட்டி என்னுடனே அவனைக்கொண்டு எனக்குப் பெரிய துபாசித்தனம் அதற்கு அம்மாள் முகாந்திரமாய்ப் பேசி தீர்த்திருக்கிறது நீங்கள் இரண்டாயிரம் வராகன் மாத்திரம் சகாயம் செய்து கொடுத்தால் நீங்கள் சொன்னபடிக்குக் கேட்டுக்கொண்டிருக்கிறேன் என்று சொன்னான். நல்லது நீ உத்தியோகம் வாங்கிவந்தால் அப்படி தருகிறேன் என்று சொன்னதேயல்லாமல் மற்றப்படி நானொன்றும் அறியேன் என்று சொன்னேன். அதற்கு அவன் சொன்னது: எனக்கு ஆயிரம் ரூபாய் கொடுக்கவேணுமென்று சொன்னதற்குக்கூட பின்னையும் அநேக விதமாய் என்னுடனே சொன்னான். இதல்லாமல் மதனாந்த பண்டிதனுடனே இவன் போய் தனக்கு உத்தியோகம் வராமல் தாறுவாடிகையிலே பரபத்தியம் வாங்கிக் கொடுக்கச்சொல்லிப் போய்க் கேட்டானாம். அந்தச் சேதியை அவர் சின்னமுதலியாருடனே சொன்னான். சின்ன முதலியாருக்கு ஏதோ விசேஷம். ஏறக்குறைய அன்னபூரண அய்யனைத் திட்டினாராம். அந்தச் சேதி உன்னையும் என்னையும் திட்டினார் என்று என்னுடனே வந்து சொன்னான். இப்படி ஒன்றைவிட்டு ஒன்றாய் சரிப்போனபடிக்கெல்லாம் வர்த்தகர் பின்னையும் ஊரிலே உண்டானபேருடனே எல்லாம் சரிப்போனபடிக்கெல்லாம் சொன்னான். அவன் வீட்டு பூர்வோத்திரம் நீங்களறிவீர்களோ அந்தப் புத்தியைத்தானே நடப்பித்தான் என்று சொன்னான். அப்படியாவென்றேன் இதுவல்லாமல் தம்பி இரண்டாயிரம் ரூபாய் கொடுக்கிறோமென்றான். நயினார் வசத்திலே இரண்டாயிரம் ரூபாயிருக்கிறதாம் அதுவும் வாங்கிக்கொடுக்கிறோம் என்று சொன்னாராம். இப்படி அவன் சொன்ன பேச்சு மிதத்திலேயில்லை. இனிமேல் நீங்கள் தயவு செய்து சின்னமுதலியாரண்டையிலேயாவது பின்னை யாரிடத்திலேயாகிலும் இந்தப்பேச்சைப் பிரஸ்தாபம் செய்யவேண்டாமென்றான். அதற்கு நான் சொன்னது: ஊரிலே அவனவன் காரியத்துக்கு அவனவன் பதினாயிரம் பேசப்போகிறான். ஒருத்தருக்குக் கவையென்ன அதற்கு என்ன நீ அம்மாளிடத்திலே துபாசியாயிருக்கிற மட்டுக்கும் ஆரென்ன

சொல்லச் சொல்லிச் சொன்னாலும் நீ சொல்லவேண்டிய தன் வேலையாமே. நீ யென்ன சிரத்தைபண்ணுகிறுயென்று சொன்னேன். அப்படி சொல்லுங்கள் மெய்தானென்று சொன்னுன். இதல்லாமல் அம்மாள் உங்களுடனே இந்த உத்தி யோகப் பேச்சுக்குப் பேசினுல் நல்லதல்லவாவென்று கேட்டான். அதற்கு நான் அவருக்கு இந்த உத்தியோகம் கவை இருந்தால் பேசாரா. இதல்லாமல் இவருக்கும் வெகு பணம் கப்பலின்பேரிலே மூழ்கிப்போச்சுது. வெளியிலே ஒரு சுபேதாருடைய பேர் அப்பயப்பிள்ளை என்றொருவனிருந்தான் அவனுக்கு வெகு பணம் கொடுத்தார். அவன் செத்துப்போய்விட்டான். அவன் வீடுவாசல் தட்டுமுட்டுகள் இவ்விடத்தில் இருந்தது சின்ன துரையுடனே சொல்லி ஏலம்போட்டு ஆயிரமோ ஆயிரத்து ஐந்நூறோ வந்தது. மற்றப்பணம் போச்சுது. அந்த அப்பய்யப்பிள்ளை எசமான் சிறிது பணத்தை எடுத்துக்கொண்டு ஆற்காட்டிலே உட்கார்ந்துகொண்டான் பின்னையும் வர்த்தகத்திலேயும், அதிலேயும், இதிலேயும், பின்னையும் இப்படி லக்ஷம் வராகன் உண்டென்று கொடுத்தது மூழ்கிப்போனது. அந்த அப்பயப்பிள்ளை கப்பலின்பேரில் சிறிது பணம் மூழ்கிப்போனதைத் துரையும் அறிவார் துரைக்கு வெகுபணம் கொடுக்கவேணுமாம் கும்பினீருக்கு வெகு பணம் கொடுக்க வேணும். இதல்லாமிருக்கிறபடியினுலே அவராஸ்தி மூழ்கிப்போசசுது. திரும்பியும் பார்ப்பாருக்கும் பட்டருக்கும் தானமும் தர்மமும், வருகிறபேருக்கும் போகிறபேருக்கும் சும்மா செலவழிக்கிருன். இருக்குதோ இல்லையோ சுவாமிக்குத் தெரியும் என்று சொன்னேன் அதற்கு அவளிருந்துகொண்டு அவர் தம்பி கையிலே பணமில்லையாவென்று கேட்டாள் அவன் வர்த்தகம் பண்ணுகிருனு, வீட்டிலே சாப்பிடுவான் அவனுக்கு இந்தப் பக்கத்திலே ஒரு வீடு இருக்கிறது அங்கே வந்திருப்பான், அவன் சாவடி உத்தியோகமென்னமோ அதைப் பார்த்துக்கொண்டிருப்பான் அறிந்த மட்டிலே ஒன்றும் காரியத்தைக் காணேம் என்று சொன்னேன் அதற்கு அவளிருந்துகொண்டு, ஆரோ ஒரு பார்ப்பான் வந்திருக்கிருனும். அவனுக்குக் கொடுக்கவேணுமாம், மெய்தானுவென்று கேட்டாள். அது நானறியேனென்று சொன்னேன் அப்படி கேட்டேனென்று சொன்னுள். சின்னமுதலியாரை தன்பாட்டுக்கு ஏதாகிலும் கேட்கச் சொன்னுள்.

நான் போய்க் கேட்டதற்கு இந்த உத்தியோகம் பரிச்சேதம் கவையில்லை எனக்குத் தள்ளாது என்னுலே நிர்வாகம் பண்ணவும் கூடாது. எனக்கொன்றும் கெதியில்லையென்று தலையிலே தலையிலே அடித்துக்கொண்டு அழுதான். அந்தச் சேதியை அம்மாளுடனே சொன்னேனதற்கு அம்மாள், அவன் என்ன செய்கிருண்டா என்று கேட்டாள். இவ்விடத்திலேயிருந்தநேரம்

போக அந்திபட்டாப்போலேயிருக்கிற வீட்டையெல்லாம் சாத்திப்போட்டு, கனகராய முதலியிருந்த வீட்டையும் அடைத்துப்போட்டு, அந்த வீட்டுக்கு எதிர் வீட்டையும் அடைத்துப் போட்டு தான் குடியிருந்த வீட்டுக்கு எதிர் வீட்டிலேயிருக்கிற வீட்டிலே போய் விளக்கில்லாமல் குந்திக்கொண்டு இருக்கிருனென்றும், அண்ணன் பெண்டாட்டியைகூட துரத்தி விட்டு விளக்குக்கூட இல்லாமல் பாழாய்ப்போட்டானென்றும் சொன்னேன். அப்படியா என்ருள். ரங்கப்பனுடைய ஆஸ்தி யெங்கே யென்று கேட்டாள். அதற்கு உங்களுக்கு ஆஸ்தி, பத்து லக்ஷம் ஐந்து லக்ஷம் உண்டென்று ஊரெல்லாம் சொல்லுகிருர்களே உண்டா யென்று கேட்டாளும். அபத்தமென்று சொன்னுளாம். அப்படிதான் ஊரிலேயிருக்கிறவர்கள் சொல்லுகிறது. அவனவனுக்கிருக்கிற ஆஸ்தி அவனவனுக்குத் தெரியும்.

அப்படிதான் ஊரிலே சொல்லுகிற வார்த்தையை நம்பப் போமாவென்று சொன்னேன். அது மெய்தானென்று சொன்னுள். பின்னையும் இப்படியும் அப்படியுமாகச் சேனநேரம் பேசியிருந்தோமென்று அவன் சொன்னதெல்லாம் எழுதவேணுமானுல் இருபது காகிதமாகிலும் செல்லும். அதிலே சுவார்சியமாயிருக்கிறதை மாத்திரம் பொறுக்கினுப்போலே எழுதினேன். அதற்கு நான் சொன்னது: இது எப்போது நடந்தது என்று கேட்டேன். நாலாம் நாள் ராத்திரி துரையுடனேகூட மேசையிலே சாப்பிடாமல், தான் இருக்கிற காம்பிராவிலே ஒண்டியாய்ப்படி ஒரு காரியம் பேசவேணுமென்ருள். தனித்துச் காம்பிராவிலே சாப்பிடச்சே கேட்பாள். அப்போது பேச்சுவார்த்தை நடக்கும் என்று சொல்லி அப்படிப்போலே நாலாம் நாள் ராத்திரி தனித்துச் சாப்பிடச்சே நடந்தது என்று சொன்னுன் அப்படியாவென்றேன். இந்த அன்னபூரணய்யன் சேதி தம்பியுடனே சொன்னேன் அவரும் பெரிய பிள்ளை. இந்தச் சேதியேயறியார். ஒரு நாள் என்னண்டைக்கு நீர் ஆயிரம் ரூபாமாத்திரம் கொடுக்கவேணுமென்று கேட்டான். எனக்குத் தெரியாது போவென்று சொல்லிப் போகச்சொன்னேன் என்று சொன்னுர். நயினுர் சம்மதி கேட்டு வாங்கிக்கொடுக்கவேணும் என்று கேட்டார். அதுவும் நீர் கேட்டு வாங்கிக்கொள்ளுமென்று சொன்னதேயல்லாமல் நான் பின்னை யொன்றும் அறியேன் என்று தம்பி சொன்னுனென்று நாராயணப்பிள்ளை சொல்லிவிட்டு இன்னும் ஒரு மனுக்கொடுக்கவேணும். சின்ன முதலியார்முன்னே நீங்கள் பிரஸ்தாபம் செய்யவேண்டாம். பின்னையும் நாலுபேர் இருக்கிற இடத்திலேயும் பிரஸ்தாபம் செய்யவேண்டாம் என்று கேட்டுக்கொண்டான். உமக்கென்ன பயமா, நீர் யாராகிலும் வந்து சொன்னதைச் சொல்லுகிறீர். உம்முடைய வேலைதான் என்று உற்சாகமாய்ச் சொன்னது

மெய்தானென்று சொல்லிவிட்டுப் போனான். இவன் தரங்கம்பாடியான். மகாஅழுத்த கபடஸ்தன். எல்லாகுணமும் திருட்டுப்புத்தியிலே மேலிட்டிருக்கிறது. இவனுக்கு எச்சிப் பீங்கான் எடுக்கிற வாடிக்கையே இல்லாமல் துவிபாஷைத்தனம் செய்கிற வாடிக்கை இல்லையே. துவிபாஷைத்தனம் செய்கிறவனானால், இது காரியம் நடக்கும் நடவாது, செய்காரியம் தவிழ்காரியம், யோக்கியன் அயோக்கியன், இவன் பாத்திரன் அவன் பாத்திரன் என்று அறிந்து செய்வான். அன்னபூரண அய்யன் எப்படி மடையத்தனமாய் இந்த உத்தியோகம் வருமென்று பிரயத்தனம் பண்ணினானோ அந்தச் சாடைக்குத் தக்கதாய் இவனும் துவிபாஷைத்தனம் பண்ணினான். ஆனால், சுவாமியினுடைய மகிமையை ஒருவராலே அறியப்போமா. அவன் மகா வல்லமையுடையவனானபடியினாலே தன்னாலே ஆகாத காரியத்தைத் தன்னாலேயாகுமென்று பிரயத்தனம் செய்த அன்ன பூரணய்யனுக்கு நாராயணப்பிள்ளை என்கிற எச்சிப் பீங்கான் எடுக்கிற வேலைக்காரன் சந்தி நடந்தது இவர்கள் இரண்டு பேருடைய புத்தியைப்பார்க்கில் அதிசயத்து இருந்தது. துரை பெண்சாதியினுடைய புத்தி இதை விசாரித்து எழுதுகிறது நியாயமல்லாதபடியினாலே விவேகிகளாயிருக்கிறவர்கள் துரை பெண்சாதி குணம் இதற்குள்ளே தெரிந்துகொள்ளுவார்கள். ஆனபடியினாலே விஸ்தரித்து எழுதவில்லை ... ... ... ...

இற்றைநாள் மத்தியானத்துக்கு மேல் முசே லபோர்தோனேக்கு நளிர்க்காய்ச்சல் கண்டிருக்கிறபடியினாலே இந்த உப்பங்காற்றும் இந்த தண்ணியும் ஒற்றுவரவில்லை யென்று ஒழுகரையிலே பாதி தோட்டத்திலே போய் இறங்கினான். அவ்விடத்திலே சரீரம் ஆரோக்கியமாகிற மட்டுக்கும் அவ்விடத்திலேதானேயிருக்கிறான் அதற்குத் தக்க சாமான் எல்லாம் அனுப்பச்சொல்லி அங்கேதானே குடியாயிருக்கிறான். ... ...

1746 ஆ ஆகஸ்ட் மீ 28 உக்கு அக்ஷய ஹு ஆவணி மீ 16உ ஆதிவாரம்.

இற்றைநாள் காலையில் சண்டைக்கப்பல் எட்டும் பாயெடுத்து ஓடிப்போச்சுது. சென்னப்பட்டணத்தின்பேரிலே பயணமாய் சண்டைக்குப்போகிறதுதானென்றுபோச்சுதே. இந்தக் கப்பல்கள் எங்கே பாயெடுத்தானென்றால் நாகப்பட்டணம் முதல் சென்னப்பட்டணமட்டுக்கும் திரியச்சே இங்கிலீசுக்கப்பல் அகப்பட்டால் சண்டைகொடுத்துப்பிடித்துக்கொண்டு வரவும் இல்லாவிட்டால் மோசாம் வருகிற மட்டுக்கும் திரிந்து அப்பால் மசுக்கரைக்கு மோசத்திலே பயணம் போவான் போலே தோற்றுது. இந்தப்படிக்கு நான் கேள்விப்பட்ட சேதியை எழுதினேன். ... ... ...

1746 ஆ ஆகஸ்ட் மீ 29உக்கு அக்ஷய ஸ்ரீ ஆவணி மீ 18உ சோமவாரம்.

இற்றைநாள் காலையில் சுகசிங்கு வியாச்சியத்துக்கு துரையுடனே திர்த்துப்போடுமென்றும் சொல்லுவோமென்றும் துரைவீட்டுக்குப் போகச்சே மூசே தெம்ரேய் எதிராக வந்தான். என்னைக் கண்டு ஆசாரம் செய்து வெளி மனுஷர் வந்து ஓர் லோசு கேட்டார்களே என்னமாச்சுது என்று கேட்டார். வேலூருக்குப் போனார்கள். உத்திரம் வந்தவுடனே சொல்லுகிறேன் என்று சொன்னேன். சென்னப்பட்டணத்தின்பேரிலே சண்டைக்குப் போறதிது எது நிமத்தியம் நின்றது. அறிவையா வென்று கேட்டான். நன்றாய்த தெரியவில்லையென்று சொன்னேன். ஆனால் சொல்லுகிறேன் கேளென்று அவன் சொன்ன சேதி, துரைசெய்ய எத்தனம். கப்பல்கள் ராத்திரியிலே பிடிக்கவும் இவ்விடத்திலே ஏற்றவேண்டியதுகளெல்லாம் ஏற்றிதயார் செய்யவும் சென்னப்பட்டணத்தின் பேரிலே கப்பல்கள் சமுத்திரத்தின்பேரிலேயிருந்து சண்டை தொடுக்கவும் இவர்கள் கரைமேலே இறங்கியிருந்து சண்டை தொடுக்கவும் இப்படியெல்லாம் சண்டை தொடுத்து சென்னப்பட்டணத்தைப்பிடித்துக்கொள்ளவும் இப்படியெல்லாம் யோசனைசெய்ய இருந்தார்களே, மூசே லபோர்தோனேயை ராத்திரிதானே பாயெடுக்கச் சொன்னால் பாயெடுக்காமல் கண்டுபேசவேண்டியிருக்கிறது எனக்குச் சரீரம் சுவஸ்தமில்லையென்று மூடுபல்லக்கிலே இறங்கி துரைவீட்டுக்கு வந்த பிற்பாடு துரையும் அவனும் கண்டுபேசின தென்னவென்றால் துரை உன் கப்பல் போய் சென்னப்பட்டணத்தின்பேரிலே சண்டை தொடுக்கிறதற்கு அப்படியென்னவென்று கேட்டார். எனக்கானால் கும்பினியார் ஓடுதியும் மினிஸ்தர்கள் ஓடுதியும் இங்கிலீசுக்கப்பல்களைக் கடலின்பேரிலே கண்டவிடத்திலே சண்டை தொடுத்துப்பிடிக்கச் சொல்லி உத்தரவேயல்லாமல் கரையின்பேரிலே சண்டை தொடுக்கச்சொல்லி உத்தாரமில்லை. ஆனபடியினாலே சண்டை தொடுக்கப்போகாது. அல்லவென்று நீங்கள் போய்ச் சண்டை தொடுக்கச் சொன்னால் தொடுக்கிறேன். கோன்சேலிப் பெரிசியோம் எழுதி என் கையிலே கொடுங்கோளென்று கேட்டான். அதற்குத் துரையிருந்துகொண்டு நீ யெனக்கு எழுதியனுப்புவித்து முஸ்தீதுபண்ணிவைக்கச் சொன்னபடியாலேயல்லோ நான் சகலமும் முஸ்தீதுபண்ணினேன். இப்போது நீ இப்படி நாங்கள் பாத்தியமாய் கோன்சேலிப் பெரிசியோம் எழுதிக் கொடுத்தால் சண்டைக்குப் போகிறோமென்று சொல்லுகிறது என்ன ஞாயமென்று கேட்டு ஒருத்தர் ஒருத்தர் பேச்சு நடந்தாப்போலேயும் அதன் பேரிலே கோன்சேல்காரர்களை அழைத்துக் கேட்டவிடத்திலே அப்போது எங்களுடனே யோசனைசெய்து நடப்பித்திரா. இப்போது நாங்கள் ஏன்

மேல்போட்டுக்கொள்வோம் என்று கோன்சேல்காரர் சம்மதிக்க மாட்டோமென்று சொன்னப்போலேயும் இந்தச் சண்டை நிமித்தியம் செய்ய செலவு எல்லாம் துரையின் பேரிலே பொறுப்பாய் நிற்கிறது. இனிமேல் என்னமாய் நடக்குமோவென்றும் மூசே லபோர்தோனே சரீரம் சுவஸ்தமில்லாமலிருக்கிறபடியினாலே மூசே பரிதியை கொமாந்தனாக வைக்க வேணுமென்று மூசே துப்ளேய்க்சு சேன பிரயாசைப்பட்டார், அதற்கு மூசே லபோர்தோனே சம்மதிக்க மாட்டேனென்றார்.

இதல்லாமலும் மூசே தோத்தேல் பெண்சாதி மதாம் லபோர்தோனேயை என்னமோ சொன்னாளென்றும் மதாம் லபோர்தோனே, மூசே தோத்தேல் பெண்சாதியை என்னமோ சொன்னாளென்றும் குவர்னதோருக்கும் மூசே லபோர்தோனேயிக்கும் கோன்சேலிலேதானே பெரிய பேச்சாய் நீ நானென்கிற மட்டுக்கும் வசதி வார்த்தைமட்டுக்கும் ஒருத்தருக்கொருத்தர் ஒத்த வார்த்தையாய் நடந்தது. இதின் பேரிலே சென்னப்பட்டணத்துக்கு யோகம் நன்றாயிருக்கச்சே மூசே லபோர்தோனேக்கும் மூசே துப்ளேக்சுக்கும் ஒருத்தருக்கொருத்தர் இடஞ்சலானபடியினாலே சென்னப்பட்டணத்தின்பேரிலே போகிற சண்டை நின்றது என்று சொன்னான். மூசே லபோர்தோனேக்கு புதுச்சேரி சோன்சேலை ஆலோசனையும் கேட்டு நடந்துகொள்ளச் சொல்லி மூசே லபோர்தோனேக்கு உத்தாரமில்லையோவென்று கேட்டேன். மூசே லபோர்தோனேக்கு மினிஸ்தர்களுடைய ஓடதி சண்டைக்கு அவர் மனதின்படியே நடப்பித்துக் கொள்ளச் சொல்லி எழுதிவந்தபடியினாலேயும் உத்தாரம். மூசே துப்ளேக்சுக்கு மினிஸ்தர்களுடைய ஓடதி யென்னவென்றால் மூசே லபோர்தோனே கேட்கிறதெல்லாம் சாஞ்சாமீ செய்து கொடுக்கச் சொல்லி எழுதிவந்தபடியினாலேதான் மூசே துப்ளேக்சுக்கு அவனை இப்படி நட அப்படி நடவென்று சொல்லுகிறதற்கு அடையமனமில்லை.

அதனாலேதான் குவர்னதோர் நினைத்துச் சென்னப்பட்டணத்துக் காரியம் சண்டை செய்து சென்னப்பட்டணத்தைக் கைவசம் பண்ணிக்கொள்ளலாமென்று மூசே துப்ளேய்க்சு நினைத்துக்கொண்டிருந்த நினைவுக்கு விரோதமாய்விட்டது என்றும் சென்னப்பட்டணத்தார் சண்டை கொடுப்பார்கள். இவர்களும் சென்னப்பட்டணத்தின்பேரில் போய்ச் சண்டை கொடுப்பார்கள். சண்டை கொடுத்து அலங்கோலம் செய்கிறதற்குத்தானேயல்லாமல் முன்னே துய்ப்ளேய்க்சு நினைத்துக் கொண்டு சென்னப்பட்டணத்தை வாங்கி தாம் துரைத்தனம் செய்யலாமென்று இருந்ததற்கு விரோதமாச்சுது என்று சீமையிலிருந்து வந்த ஏழு கப்பலும் பொம்பாயின் பேரிலே சண்டைக்குப் போச்சுது. என்றும் இப்படியாகச் சொல்லிப் போட்டுப்போனான். நான் அப்பாலே குவர்னதோர் வீட்

டுக்குப் போகச்சே மூசே கேர்சாமென்கிறவன் துரையி னுடைய உடற்பிறந்தான் மகன் என்னை துரைவீட்டு வாசல்படி யிலே கண்டு எனக்கு ரொம்ப ஆசாரம்பண்ணி ரங்கப்பா, உன்னை துரை யெப்போது கொடுத்தியேராக்குவாரென்று கேட்டார், அதற்கு நான் சொன்னது: நானொன்றும் அறியேன். ஊரெல்லாம் இப்படி பிறக்கிறதே யென்று சொன்னேன். துரையானால் ஒன்றுஞ் சொல்லக்காணோம். நீரானால் முன்னேயும் அனேகந்தரம் சொன்னீர். நடக்கிற தானால் நடவாதாவென்று கேட்டேன். அதற்கு அவன் சொன்னது: கோந்திரேந்துக் கொடுக்கச்சே அப்போது உன்னைக் குடுத்தியேராக்கி, பின்னை கோந்திரேந்து கொடுப்பார்க ளென்று சொன்னான். உமக்கெப்படி இந்தச் சேதி தெரிந்த தென்று கேட்டேன். நேற்றையதினம் மூசே லதுவும், நானும் பேசியிருக்கச்சே என்ன கும்பினீர் தொலுக்கு வைக்கவில் லையா. அதைத்தொட்டு ரொம்ப தாழ்த்தியா யிருக்கிறுப் போலே யிருக்கிறது என்று கேட்டேன். அவ்வளவு கப் பாசில்லாததினாலே ஒருத்தரையும் வைக்கப்படவில்லையென்று சொல்லவந்தார். அதற்கு நான் ஊரிலே கப்பாசில்லாவிட்டால் கும்பினீர் காரியம் எப்படி நடக்கும் என்று கேட்டேன். ஆனால் கப்பாசியா யிருக்கிறவர்களும் உண்டு. அதற்குச் சமயம் வருகிறதுபோலே அப்போது வெளிப்படுவானென்று சொன்னா ராம். ரங்கப்பிள்ளையைவிடக் கப்பாசு ஆரிருக்கிறார்கள் என்ற கேட்டேன். அவனைவிட வேறே யில்லையென்றார். ஆனால் அவனை வைப்பார்களோவென்ற கேட்டேன். அப்படிதான் நடக்கும் என்று சொன்னாரென்று சொல்லி, சேம் லூய்சென் கிற பண்டிகையினன்று ஏழு கப்பலும் பொம்பாயிலே சண்டைபோட்டு அவ்விடம் விட்டுப் பயணம் புறப்பட்டு வரும். அதுவர இன்னும் பதினைந்து நாள் செல்லும். அது வந்தவுடனே கோந்திராந்தும் கொடுப்பார்கள். உன்னை யும் குடுத்தியேராக்குவார்கள் என்று சொன்னான். தமிழரை வைக்கிறதற்கு சம்பாகோவில் சன்னாசிமார் சம்மதிப்பார்களா வென்று கேட்டதற்கு அவர்களுக்கு அக்கறையென்ன அவர்கள் சொல்லுகிற பேச்சும், தண்ணீரிலே கத்துகிற வாத்தின் பேச்சும் சரி. இதென்ன ஒருபேச்சுப்போலே பேசுகிறாய் என்று கேட்டு அந்த நாளல்ல இதுவென்று சொல்லிவிட்டு ஆசாரம் செய்துவிட்டுப்போனான். அப்பால் நான் குவர்னதோர் சாலை யிலே இருக்கச்சே நான் போய் துரையை சலாம் செய்து சந்தி னேர் கார்க்கிற வராந்தாவிலே உட்கார்ந்து சின்ன முதலியும் நானும் பேசி இருந்தோம். அப்பால் துரையழைத்து கேட்ட தும் அதற்கு நான் உத்தரவு சொன்னதும் வயணமாய் எழுது கிறேன். ... ... ... ... ... ... ... ...

துரை ரங்கப்பிள்ளை என்று சந்தினேர் கார்க்கிற இடத்திற்கு வந்து என்னை அழைத்தார்.

1746 ஆ ஆகஸ்டு மீ 31௳ க்கு அக்ஷய ஹு ஆவணி மீ 19௳ புதவாரம்.

இற்றைநாள் காலையில் மகாராஜ துய்ப்ளேக்ஸ் அரியாங் குப்பம் திருநாளைக்கு மேள தாளத்துடனே ஆறரை மணிக்குச் சம்பிரமமாய்ப் போனார். அந்த ஒன்பது நாளைக்கும் அங்கே தானே இருக்கிறதாய்ப் போனார். ஐம்பதுபேர் சிப்பாய்கள் கூடப்போய் அங்கே ரக்ஷித்திருக்கிறார்கள். நயினார் கொண்டு போய் விட்டுவிட்டு வந்தான்.

இற்றைநாள் சாயங்காலம் ஆறு மணிக்குக் கோட்டையிலே மூசே கோர்னேகையிலே குவர்னதோர் மூசே துய்ப்ளேய்க்சு கணக்கிலே ஒத்துக்கொண்டு, அவருக்குப் பணம் சம்மதி பண்ணுகிறதாய், நாம் நாளது தெமிபென் என்கிற மட்ட சகலாத்து கட்டுக்கும், ஐந்து சிகப்பும், ஐந்து பச்சையும் இருக்கிற கட்டு நாளது எடுத்த கட்டு 95, நேற்றையதினம் எடுத்த கட்டுகள் ஆக 96 கட்டுக்குச் சிப்பம் 10 ஆச, சிப்பம் 960 க்குக் கூடின கெசம் 15381 க்குக் கெசம் 1 க்கு வராகன் $1\frac{1}{4}$ ஆகக் கூடின வராகன் 19227, 4 பணம், 32 காசு. இந்த வராகன் பத்தொன்பதினாயிரத்தி இருநூற்றி இருபத்தியேழும் பணம் நாலும், காசு முப்பத்திரண்டையும் ஆறுமாச வாய்தாவுக்கு நூறு வராகனுக்கு முந்நூற்றிருபது ரூபா மோடி கொடுக்கிறோமென்று மூசே கோர்னே பேருக்குச் சீட்டெழுதிக்கொடுத்தேன். நாம் குவர்னதோரவர்களுக்குச் சம்மதி பண்ணுகிறதானபடியினாலே கொர்னேபேருக்கு நாம் எழுதிக்கொடுக்கவும் கவையில்லை. கொர்னே நம்முடைய பேருக்குக் கணக்கு எழுதவும் கவையில்லை. நம்முடைய கையிலே ரசீது வாங்கவும் கவையில்லை. ஏனென்றால், குவர்னதோர் கும்பினியிலே கொடுத்திருக்கிற கடன் பணத்துக்குத் தமக்கு வரவேண்டியதற்கு ஆறுமாசத்திற்கு 100 க்கு 1-ஆக எதிர்வட்டி தள்ளிவிட்டுச் சகலாத்து எடுத்துக் கொள்ளுகிறபடியினாலெ மூசே கோர்னே கணக்கிலெ குவர்னதோர் பற்று எழுதவேணுமானபடியினால் இப்போது நம்முடைய கையிலே வாங்கின ரசீதை ஒன்று குவர்னதோர் கையிலே கொடுத்து விடுவான் அல்லவென்று குவர்னதோர் அந்த ரசீதை ரங்கப்பன் கையிலே கொடுத்துவிடு. நானும் அவனும் கணக்கு எடுத்துக் கொள்ளுகிறோமென்று சொன்னாரேயானால் நம்முடைய கையிலே கொடுத்துவிடுவானேயல்லாமல் இவன் கையிலே வைத்துக்கொள்ளப்போகிறதில்லை. ஆனால், நம்முடைய கையிலே இவன் ரசீது வாங்க வேண்டிய வயணம் எப்படியென்றால், இன்ன தினுசு, இத்தனை கட்டுக்கு, இத்தனை சிப்பம், இத்தனை கிசம் என்று எழுதிக்கொண்டு குவர்னதோர் வசத்திலே

கொடுக்கவேண்டிய ஙியாயமுண்டு. ஏனென்ருல், நாமும் துரையும் கணக்கு ஒத்துக்கொள்ளச்சே, முசே கொர்னே கையிலே எனக்குச் சம்மதி பண்ணுகிருேமென்று நீ எடுத்துக் கொண்டதாய் ரசீது வாங்கவேண்டியது. அப்படி வாங்காமல் மூசே கோர்னே தன் பேருக்கு வாங்கினபடியினுலே இந்தச் சீட்டு ரெண்டுக்குப் படுமென்று வயணமெழுதினம், வந்தேன்

நான் இப்போது எழுதிக்கொடுத்த சீட்டானுலும் அல்லவென்று இனிமேலைக்கு வேறே சீட்டெழுதிக்கொடுத்து இப்போது எழுதிக்கொடுத்த ரசிதைப் பரிசுரித்துப்போட்டாலும் எழுதிக்கொடுக்கிற சீட்டுக்குச் சவாது வெள்ளைக்காரருக்கு நாம் சீட்டெழுதிக் கொடுக்கிறதற்குச் சவாது எழுதிவைக்கிற தஸ்திரத்திலே எழுதியிருக்கும் பார்த்துக்கொள்ளுகிறது. அரியப்பமுதலி தன் வழியிலே நடந்த வியாபாரம் தன் முகாந்திரமாய் நடந்ததாம், நாம் வேறே பாபிசெட்டி முத்தப்பிள்ளையைக்கொண்டு நடப்பித்துக்கொண்டு போகிருேமென்று மூன்ருறு நாளாய்ப் பிடித்துத் தம்பியை வந்து கண்டு பேசுகிறதும் தம்பி அரியப்பமுதலி வழியிலே நடத்திஞல் நல்லது தானும் அரியப்பமுதலியும் வியாபாரத்தோடே சேர்ந்து பார்த்துக் கொண்டு போகிருேமென்றும், இப்படி நடத்தாவிட்டால் காஷாய வஸ்திரம் தரித்துக்கொண்டு காவேரிக்கரையிலே போயிருக்கிருேமென்ருப்போலே கோபாலசுவாமியுடனேயும் தெற்கத்து சீதாராமசாஸ்திரி சோசியருடனேயும் சொல்லியனுப்பினதற்கு அதற்குத் தக்கதாய் முரக்கணக்குத் தீர்ந்தாலப்படியே அரியப்பமுதலிவழியிலே நடப்பித்துக்கொள்ளுகிருேமென்று தித்திப்புப் பேச்சாய்ச் சொல்லியனுப்புவித்தேன். எனக்கு அரியப்பமுதலி நடப்பித்தற்கு நான் அவனை பராக்கி இந்தூர் பெரிய மனுஷரிலே இவனும் ஒருத்தனே என்கிறதாக எண்பித்ததற்கு அவன் எனக்குப்பண்ண பிரீதியும் பிரதியுபகாரத்துக்கு இன்னம் அவனுடனே ஸ்னேகமும் வியாபாரக் கூட்டும் ரங்கப்பன் நடத்துவானென்று வெட்கமில்லாமல் அரியப்பமுதலி தம்பி யண்டைக்கு வந்து எனக்கு ராசவட்டமிட்டான். ஆனுலவன் பண்ணின சுவாமி துரோகத்துக்குச் சுவாமி லோகத்திலே உண்டாயிருக்கிறது மெய்யேயானுல் அதற்கேற்ற ஆக்கினை கொடுப்பார். நானே என் சன்மத்திலேயும் இனிமேல் அவனுடனே ஸ்னேகமும் கூட்டுத் தொழிலும் பண்ணுகிறதில்லை. இன்னுமொரு சென்மத்திலே என்னமோ நான் அறியேன். என்னுடைய நினைப்பு இப்படியிருக்கிறது. சுவாமி சித்தத்தை நான் அறியேன்... ... ... ... ... ...

1746 ஆ செப்தம்பர் மீ 1 உக்கு அக்ஷய ஸு ஆவணி மீ 20 உ

இற்றைநாள் வியாழக்கிழமை காலையிலே மயிலாப்பூரிலேயிருக்கிற சம்பாக்கோவிலுபதேசி மதுரநாயகமென்கிறவன்

சின்னமுதலியாருக்கு எழுதின ஓலையைத் துரைக்கு நேற்றைய தினம் படித்துக் காண்பித்துச் சொன்ன சேதி யென்னவென்றால்: சோமவாரம் எட்டு மணிக்கு இவ்விடத்திலேயிருந்து போன சண்டைக் கப்பல் எட்டும் சென்னப்பட்டணத்துக்குப் போய் துறையிலேயிருக்கிற நாட்டுக் கப்பல் ஒன்றும் சீர்மைக் கப்பலொன்றும் ரெண்டு வுருவின்பேரிலேயும் இந்த எட்டுக் கப்பல்காரரும் ஒரு வரிசை பீரங்கி தீர்த்தார்களாம்.

அப்போது கோட்டையின் பேரிலேயும் துறையிலேயிருந்த ரெண்டு கப்பலின் பேரிலேயும் தீர்த்தார்களாம். பத்து மணி மட்டுக்கும் சண்டை போட்டபிற்பாடு இந்த எட்டுக் கப்பலும் மயிலாப்பூர் மட்டுக்கும் வந்து திரும்பியும் மயத்திலே போய்ப் பிடித்து மறுபடி கண்ணுக்குக் காணாமல் மறையப் போய்விட்டதென்று மதுரையிலேயிருந்த கப்பலிலே இருபத்தைந்து பேர் செத்து இறக்கிக் கடற்கரையிலேயும் புதைத்தார்கள் என்று அதிலே பத்துப்பேர் இங்கிலீசுக்காரரென்றும் பதினைந்து பேர் கிளாசுகள் லஷ்காரர்களென்றும், பிரான்சுக் கப்பலிலேயிருந்து சுட்டதிலே ஒரு குண்டு வந்து நரியா டங்காசாலையிலே விழுந்ததென்றும், ஒரு குண்டு இங்கிலீசுக்காரன் வீட்டிலே விழுந்து மெத்தையின் பேரிலே கட்டியிருக்கிற கண்ணாடிகள் பீங்கான்களெல்லாம் உடைந்ததாய் மேஸ்தர் மாசு குவர்னதோர் பெண்சாதி மைலாப்பூரிலே வந்திருக்கிறதாயும் துறையிலேயிருந்து சண்டை கொடுத்த இங்கிலீசுக்காரர் கப்பல்களிலே தண்ணீர் ரொம்பக் காணுமென்றும் இந்தப்படியாக எழுதிவந்ததென்றும் கபுறு சொன்னதற்கு மறுபடி ஏன் சண்டை பண்ணாமல் மறைந்து போனார்கள் என்று சின்னமுதலி ஆச்சரியத்தைப் பார்த்து உதட்டைக் கடித்தாராம். இந்தப்படி நேற்றையதினம் வந்த சேதியென்று சின்னமுதலி என்னண்டைக்கு வந்து சொல்லி அவ்விடத்திலேயிருந்து வந்த ஓலையையும் என்கையிலே கொடுத்தார். நானும் படித்துப் பார்த்தேன். மேலே எழுதினபடிக்குத்தான் எழுதியிருந்தது. அப்பால் துரை ஒழுகரைக்கு இற்றை நாள் காலமே முச்சலபோர்தோனேயண்டைக்குப் போனார் நான் வழியிலே சாராயக்கிடங்கு அண்டையிலே கண்டு சலாம் பண்ணினேன். கிடங்கைக்கூட, பல்லக்குக்கூட, அரிகைகூட, பார்த்துக்கொண்டு போனார். அப்பால் பள்ளத்தெருவண்டை போகையிலே சின்னமுதலி துரைக்கு எதிர்ப்பட்டான். சின்னமுதலி பிறகே சுகசிங்கு வியாச்சியம் தீர்ப்பித்து சுகசிங்கை அழைப்பித்துவரச் சொல்லி நபாபு துரைபேருக்குக் காகிதங்கொண்டுவந்து அடவாய் இத்தனையும் கூடச்சொல்லி சின்னமுதலி மதனுந்தபண்டிதன் சொல்லிவைத்தானோ அல்லது சுகசிங்குதான் சொல்லிவைத்தானோ தெரியாது. அந்தச் சேவகன் முன்னே சலாம் செய்து கூப்பிட்டான். துரை சின்னமுதலியை அழைப்பித்து ரங்கப்பிள்ளையுடனே சொல்லி, சுகசிங்கு சம்மதியைத் தீர்த்துப்

போடச் சொன்னாரென்று சின்னமுதலி நான் பாக்குக்கிடங்கு அண்டையிலே இருக்கும்போது வந்து என்னுடனே சுகசிங்கு சம்மதியைத் தீர்த்துப்போடச் சொன்னார் என்று சொன்னான். அதின்பேரிலே நான் சொன்னது: துரையுடைய சமயம் வாய்க்காமல் அட்டியா யிருக்கிறது. நீர் அறிவீரா. நபாபு இவர்கள் வியாச்சியம் தீர்ந்துவிட்டது. அவனை அனுப்புவித்தோம் என்று எழுதிப்போடுமென்று சொன்னேன்.

சுகசிங்கும் கூடப் போகவேணுமென்று கேட்டான். இவ்விடத்திலே அட்டியென்ன, போகிறானென்று சொன்னேன். நல்லது என்று தெருத்திண்ணையின் பேரிலே உட்கார்ந்து அதின் பிற்பாடு சென்னப்பட்டணத்திலே பிரான்சு கப்பல்கள் போனதும் சண்டை போட்டதும் முதலான சேதியைச் சொல்லி அவ்விடத்திலே யிருந்துவந்த ஓலையையும் என் கையிலே கொடுத்தது முதலானதெல்லாம் அந்தப் பக்கத்திலே எழுதியிருக்கிறதென்று துரை லபோர்தோனையண்டைக்குப் போன சாடை பார்த்தால், சென்னப்பட்டணத்துச் சண்டை சேதி சொல்லி ஆலோசனை பண்ணி இன்னம் சுருக்காய் நடத்தத்தக்கதாக எழுதியனுப்ப யோசனை பண்ணினாப் போலே தோற்றுகிறது. அது எதனாலேயென்றால் அவ்விடத்திலேயிருந்து சேதி வந்தாப்போலே மறுபடியும் சண்டை பண்ணாமல் வந்ததென்னவென்று ஆகாசத்தைப்பார்த்து உதட்டைக் கடித்த சாடையைப் பார்த்தால் அப்படி காணுது. இதுவும் சிறபேறு வேளியாம். மூசே லபோர்தோனேயைக் கண்டு பேசிவிட்டு பத்தரை மணிக்கு வரும்போதும் நம்முடைய கிடங்கையும், பல்லக்கையும், அறிக்கையும் பார்த்துக்கொண்டு போனார். வீட்டே யிறங்கினவுடனே மூசே பிரிதியையும், மூசே பெடுதல்மேயையும் அழைப்பித்து ஆறு குதிரை கட்டுகிற வண்டியை முஸ்தீது பண்ணச் சொன்னார்,

குதிரைகள் அரியாங்குப்பத்துக்குப் போயிருக்கின்றன என்றாப்போலே பல்லக்கு முஸ்தீது பண்ணச்சொல்லி நம்முடைய போயண்டைரை நாலுபேரை அழைக்கச்சொன்னார். மறுபடி பல்லக்கு வேண்டாமென்று ஒற்றைக்குதிரை கட்டின வண்டிகளைக் கொண்டுவரச்சொல்லி மூசே பெடுதுலேரியையும் முன்னே போகச்சொல்லி, அப்பாலே ஒற்றைக் குதிரைவண்டியில் வருகிறதற்குள்ளே மகா துரிசை பண்ணி, இருபது பேர் முப்பது பேர் ஓடி, வண்டியிலும் வந்து ஏறிக்கொண்டு பதினொன்றரை மணிக்கு அரியாங்குப்பத்துக்குப் பெண்சாதியண்டைக்குப் போனார். மற்றப்படி இற்றை நாள் துரை இல்லாததினாலே பின்னை யொன்றும் விசேஷ சமாசாரத்தைக் காணோம்.

இற்றைநாள் மத்தியானம் சென்னப்பட்டணத்திலேயிருந்து எங்கள் பெரிய தகப்பனார் குமாரன் திருமலையப்பிள்ளையவர்கள் தன்னுடைய குமாரன் வேங்கடாசலத்துக்கு அக்ஷய ஞு ஆவணி மீ 20உ புதவாரம் ராத்திரி ஐந்து நாழிகைக்கு முகூர்த்தம் என்று எழுதி யனுப்பின கலியாண ஓலை இற்றைநாள் மத்தியானம் வந்தது. மறுபடி சைதாப்பேட்டையிலேயிருந்து தரகரியா புடவை கூட்டுகிற பாலமுத்துசெட்டிக்கு வேங்கடாசலப்பிள்ளை காகிதம் கலியாணச்செலவுக்கு ஐம்பது வராகன் கொடுக்கச் சொல்லி, திருமலையப்பிள்ளைக்கு உண்டிகை வாங்கி மறு ஓலையும் எழுதியனுப்பினேன்.

1746 ஆ செப்தம்பர் மீ 2 உ க்கு அக்ஷய ஞு ஆவணி மீ 21 உ வெள்ளிக்கிழமை

இற்றைநாள் கோட்டையிலே இங்கிலீசு சட்டம் சகலாத்துக்கட்டுப் பார்த்தவிடத்திலே பூச்சிகள் பிடித்தது. இன்னும் இரண்டு மாசம் பாராமல்போனால் எல்லாம் பூச்சிப்பிடித்துப் போம். சுவாமியினுடைய தயவினாலே இப்போது பார்த்தபடியினாலே தப்பித்தது. சிறிது கட்டு கரையிலே மாத்திரம் பிடித்திருந்தது. இந்தப்படி ஐந்தாறு கட்டு இருந்தது. மற்றப் பதினேழு கட்டும் நன்றாயிருந்தது. இதல்லாமல் ஐந்தாறு கட்டு காசடையும் கடுத்தளியும் இப்படி யிருந்ததினாலே ஐந்தாறு கட்டுப் பொறுக்கி எடுத்தோம். மற்ற ஆறு கட்டும் நனைவும் சிலுக்கலும் ரொம்ப பூச்சி கடித்ததையும் தள்ளிப்போட்டு நாங்கள் ஏகத்துக்கு எடுத்துக்கொண்டது இருபத்தொன்பது கட்டும் ஒரு சிப்பமும் சட்டு 1 க்குக் கிலாக்கி 2, நாரஞ்சி 2, பச்சை 2, ஆறு சிப்பம் விழுக்காடு கட்டுக்கு இருக்கிற வாடிக்கை. இந்தப்படிக்கு எடுத்தோம். இதல்லாமல் மெல்லிசு சகலாத்து மொக்க சட்டம் என்று தமிழர் சொல்லுகிறது. வெள்ளைக்காரர் ஒலாந்தினேர் என்கிறது ஐந்து செகப்பும், ஐந்து பச்சையுமாய் இந்த வருஷம் வந்தது. பத்து கட்டு பங்காளத்துக்குப் போகிறதானபடியினாலே வெள்ளை, மஞ்சள், காவி இத்தியாதி வர்ணங்களில்லாமல் ஐந்து சிப்பம் பச்சையாய் வந்தது. பத்து கட்டிலே மட்ட சகலாத்தோடே கூட ஐந்து கட்டுகூட தொண்ணூற்றியாறு கட்டு கொடுத்தான். இன்றையதினம் நூறு கட்டுக்கு சரியாய் நாலு கட்டும் கொடுத்து ஆக கட்டு நூறும் சரியென்று சொல்லி இந்த நாலு கட்டுக்கும் கெசம் 1 க்கு ஒன்றரை வராகன் விலை போடுவேனென்று முசே கொர்னே சொன்னானென்று கோட்டை சுப்பய்யன் வந்து சொன்னான். கோட்டையிலே நானிருக்கையிலே முசே புரேம்புறா என்கிறவனுக்கு முசே லபோர்தோனே ஒரு காகிதம் எழுதியனுப்புவித்தான். அந்தக் காகிதத்திலே எழுதியிருந்த வயணம்: நேற்றையதினம்

நம்முடைய இஸ்தாதுரு எட்டுக் கப்பலும் சென்னப்பட்டணத் திலேயிருந்து புறப்பட்டு கோவள்த்துக்கு நேரே வரும்போது இங்லீசுக்காரரது பங்கோல் யாத்திரை போய் வருகிற ஒரு கப்பலும் ஒரு சுலுப்பும் எதிர்பட்டது. அந்த இரண்டு உருவை யும் பிடித்துக்கொண்டார்கள். அந்த இரண்டு உருவும் நாளை நன்றையிலே பார்க்கலாம். அந்தக் கப்பலிலே இரண்டானைக் குட்டி. மூன்று அச்சைக் குதிரை, கெந்தகம், சாம்பிராணி, வெள்ளியும், கொஞ்சம் கஞ்சா பொன் முதலான சரக்கு களும் இருக்கிறது. நீர்யானை ஒருக்காலும் பார்த்ததில்லையே இந்த ஆனையைப் பார்க்கலாம் என்று எழுதின காகிதத்தை மூசே லேத்ரு, மூசே துலாராம், மூசே மீரா முன்னே படித்துக் காண் பித்தானென்று சின்ன மீரா அவர்களுடனேகூட யிருந்து அந்தக் காகிதமும் வாசித்துப்பார்த்து நானும் மூசே கோர்னே மூசே துப்பிலாம், மூசே துப்பிளிசி, மூசே பீறே, மூசே பெனேசாஞ்சு என்கிற சொல்தாது கப்பித்தானும்கூட யிருக்கிற புடவை பார்க்கிறசாலையிலே சகலாத்துக்கட்டுப் பார்த்துக்கொண்டி ருக்கிற இடத்துக்கு மகா சந்தோஷத்துடனே கூட தொப்பி கழட்டிக்கொண்டு நகைத்துக்கொண்டு மேலே எழுதியிருக்கிற வயணப்படிக்கு எல்லாருடனேயும் சொன்னான். அதிலே நானி ருந்துகொண்டு பங்கோலிலே யிருந்து வந்தால் ஆனையும் அச் சைக்குதிரையும் வரக்காரியமில்லை. ஆனையும் குதிரையும் வந்த படியினாலே கிட்டா, அச்சை, பெராக்கு இந்த வட்டாரங்கள் கூட திரிந்துவந்ததாய்க் காணுதென்று சொல்னேன். அப்படி, ஆமாங்காட்டு மென்று சொன்னார்கள். இந்தக் கப்பல் மேஸ்தர் மாசு மானுசன் அவர்களுடைய தென்றும் சொன்னார்கள். ஆறு குதிரை கட்டின வண்டியின்பேரிலே மூசே துவர்னம்தாரும் பரிதியும் ஒழுகரையிலேயிருக்கிற லபோர்தொனே அண் டைக்குப் போய் பத்துமணிக்கு வந்தார்கள். மூசே மீரா சொன் னது தெலூஷ் என்கிறவன் பொம்பாய்க்குப் போகிற இங்கி லீசுகப்பல்கள் ரெண்டுடனே சண்டை போட்டு ஒரு கப்பலைப் பிடித்துக்கொண்டு வந்தவன், தன் சுலுப்பை, மாயேயிலே தர்னே வைத்துவிட்டுப் பிடித்துக்கொண்ட இங்கிலீசுக் கப்பலின் பேரில் தான் ஏறிக்கொண்டு பங்காளத்துக்குப் போவோமென்று புறப்படும்போது மாயேயிலிருக்கிறவர்கள் சீர்மைக் கப்பல் ஏழு கப்பல் வருகிறதே அந்தக் கப்பலுடனே கூடப் போகலாமென்றும், ஒண்டியாய்ப் போனால் இங்கிலீசுக் கப்பல்கள் நடமாடுது போகவேண்டாமென்றும் சொன்னால், இவன் தர் அதிர்ஷ்டம் என்னப்பட்டது இவனை நிற்க ஒட்டா மல் அவர்கள் சொன்ன பேச்சையுங் கேளாமல் என்னுடைய அதிர்ஷ்டம் நல்லதல்லாவிட்டால் இந்தக் கப்பல் எனக்கு அகப்படுமா இன்னம் அகப்பட்டாலும் அகப்படும் என்று சொல்லிப்போட்டு வந்தவனை இங்கிலீசு சண்டைக்கப்பல் ஐந்தும் திருக்கணாமலைக் குடாவிலே யிருந்து புறப்படும்

போது புலியின் வாயிலே அகப்பட்டாப்போலே இங்கிலீசுக் கப்பலுக்கு எதிர்ப்பட்டவுடனே அவர்கள் மூசே தேலூஷ் கப்பலையும் மூசே தேலூஷையும் பிடித்துக்கொண்டு சென்னப் பட்டணத்திலே கொண்டுபோய் இறக்கிப்போட்டார்கள். இவனுடனே கூட இருபத்தைந்து மசுக்கரைக் காப்பிரிகள் கூட அப்பட்டார்கள். அவர்கள்கூடச் சென்னப்பட்டணத்திலே இருக்கிறார்களென்று சொன்னான். இரண்டு மூன்று நாளைக்கு முன்பாக துரைகூட இந்தச் சாடையைத்தானே என்னுடனே சொன்னார்... ... ... ... ... ... ...

1746 ஆ செப்தம்பர் மீ 3 உ க்கு அக்ஷய ஞு ஆவணி மீ 22உ சனிவாரம்.

இற்றைநாள் பின்னை வேறே விந்தையில்லை. குவர்னதோர் பகலைக்கு மேலாக ஒழுகரைக்கு மூசே லபோர்தோனேயண்டைக்கு வண்டியின் பேரிலே மூசே பரிதியுடனே கூடப் போய் அவரைக் கண்டுபேசி அங்கேயிருந்தாப்போலே நெல்லித்தோப்புக்கு வந்து அங்கேயிருந்து அரியாங்குப்பத்துக்குப் பெண்சாதியண்டைக்குப் போய் ராத்திரி யங்கே சாப்பிட்டுப் பத்து மணிக்கு ஊருக்கு வந்தார்.

இற்றைநாள் பதினொன்றரை மணி வேளையிலே சுகசிங்கு வியாச்சியம் தீர்ந்ததென்று மத்தியஸ்தரையும் வியாச்சியக்காரரையும் துரையண்டைக்குக்கொண்டுபோய்விட்டுத் தீர்ந்தது என்று தீர்ப்பு பிரான்சிலேயும் எழுதிக் கொடுத்ததைப் பார்த்துக்கொண்டு அந்தப்படிக்கு அவர்களுக்குப் பணம் சம்மதி பண்ணிப்போட்டுப் போகச்சொல்லு என்று சொன்னார். அந்தப்படிக்கு அவர்கள், அவர்களாச்சு அவர்களாச்சு வேண்டியது செய்துகொள்ளுகிறார்கள் என்று சொன்னேன். ஆனால் போகச் சொல்லு என்று சொன்னார். அனுப்புவித்துக்கொண்டு வந்தோம்.

1746 ஆ செப்தம்பர் மீ 4உக்கு அக்ஷய ஞு ஆவணி மீ 23உ ஆதிவாரம்

இற்றைநாள் திருநெல்வேலியிலிருந்து மீர்குலாம் உசேன் அண்டைக்குச் சீர்மைக் கப்பல்கள் வந்த சேதி: துரையவர்கள் மோபார்க்கு பாதி எழுதி லக்ஷம் ரூபா சம்மதிக்கு வட்டி மாத்திரம் தீர்த்துக் கொடுத்துவிடுகிறோம். முதல் இனிமேல் வருகிற கப்பல்கள் வந்தவுடனே கொடுக்கிறோமென்று எழுதி கும்பினிர்ச் சேவகர் இரண்டுபேர் கையிலே கொடுத்து அனுப்பியிருந்த சேவகர்கள் இரண்டுபேரும் போய்ச் சேர்ந்து மீர்குலாம் உசேனுக்குக் காகிதங் கொடுத்து மறு காகிதம் கொண்டுவந்தார்கள். அந்தக் காகிதச்

சேதிகள் நீங்கள் அனுப்பின காகிதம் பார்த்துக்கொண்டு மிகுதியும் சந்தோஷமானது. இப்போதும் நீங்கள் எழுதின படிக்கு வட்டியுடனே சேர்ந்தது மாத்திரம் உண்டானது. கணக்குப்பார்த்து தங்கள் தகப்பனூர்கையிலே கொடுத்துவிடச் சொல்லியும் முதலுடன் சேர்ந்தது உங்கள் வசத்திலேதானே இருக்கட்டும் உங்கள் வீட்டிலே யிருந்தாலென்ன என்வீட்டிலே இருந்தாலென்ன. ஆனபடியினுல் முதலுடனே சேர்ந்தது. உங்கள் வசத்திலேதனேயிருக்கட்டும் என்றும் இதல்லாமல் தாம் வாங்கியிருக்கிற திருவிட ராச்சியத்திலே கரை துறை இருக்கிறதிலே பலத்த ரேவுமுகம் ஒலாந்தாக்காரர் வசமாய் இருக்கிறதென்றும், அந்த ரேவுகளெல்லாம் முத்து எடுக்கிற இடம் என்றும், சங்கு எடுக்கிறதென்றும், காயல் தூத்துக்குடி குலசேகரபட்டணத்திற்கு அடுத்தாப்போலே யிருக்கிறதென்றும், முத்துக்குளிக்கிறதிலேயும் வயிடூரியம் எடுக்கிறதிலேயும் சங்கு குளிக்கிறதிலேயும் வெகு திரவியம் எடுக்குதென்றும் அந்த ரேவுகள் உங்கள் வசம் செய்கிறோம் என்றும் அந்த ஒலாந்தாக்காரரை துரத்திவிடுகிறதற்கு நீங்கள் கடலின்பேரிலே கப்பலை கொண்டுவந்து வைத்துப் பிடித்துச் சண்டைசெய்யவேணுமென்றும் தங்கள் குதிரைகள் ராணுவம் கரைவழியே வந்திறங்கி சண்டை கொடுக்கிறோமென்றும் இந்த அடுக்கிலே இரண்டு பாரிசமும் சண்டை கொடுத்தால் ஒலாந்தாக்காரருக்கு நிருவாகத்துக்கு வராது. அப்பால் அவனை துரத்திவிட்டு அந்த ரேவுகளை உங்கள் வசம் பண்ணுகிறோம் அப்பால் உங்களுக்கும் நமக்கும் நடக்கவேண்டிய உடம்படிக்கை வயணத்துக்கெல்லாம் ஆனந்தரங்கப் பிள்ளை மனுஷருடனே வயணமாய்ச் சொல்லி ரங்கப்பிள்ளை பேருக்கு காகிதமும் எழுதியனுப்புவித்தேன். இது முதலாகிய சேதிகளெல்லாம் ஆனந்தரங்கப்பிள்ளை தங்களுடனே சொல்லுவான். சொன்னபடிக்கு நடப்பிக்கவேணும் என்று இத்தியாதி வயணமாய் எழுதியிருக்கிறதாய் படித்து சின்னைய முதலியும், மதனந்தபண்டிதனும் துரைக்குச் சொன்னார்கள். இந்தக் கபுறு எல்லாம் கேட்டு நகைத்துக்கொண்டிருந்தாரே யல்லாமல் சின்னைய முதலியுடனே பின்னையொன்றும் சொல்லவில்லை அப்பால் மயிலாப்பூரிலிருந்து மதுரனுயகமென்கிறவன் சென்னப்பட்டணத்திலே நடந்த சமாசாரமெல்லாம் என்றும் மதாம் போரனுவால் துரைக்குச் சொல்லச்சொல்லிச் சொன்னுன் என்றும் எழுதின ஓலை வயணம்... ... ... ...

சென்னப்பட்டணத்தின்பேரிலே பிராஞ்சுக்காரர் சண்டைக்குப் போனவர்கள் ஒரு கப்பல் துறையிலேயிருந்ததென்றும் அத்துடனே சண்டை கொடுக்காமல் கொடுக்கமாட்டாமல் வந்து பார்த்து லகுவில்லாததினுலே ஓடிப்போய்விட்டார்களென்றும் பிரஞ்சுக்காரர் வாய்ச் சிலம்பமாத்திரமே யல்லாமல் காரியத்திலே நிருவாகியாமென்றும் இந்தக் கொள்ளைக்கு எட்டு கப்பல்

கள் வருவானேனென்றும் வந்தவர்கள் சாமமாத்திரமாகிலும் சண்டை கொடுத்தார்களா? தூங்கிக்கொண்டிருக்கிறதா யிருந்தால் பிடித்துக்கொண்டுபோகவேணுமென்று வந்தார் கள். விழித்துக்கொண்டிருக்கிற சாடையைப் பார்த்துக் காயம் வாங்கிக்கொண்டு ஒரு கப்பலுக்கு சவாபு கொடுக்க மாட்டாமல் ஓடிப்பிழைத்தார்கள். இருந்தால் எட்டுக் கப்ப லும் பிடித்துக்கொள்ளுவோமென்றும் இனிமேல் வரவழைக்க வில்லையாவென்று சொல்லுகிறவர்களும் வராமலிருந்தால் பயமாயிருக்கும் அதையும் கெடுத்துக்கொண்டார்களென்றும் இப்படி நானாவிதமாய் இங்கிலீசுக்காரரிலே பெரிய மனுஷ ரும் பெரிய மனுஷர் வீட்டுப் பெண்டுகளும் அரண்மனைக்கார ரிலே பெரிய மனுஷரும் தமிழரிலே பெரிய மனுஷர் பின்னையும் அனேகம்பேர் பிரான்சுக்காரரை எகத்தாளி பண்ணச்சே எனக்கு கேட்க சகிக்கவில்லையென்றும் வந்தமட்டுக்கும் அதற் குத் தக்கதாய் நடப்பியாமல் போய்விட்டதென்னவென்றும் நான் சொன்னதாய் என் தகப்பனுக்கு எழுது என்று மதாம் போர்னவால் சொன்னாளென்று எழுதி, பின்னையும் தான் அறிந்ததாய் எழுதினதென்னவென்றால் இங்கிலீசுக்காரிச்சி களும், வர்த்தகரும், பழவேற்காட்டுக்குப் போனவிடத்திலே ஒலாந்தாக்காரரிடங் கொடாமல் போகச்சொன்னார்களென் றும் தமிழர், வர்த்தகர், உத்தியோகஸ்தர் சமஸ்தமான பேரும் ஆண் பெண்ணடங்கலும் இவர்கள் சண்டைபோட்ட தினம் அலங்கோலப்பட்டதை இன்னவிதமென்று எழுதி முடியா தென்றும், அப்போது புறப்பட்ட சனங்கள் எல்லாரும் பூந்த மல்லி, கோயும்பேடு. நுங்கம்பாக்கம், மயிலாப்பூர் இந்த வட்டா ரங்களிலே போனவர்கள் இப்போதுதான் வந்து சேர்கிறார்கள் என்றும் அவர்கள் சொல்லிக்கொள்ளுகிறார்கள். அந்த வார்த் தை முன் எழுதியிருக்கிறபடிக்குச் சொல்லிக்கொள்ளுகிறார்க ளென்றும், பாதிரிகள் மயிலாப்பூரிலேயிருக்கிறவர்கள் இந்த வார்த்தைச் சகியாமல் துரைக்குத் தாங்கள் சொன்னதாய் எழு தச் சொன்னதாகவும் சண்டைக்கு என்ன முஸ்தீது உண்டோ அதுகளெல்லாம் முஸ்தீப்பு பண்ணிக்கொண்டு தயாராய் வைத்திருக்கிறார்களென்றும் இப்படி நானாவிதமாய்ச் சொல் லிக்கொள்ளுகிறார்களென்றும் ரேவுலேயிருந்த கப்பலை மூணும் அலையிலே அலையவிட்டிருக்கிறார்களென்றும் இப்படியாக எழுதின சேதியை சின்னமுதலி துரைக்குப் பிடித்துச்சொன்ன தின்பேரிலே அதை மத்தே சண்டைக்குக் கொண்டுபோய் பிரான்சிலே எழுதிக்கொண்டு வரச்சொல்லி உத்தாரங்கொடுத்த வுடனேதான் முதலி மத்தேசு எழுதுகிற கபினேத்துக்குப் போனவுடனே துரை யென்னையழைத்து மீர்குலாம் உசேன் உனக்கு என்ன எழுதினதென்று கேட்டார். எனக்கு எழுதின காகிதமும் என் மனுஷரும் பிறகே வருகிறார்களாம் அவர்களிலே

ஒருத்தன் சரீர சுவஸ்தமில்லாமல் நின்றுனும். இவர்கள் முன்ன தாக வருகிறோமென்ற வந்த கும்பினீர் சேவகர் கபுறு சொன்னார்களானால் உனக்குப் பதினாயிரம் ரூபாய்க்கு மாத்திரம் உண்டி வருகுதென்று சொல்லியிருந்தாயே அதென்ன வென்று கேட்டார். அதுவும் எவ்வளவாகிலும் வந்து சேருமென்று சொன்னேன். ஆனால் மெத்தமெதுவாய் நடக்கிறாய் என்றும் சொன்னார். அதற்கு நான் யுக்த கபுறு சொல்லாமலிருந்தேன். அதன்பேரிலே மீர்குலாம் உசேன் எனக்கு எழுதின காகிதத்திலே ஒலாந்தாக்காரர் வசத்திலேயிருக்கிறதாய் தூத்துக்குடி முதலான ரேவுகளெல்லாம் உங்கள் வசம் பண்ணுகிறோம் நீங்கள் கப்பல் கொண்டு வந்து சண்டை பண்ண வேணுமென்றும் தாங்கள் கரையிலே சண்டை கொடுக்கிறோமென்றும் இதற்கு உடன் படிக்கை முதலான தெல்லாம் நீர் சொல்லுவாயென்று முன் எழுதின சாடைப்படிக்குச் சொன்னார். அதற்கு அய்யா அப்படி யெழுதினது. நல்ல ரேவுகள் முத்து, வயிடூரியம், நீலம், சங்கு முதலிய தெல்லாம் கிடைக்கிற இடத்திற்கு இது முகாந்திரமாய் மீர்குலாம் உசேனுக்கும் ஒலாந்தாக்காரருக்கும் மனது போதாமல் ஒருத்தரோருத்தரும் மனது போதாமலிருக்கிற படியினாலே உங்களுக்கு எழுதினாப்போலே காணுதென்று சொன்னேன். மனது சமாதானமாயிருந்தால் நமக்கு அந்த ரேவு கொடுக்கிறோமென்று எழுதக் காரியம் என்ன. நம்மைக் கடலின் பேரிலே வந்து சண்டை கொடுக்கச் சொல்லவும், தானும் மாபுசுகானும் கரையிலே சண்டை கொடுக்கிறோமென்று எழுதக் காரியமென்ன. ஆனலிது நல்ல வாய்ப்பு. இப்படிப்பட்ட ரேவுகள் கும்பினிருக்கு ஒரு இடத்திலேயும் இல்லே. இங்கிலிசுக்காரருக்கும் எங்களுக்கும் சண்டையானது, ஒலாந்தாக்காரருக்கும் எங்களுக்கும் சண்டையாயிருந்து இப்படிப்பட்ட சமயமும் வாய்ச்சுதேயானால் நல்ல நல்ல ரேவுகள் எல்லாம் வாங்கிப் போடலாம். ஆனல், ஒலாந்தாக்காரருக்கும் எங்களுக்கும் சண்டையில்லாதபடியினாலே இந்தப் பேச்சுக்கு நாங்கள் ஒன்றும் பேசப்போகாது என்று சொன்னார் அப்படியானால், மீர்குலாம் உசேன் எழுதினகாரியத்துக்குப் பதிலுத்தரவு கூடாதென்று எழுதுகிற சாடைதானே என்று கேட்டேன். அந்தப்படிதான் எழுதப்போகிறது என்று சொன்னார். ... ... ...

சென்னப்பட்ணம் சேதி என்னவென்று கேட்டார். அதற்கு நான் ஒரு சாடையாய் ... ... ... யாமறியாமல் பதரிப்போகாதென்று இவர்கள் போய் சண்டை போடாததற்கு முன்னே கப்பல் நமக்கு இல்லாமலிருக்கச்சேயும் ஒழுகரைக்குச் சாப்பிடப்போகச்சேயும், முறட்டாண்டிச்சாவடிக்குச் சவாரி புறப்படச்சேயும், சென்னப்பட்டணத்துமேலே போகிறீர்கள். தேவனாம்பட்டணத்துமேலே போகிறீர்களென்றும் சென்னப்பட்டணத்திலே இங்கிலீசுக்காரர் தங்கள் பேரிலே வந்து

சண்டைசெய்ய வந்ததாய் எண்ணிக்கொண்டு, கோட்டைவாசல் சாத்துகிறதும், கெவுனிவாசலெல்லாம் சாத்துகிறதும், இருக்கிற சனங்களையெல்லாம் அவரவரை சாகர் பார்த்துக்கொள்ளச் சொல்லுகிறதுமான சாடையும். இங்கிலீசுக்காரர் ராத்திரியும் பகலும் தூக்கமில்லாமல் பீரங்கிகள் முஸ்திதுபண்ணிக் கொண்டு பட்டணம் எப்படி போனாலும் போகிறது. நாம் கோட்டையை மாத்திரம் காப்பாற்றிக்கொள்வோமென்றும் பயந்து நடுநடுங்கி, சட்டியோடு சட்டிகள் அடிபட்டு, பானையோடு பானை யடிபட்டு, சேனேட்டுவாய்க்காடி பார்த்துக் கொண்டு பயந்திருந்தது. இந்தப்படிக்கே தேவனும்பட்டணம் கூடலூர் சனங்கள் வலசைவாங்கிச் சகலமானபேரும் பறங்கிப்பேட்டைக்குப் பயணமாய் ஏற்றிப்போட்டு இப்படி பத்து மணி இரண்டு வரிசை கலந்ததேயென்று சொன்னேன். சொன்ன மாத்திரத்திலே துரை சொன்னது: அப்படி இருந்த பரத்தை மூசே லப்போர்தோனே சென்னப்பட்டணத்தின் பேரிலே கப்பலையனுப்பி பரத்தைக் கெடுத்துப் போட்டானென்று சொன்னார். இவர் சாடை இப்படியாயிருக்கிறது. இதற்குத் தக்கதாய்ச் சொல்லுவோமென்று உத்தேசித்து நான் சொன்னதும் அதற்கும் அவர் சொன்னதும் விஸ்தரித்து எழுதவில்லை. சுருக்கமாயெழுதுகிறேன்.

சென்னப்பட்டணத்திலே இவர்கள்போய் சண்டைபண்ணினதுமெத்த எகத்தாளியாய்ச்சொல்லிக்கொள்ளுகிறார்கள். இவர்கள் வந்து சண்டை கொடுக்கிறதற்கு வந்தார்கள். வந்தவிடத்திலே கோட்டையின் பேரிலேயும் கப்பலின் பேரிலேயும் சுட்டாப்போலே நிருவாகம் பண்ணமாட்டாமல் ஓடிப்போனார்கள் பிரான்சுக்காரர் சாடை இப்படிதான் பார்த்தால் பயங்கரம். ஒட்டி.கினி சிவந்தவேளையிலே ஓடிப்போகிற சாடையேயல்லாமல் நிருவாகம் பண்ணுகிறதேதென்றும், இவர்கள் வந்து வெட்கங் கெட்டுப் போவானேன். வராமல் இருந்தால் கம்பீரமாயிருக்குமென்றும் இனிமேல் நாங்கள் கொஞ்சத்திலே விடத்தக்கதில்லை. புதுச்சேரியை எப்படி அலக்ஷிக்கிறோமோ அது தெரியுமென்றும் இனிமேல் புதுச்சேரிக்கு நித்தியம்கண்டகாலமென்று இப்படி நானாவிதமாய் எகத்தாளி பண்ணுகிறார்கள். ஆர்க்காடும், மயிசூர் கரை துறை முடிய புதுச்சேரி குவர்னதோர் மகா நிருவாகி, கப்பல் காடிகள் வராத நாளையிலே பணமில்லாத வேளையிலே எப்போதும் நடக்கிறதற்குக் குணம் தனமாய்ச்செலவு கடத்திக்கொண்டு சத்துருக்கள் கப்பல்கள் வருகிறதற்கும் எதிரிக்கும் பயந் தோற்றதக்கதாகச் சிறிது மருந்து குண்டுகள் முதலாகிய சரஞ்சாயிகள் எதிரிக்குப் பயந் தோற்றத்தக்கதாக சிறிது பேரும் மாயே சிப்பாய்களும் அழைப்பித்துக்கொண்டும் நடத்தின உபாயமும் தைரியமும் தன் தந்திரமும் சண்டை போதனையும் மர்மம் ஒருத்தருக்கும் சொல்லாம

லிருக்கிறதும் ஒருவருக்குத் தெரிந்தாப்போலே ஒருத்தருக்கும் தெரியாது. அப்படி நடத்திக்கொண்டு இங்கிலீசுக்காரர் பண்ணுகிற எகத்தாளிகளுக்கும் சமயம் வரவேணுமென்று காத்துக்கொண்டிருந்தவருக்கு இப்போது கப்பலும் வந்து பலமும் வந்து பணமும் வந்து இருக்கச்சே சென்னப்பட்டணத்தையும் தேவனும்பட்டணத்தையும் வாங்காமல் விடுவாரா. இனிமேல் இங்கிலீசுக்காரருக்கு இந்தத் துறையிருக்கப்போகிறதில்லை யென்று எல்லாருஞ் சொல்லிகொண்டிருந்தார்கள். அதற்கு இப்போது மூசே லபோர்தோனே கப்பல்கள் போய் சும்மா பாராமல் நாலு பீரங்கி சுட்டுப்போட்டு வந்தது. முன்னிருந்தபேரைக் கெடுக்கிற நிமித்தியம் போனாப்போலே ஆச்சுது. இதுநன்றாய்த் தோற்றவில்லை. பேருக்கு ஆணிவந்தது என்றும்சொல்லிக்கொள்ளுகிறார்களென்றும் பின்னையும் அனேக விதமாய்ஸ்தவுத்தியமாய்இவருடையநிருவாகத்தையேரொம்ப சொன்னதின்பேரிலே ஆ! ரங்கப்பா! நீயறியாயா. என்னுடைய தைரியமும் நான் கொண்ட நிருவாகத்தையும் நான் சவாரி ஒழுகரைக்குப் புறப்பட்டபோது தேவனாபட்டணம் கூடலூரும் வலசைவாங்கினதும் சென்னப்பட்டணம் தட்டுக்கெட்டுக் கடந்ததும் மூசே லபோர்தோனே மகா சின்ன மனுஷனானபடியினாலே இவ்விடத்திலே பிரான்சுக்காரர் பேருக்குப் பங்கம் வந்திருக்கிறதேயென்று எண்ணாமல் எனக்கு ராசாவுடைய ஓடதி கடலின்பேரிலே சண்டை கொடுக்கிறதற்கு உத்தரவே இல்லாமல் கரையின்பேரிலே சண்டைகொடுக்கிறதற்கு உத்தரவு இல்லையென்று சொன்னான். அதற்கு நான் இங்கிலீசுக்காரர் நடப்பித்ததையெல்லாம் எழுதியிருந்த சம்மதியைப் படித்துக் காண்பித்து இதுகளெல்லாம் அறிக்கை இல்லாததினாலே அவரறிந்த மட்டுக்கும் அவர் உத்தரவு கொடுத்தார். இதுகளெல்லாம் அறிந்தால் நீங்கள் இனத்திற்குத் தக்கதாக நடத்தாமல்போனீர்களென்று கோபம் பண்ணுவார் என்று அனேக நியாயமாய்ச் சொன்னதின்பேரிலே, ஆனால் கோன்சேலிப்ரேசியோம் கொடுத்தால் நான் போகிறேன் என்றும் சொன்னான். இது காரியமெல்லாம் உன் யோசனையில்லாமல் நடத்தினாயென்று அனேகம் நியாயமாய்க் கேட்டேன். இவன் மோசக்காரன் ஆனபடியினாலே என்னைச் சகலமும் முஸ்திது செய்துவைக்கச்சொல்லி இந்தச் செலவு எல்லாம் என் தலையிலே போட்டான். இப்படி என்னைக் கெடுத்தான். இவன் வரச்சே மேலே போட்டிருந்த கம்பளிச் சட்டைத்தவிர வேறே கெதியில்லை. ஒரு பிச்சைக்காரனாய் வந்தவனை நன்றாய் நீ பார்த்திருக்கிறாயே, நீ யறியாததொன்றுமில்லை. உன் கண் முன்னே பார்த்திருக்கிற காரியம். நீ புத்திசாலி உனக்குத் தெரியாததொன்றுமில்லை. இப்போது சீர்மையில் ராசாவினிடத்திலே யிருக்கிறவர்களைத்தொட்டு இப்படி நடக்கிறதென்று சொன்னார். அதிலே நானிருந்துகொண்டு முன்னிருந்த

வர்கள் அப்படிப்பட்ட காரியம் நடத்துகிறதில்லை. இப்போது கோந்திரோலேர் செனரலாயிருக்கிற மூசே எறியென்றிருக்கிறவரைத் தொட்டு நடக்கிற காரியம் என்று சொன்னேன். அப்படியல்ல, அவன் தம்பியைத்தொட்டு என்று சொன்னார். அதற்கு நான் சொன்னது: மெய்தான் மூசே புல்லியைத் தொட்டுதான் நடக்கிறது. அவன்தான் அவன் சம் வாங்குகிறது. அவனுக்குச் சொல்லிக் காரியமாகச் செய்துகொடுக்கிறது. ஆனபடியினாலே கோந்திரோலேர் செனராலைச் சொல்லுகிறது என்று அதற்கு வயணமாய்ச் சொன்னேன். அது மெய்தானென்று ஒத்துக்கொண்டார். அதன்பேரிலே துரை யிருந்துகொண்டு மசுக்கரையிலே இவன் செய்த அனியாயத்துக்குச் சீர்மையிலே இவனை யழைப்பித்து, கழுத்திலே கயிறு போடுகிறதாயிருக்கச்சே வெகு பணத்தை மூசே புல்லிக்குக் கொடுத்துத் தப்பித்துக்கொண்டுவிட்டாரென்று சொன்னார். அதற்கு நான் சொன்னது: இப்பவும் மசுக்கரையிலே மோரிஸிலே யிருக்கப்பட்டவர்களைச் செய்கிற அநியாயத்திற்குச் சீர்மையிலே அபித்தா முகரா செய்துகொள்ளுகிற பிராதுகளெல்லாம் மூசே புல்லிக்குக் கொடுக்கிற லஞ்சத்தினாலே இதெல்லாம் தள்ளிப்போடுகிறது. இவனுக்கு இப்போது கோமாந்தானாகி வந்த சாடையும் என்று சொன்னதற்கு நீ மெத்த திட்டமாய் சொல்லுகிறாயா ஆனபடியினாலே சீர்மையிலே நடக்கிற காரியமும் நான் இவ்விடத்திலே நடத்தின காரியமும் மூச்சே லபோர்தோனே நடத்தின காரியமும் உனக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. பட்டணத்திலே யிருக்கப்பட்ட சனங்களுக்கும் வெளியிலே யிருக்கிற துலுக்கர் பெரிய மனுஷருக்கும் தெரியாதபடியினாலே இப்போது சென்னப்பட்டணத்தின் பேரிலே சண்டைக்குப் போகிறது என்னால் நின்று போனதாய் அல்லவா தோற்றும். அந்தப்படிக்குத் தோற்றாதபடிக்கு நீ அவரவர்களுக்குத் தெரியும்படியாகச் சொல்லவேணும் என்று சொன்னார். அதற்கு நான் சொன்னது: இனிமேல் பிரசங்கம் செய்யவேணுமென்று கவையில்லை. கப்பல்கள் வராத நாளையிலே நடப்பித்த தைரியமும் இப்போது சென்னப்பட்டணம் வாங்கவேணு மென்றிருக்கிறதும் இனிமேல் அந்தப்படிக்கு நடப்பிப்பீரென்றும் ஆற்காடும், மைசூரும், நாகப்பட்டணம் வடக்கேயும், கோலக்கோட்டைப் பரியந்திரம் உம்முடைய கீர்த்தி ஓங்கி அவரவர்கள் பாட்டாய்ப்பாடுகிறார்களென்றும் சொன்னேன். ஆக பாட்டாய்ப் பாடிவித்தார்களென்று கேட்டார். அந்தப்படிக்குப் பாட்டாய்ப்பாடுகிறார்க களென்றும் சொன்னேன் இந்தவூரிலே பாடுகிறார்களாவென்று கேட்டார். இந்தவூரிலேதான் அவரவர்கள் பாடுகிறார்களென்று சொன்னதற்கு நகைத்து மூச்சே லபோர்தோனே நான் பிரான்சுக்காரருக்குத் தலையிறக்க வந்த காரியத்துக்குப் பிரான்சுக்காரர் சவுரியவந்தர். பராக்கிரமசாலிகள். அவர்களுடனே இடறப்

போகாது. இடறினல் இங்கிலீசுக்காரரை மூலத்தே ஆணி யாய்ப் பிடுங்கிப் போட்டுவிட்டார்கள். ஆனபடியால் இவர் களுடனே பொல்லாப்புச் செய்துகொள்ளப் போகாதென்று பிரஞ்சுக்காரருடைய கீர்த்தி டில்லிமட்டுக்கும் உண்டாக் கவேவேணுமென்று நினைத்தால் மூசே லபோர்தோனே என் கிற நாய் வந்து விவாதம் செய்கிறன் என்று சொன்னர். அதற்கு நான் சொன்னது: சீர்மையிலிருந்தமனுஷர்கள் வசனம் வாங்கிக்கொண்டு இப்படி பிரஞ்சுக்காரர் பேரை மூசே லபோர் தோனையைக்கொண்டு முழுக அடிக்கிறர்களென்கிறது தெரி யாமல் இப்போது குவர்னதோரராய் இருக்கிறவர் மகா சவுகரிய வந்தன், திருவாசி, மகா கோபத்தையடைந்திருக்கிறர். இங்கி லீசுக்காரர் இவர் மனது கோபம் வர நடந்துகொண்டார்கள். கப்பல் வந்தமட்டுக்கும் சென்னப்பட்டணம், தேவனும்பட் டணம், கூடலூர் இல்லாது என்று ஆற்காடு முதலாகிய இந்த ராச்சியமெல்லாம் பேராயிருக்கிறதற்குச் சென்னப்பட்டணம் வாங்காமல்போனல் கொஞ்சமாய் எண்ணிப்போவார்கள். தேவரீர் அறியாத காரியமில்லையே நான் சொன்ன வார்த்தை தெரியாமல் சொன்னலும் மனம் பொறுக்கவேண்டும். கோபத் துக்கு எப்படி சொல்லவேண்டுமோ அப்படி மார்க்கமாய்ச் சொன்னதற்கு நீ சொல்லுகிறது மெய்தான். ரங்கப்பா நான் என்ன செய்வேன் என்னுலே ஆனமட்டுக்கும் எப்படியெப்படி பார்க்கவேண்டுமோ அப்படியெல்லாம் பார்க்கிறேன் என்று சொன்னர். அதற்கு நான் கோன்சேலிப்ரேசியோம் கொடுக் கிறதுதான் மூசே லபோர்தோனேக்கு தள்ளக்கூடாதேயென்று சொன்னேன். அப்படி கோன்செலிப்பிரேசியோம்கொடுக்கிறே மென்று சொன்னபிற்பாடு எனக்குச் சரீரம் சுவஸ்தமில்லை யானல் சொஸ்தமானவுடனே போகிறேன் என்று சொன்னன். உனக்குச் சரீரம் சுவஸ்தமில்லாவிட்டால் அதுக்கேற்ற பேரை யனுப்புகிறதுதானே என்று கேட்டால் நான் போகாதபடிக்குக் கூடாதென்று சொன்னன். இன்னமும் நான் விட்டவனல்ல எப்படியும் செயப் பட்டம் வாங்குவேனென்று சொன்னர். அப்படி செய்யாதே போனல் உம்முடைய கீர்த்தி டில்லி பரி யந்திரம் ஓங்கியிருக்கிறதற்குத் தப்புவரும் என்று சொன் னேன். அது நியாயமானது, நீ சொல்லுகிற பேச்சு என்று சொல்லி என் மனதிற்கு மனிதனுடைய தைரியமும் மூசே லபோர்தோனே அதற்கு விரோதமாய் சின்னதனம் பண்ணு கிறதும் நீ வந்தவருக்குச் சாடையாய்ப் பார்த்தாலும் துலுக் கரண்டையிலே தமிழரிடத்திலே பிரஸ்தாபம் பண்ணவேணு மென்று சொன்னர். இப்போதானே எல்லோரும் பேசிக்கொள் ளுகிறர்கள். இன்னம் அவரவருடனே பிரஸ்தாபம் பண்ணிப் போகிறேன் என்று சொன்னதின்பேரிலே எனக்கு ரெம்பயித் தினுலே யெல்லாம் நஷ்டம் வந்திருக்கிறது. இதற்கு எப்படி ஆதாயம் வரச்செய்ய வேணுமோ உனக்குத் தெரியு

மென்று சொல்லி இரண்டு வருஷமே பிடித்துக் கடலின்
பேரிலே நஷ்டம் வியாபாரமாயில்லை செலவானுலோடிக்
கொண்டிருக்கிறது. ஒரு நாளுக் கொருநாள் விஸ்தாரமான
செலவு வந்துவிடுகிறது. இதுவெல்லாம் எப்படி நிருவாகம்
செய்யவேணுமோ அந்தக் காரியத்தின் பேரிலே மனதை வைத்
திரு என்று சொன்னர் நான் உங்கள் அடிமை. நான் நடத்தும்
காரியம் காரியத்திலோ உங்கள் சித்தத்திற்குத் தெரியவரு
மென்று சொன்னேன். இப்படியிருக்கச்சே மயிலாப்பூரி
லிருந்து சின்னையமுதலிபேருக்கு வந்த ஓலை வயணம் முன்னலே
எழுதியிருக்கிறதே அதை திரான்சிலிட்டுபண்ணி மூச்சே மந்தேசு
கொண்டுவந்து கொடுத்தார். அதைப் படித்து எனக்குக் காண்
பிக்க நீ சொன்னபடிக்குச் சென்னப்பட்டணத்திலேயும் மயி
லாப்பூரிலேயும் இருக்கப்பட்ட பெரிய மனுஷர், துலுக்கர்,
தமிழர், வெள்ளைக்காரர் எல்லாரும் எகத்தாளம் செய்கிருர்
களாம் பார்த்தாயா. இந்தக் கப்பல் போன மட்டுக்கும் சென்
னப்பட்டணத்துத் துறையிலேயிருந்த ஒரு கப்பலையாகிலும்
பிடித்துவந்தானு போகாமலிருந்தாலும் மகா பரமாயிருக்
கும். அதையும் கெடுத்து எகத்தாளி செய்யத்தக்கதாகச்
செய்தான். இந்த மூசே லபோர்தோனே மினிஸ்தர்கள் என்
னுடைய ஆலோசனையையும் கூடக் கேட்டு என் ஆலோசனைப்
படிக்கு நடந்துகொள்ளச் சொல்லி உத்தாரங் கொடுத்தனுப்பி
யாமல்போனதே இந்த நாய் லபோர்தோனே என்கிறவன் இப்
படியெல்லாம் தலை இறக்குக்கு ஆனகாரியமும் எகத்தாளிக்
கிடமும் பண்ணுவித்தான். சென்னப்பட்டணம் அரை
நாழிகையிலே பிடித்துக்கொள்ளலாம். அதுவும் செய்யாமல்
கப்பல் ஒரு கப்பல், அதையும் பிடியாமல் சிறுபிள்ளை விளை
யாட்டு விளையாடி யெல்லாரும் எகத்தாளி பண்ணத்தக்கதா
கக் கொண்டுவந்தானென்று சொன்னர். நான் முன்னேதான்
சொன்னேனே மெத்த எகத்தாளிக்கிடமாயிருக்கிறது எப்
படியும் சென்னப்பட்டணம் வாங்காவிட்டால் இந்தப்
புதுச்சேரிப் பட்டணத்திலே யிருக்கத் தேவையில்லை. பிரான்
சாகப்போகிறது நல்லதென்று சொன்னேன். மெய்தான்
நம்முடைய பேர் இந்த ராச்சியத்திலே யிருக்கிறது என்னத்
துக்கு. சென்னப்பட்டணம் வாங்காவிட்டால் அப்படிச் செய்
கிறது நல்லது என்று சொன்னர். சொல்லி மூசே லபோர்தோனைக்
குப் பேர் எப்படி போனலும் போகட்டும் காசு வந்தால்
போதும் என்று நடத்துகிருன். சென்னப்பட்டணத்துச்
சிட்டியும், கிண்டனும். விதுருகளும் லெந்துசும் கூண்டு கூண்
டாய் அழைப்பிக்கிருன். அதெல்லாம் கண்டு பண்ணிப்
போட்டேன் என்று இதுவே பிரஸ்தாபமாய் நாலு நாழிகை
தேசசாலம் பேசினர். நானும் வர மனேபாவத்துக்கு அடுத்
தாப்போலே எந்த யோசனை எப்படி அவரை ஸ்தவுத்திய
மாய்ச் சொல்லவேணுமோ அப்படியெல்லாம் சொன்னேன்.

இதிலே மூசே தேப்பிரேமேனி வந்தார். அவனுக்குத் திரான் சிலிட்டுப் பண்ணின காகிதத்தைக் காண்பித்து அவன் படித்தான். பிற்பாடு சொபுதார் கையிலே கொடுத்து மூசே லபோர் தோனேயண்டைக்கு அனுப்புவித்துப் பின்னையும் அரை நாழிகைக்குப் பரிதி வந்தான். அவனும், தாமும், தெப்ரேமேனியும் மூசே லபோர்தோனே வீட்டுக்குப் போனார்கள்... ... ...

இதல்லாமல் சென்னப்பட்டணத்திலே யிருந்த துலுக்கர் பெரிய மனுஷர்கள் சொன்னது: இந்தக் கப்பல்கல் எட்டும் கண்டவுடன் குவர்னதோராயிருக்கிற மேஸ்தர் மாசு தன் பெண்சாதியையும் திரவியமமும் பழவேற்காட்டிற்கு அனுப்பினபடியினாலே ஊரிலேயிருந்தவர்கள் எல்லாரும் தட்டு கெட்டுப் பருச்சியிருந்தவர்கள் எல்லாரும் வாங்கிப் போய்விட்டபடியினாலேயும் இருந்த வெள்ளைக்காரருக்குங் கைகாலாட்டாதே போச்சுது. அந்தச் சமயத்திலே கப்பலிலேயிருந்தவர்கள் ஐந்நூறு பேர் இறங்கினால் கோட்டை கைவசமாய்ப் போம். பிரான்சுக்காரர் அந்த யோசனை பண்ணாமல் கெடுத்துப் போட்டார்கள். இப்போது அவர்கள் தைரியம் அழைப்பித்துக் கொண்டு சற்று மேலக் கவையாயிருக்கிறார்கள். எப்போது போராடி வாங்கவேணுமென்று துலுக்கர் அசத்துசாயபு அமிதர் சாயபு முதலானபேர் சொன்னார்கள் இதை நான் துரையுடனே சொல்லாமல் கோட்டை இரண்டு நாளையிலே பிடிபட்டுப் போகுமென்கிறதாய்ச் சொன்னார்களென்று சொன்னேன். அதன் பேரிலே இப்போது இங்கிலீசுக் கப்பலொன்றும் சுலுப்பு ஒன்றும் பிடித்துக்கொண்டு வந்தார்களென்றும் அதிலே லக்ஷம் வராகனுக்கு அகப்பட்டது என்றும் துலுக்கர் அசத்து சாயபு முதலானபேர் சொன்னதாய்ச் சொன்னேன். அதற்கு அவர் சொன்னது: வெள்ளி, பொன் இது ஐம்பதினாயிரம் பத்தாக்கும் இரண்டு ஆனைக்குட்டியும், மூன்று குதிரையும் மற்றப்படி அதிலே சரக்குகள் ஒன்றுமில்லையென்று சொன்னார். இது எவ்வளவு என்று கேட்டேன். இது ஒருபொருட்டாய் இந்தச் செலவு முன்னே என்று சொன்னதற்கு இப்போது பிடித்த கப்பல் உடைமைகள் எல்லாத்திலேயும் இரண்டு பங்கு தம்பினீருக்கும் ஒரு பங்கு சண்டை செய்கிற கப்பல்காரருக்கும் என்று சொன்னார். இந்த ஒரு பங்கும் கிளாசுகள் கூட விதமாய் எடுத்துக்கொள்ளவேணுமென்று சொன்னார்... ... ... ...

1746 ஆ செப்தெம்பர் மீ 5உ மது அக்ஷய ஹு ஆவணி மீ 24உ சோமவாரம்

நபாபு அண்டையிலேயிருந்து துரைக்குக் காகிதம் வந்தது. அந்தக் காகிதத்திலேயெழுதியிருந்த வயணம் என்னவென்றால், நீங்கள் சண்டைக்கப்பல்களைச் சென்னப்பட்டணத்திற்கு

அனுப்பிச் சண்டை கொடுத்ததினாலே அந்த பார்சாபந்தரிலே யிருக்கப்பட்டகுடிகள், வர்த்தகர், நவாபீத்தர் முதலான துலுக்கர் சமஸ்தமான பேரும் காபுருபட்டார்கள். வெளியே வல்சை வாங்கினார்கள். முன்னாலே அவர்கள் புதுச்சேரியின் பேரிலே சண்டைக்கு வரவேணுமென்று இருக்கச்சே நாம் எழுதியனுப்பினோம். நிறுத்தி அப்படியிருக்க நீங்கள் இப்போது சென்னபட்டணத்தின்பேரிலே சண்டை செய்கிறது மெத்த ஆச்சரியமாயிருக்கிறது. ஆகிலும் இனிமேலப்படி வராமல்படிக்கு நடப்பித்துக்கொண்டால் நல்லது. இல்லாவிட்டால் எனக்கு மெத்த கோபம் வருத்திவிப்பீர்களென்று எழுதின காகிதத்துக்குச் சேதியெல்லாம்மதனாந்தபண்டிதனும், தானப்ப முதலியும் படித்துச் சொன்னமாத்திரத்திலே அதற்குத் துரையவர்கள் மறு உத்தரம் எழுதச்சொன்னது: பார்சாபந்தரிலே யிருக்கப்பட்ட சனங்களுக்கு ஒரு பொல்லாப்பும் வரத்தக்கதில்லை. எங்கள் கப்பல் சண்டைக்கப்பல்காரருக்கு ராசாவினுடைய உத்தாரம் எப்படியோ அப்படி நடப்பார்கள். இப்போது நூற்றிஐம்பத்தாறு ஆரஞ்சிபழம் அனுப்புவித்தோம். தயவுசெய்யவேணுமென்று எழுதியனுப்பச்சொன்னார். அந்தப்படிக்கு ஆரஞ்சிபழமும் சவாபும் அனுப்பினார்கள்.

இற்றைநாள் துரையவர்கள் என்னை அழைப்பித்து மீர் துலாமுசேன்கான் அவர்கள் கும்பினிருக்கு வட்டிக்கு லட்சம் ரூபாய் கொடுத்திருக்கிறார்களென்றும் அந்த வட்டி கணக்குத் தீர்ப்பு முசே மேர் எழுதிவந்து கொடுத்தான். இந்தப்படிக்கு நீ போய் மீர்குலாமுசேன்கான் தகப்பன் சாப்றசாயபுக்குச் சொல்லித் தெற்கே திருநெல்வேலியிலிருந்து அவர் குமாரன் அனுப்பின காகிதம் பார்சி எழுதுகிற பிருமணி கையிலே இருக்கிறது. அந்தப் பிருமணியையும்கூட அழைத்துக்கொண்டுபோய் அந்தக் காகிதத்தையும் படித்துப் பார்க்கச்சொல்லி இந்தக் கணக்கு வயணமும் சொல்லி வட்டிக்காக பற்றினதுபோக மற்றது வட்டி கொடுத்துவிடுகிறோம் என்று சொல்லச் சொன்னார். அந்தப்படிக்கு நாமும், மதனாந்தபண்டிதரும் சாப்றசாயபு அண்டைக்குப் போய்க் கணக்கும் படித்துக்காண்பித்து அவர் குமாரன் எழுதின பார்சி காகிதத்தை கையிலே கொடுத்தமாத்திரத்திலே படித்துப் பார்த்துக்கொண்டு துரையவர்கள் தயவினாலே இங்கேயிருக்கிறோம். அவர்கள் வீடென்று மீந்த வீடென்றும் பேதகமிருக்கிறதோ என்று அவரும் உபசாரமாய் சொன்னார். நானும் துரை சொல்லச் சொன்னதாய் அனேக உபசாரமெல்லாம் சொன்னேன். அதின்பேரிலே முதலிருக்கட்டும், வட்டியுடனே சேர்ந்ததற்கு முன் கொடுத்ததுபோக மற்றதைக் கொடுத்தால் வட்டிக்கு வந்ததென்று ரசீது கொடுக்கிறோம் என்று சொல்லி, காயல் தூத்துக்குடி பேச்சு எழுதி

யிருக்கிறதே அந்தப்படிக்கு நடப்பிக்கவேணுமென்று துரைக்குச் சொல்லச் சொல்லி உபசாரம் சொன்னார். நானும் மதனந்த பண்டிதனும் சலாம் செய்துகொண்டு அவர்கள மனிதன் சதாசிவ அய்யனை நாளைக் காத்தாலே கணக்குக் கொடுத்து அனுப்புகிறோம் என்று சொன்னார். நல்லது என்று வீட்டுக்கு வந்துவிட்டோம்.

1746 ஆ செப்தம்பர் மூ 6 உக்ஷ அக்ஷய ஸு ஆவணி மீ 25 உ மங்களவாரம்

கனகராய முதலி தம்பி சின்னமுதலி என்னுடனே சொன்னது: கனகராய முதலி பெண்சாதி இன்னமொரு துரைத் தனத்திலேயாகிலும் பணம் வாங்குகிறேன் என்று சொல்லுகிறாள் அதினாலே துரையுடனே எச்சரித்துக்கொண்டு கோன்சேல் காகிதம் வாங்கினால் பலமென்று சொன்னார். அதற்குச் சாதியார் எல்லாரும் கூடித் தீர்த்து ஊர்கணக்கன் கையெழுத்துப்பட எழுதியிருக்கச்சே அதிலே பதினெட்டுச் சாதியாரும் துரையும் கையெழுத்துப் போட்டிருக்கச்சே சங்கை யென்னவென்று சொன்னதற்கு அப்படியல்ல. துரையுடனே கோன்சேல் கையெழுத்து வாங்கினால் பயமில்லையென்றால் செலவாகிலும் உண்டாயிருக்குமென்று சொன்னார். நல்லது அப்படியே சொல்லுவோமென்று சொன்னேன்.

1746 ஆ செப்தம்பர் மீ 7 உக்ஷ அக்ஷயஸு ஆவணி மூ 26 உ புதவாரம்

மீர்குலாமுசேன் கணக்கு என்னமாச்சுதென்று கேட்டார். அதற்கு நான் சொன்னது: முசே மேர் எழுதிக்கொடுத்த வட்டி தீர்ப்பிலே தொகை வகை எல்லாம் சரி, அரை மாதம் எழுதவில்லையென்று சொன்னேன். தம்முடைய கையெழுத்தாய் அரை மாதம் எழுதிப்போட்டார். அப்பால் நான் சொன்னது: ஒரு தொகை நாலாயிரம் ரூபாய் தறுவாடி முதலிட்ட எழுதியிருக்கிறதென்று சொன்னதற்குத் துரை சொன்னது: இப்போது எழுதிக்கொடுத்தபடிக்குக் கும்பினீர் கணக்கு சரிதான். மீர்குலாம் உசேனவர்கள் கணக்கிலே கோட்டையார் நாலாயிரம் ரூபாய் தறுவாடி முகாந்திரத்திலே செலுத்தினதாக எழுதியிருக்கிறது. தறுவாடியைக் கொடுக்கச் சொன்னது மெய்தான். பணம் ஒழுகிப் போகவில்லையே ஏகத்திற்கு கும்பினீரிலே வாங்கிக்கொண்டு நாலாயிரம் ரூபாயை தறுவாடிக்கு கொடுத்துவிடுகிறதுதானல்லவோ உள்ளது என்று சொன்னார். எல்லாவற்றிற்கும் தறுவாடியை யழைத்துக்கண்டு பேசிசொல்லுகிறேனென்று சொன்னேன். நல்லது பேசிச் சொல்லு என்று சொன்னார். ... ... ... ... ... ... ... ... ...

இதல்லாமல் இற்றைநாள் காலையிலே தானப்பமுதலி தனி ரயவர்களண்டைக்குப் போய் தன் தமையன் கனகராய முதலி பெண்சாதி நக்ஷத்ரம் இன்னமொரு துரைத்தனத்திலே தன் வியாச்சியம்பேசவேண்டுமென்றும்இப்போதுதானே அதற்குப் பெத்திசியோ மெழுதிவைக்கிற வயணமும் அவர்களுடனே தன்னை அநியாயம் செய்துகுவர்னதோர் மூசே நப்ளேய்ச்சுக்குப் பத்துப் பணத்தைக் கொடுத்துச் சரிபோனப்போலே தீர்த்துக் கொண்டாப்போலே விட்டுவிடுகிறானென்று சொல்லிக் கொண்டு திரிகிறான். அதனாலே இனிமேல் ஒருவேளை வியாச்சியப்படாமல் போனாலும் பணமாகிலும் செலவாகிலும் செய்ய வேண்டியிருக்கும். இந்த துரை நாளையிலேதானே கோன்சேல் காகிதம் ஒன்று வாங்கினால் தொந்தரவில்லை. ஆனபடியினாலே துரையுடனே சொல்லவேணுமென்றும் காலையில் வரவேணு மென்றும் நேற்றைதினம்சொல்லியிருந்தபடிக்குஎன்னை சீக்கிரமத்துக்குவரச்செல்லி அருணாசலமென்கிற சேவகனை அனுப்புவித்தான். அப்பால் துரைவீட்டுக்கு நான் போனவுடனே தானப்பமுதலியும் அங்கேயிருந்து இரண்டுபேரும் துரை ஒன்டியாய்இருக்கச்சே போய் சலாம்செய்தவுடனே என்னவென்று கேட்டார். மேலே எழுதினபடிக்கு வயணமாய்ச் சொன்னேன். அதற்கு அவரிருந்துகொண்டு கோன்சேலிலே தீர்ந்த சம்மதியல்லவே என்று கேட்டார். அதற்குமுன் லப்பிறவித்தியேர் துரைத்தனத்திலேபதினெட்டுச்சாதியாரும் தீர்த்ததை கோன்சேலிலே யோசனை செய்துகொண்டு கோன்சேல் அறே கொடுத்திருக்கிறார்களென்று எனக்கும் வீரா முதலிக்கும் இருந்த வியாச்சியத்தை மத்தியஸ்தர் தீர்த்ததை அப்பால் கோன்சேலிலே போட்டு கோன்சேல் அறே கொடுத்தார்கள். மூசே லெனுவார் துரைத்தனததிலேயென்று சொன்னதின்பேரில் நல்லது நான் கோன்சேலுக்கு ஒரு பெத்திசியோமும் சாதியார் தீர்த்த தீர்ப்பு திருன்சிலிட்டு செய்துவரச்சொல்லி உத்தாரங் கொடுத்தார். அந்தமட்டுக்கும் தானப்ப முதலியும் நானும் இப்போது வந்தோம். மறுபடியும் என்னையழைத்து கனகராய முதலி பெண்சாதி சொல்லுகிறது மெய்தானாவென்று கேட்டார். இவரானால் சொல்லுகிறார். சொல்லாதபடிக்கு இவர் சொல்லுவாரா. நான் அறியேனென்று சொன்னேன். அப்பால் மூசே லப்பார்தோனே உன் கையிலிருக்கிற குதிரையைக் கேட்டானும். விலை குறைத்து கொடாதேயென்று சொன்னார். அது நாட்டுக்குதிரை நானூற்றி ஐம்பது ரூபாய்க்கு எவரும் வாங்க மாட்டார்கள். அதை அறுநூறு ரூபாய்க்கொடுத்தேன் என்று சொன்னேன். மூச்ச லப்பார்தோனேக்கு நீ சரக்குக் கூட்டிக் கொடுக்க வேண்டாமென்று சொன்னார். முன்னே அவன் சரக்குக் கூட்டிக் கொடுக்கச் சொல்லுகிறானென்று சொன்னதற்கு வாங்கிக்கொடுக்கச்சொல்லிச் சொன்னபடியினாலே நான் பணம் வாங்கினேன். இப்போது அதை மறுபடி கொடுத்து

விடுகிறேன் என்று சொன்னதற்கும் வாங்கினதற்கு மாத்திரம் கூட்டிக்கொடு. இனிமேல் வாங்கவேண்டாமென்று சொன்னார். நல்லது என்று சொல்லி இப்போது வந்தேன். ... ... ... கோட்டையிலே தெமிபென் இருபது கட்டு முழுச் சிகப்பு இருந்தது. அதை இற்றைநாள் இருநூறு சிகப்பு எடுத்து வந்தோம். இந்த மட்டுக்கும் இங்கிலீசு சட்டமும் தெமிபென் இருந்ததெல்லாம் மதுரைக்கணக்கிலே எழுதிக்கொண்டு சாடா வாய் நம்முடைய வசத்திலே முசே கோர்னே கொடுத்துவிட்டார். இன்னும் ஆறு கட்டு மாத்திரம் இங்கிலீசு சட்டம் சகலாத்து நனைவுகளும் கிழிச்சலுமாக இருக்கிறதேயல்லாமல் மற்றப்படி வேறேயில்லை. இற்றைநாள் ராத்திரி முத்துசெட்டி தோட்டத்திலே விருந்து சாப்பிடப்போனோம். ... ... ...

1746 ஆ செப்தம்பர் மீ 8 உ க்ஷய அக்ஷய ஸு ஆவணி மீ 27 உ வியாழக்கிழமை

இற்றைநாள் துரை வீட்டிலே வேறே அதிசய சமாசாரமில்லை. முசே லவீல்பாத முன் ஆகஸ்டு மீ 25 உ கூட்டச் சொல்லி எழுதிக் கொடுத்த லீஸ்டு பதினாயிரம் ரூபாய் ரசீதும் வாங்கிக்கொண்டு மறுபடியும் பதினாயிரம் ரூபாய் கொடுத்து இருபதினாயிரத்துக்கும் ஏகந்தரம் ஒரு ரசீதும் வாங்கிக் கொண்டு லீஸ்டு முன்னே எழுதிக்கொடுத்தது வேண்டாமென்று வேறே எழுதிக்கொடுத்தான் ... ... ... ...

இற்றைநாள் அரியாங்குப்பத்திலே பறங்கித் திருநாள்முடிவானபடியினாலே வில்லியநல்லூர் வாசல்படியாலே வேடிக்கைப் பார்த்துக்கொண்டு வீட்டுக்குப் போனோம். ... ...

1746 ஆ செப்தம்பர் மீ 9 உ க்ஷய அக்ஷய ஸு ஆவணி மீ 28 உ வெள்ளிக்கிழமை

ராசஸ்ரீ துரையவர்கள் குவர்னதோர் துய்ப்ளேய்க்சு அழைத்தனுப்புவித்துப் பதினைந்து குதிரை சென்னப்பட்டணத்தின் பேரிலே சண்டைசெய்யப் போகிறதற்கு முஸ்தீது செய்யச் சொல்லி உத்தாரங்கொடுத்தார். அதின் பிற்பாடு முசே தோத்தேல் இருபதுதரம் வந்து குதிரை முஸ்திது செய்யச் சொல்லிப் போனான். முசே கோர்னே உத்தாரமென்று குதிரைக்குக் கொள்ளு வேவிக்கிறதற்கு ஆறேழு தவலை அழைப்பிக்கச் சொல்லச் சொன்னான்.

இற்றைநாள் சாயுங்காலம் பெரிய துரை நம்முடைய பெண் சாதி அரியாங்குப்பத்திலே இருக்கிறவளிடத்திற்குப் போக வேணுமென்று வண்டியின் பேரிலே ஏறிக்கொண்டு அரியாங்

குப்பத்துக்குப் போனர். அவ்விடத்துக்கு காரைக்கால் காகிதம் வந்து படித்துக்கொண்டாராம். படித்துக்கொண்ட உடனே ராத்திரி சாப்பிட்டுவரவேணு மென்றிருந்தவர் காகிதம் படித்த உத்திரக்ஷணமே வண்டியேறிக்கொண்டு புதுச்சேரிக்கு வந்துவிட்டார். வரச்சே பெண்சாதியை நாளைக்கு ஊருக்குத் வந்துவிடச் சொல்லிவிட்டு வந்துவிட்டார். வீட்டில் வந்தவுடனே சாப்பாட்டுக்கு இவ்விடத்திலே முஸ்திது இல்லாமல் வரவர வீட்டிலே அழைப்பித்துச் சாப்பிட்டார்.

இற்றைநாள் நபாபு துரைக்கு எழுதியனுப்பின காகிதத்திலே எழுதியிருந்தவயணம் உங்களைச் சென்னப்பட்டணத்தில் சண்டைக்குப் போகவேண்டாமென்று சொல்லியிருகக நீங்கள் சண்டைக்குப் போனபடியினலே உங்களுக்கு புதுச்சேரி பட்டணத்தை நாங்கள் விடப்போகிறதில்லை. உங்கள் புதுச்சேரி பட்டணத்தின் பேரிலே நாங்கள் சண்டைக்கு வருகிறோம். நீங்கள் அத்து தப்பி நடக்கிறீர்கள். இது நல்லதல்லவென்று கண்டிப்பாய் காகிதமெழுதினதற்குப் பதில் காகிதம் சீர்மைக் கப்பித்தான்மார் விவாத்தி ஒடதிப்படிக்கு நடத்துகிறவர்கள் ஒருத்தரை சட்டைபண்ணிக் கேளார்களென்றும் மறுதரம் எழுதியனுப்பிவிட்டார்கள்.

1746 ஆ செப்தம்பர் மீ 29 உக்கு அக்ஷய ஸு ஆவணி மீ 10 உ சனிக்கிழமை.

இற்றைநாள் சென்னப்பட்டணத்தின்பேரிலே சண்டைக்குப் போகிறதற்கு ஊரிலே அவரவர் வசத்திலே யிருந்த குதிரையெல்லாம் வாங்கிவரச்சொல்லிச் சொன்ன உத்தாரம் படிக்கு ஊரிலே தமிழர் வசத்திலே யிருக்கிற குதிரை பதிமூன்றும் வெள்ளைக்காரர் வசத்திலே யிருந்த குதிரை மூன்றும் ஆகப் பதினறு குதிரையும் மூசே தோந்தேல் வசத்திலே ஒப்புவித்தோம் ... ... ... ... ... ... ...

இற்றைநாள் நபாபு அன்வருத்திகான் பேருக்கு ஒரு காகிதம் நிசாமன்முலுக்கு அவர்களுக்கு எழுதின காகிதத்திற்கு நகல் காகிதமொன்று அனுப்பினர்கள். சென்னப்பட்டணம் இங்கிலீசுக்காரர்கள் தங்கள் கப்பலை நாளதுவரைக்கும் நியாயமில்லாமல் பிடித்ததும் மணிலாவுக்கு மகம்மது சாபார் பேரிட்ட கப்பலும் கொடியும் உடைமையும் அவர்கள் பேருக்கு அனுப்பினதை மரியாதையைப் பாராமல் அந்தக் கப்பலைப் பிடித்துக்கொண்டபடியினலே பிரான்சாவிற்கும், மகம்மது பார்சாவுக்கும் அத்தியந்த சிநேகிதமானபடியினலே நம்முடனே இதன் பேரிட்ட கப்பலும் அவர் கிசான்பரந்த கப்பலையும் பிடித்துக்கொண்டார்களென்கிற சேதி கேட்டு

இங்கிலீசுக்காரர் பேரிலே அத்தியந்தம் கோபம்பண்ணிச் சென்னப்பட்டணம் இங்கிலீசுக்காரருக்குத்தான் ஆன படியினாலே அந்தப் பட்டணத்தைப் பிடித்துக்கொண்டு இங்கிலீசுக்காரர் கொடியை வாங்கிப்போட்டுப் பிராஞ்சுக் கொடியைப் போடச்சொல்லி உத்தாரங் கொடுத்துச் சிறிது சண்டைக் கப்பல்காரரை அனுப்பிச் சென்னபட்டணத்தை வாங்கி வெள்ளைக்கொடி போடச்சொல்லி அனுப்புவித்தார்கள். அந்தப்படிக்கு நடத்துகிறோம் இதற்கு நீங்கள் எப்படி மத்தத்து பண்ண வேணுமோ அந்தப்படிக்கு மத்தத்து பண்ணவேணுமென்று இப்படி நாலு காகித மட்டுக்கும் விஸ்தாரமாயெழுதி ஒரு பிரதி நிசாமன் மலுக்கு அவர்களுக்கும் இமாம்சாயபு அவர்களுக்கும் ஒரு பிரதியும் அன்வர்திகானுக்கு ஒரு பிரதியும் வக்கீல் சுப்பய்யருக்கு ஒரு பிரதி சகலமான துலுக்கருக்கும் படித்துப் பார்க்கச்சொல்லி காண்பிக்கச் சொல்லியும் தெலுங்கிலே ஒரு பிரதியும் தமிழர் தெலுங்கரிலேயிருக்கிற பெரிய மனுஷருக்குப் படித்துக் காண்பிக்கச் சொல்லியும் இந்தப்படியாகக் காகிதங்கள் எழுதிவைத்து நிசாள்முலுக்கு அவர்களுக்கும் இமாம்சாயபுக்கும் அதுமற்ற சிலபந்தருக்கும் அனுப்பி அவ்விடத்திலிருந்து அனுப்பத்தக்கதாக அனுப்புவித்தார்கள். அத்துடனே நவாப் அன்வருதிகான் அண்டைக்கு இரண்டு சேவகர் கையிலே கொடுத்து ஆற்காட்டுக்கு அனுப்புவித்தார்கள். அத்துடனே வக்கீல் சுப்பய்யனுக்கும் காகிதம் கூடப்போய் கொடுத்து நடக்கிற சேதி எழுதியனுப்பச்சொல்லி அனுப்பினார்கள். மயிலாப்பூர் அமுல்தாரன் பூந்தமல்லி அமுல்காரனுக்கும் இந்தச் சாடைதான் எழுதித் தங்கள் பிரான்சுக்காரர் வருகிறவர்களுக்கு வேண்டிய சாமான்கள் அமைத்துக் கொடுக்கச் சொல்லியும் அமைத்துக் கொடாவிட்டால் வந்தவர்கள் உங்களையும் ஆக்கினைபண்ணி உங்கள் பட்டணமும் கொள்ளையிடுவார்கள். சாமான்கள் மனுஷர் மக்கள் அமைத்துக்கொடுத்தால் அதற்கு உள்ள கிரயம் வந்தவர்கள் கொடுத்துவிடுவார்கள் என்று இப்படியாக காகிதமெழுதி மூசே தேப்ரேமேனி கையிலே கொடுத்தனுப்புவித்தார். இற்றைநாள் ராத்திரி மாயே சிப்பாய்களையும். சொல்தாதுகளையும் சென்னப்பட்டணத்தின்பேரிலே சண்டைக்குப் போகத்தக்கதாகக் கப்பலின்பேரிலே ஏற்றினார்கள், ஊரிலே யிருக்கிற கும்பினீர் சேவகரையெல்லாம் வரச் சொல்லி அவரண்டையிலே தயினாத்தி வைக்கச்சொல்லித் துரை யெழுத்தாய் எழுதிக்கொடுத்தது சின்னதுரை யண்டையிலேயிருக்கிற சேவக முத்துகிருஷ்ண நாயக்கன் ஆனந்தரங்கப் பிள்ளையவர்கள் அண்டையிலே சேவகன் 1, லக்ஷ்மணநாயக்கன் கணக்கர் அண்டையிலே சேவகர் 4, இது தவிர மற்ற நோன் சேல்காரர் அண்டையிலே யிருக்கிற சேவகர் கூட வந்துவிடச்

சொல்லி உத்தாரங்கொடுத்து எல்லாரையும் அழைப்பித்து அதிலே நூறு சேவகரும் சேர்வைக்காரர் பெரியவனையும், அனந்தப்பய்யனையும் கப்பலினபேரிலே ஏற்றி மற்றப்பேரை கொத்தளத்தின்பேரிலே தன்னையும் ஏற்றினார்கள்.

1946 ஆ செப்தம்பர் மீ 11உக்கு அக்ஷய ஸ்ரீ ஆவணி மீ 30உ ஆதிவாரம்

காலையிலே ஒன்பது மணிக்கு சென்னப்பட்டணத்தின் பேரிலே சண்டை பண்ணுகிறதற்குப் பயணம் புறப்படுகிற மூசே லபோர்தோனே துரை வீட்டிற்கு வந்து பயணம் அனுப்பு வித்துக்கொள்ள வந்தமாத்திரத்திலே துரையும் மூசே லபோர் தோனேயும் இரண்டு நாழிகைகூடப் பேசியிருந்து மூசே லபோர் தோனேயைப் பயணம் அனுப்பத்தக்கதாக கடற்கரை மட்டுக் கும்கூட வந்து துவானண்டையிலே அனுப்புவித்துக்கொண்ட மாத்திரத்திலே இருபத்தொரு பீரங்கி சுட்டார்கள். அப்பால் சலங்கின்பேரிலே ஏறினப்போலே இருபத்தொரு பீரங்கி சுட் டார்கள். அவர் ஏறிப்போகிற சலங்கிற்கு இரட்டைக்கொடி போட்டு, கப்பலின் பேரிலே போய் ஏறினான். மூசே தெப்ரே மேனி கோட்டையைப் பிடித்துக் கொடிபோட்டவுடனே குவர்னதோராக இருக்கத்தக்கதாகவும் மூசே பரீதி அதற்கு இரண்டாவதாகவும் இந்தப்படி இங்கேயிருந்து போகிற வெள்ளைக்கார சொல்தாதுகள், சட்டைக்காரர் மாயே சிப் பாய்கள், கர்னாட்ட சேவகர் எல்லாரும் இவர் எசமானாகவும் பண்ணியனுப்பி இவர்களும் மூசே தோத்தேல் கப்பித்தான் குவாது, கொசினு குவாதுகள்கூட கப்பலின் பேரிலே ஏறினார் கள். கும்பினீர் குதிரை கூட முப்பத்தாறு குதிரைகள் ஏறிற்று. அப்பால், இரண்டு வருஷமே சென்னப்பட்டணம் சண்டைக் குச் சம்பாதித்த சண்டை சாமான்கள் கோட்டை லக்கைப் பிடிக்க சம்பாதித்த சாமான்கள் ஒன்றும் வையாமல் சமஸ்த மும் ஏற்றித் தீர்த்தார்கள். ஒரு வஸ்துவும் அவ்விடத்திலே தேடவேணுமென்று நினையாமல் சமஸ்தமும் ஏற்றித் தீர்த் தார்கள். துடைப்பக்கட்டை ஏற்றினார்கள் என்றால் அதிலே சமஸ்தமும் பார்த்துக்கொள்ள வேண்டியதுதான். இந்தப்படிக் குச் சகல சாமான்களும் ஏற்றியனுப்பிப்போட்டு மூசே துப் ளேய்க்சு குவர்னதோர் வீட்டுக்கு வந்தார். சென்னப்பட்டணத் துக்கு துபாசித் தனத்துக்கும் இவர்கள் சண்டைக்குப் போகிற விடத்திலே இவர்களுக்கு நபாபு அன்வருத்திகான் மனு ஷர் வந்தாலும் பின்னையும் சென்னப்பட்டணம் சமீபத் திலே யிருக்கிற கஸாக்களிலே யிருக்கிற துலுக்கர் மனுஷர் வந்தாலும் பெரிய மனுஷர் துலுக்கர் வந்தா லும் நபாபு மனுஷர் சிறிது குதிரைக்காரரும் நபாபு வைப்பாட்டி மகன் மகம்மது கமாலென்கிறவனும் சென்

னப்பட்டணத்தார் முன் திருப்பாசூர் அமுல் பண்ணின வல்லி மகம்மது மகன் அமுல் நிறுத்திப்போட்டுச் சென்னப்பட்டணம் வந்து வியாபாரம் பண்ணிக்கொண்டிருந்தவன் முகாந்திரமாய் முந்நூறு குதிரை எழுதிவித்து நபாபு குதிரை எண்பித்து மகமதுகமால் பிறகே வந்த நாற்பது குதிரை யுடனே கூட வந்திருந்தவர்கள் ஏதாகிலும் பேசவந்தால் பேசவும், மயிலாப்பூர் அமுல்தாரன், பூந்தமல்லி அமுல்தாரன், பின்னையும் அவ்விடத்திலேயிருக்கிற அமுல்தாரன் யார் வந்தாலும் பேசுகிறதற்கும் உன் தம்பி திருவேங்கடத்தை யனுப்புவிக்கவேணுமென்று சொன்னார். அதற்கு அவன் அறியாதவன். இப்படிப்பட்டவைகளை யறிய அறிந்தவனல்ல. சண்டை வேளையானபடியினாலே பயப்படுவான். ஆனபடியினாலே நான் போகிறேன் என்னை அனுப்புங்கோளென்று சொன்னதற்கு. அவன் மகா புத்திசாலி, உன்னைப் பார்க்கிலும் புத்தியுள்ளவன், சமர்த்தன் அவனை யனுப்பவேணுமே யல்லாமல் உன்னை யனுப்பப்போகாது. நான் போகும்போது நீ கூட வரவேணும். இப்போது நீ என்னிடத்திலே இருக்க வேண்டுமென்று சொன்னார். அப்பால் தட்டிச் சொன்னால் அவர் கோபம் பண்ணுவார்போலே தோற்றிற்று. ஆனபடியினாலே நல்லதென்று சம்மதித்துக்கொண்டுவிட்டோம், ஆனால் அவன் பிறகே போகிறதற்கு யாரை கும்பினீர் உத்தியோகஸ்தரிலே அனுப்பவேண்டு மென்று கேட்டேன். உனக்கு யார் சம்மதியோ அவர்களை யெல்லாம் அனுப்பு என்று உத்தாரங் கொடுத்தார். அதின்பேரிலே அவசரம் கிருஷ்ணய்யனையும், சின்னதம்புசெட்டி ரங்கப்பசெட்டியையும் கூடப் போகத்தக்கதாகத் திருவேங்கடத்துக்கும் சொல்லியனுப்பி முஸ்தீதாய்க் கரைவழியே போகிறதற்குத் தயாராயிருக்கச் சொல்லச் சொன்னேன்.

இற்றைநாள் காலையிலே துவக்கி நாலு கெவுனிகளும் சாத்தி, மேற்கு வழுதாவூர் வாசல்படி மாத்திரம் திறந்துவிட்டு ஊருக்குள்ளே யிருக்கிறவர்கள் வெளியே போகாமலும், யாடுகள் மாத்திரம் விடவும் உத்தாரங்கொடுத்தார்கள். வெளியே யிருக்கிறவர்கள் உள்ளே வருகிறதற்கு ஒரு தடையுமில்லை.

*1746* ஆ செப்டம்பர் மீ 12 உ க்ஷய அக்ஷய ளு ஆவணி மீ 31 உ சோமவாரம்

கப்பலுக்கு சுக்கான் வேலை ஆகாததைத் தொட்டு, கப்பல் பயணம் அட்டியாய் நின்றபடியினாலே கப்பல் சுக்கான் இரண்டும் முஸ்தீது பண்ணிவித்து, துரையவர்கள் கடற்கரைக்குப் போயிருந்து, கப்பலுக்கு ஏற்றிவித்து இனிமேலிவ்விடத்திலிருந்து அனுப்பத்தக்கதாக ஒரு சாமானுமில்லை. எல்லாம்

சாடாவாய் அனுப்பிவிட்டேனென்கிற அடையாளத்திற்கு ஒரு பிரங்கிபோடுவித்துப்போட்டுத் துரை வீட்டுக்கு வந்தார்.

இற்றைநாளும் நேற்றையதினம்போலேதான் கெவுனி வாசல்களெல்லாம் சாத்தி, வழுதாவூர் வாசல்படி திட்டி மாத்திரம்விட்டு வெளியேயிருந்து உள்ளே வருகிறவர்களையெல்லாம் விட்டுவிடுகிறதும், உள்ளேயிருந்து வெளியே ஒருத்தரையும் விடவேயில்லை. ராத்திரி எட்டரை மணி வேளைக்குச் சென்னப்பட்டணத்தின்பேரிலே சண்டைக்குப் பயணம் போகிறோமென்று கப்பல்களெல்லாம் பாயெடுத்ததற்குத் துரைக்குத் தெரியத்தக்கதாக ஒரு பீரங்கி அடையாளம் போட்டு, மூசே லபோர்தோனே இஸ்தாதுரு ஏழு கப்பலும், நாட்டுக்கப்பல் இரண்டும் பாறுதோணிகள் எல்லாம் பாயெடுத்து ஓடிப் போனார்கள்.

1746 ஆ செப்தம்பர் மீ 13 உ க்ஷய வரு புரட்டாசி மீ முதல் உ மங்களவாரம்.

இற்றைநாள் காலையிலே திருவேங்கடத்தையும் அவசரம் கிருஷ்ணய்யரையும், சின்னதம்பிசெட்டி ரங்கப்பசெட்டியையும் கூட்டி இருபது சேவகரையும் கூடக் கூட்டி மொரட்டாண்டிச்சாவடி மேலே புறப்பட்டு, திருக்கழுக்குன்றத்தின் வழியாய்ப் புறப்பட்டு, கொய்லத்தைப் போய் அவ்விடத்திலேயிருந்து கடற்கரை வழியாய்ப் போகச்சொல்லியும், மூசே லபோர்தோனேக்கு ஒரு காகிதமும் மூசேதேப்பிரமேனிக்கும் பரிதிக்கும் இரண்டு காகிதமும் துரையவர்கள் என் கையில் கொடுத்து உன் தம்பியைப் பயணம் பண்ணியனுப்புவிக்கச் சொல்லி உத்தாரங்கொடுத்தபடிக்கு மூன்று காகிதமும் தம்பி திருவேங்கடத்தின் கையிலே கொடுத்து வர்த்தகர் மற்றுமுண்டான பேரையெல்லாம் கண்டுபேசி அவரவர்கள் உடைமையையெல்லாம் பட்டணத்திலேயிருக்கிறதைக் கொடுத்துவிடுகிறோம். புதுச்சேரியிலே வந்து குடியிருக்கச்சொல்லி, பின்னையும் அவர்கள் ஏதாகிலும் உடன்படிக்கைக் கேட்டால் அதுவும் உனக்குச் சம்மதியானபடிக்கு எழுதிக் கையெழுத்துப் போட்டுக் கொடுத்தபடிக்கு எனக்குச் சம்மதியென்று துரையவர்கள் தம்பி திருவேங்கடத்துடனேயும் முகதாவிலே சொல்லி என்னுடனே பத்திரமாய்ச் சொல்லியனுப்பச்சொன்னபடிக்குச் சொல்லி அங்கே நடக்கிற வயணமெல்லாம் அப்போதைக்கப்போது எழுதியனுப்பச் சொல்லி, தினசரி நடக்கிறதையெல்லாம் அன்றுடம் நடக்கிறதைத் தஸ்திரத்திலே வயணமாய் எழுதிவிக்கச் சொல்லியும், பின்னையும் ஏதாகிலும் மூசே லபோர்தோனே அவன் தம்பியை அழைப்பித்துக்கொண்டு போகிறபடியினாலே அவன் நடப்பிக்கிற சம்மதி யெல்லாம்

அப்போதைக்கப்போது நீயறிந்ததை மூசே தெப்பிரமேனி முதலான பேருடனே சொல்லச் சொல்லியும், துரையவர்கள் மனது சந்தோஷம் வருகிற காரியம் பார்க்கச் சொல்லியும் தம்பி திருவேங்கடத்துடனே வயணமாய்ச் சொல்லி, கிருஷ்ணய்யனையும் ரங்கப்ப செட்டியையும் கூடக் கூட்டிப் பயணம்பண்ணி ஒன்பது மணிக்கு அனுப்புவித்தேன். ஆனால் இவன் போகையிலே சண்டைகாரியத்துக்குப் போகிறபடியினாலே எப்படியோயென்று என் மனதிலேயிருந்த கிலேசம் சுவாமிக்குத் தெரியும். இவன் பல்லக்கின்பேரிலே ஏறினாப்போலே பிறகே தும்புச்சு. அந்தச் சாடை மூசே லத்துசு துபாசி குஞ்சானென்கிறவன் கேட்டிருந்து அருணாசல செட்டியுடனே சொன்னான். அருணாசல செட்டித் தம்பியை வழுதாவூர் வாசல்படி மட்டுக்கும் கொண்டுபோய் அனுப்பிவிட்டு மறுபடி என்னண்டைக்கு வந்ததும், பல சேதியைச் சொல்லி மற்றப்படி நல்ல சகுனமுமில்லை, பொல்லாத சகுனமுமில்லை என்று சொன்னான். அதற்கு நான் சொன்னது: மனதிலே கிலேசமாய்ப் புறப்பட்ட பயணமேயல்லாமல் சந்தோஷமாய்ப் போகிறோமென்று புறப்பட்டதல்லவே. ஆனபடியினாலே மறுபடி சுகமாய் வருவாயென்று தும்புச்சு. நல்லதுதானென்று இரண்டு நாளாய் கெவுனி வாசல்களெல்லாம் மூடி இவ்விடத்து மனிதரை வெளியே விடாமலிருந்தார்களே, இற்றைநாள் சூரிய உதயத்துக்குத்தானே கெவுனிவாசல் எல்லாம் திறந்துவிட்டு எதாக்கிரமமாய் சனங்கள் போக்குவரத்துமாய் நடந்தது.

1746 ஆ செப்தெம்பர் ௴ 14உ க்கு அக்ஷய ௵ புரட்டாசி ௴ 2 உ புதவாரம்

இற்றைநாள் காலையிலே துரை வீட்டுக்குப் போனவிடத்திலே பின்னை விசேஷமாய் ஒன்றும் நடக்கவில்லை. குவர்னதோர் எழுதிக்கொண்டிருந்தார். நான் பாக்குக் கிடங்கிலே பனிரெண்டு மணி மட்டுக்கும் இருந்துவிட்டு வந்தேன். அப்பால் சாயங்காலம் ஐந்து மணிக்கு குவர்னதோர் வழுதாவூர் வாசல்படி யண்டையிலே கட்டுகிற அகரத்தண்டையிலிருந்து என்னை அழைத்தனுப்புவித்தார். நான் போய்க் கண்டு, சலாம் பண்ணினமாத்திரத்திலே உன் தம்பியை சென்னப்பட்டணத்திற்குப் பயணம் பண்ணியனுப்புவித்தாயா என்று கேட்டார். நேற்று ஒன்பது மணிக்குத்தானே பயணமாய்ப் போனதாய்ச் சொன்னேன். அதற்குத் துரையவர்களிருந்துகொண்டு உன் தம்பியைத்தானே வர்த்தகருக்குக் கவுலை எழுதிக்கொடுத்துக் கையெழுத்துப் போட்டபடிக்குச் சம்மதியென்று சொன்னேன். அதற்கு மூசே லபோர்தொனே, தெப்பிரமேனி முதலான பேர்கள் கையெழுத்தும் கவையில்லை. அவர்களுடனே எச்சரிக்கவும்,

உன் தம்பி மனதுக்குச் சம்மதியானபடிக்கு நடப்பிக்கச் சொல்லிச் சொல்லியனுப்பினையோ என்னவென்று கேட்டார். நீங்கள் சொன்னபடிக்குக் கவுலும் எழுதிக்கொடுக்கச் சொன்னேன். அவர்கள் அதற்கும் சந்தேகப்பட்டால் சத்தியமும் பண்ணிக் கொடுக்கச்சொல்லிச் சொன்னேன் என்று சொன்னேன். ஆனால், அந்தக் காரியத்தளவிலே எவ்வளவு திரவியம் அகப்படுமென்று கேட்டார். நான் சொன்னபடிக்கு அரண்மனைக்காரர் வர்த்தகர் முதலாகிய இங்கிலீசுக்காரர் குவர்னதோர் சின்னதுரைக்குக் கூட என் யோசனையின் பேரிலே நடத்தினால் ஐந்து லக்ஷம் வராகன் ஆகப் பண்ணிக் கொடுக்கலாமென்று சொன்னேன். ஆனால் அவ்வளவு அகப்படமாட்டாது என்று சொல்லி ஆன மட்டுக்கும் நீ வஞ்சனையில்லாமல் பார்க்கவேணுமென்றும் தனக்கு இரண்டு வருஷமே பிடித்துவந்த நஷ்டமும் செலவும் நாளுக்குநாள் விருத்தி போந்திரதும் இப்படி அனேகவிதமாய்ச் சொல்லி உன் மனதின்படியே சென்னப்பட்டணம் காரியம் நடத்துகிறேன். எப்படி எனக்கு ஆதாயம் வரப்பண்ண வேணுமோ அப்படிப் பாரென்று சொல்லி, உன் தம்பிக்கு எழுதியனுப்பி அன்றுடகம் நடக்கிற சமாசாரம் எழுதியனுப்பச் சொல்லி, அதற்கு என்ன யோசனை பண்ணவேணுமோ அந்த யோசனையின்பேரிலே இரு என்று சொல்லி, பின்னையும் சென்னப்பட்டணம், கைவசமானால் மனோராச்சியம் சேனே சொன்னார் நானும் அதற்குத் தக்கதாய் உத்தரப் பிரதி உத்தரம் சொல்லிக்கொண்டு வந்தேன். அப்பால் என்னைவீட்டே போகச்சொல்லி அவரும் வீட்டுக்குப் போனார்.

வீட்டுக்கு வந்து தம்பிக்கு அவ்விடத்திலே நடக்கிற சமாசாரத்திற்கு அப்போதைக்கப்போதுக்கு எழுதித் தபாலிலே அனுப்பச் சொல்லியும், அங்கே நடக்கிற தினசரி எழுதச் சொல்லி ஒரு புஸ்தகமும் காகிதமும், எழுதுகிறதற்கு இரண்டு தஸ்தா பறக்காளா காகிதமும், செப்பு அரக்குக்கொம்பு ஒன்றும் சீவின இறகு பத்தும் தம்பிக்குக் காகிதமும் டபாலிலே கொடுத்தனுப்புவித்தோம்.

*1746* ஆ செப்தம்பர் மீ 15உ க்கு அக்ஷய ஞூ புரட்டாசி மீ 3உ வியாழக்கிழமை.

இற்றைநாள் துரையவர்கள் என்னை யழைப்பித்து, சென்னப்பட்டணத்துச் சேதி ஏதாகிலும் வந்ததா என்று கேட்டார். வரவில்லையென்று சொன்னேன். அசத்து சாயபு முதலான துலுக்கர் என்ன சொல்லுகிறார்களென்று கேட்டார். அவர்கள் சொல்லுகிறது என்னவென்றால், முன்னாலே கப்பல் சென்னப்பட்டணத்தின்பேரிலே சண்டைக்குப் போனபோது ரெண்டு நாழிகையிலே கோட்டை அகப்பட்

டுப்போமென்றும், கரையிலே ஐந்நூறு வெள்ளைக்காரர் இறங்கினால் கோட்டையைச் சுனயாசமாய்ப் பிடித்துக்கொள்ளலாமென்றும், இந்தக்கப்பல்களைக் கண்டவுடனே தன் பெண்சாதியையக்கூட தன் ரொக்கமிருந்ததுகூட வெளியே பழவேற்காட்டுக்கு அனுப்பினபடியினாலே மற்றப்பேருக்குத் தைரியமில்லாமல் வரவர வெள்ளைக்காரர் தங்கள் தங்கள் பெண்டுகளை அனுப்பினதின்பேரிலே கோட்டையிலே பேட்டையிலே உள்ள சமஸ்தமான சனங்களும் புறப்பட்டு ஓடிப்போனார்கள். இப்படிப்பட்ட நாம்றது என்று நாங்கள் அறியோம், இப்போது தெரிந்தது என்று மித்தனைநாளும் இங்கிலீசுக்காரர் சாதியும் சேவகத்தனமுண்டென்றிருந்தோம். வர்த்தகருக்கும் சண்டைக்கும் வெகுதூரமென்றும் இப்படியனேகவிதமாய் இங்கிலீசுக்காரரைத் தூஷித்தார்களென்றும் பின்னையும் அனேகவிதமாய் உம்முடைய தைரியஸ்தரியங்களையும் உம்முடைய கீர்த்திகளையும் கொண்டாடினார்களென்றும் அதையதை வயணமாய்ச் சொன்னேன். அதின்பேரிலே நவாபு அன்வருதிகான் நிசாமன் முலுக்கு முதலானவர்களுக்கு இங்கிலீசுக்காரர் தங்களுக்கு நடப்பித்த அவமரியாதையெல்லாம் மகம்மதுசா பார்சா கொடி போட்டிருந்த கப்பலைப் பிடித்துக்கொண்டு பார்சாவை எகத்தாளி பண்ணின சாடையையும், அதின் பேரிலே பிரான்சுக்காரர் நம்முடைய சிநேகிதனாகிய டில்லி பார்சாவினுடைய நிசான் போட்ட கப்பலைப் பிடிக்கலாமென்று ஆக்கிரகப்பட்டுச் சென்னப்பட்டணத்தின் பேரிலே இங்கிலீசுக் கொடியை வாங்கிப் போட்டு பிரான்சுக் கொடியைத் துலுக்க சாதிக்கு வந்த வெட்கத்துக்கு அவர்களை வெட்கம் பண்ணி, துலுக்க சாதிக்கெல்லாம் சந்தோஷத்தை உண்டாக்கச் சொல்லியனுப்பின சண்டைக் கப்பல்கள் சாடையையும் ஒரு கதைபோலே விஸ்தாரமாய் எழுதியிருக்கப்பட்ட புராணத்துக்குச் சவாது எழுதியிருக்கிறதை அவர்களுக்கெல்லாம் படித்துக் காண்பிக்கச் சொல்லி மதனாந்தபண்டிதனுடனே சொல்லி, அந்தக் காகிதத்தை அவரவர் வீட்டுக்குக் கொண்டுபோய்ப் படித்துக் காண்பிக்கச் சொல்லச் சொன்னார். அந்தப்படிக்கு மதனாந்தபண்டிதருடனே சொல்லியனுப்புவித்தேன். அவரந்தப்படிக்கு, துலுக்கர் வீட்டுக்கெல்லாம் போய்ப் படித்துக் காண்பித்து வந்து கபுறு சொன்னார். ஐதர்சாயபு அண்டைக்கு மாத்திரம் சின்னமுதலி கூடப் போனான். அவனேதாகிலும் துணி கொடுப்பானென்று துணி கொடாமல் அவன் வாய் உபசாரமாய்ச் சொல்லி அனுப்பிவிட்டான்.

*1746* ஆ செப்டம்பர் மீ *16*உ அக்ஷய ஹு புரட்டாசி மீ *4*உ சுக்கிரவாரம்.

இற்றைநாள் காலத்தாலே துரை என்னை அழைப்பித்து, சென்னப்பட்டணத்துச் சேதி ஏதாகிலும் வந்ததா என்று கேட்டார். எங்கள் தம்பி காகிதம் இன்னும் வந்ததில்லை என்று சொன்னேன். முசே பரிதி எனக்கு எழுதின காகிதத்திலே திருவான்மியூருக்குப் புறத்திலே என்னமோ ஒரு ஊர் எழுதி இருக்கிறது. அந்த ஊரிலே இறங்கி திருவான்மியூரிலே ஆயிரம் பேர் சொல்தாதுகளும் மாயே சிப்பாய் முதலானவர்களுடனே போய்ச் சேர்ந்தோமென்று எழுதினான். இன்றைய தினத்துக்குள்ளே மயிலாப்பூரிலே போய்ச் சேர்ந்திருப்பார்களென்று சொன்னார். அதற்கு நான் சொன்னது: உம்முடைய யோகம் பலத்த யோகம். உமக்கு மகத்தாகிய கீர்த்தி வருகிறது. ஆன படியினாலே சென்னப்பட்டணத்துச் சண்டையிலே மனுஷர் சேதமும் வராமல் கோட்டையும் திரணம் பிராயமாய் கைவசமாகுது. இது முன்னிலையாய் இந்த இந்திய ராச்சியத்துக்குள்ளே டில்லி பரியந்திரமிருக்கிற துலுக்கர், ரசபுத்திரர், க்ஷத்திரியர், கன்னடியர், தெலுங்கர் முதலாகிய சாதிகளிலே யிருக்கப்பட்ட பாட்சாக்கள், ராசாக்கள் கில்லேதார், நபாபு முதலாகிய பாளையக்காரர் பெரிய மனுஷர்கள், எத்தனை எத்தனை பேருண்டோ அவர்களெல்லாரும் உம்முடைய சாதியை வீரத்துவமுள்ள சாதியென்றும், ராசா அதிக பராக்கிரமசாலி யென்றும் உம்முடைய புத்தியும் உம்முடைய சவுரியத்துக்குச் சமானமான பேர்களிந்த உலகத்திலே யில்லையென்றும், உம்முடைய புத்தியும் உம்முடைய தைரியமும் உம்மைப்போலே மர்மியும் பிடித்த பத்து சாதிக்கிறதும், உம்முடைய நேர்பும் உம்முடைய தந்திரமும் ஒருத்தருக்கும் வராதென்றும், இப்போதே சமஸ்தமான பேர்களும் கொண்டாடுகிறார்கள். இனிமேல் ராத்திரியும் பகலும் இதுவே தியானமாய் எண்ணிக்கொண்டு பாட்டாய்ப் பாடப்போகிறார்களென்றும், உம்முடைய கீர்த்தி இந்திய ராச்சியமும் எரோப்பா ராச்சியமும் எங்கும் பரவி உம்முடைய வமிசத்திலேயிருக்கப்பட்டவர்கள் எல்லாம் இப்படிப்பட்ட பிள்ளை ஒரு பிள்ளை பிறந்திருந்ததினாலே நம்முடைய குலத்துக்கெல்லாம் ராச்சியமெங்கும் கீர்த்தி சாசுவதமாயென்றால் என்றைக்கும் இருக்கத் தக்கதாக உண்டாக்கினான் என்று சொல்லத் தக்கதாகவும் மற்றப் பேர் எல்லாம் இப்படிப்பட்ட பிள்ளை நம்முடைய வமிசத்திலே பிறவாமல் போச்சுதென்று சொல்லிக்கொள்ளவும். பிரான்சு ராஜா கேட்டு இவர் புத்திக்கும் இவர் தைரியத்துக்கும் நம்முடைய ராச்சியத்துக்கு மந்திரி இடம் கொடுத்து வையாதே போனோம். இனிமேல் அப்படிச் செய்கிறோம். துருக்கி முத

லான எரோப்பா ராச்சியமும் இந்திய ராச்சியமும் கட்டி ராச்சியத்துக்கெல்லாம் ஒரு ராசாவாய் இருக்க வேணுமென்று யோசனை பண்ணுவாரென்றும், உம்முடைய இடத்திலே சுவாமி கடாக்ஷம் பூரணமா யிருக்கிறதென்றும், பின்னையும் அநேக விதமாய்த் தோற்றினபடி எல்லாம் சொன்னதின்பேரிலே துரைக்குச் சந்தோஷஞ் சொல்லி முடியாத சந்தோஷம் வந்து, என்னை முதுகுதட்டி கிட்டேயிருந்த மூசே லோஸ்திசுபுரியுடனே ரங்கப்பனத்தனை புத்திசாலியும் காரியமறிந்தவனும் ஒருத்தருமில்லையென்று சொல்லி, பின்னையும் அநேக விதமாய் என்னை ஸ்தவுத்தியமாய்ச் சொல்லி, வெளியிலே துலுக்கர் சொல்லுகிறதும் தமிழர் சொல்லுகிறதும் என்னுடனே சொன்னையே, இவர்களுடனே சொல்லென்று சொல்ல. அவர்களுடனேயும் பின்னையும் சற்று அதனமாய்த்தானே சொல்ல, அவர்களும் உள்ளது என்று சொல்லி. அவர்களும் துரையை ஸ்தவுத்தியமாய்ப்பண்ணி இப்படி நாலு நாழிகை தேசகாலம் நடந்தது.

*1746* ஆ செம்தம்பர் மீ *17*வ க்கு அக்ஷய ஞு புரட்டாசி மீ 5வ சனிக்கிழமை.

துரை என்னை யழைத்துச் சொன்னது: சென்னப்பட்டணத்துச் சேதி உன் தம்பி ஏதாகிலும் காகிதம் அனுப்பினனோவென்று கேட்டார். அதற்கு நான் இன்னும் வந்ததில்லை. நாளைய தினம் வருமென்று சொன்னேன். அதற்குத் துரை சொன்னது: நம்முடையவர்கள் மயிலாப்பூர் போய்ச் சேர்ந்து அங்கே இருக்கிற அமுல்தாரண்டைக்கு மூசே தேப்ரமேனி போய் அந்த அமுல்தாரனுக்கு இன்னான் எழுதின காகிதத்தைக் கொடுத்து இப்படி நாங்கள் உங்கள்பேரிலே சண்டைக்கு வரவில்லை; உங்களைச் சட்டைபண்ணமல் உங்கள் கொடியையும் உங்கள் பார்சா பேரிட்ட கப்பலைப் பிடித்துக்கொண்டு உங்களுக்கும் எங்களுக்கும் சத்துருவா யிருக்கப்பட்ட இங்கிலீசுக்காரரைப் பிடிக்க வந்தோம் என்றும், அந்தக்கோட்டையை வாங்கவேணுமென்றும் வந்தோம் என்றும் சொல்லி யவருக்கு எழுதின காகிதத்தையும் கொடுத்த மாத்திரத்திலே அவர்கள் இவர்களைச் சண்டை முஸ்திப்புடனேயிருக்கிற திட்டமும் இந்தக் காப்பிரிகளையும் சொல்தாதுகளையும் பார்த்துப் பயந்து, மெத்தவும் முகமெல்லாம் வாடி, தலையை நட்டுக்கொண்டு கிடந்தார்கள். நான் அனுப்பின காகிதம் பார்க்கையிலே சற்று முகத்துக்குக் களை வந்து நீங்கள் எங்கள் பார்சா கொடி போட்டிருந்த கப்பலைப் பிடித்துக்கொண்டதினாலே இப்படியெல்லாம் நடத்துகிறதாக எழுதி இருக்கிறது ஐயா, உங்களுக்கு என்ன சாமக்கிரியை வேணுமோ அந்தச்சாமக்கிரியையெல்லாம் உங்களுக்கு அழைப்பித்துக்கொடுக்கிறோம் என்று சொன்னார்களாம். அதற்குக் கூலிக்காரர், சலங்குகள், பின்னையும் அநேகமாகிய சாமான்கள்

வேண்டியிருக்கும். அதுகளெல்லாம் நீங்கள் சரணசாமின் பண்ணிக் கொடுக்கவேணுமென்று கேட்டார்களாம். அதற்கு என்னென்ன சாமான்கள் வேணுமோ அதுகளெல்லாம் அழைப் பித்துக் கொடுக்கிறோமென்று மிகுந்த உபசாரமாய்ச் சொன் னார்களாம். பார்த்தாயா இந்த துலுக்கர் நாய்கள். இவர் களுக்குச் சற்றுகிலும் விவேகமில்லை. தங்கள் பலன் தங்க ளுக்குத் தெரியாது. இந்தக் கும்பல்களைப் பார்த்தாப்போலே பயந்தார்கள். அப்பால், காகிதம் கொடுத்து உங்களுக்கும் எங்களுக்கும் சிநேகம் என்றும் உங்கள் நிமித்தியம் சென்னப் பட்டணம் வாங்குகிறோமென்றும், உங்கள் பட்டணத்து வழி வருகிறதில்லையென்றும் இப்படியாக எழுதியிருந்ததைப் பார்த்த உடனே பயம் தீர்ந்து சிவன்வந்து பேசினார்கள். துலுக் கர் நாய்களிலிவர்களுக்குக் கோட்டையும் சீர்மையும் எதினாலே நடக்கிறதென்றால், இந்திய ராச்சியத்துக்கெல்லாம் ஒரு பார்சாவாய் ஒரு ஆதீனத்தின் கீழே நடக்கிறாப்போலேயாச் சுதே. ஆனபடியினாலே இவர்களுக்கு நடக்கிறதேயல்லாமல் இல்லாவிட்டால் ஒருக்காலும் நடவாது. எரோப்பா ராச்சியத் திலே துண்டுதுண்டாய் சீர்மையும், அது அதுகளுக்கு வெவ் வேறே பார்சாவும் இருந்தால் இவர்கள் சீர்மையை மகா எளிதாய்க் கட்டிக்கொள்ளுவார்கள், நில்லாது என்று சொன் னார். அதற்கு நான் சொன்னது: இவர்களுக்கு இருக்கிற கோட்டையும், அந்த பந்தோபஸ்தும், இவர்கள் சேவகத் தனமும் பார்த்தால் ஆயிரம் சொல்தாதுகளைக் கூட்டிக் கொண்டு இரண்டு மொடுத்தியேர் பீரங்கிகளையும் நூறு பொம்பும் உண்டானால் ஆற்காடு, கடப்பை, சிரப்பை இந்தக் கிருஷ்ணைக்கு இப்புறம் இருக்கிற துலுக்கர் கோட்டைகளையும் சீர்மைகளையும் கட்டிப்போடலாம் என்று சொன்னேன். ஆயிரம் சொல்தாது கவையில்லை. ஐந்நூறு சொல்தாதுகளும் இரண்டு மொடுதியேவும் போதுமென்றார் இவர்கள்.

1746 ஆ செப்தம்பர் மீ 18உக்கு அக்ஷய ஸ்ரீ புரட்டாசி மீ 6உ வியாழக்கிழமை.

இற்றைநாள் மயிலாப்பூரிலிருந்து மதுரநாயகம் தானப்ப முதலி பேருக்கு அனுப்பின ஓலையிலே எழுதியிருந்த வயணம்: முன் திருவல்லிக்கேணி தெள்ளிய சிங்கப்பெருமாள்கோவிலிலே இறங்கி இருந்தவர்களை அதைவிட்டுச் சிந்தாதிரிப்பேட்டை யிலே வெள்ளைக்கொடி போட்டார்களென்றும், அதைப் பார்த்துச் சென்னப்பட்டணத்தார் ஏழு பீரங்கி போட்டார் களாம். தண்டுக்கு அரை நாழிகை வழியன்றச்சேதானே குண்டு விழுந்துபோனதாகவும் சென்னப்பட்டணம் குவர்ன தோர் மாசுக்ருப் பயித்தியம் பிடித்தாற்போலேயும், அதற்குப் பதில் விசாகப்பட்டணம் கப்பித்தானை குவர்னதோரிடத்துக்கு

வைத்ததாகவும் ஊரைச்சுற்றிலும் இருந்த கொத்தளத்திலே இருந்த பீரங்கிகளையெல்லாம் காகிலே ஆணி அடித்துத்தள்ளிப் போட்டார்களென்றும், பட்டணத்தைக் கதவு திறந்துவிட்டு அப்புறம் வெள்ளைக்காரர் இருக்கிற கோட்டையை மாத்திரம் பத்திரப்படுத்திக்கொண்டார்களென்றும் ஊரிலே பெத்து நாயக்கன் சேர்ந்த ராணுவிலே சிறிதுபேர் சண்டைக்குப் போகிறோம் என்று சொல்லி ஓடிப்போய்விட்டதாகவும், மூசே போரனேவால், மூசே லபோர்தோனேயண்டைக்கு வந்து கண்டு பேசிப் போனதாகவும் இத்தியாதி வயணங்கள் எழுதிவந்த ஓலையைத் தானப்ப முதலி படித்துத் துரைக்குச் சொன்ன விடத்லே துரையங்கேயிருந்த கோன்சேல்காரர் மற்றுமுண்டானபேருடனேயெல்லாம் குவர்னதோர் மாசுக்நப் பயித்தியம் பிடித்ததென்றும் விசாகப்பட்டணம் கப்பித்தானை குவர்னதோரிடத்துக்கு நேமித்தார்களென்றும், நம்முடையவர்கள் சிந்தாதிரிப்பேட்டையிலே போய் இறங்கினார்களென்றும் இப்படி மேலே எழுதப்பட்ட வயணமெல்லாம், பின்னையும் விஸ்தரித்து வயணம் வயணமாய்ச்சொல்லி எகத்தாளியும் பரியாசமும் பண்ணிக்கொண்டிருந்தார். அப்பால் என்னையழைத்து மேலே எழுதியிருக்கப்பட்ட சாடையெல்லாம் சொல்லி இப்படி இப்படி நடந்ததாம் என்று சொன்னார். அதற்கு நான் சொன்னது: மெத்த ஆச்சரியமல்ல நீர் ஒழுகரைக்குச் சவாரி புறப்பட்ட மாத்திரத்திலே சென்னப்பட்டணம் தட்டுக்கெட்டுத் தடுமாறிப் போனவிடத்திலே இப்போது பிரத்தியக்ஷமாய் தனம் இறங்கினால் பிடிக்கிறதென்ன ஆச்சரியமாவென்று சொன்னதற்கு. மெய்தானென்று ஒத்துக்கொண்டு அப்பால் சிந்தாதிரிப்பேட்டையிலிருந்த வயணமும் கோட்டையினுடைய திட்டமும் கேட்டார். அதற்கு எனக்குத் தோன்றின மாத்திரம் அவருடைய உற்சாகத்துக்கு அடுத்ததாய் அவருக்குச் சந்தோஷம் வரத்தக்கதாய் உத்தரவு சொன்னதெல்லாம் எழுத வேணுமானால், ஆறு காகித மாகிலும் செல்லும். ஆனபடியினாலே சுவாரசியம் மாத்திரம் எழுதினேன். பனிரெண்டு மணிக்கு மாயேயிலேயிருந்து பிராமணர் பனிரெண்டு நாளையிலே காகிதம் வந்தது அந்தக்காகிதத்திலே சீர்மையை விட்டு இந்த வருஷம் புறப்பட்ட ஏழு கப்பலும் மாயே வந்துசேர்ந்து அவ்விடம் விட்டு இவ்விடத்துக்குப் பயணம் புறப்பட்டதாய் எழுதிவந்தது. அந்தக்காகிதம் பார்த்தவுடனே துரையினுடைய சந்தோஷம் காகித முகாந்திரத்திலே எழுதி முடியாது. சென்னப்பட்டணத்துச் சேதி வந்ததற்கும் மாயேயிலேயிருந்து ஏழு சீர்மைக் கப்பலும் வருகிற கபுறும் வந்தபடியினாலேயும் விஸ்தாரம் திரவியம் வருத்தும் சென்னப்பட்டணத்துச் சண்டைக்கு மற்றதும் இனிமேல் கும்பினீர் வியாபாரம் விடுகிறதற்குத் திரவியம் உதவியாய் வந்தபடியினாலேயும் துரை யவர்களுடைய உற்சாகத்தை எழுதி முடியாது.

இற்றைநாள் மூசே லபோர்தோனே காகிதம் துரைக்கு வந்தது. மூசே லத்தூசுக்கு, மூசே ஒஸ்த்ரால் மகளைக் கலியாணத்துக்கு அவன் தாய் சம்மதித்து குவர்னதோரை உத்தாரம் கேட்டு உத்தாரமும் பெற்றுக் கலியாண சாமக்கிரிகைகளெல்லாம் முஸ்தீது பண்ணுகிறான். மூசே லத்தூசுக்குச் சந்தோஷம் எழுதி முடியாது.

1746 ஆ செப்டம்பர் மூ 19 உக்கு அக்ஷய ஸு புரட்டாசிமீ 7உ சோமவாரம்

துரையவர்களிடத்துக்குப் போகிறதற்குமுன் லத்தூசு வீட்டுக்குப் போய்ச் சந்தோஷக் கபுறு சொல்லிக் கலியாணத்துக்கு மொபார்க்குச் சொல்லி, மூசே கோர்மே வீட்டுக்கு வந்து அவனுடனே சகலாத்துக்கட்டு எடுத்த கணக்கு ஒத்துக் கொண்டு, துரை பேருக்கு ரசீது எழுதிக்கொடுத்து, அவன் கையெழுத்தாய் துரைக்குக் கொடுக்கிறதற்கு ஒரு கணக்கும் வாங்கிக்கொண்டு; மூசே தெப்பிரமேனிக்குச் சரக்குக் கூட்டுகிறதற்கு முன் கொடுத்த ரூபாய் போக மற்ற ரூபாய் வாங்கிக் கொண்டு அவன் கையிலே யனுப்புவித்துக்கொண்டு துரை வீட்டுக்கு வரும்போது கேட்ட கபுறு: நபாபு அன்வருத்திகான் காகிதம் ஒட்டக சுவார் கொண்டுவந்தானென்று சொன்னார்கள். நான் துரை வீட்டுக்குப் போனமாத்திரத்திலே தானப்ப முதலி சொன்னது: நபாபண்டையிலிருந்து ஒட்டக சுவார் காகிதம் கொண்டுவந்தான். அந்தக் காகிதத்திலேயிருந்த சேதி: சென்னபட்டணத்தார், முன்னே புதுச்சேரியின் பேரிலே சண்டைக்குப் போகிறோமென்றால் நாங்கள் வேண்டாமென்று தடைபண்ணிப்போட்டோம். இப்போது உங்களை இங்கிலீசுக்காரர்பேரிலே சண்டை பண்ணப் போகவேண்டாமென்றச்சேதானே நீங்கள் போனது மெத்த ஆச்சரியமாயிருக்கிறது அது பார்சாபந்தரிலே வர்த்தகரிலே குசிராத்துப் பட்டாணிகள் இப்படி நானாசாதியாரும் இருக்கிறார்கள். அவர்களை அலக்கழிக்கிறது நியாயமல்லவென்று என்ன சொன்னாலும் கேட்காமல் நடத்தினது ஆச்சரியமாயிருக்கிறதென்றும் இனிமேல் அப்படிப்பட்டவேலை நடத்தவேண்டாமென்றும் எழுதினதற்குத் துரையவர்கள் கேட்டு நாக்கை வளைத்துப் பதில் உத்தரவு எழுதச்சொன்னது: அப்படி பார்சாபந்தரிலே இருக்கிற வர்த்தகருக்குப் பின்னையும் ஒன்றும் டொக்காயில்லை. இதற்கு விரோதமாய் நடந்துகொண்ட பேருக்கு எங்கள் விவாத்திக்கப்பல் கப்பித்தான்களுக்குப் பார்சா உத்தரவுபடிக்குத் தெண்டிப்பார்கள் என்று அப்புறம் உபசாரமாய் எழுதி அனுப்பிவிடச் சொன்னார். அந்தப்படிக்கு எழுதி ஒட்டகக் காரனைப் பயணம்பண்ணி அனுப்பிவிட்டோமென்று தானப்ப





முதலி சொன்னுன், அப்படியிருக்கையிலே துரை என்னை அழைத்து நேற்று ராத்திரி மூசே லபோர்தோனே காகிதம் வந்தது. சென்னப்பட்டணத்திலே குவர்னதோருடைய தோட்டத்திலே போய் நம்முடையவர்கள் இறங்கினுர்கள். இருபது முப்பது குண்டுகள் மாத்திரம் போட்டார்கள்; இவர்களுக்கு மேலாகப்போய் விழுந்தது என்றும் சென்னப்பட்டணம் துரை பிதறினுல் கோன்சேல்காரனிலே ஆகிலும் ஒருத்தரிருக்கப் போகாதா! கப்பல்கப்பித்தானுக்குக்குவர்னதோரிடம்கொடுத்து விசாரிக்க வைப்பார்களா! இப்படி புத்தியீனமாயிருக்கப்பட்டவர்களுண்டா! இங்கிலீசுக்காரருடைய சாதி இந்தலை இறக்கிக்கொண்டுவந்து வைத்தார்கள் என்று சொன்னுர். அவர்கள் தங்கள் சாதிக்கு எல்லாம் தலை இறக்கப் பண்ணினுர்கள். நீர் உம்முடைய சாதிக்கு எல்லாம் தலை இறக்கப் பண்ணிவித்தீர். அதுவுமல்லாமல் டில்லி பரியந்திரம் உம்முடைய சாதியினுடைய கீர்த்தியை விளங்கிவித்து ராத்திரியும் பகலும் பராக்கிரம சவுரியத்துக்குள்ளே பிரான்சுக்காரருக்குச் சமானமில்லை என்று ஸ்வுத்தியம் பண்ணத்தக்கதாக ஒருத்தர் உண்டாகி உம்முடைய வமிசத்துக்கெல்லாம் கீர்த்தி கொண்டுவந்தீர் என்று சொன்னதற்கு ரங்கப்பா நான் அப்போதுதானே சொல்லவில்லையா இப்போது நகைக்கிறவர்கள் எல்லாரும் இனிமேல் அழுவார்கள். இப்போது அழுகிறவர்களினிமேல் நகைப்பார்கள். கடைசி நகைப்பாங்காட்டும் கவைக்கு வருகிறது என்று சொன்னேனே இப்போது சரிப்பட்டதோ இல்லையோவென்று கேட்டார். அதற்கு நான் அய்யா அப்போதுதானே சொல்லவில்லையா உம்முடைய மனதிலே யிருக்கிற கோரிக்கை என்ன நினைத்துக்கொண்டிருக்கிறீரோ அந்தப்படிக்கு நடக்கும். உமக்கும் மகத்தாகிய கீர்த்தியை யடைவீர். உம்முடைய பேர் ஈரோப்பா ராச்சியமெல்லாம் கொண்டாடவும் இந்தியா ராச்சியமெல்லாம், கொண்டாடுவார்கள். இது முன்னிலையாய் பிரான்சுராசா உமக்கு மன்னவன் பட்டமுங் கொடுத்து மரெஷால் தெ பிரான்சு என்கிறவரும் என்று நான் சொல்லவில்லையாவென்று கேட்டதற்கு மெய்தானென்று சொன்னுர். நீங்கள் கோபித்துக்கொள்ளாவிட்டால் இன்னொரு வார்த்தை சொல்லுகிறேன் என்று சொன்னேன். சும்மா சொல்லு என்ருர். போனவருஷம் செப்தெம்பர் மாதத்திலே ஒரு பார்ப்பான் வந்துசொன்னுன். இப்போதுஇவ்விடத்திற்குக் கப்பல் வராமல் இப்படி யிருக்கிறதே வருகிற வருஷம் இந்த மாதத்திலே சென்னப்பட்டணம் தேவனும்பட்டணம், கூடலூரை வாங்குவார். இந்தத் துரைக்கு மகத்தான கீர்த்திவருமென்று சொன்னுரென்று சொன்னேன். அதற்குப்பிராமணனு அப்படி சொன்னவன் என்று கேட்டார். ஆமய்யாவென்று சொன்னேன். பிராமணர்களினுடைய புத்திக்குச் சமானமாய் பின்னை ஒருத்தர்

சாதி புத்தியையும் சொல்லப்போகாது என்று சொன்னார். அது மெய்தான் இதல்லாமல் சீமையிலிருந்து ராசா இந்த சேதி கேட்டு வெகு சந்தோஷப்பட்டு மரெஷால் இவர் என்றும் சொன்னாரென்று சொல்னதற்கு மரெஷால் என்கிற பெயர் எப்படி இந்தப் பார்ப்பானுக்குத் தெரியும் என்று கேட்டார். அந்தப் பார்ப்பான் சொன்னது: இந்தத்துரை மகா யோகசாலி இந்தப் பட்டணங்கள் வாங்கினதின்பேரிலே இவர்கள் சாதி ராசா கேட்டு சந்தோஷப்பட்டு வெகு அதிசயமான வெகுமானமும்பண்ணி பெரிய உத்தியோகம் கொடுத்து தம்முடையகிட்ட வைத்துக்கொள்வார் என்றும் அங்கே மகாப்பிரபலமாய் நடக்கும் என்றும் சொன்னார். அதின்பேரிலே நான் மரெஷால் என்கிறபேர் ஆகவேணுமென்று யோசனைபண்ணி மரெஷால் தெபிருன்சு என்று பேரிட்டேனென்றுசொன்னேன். அதற்குச் சந்தோஷமாய் நகைத்துக்கொண்டு மூயித்துமோர் மூயித்து ஒபிரகாத்து என்று சொன்னார். அதன்பேரிலே உம்முடைய கீர்த்தியெல்லாம் பாட்டாய்ப் பாடுகிறார்களென்றும் சொன்னேன். அதேது, யார் பாடினது, பாடிவித்தவர்கள் யார் என்று கேட்டார். அவரவர் சந்தோஷமாய் அப்படி பாடுகிறார்கள் என்று சொன்னேன். அதற்குத் துரை இருந்துகொண்டு நீ பாடிவித்தது ஆகவேணுமென்றுசொல்லி உன் சாடைப் பார்த்தால் சங்கீதம் பாடத்தெரியும்போலே இருக்கிறது. நீ இங்கே சங்கீதம் பாடுகிற வேளையிலே வந்தால் அங்கே நீ கேட்கிற சாடை இப்போது எனக்குத் தெரிந்ததென்று சொன்னார். எனக்கு அதெல்லாம் தெரியாது என்று சொன்னேன். அது எனக்குச் சொல்லத் தேவையில்லை உனக்கு நன்றாய்த் தெரியுமென்று சொன்னார். அப்பால் அதிலே என்ன பாடியிருக்கிறதென்று கேட்டார். அதிலே என்ன பாடியிருக்கிறதென்றால் கப்பல் வராமல் சத்துருக்கள் வந்து மேலாடியிருக்கிற நீர் பராக்கிரமம் காண்பித்ததும் உம்முடைய தைரியமும் உம்முடைய பேர் சொன்னால் இங்கிலீசுக்காரர் எல்லாம் கோத்துக்குடல்கூட வெளியிலே விழப் பயப்படுகிறதும் மூன்று வருஷத்திலே கட்டுகிற கடற்கரைப் பாரிசம்மதிகளும் கொத்தளத்தையும் ஆறு மாஸத்திலே கட்டிவித்ததும் அப்பால் சண்டைக் கப்பல்களை யழைப்பித்து இங்கிலீசு சண்டைக் கப்பல்களை துரத்திவிட்டு அவர்களெல்லாம் சின்னாபின்னமாய் முறிந்து ஒரு கப்பலும் முழுகிப்போய் மற்றக் கப்பல்களும் காயங்கள் பட்டு நிருவாகம் பண்ணமாட்டாமல் ஓடிப்போனார்கள் என்றும் பின்னையும் உம்முடைய கீர்த்தியைப் பார்சா முதல் ஈரோப்பா ராச்சியமட்டுக்கும் கொண்டாடுகிறார்களென்றும் இப்படியாகப் பின்னையும் அனேகவிதமாய்ப் பாடியிருக்கிறது. அந்தப்படிக்கு நான் கேள்விப்பட்டேன் என்று சொன்னதற்கு இதெல்லாம் நீ சொல்லிப் பாடிவிட்டதாய்ப் பின்னையும் ஒருத்தருக்கும் தெரியாதென்று சொல்லிப்

போட்டு உள்ளேபோய்ப் பெண்சாதியுடனே சொல்லி அந்தப் பாட்டையும் பாடகனேயும் அழைப்பிக்கச்சொல்லி நாராயணப் பிள்ளையுடனே சொல்லியனுப்பினார்கள். அதின்பேரிலே கஸ்தூரிரங்கய்யனேயும், வெங்கட்ட நாராயணப்பய்யனேயும் அழைப்பித்து நாராயணப்பிள்ளையை அழைத்துவந்தார்கள் என்று சொன்னவிடத்திலே அம்மாளிப்போது தூங்குகிறாள் நாளைக்கு ஆகுது என்று சொன்னான். அதின்பேரிலே நாராயணப்பிள்ளை சொன்னது: துரை என்னைக் கேட்டார். துரையிருந்துகொண்டு சொன்னதற்கு நான் சொன்னது ஆரோ பிராமணன் ஒருத்தன் வந்து ரங்கப்பிள்ளையண்டையிலே பாடினான் என்று ஊரிலே அவரவர்கள் பாடம் பண்ணுகிறார்களென்றும் சேதி கேட்டேன் என்று சொன்னதின்பேரிலே துரை சந்தோஷத்தை ஒரு விதத்திலே சொல்லிமுடியாது. அம்மாளுடைய சந்தோஷமும் அப்படிதான். அதற்கு முன்னே தமிழோ வடுகோவென்று கேட்டார்கள். அதின்பேரிலே ரங்கப்பிள்ளையைக் கேட்கவேணுமென்று சொன்னேன் என்று கேட்டார். அப்படி தமிழிலே சொன்னால் ஆற்காடு, மைசூர், கொல்கொண்டா பரியந்திரம் அவர்கள் பாடார்கள். தமிழிலே பாடவேணுமானால் ஏழெட்டு நாளையிலே முஸ்தீது பண்ணிப் பாடச் சொல்வோமென்று சொல்லிப் போகச் சொல்லி நான் வீட்டுக்கு வந்து சாப்பிட்டுப் படுத்துக்கொள்ளப் போகச்சே மறுபடியும் அம்மாளும், துரையும் அந்தப் பாடகரை அழைக்கச் சொன்னார் என்று சேவகர் வந்து பாடகரை அழைத்துக்கொண்டு போனார்கள், அதன்பேரிலே அவர்களுக்கு வெள்ளைக்காரருடன் சாடைக்குத்தக்கதாக எப்படி உண்டோ அந்த வயணமெல்லாம் தெரியச் சொல்லியனுப்புவித்தோம் அதன்பேரிலே அவர்கள் துரையவர்கள் வீட்டுக்குப் போனவுடனே அவ்விடத்திலே துரையவர்களும் அம்மாளும் துரை மச்சினியும் பெருமூசுப் பெண்சாதியும் இவர்கள் நாலு பேருமிருந்துகொண்டு இந்தப் பாடகருக்கு ரத்தினக்கம்பளிபோட்டு உட்காரச்சொல்லி உத்தாரங்கொடுத்து பிற்பாடு பாடச்சொன்னார்களாம். அதன்பேரிலே இவர்கள் இந்தச் சம்பிரமங்களெல்லாம் பாடச்சே அதிலே பாடியிருக்கிற வயணமெல்லாம் தமிழிலே அவரவர் வெள்ளைக்காரிச்சியின் இரண்டு மூன்றுபேரும் அம்மாளுக்கும் வியாரத்திப்படுத்தச் சொல்லத்தக்கதாக அதை அவர்கள் துரையவர்களுக்குச் சொல்லத்தக்கதாக எல்லோரும் வெகு சந்தோஷப்பட்டு அதிலே பாடியிருக்கிற வயணம் பிரான்சுக்காரருடைய கப்பல் இரண்டு கப்பலை இங்கிலீசுக்காரர் பிடித்து ஒலாந்தக்காரர் கையிலே விற்றுப்போட்டதற்கு இவர்கள் போய் ஒலாந்தக்காரரை கேட்டதற்கு அதற்குள்ள பணம் கொடுக்கிறோம் என்று உடன்படிக்கை பண்ணிக்கொண்டுவந்தார்களென்று பாடியிருந்தது. அதப்படியல்ல,

அந்த இரண்டு கப்பலுக்கும் பதினையாயிரம் வராகனுயத் தீர்த்து வாங்கிக்கொண்டோமென்று சொல்லியும் இதல்லாமல் இங்கிலீசுக்காரர் கப்பல்காரர் பிரான்சுக் கப்பலை ... .. ... பொந்திசேரி யென்கிற நாட்டுக் கப்பலுடனே சண்டை பண்ணச்சே அந்த நாட்டுக்கப்பல் கப்பித்தான் மூசே..........என்கிறவன் பீரங்கியினாலே சுட்டதாகவும் அந்தக்குண்டு மேஸ்தர் காமன்டோர் பரநேத்துக்கு முதுகிலே பட்டதாகவும், அந்தக் காயத்தோடே செத்துப்போனதாகவும் பாடச்சொல்லி பின்னையும் சிறிது வார்த்தைகளெல்லாம் சொல்லி எழுதிவைத்து அந்தப்படிக்கு அதுகளெல்லாம் வயணமாய்ப் பாடிக்கொண்டு வாருங்கோளென்றும் சொல்லி அவர்கள் வெகு சந்தோஷப்பட்டு ஒருத்தருக்கொருத்தர் வெகு நேர மட்டுக்கும் சொல்லிச்சொல்லி நகைத்துக்கொண்டிருக்கிற சம்பிரமம் இன்னமட்டென்று எழுதிமுடியாது.

*1746* ஆ செப்தம்பர் மீ *21*உ க்ரோதன அக்ஷய ஸு புரட்டாசி மீ *9*உ புதன்கிழமை.

இற்றைநாள் காலமே ஒன்பது மணிக்குச் சென்னப்பட்டணத்திலேயிருந்து தபாலிலே காடுதாசிகள் வந்தது. அதிலே காகிதங்கள் ஆராருக்கு வந்ததென்றால்: துரையவர்களுக்கும் பின்னையும் கோன்சேல்காரருக்கும் எழுதி வந்தது நமக்கும் தம்பி எழுதியனுப்புவித்த வயணமென்னவென்றால்:

*1746* ஆ செப்தம்பர் மீ *22*உ க்ரோதன அக்ஷய ஸு புரட்டாசி மீ *10*உ வியாழக்கிழமை.

இற்றைநாள் மத்தியானம் பனிரெண்டு அடித்து மூன்று மணிக்குச் சென்னப்பட்டணத்திலேயிருந்து தபாலிலே (ஈ) துரையவர்களுக்கும் கடுதாசி வந்தது. அப்போது துரையவர்கள் சவாரி போகத்தக்கதாக வெளியே புறப்பட்டுக் கடலோரத் தண்டை போகச்சே சேவகன் கொண்டுவந்து கடுதாசி கொடுத்தான். அந்தக் கடுதாசியைப் பிரித்துப்பார்த்தவுடனே வெகு சந்தோஷத்தை அடைந்து துவானிலே போய்ப் பார்த்தவிடத்திலே ராமச்சந்திரய்யன் மாத்திரம் இருக்கச்சே அவரையழைத்து இப்படி சென்னப்பட்டணத்திலே நேற்றையதினம் கோட்டை பிடித்து வெள்ளைக்கொடி போட்டார்களென்று சொல்லிப் பீரங்கி சுடச்சொல்லி உத்தாரங்கொடுத்தார்கள். அந்த வேளையிலே வெள்ளைக்காரர், உத்தியோகஸ்தர், பீரங்கி மேஸ்திரிகள் சகலமானபேரும் அவரவர்கள் சாப்பாட்டுக்குப் போயிருக்கிற வேளையானபடியினாலே சேந்தினேர் தவிர மற்ற

பேர் ஒருத்தருமில்லே. ஆனபடியினாலே அவ்விடத்திலேயிருந்த வெள்ளைக்காரர்தானே இருபத்தொரு பீரங்கி சுட்டார்கள். அந்நேரமே கொமிசேல்காரர் மற்றப் பெரிய மனுஷர் சகலமானபேருக்கும் அவரவர் வீட்டிலே போய்ச்சொல்லிப்போட்டு வரச்சொல்லிச் சேவகரையனுப்பிவிட்டு நம்மண்டைக்கும் ஒரு சேவகனுடனே சொல்லி யனுப்புவித்தார்கள். இதற்குள்ளே துரைத்தனக்காரர் சகலமானபேரும் வந்தார்கள். நானும் ... கொண்டுபோய் இந்திரவத்துச் பேட்டிபண்ணிக்கொண்டு முபார்க்கு பாதி சொல்லிக்கொண்டவிடத்திலே மகா சந்தோஷத்துடனே சென்னப்பட்டணம் நேற்றைய தினம் (அக்ஷய ஷு புரட்டாசி மீ 9 உ புதவாரம்) நாள் மத்தியானம் பனிரெண்டு மணிக்கு கோட்டையிலே வெள்ளை நிசானும் போட்டு கும்பினி உத்தியோகஸ்தர் மற்றப்பேரும் பெரிய துரை சின்னதுரை முதலாகிய பேரையும் காவல்பண்ணிவித்து நம்முடையவர்கள் சமஸ்தமானபேரும் சென்னப்பட்டணம் கோட்டையைத் தாக்கினார்கள் என்கிறதாய்ச் சொல்லிப் பின்னையும் சிறிது உத்தரவுகள் சொல்லவரச்சே அவர்களுடைய சந்தோஷப் பூரிப்பினாலே நின்று போகக்கூடாமல் சகல துரைத்தனக்காரருடனேகூட கோட்டைக்குள்ளே போய்க் கோவிலிலே பூசை கேட்க உட்கார்ந்தார்கள். அந்நேரம் ஒரு வரிசை பீரங்கியும் சுட்டுக் கோட்டையிலே யிருக்கிற மணி, கப்பு சேங்கோவில் மணி, சம்பாகோவில் மணி எல்லாம் முழங்கத்தக்கதாகப் பூசை கேட்டு ஆன உடனே துரையவர்க ளிருந்துகொண்டு தொப்பியைக் கழட்டிக் கையிலே பிடித்துக்கொண்டு வீவல்றூவா என்று கூப்பிட்டார்கள். அதின்பேரிலே கோவிலிலே இருக்கப்பட்ட வெள்ளைக்காரர் வெளியிலே யிருக்கப்பட்ட கோட்டைக்குள்ளே யிருக்கப்பட்ட வெள்ளைக்காரர் சமஸ்தமானபேரும் ஏககாலத்தில் கூப்பிட்டார்கள். அந்தச் சந்தோஷ சப்தத்துடனே கோஷம் கோட்டையை எடுத்துக்கொண்டு போகிறாப்போலே யிருந்தது. அதின் பிற்பாடு பூசை கேட்டு ஆனவுடனே ஒரு வரிசை பீரங்கி இருபத்தொரு பீரங்கி வேட்டுச் சுட்டார்கள். அதன்பேரிலே கப்பலிலேயிருந்தும் இருபத்தொரு பீரங்கி போட்டார்கள். அந்த மட்டிலே புறப்பட்டு துரையவர்கள் வளவுக்கு வந்து முசே லபோர்தோனே அவர்கள் பேரைச் சொல்லி அவரவர் சாராயம் குடித்து சந்தோஷம் கொண்டாடினார்கள். அந்த வேளையிலே பின்னையும் பட்டணத்திலே உண்டாகிய கும்பினி உத்தியோகஸ்தர் வெள்ளைக்காரர், தமிழர், செட்டிமார்கள், வர்த்தகர் முதலாகிய சமஸ்தமானபேரும் வந்து

முபார்க்குச் சொல்லச்சொல்லிப் பேட்டிபண்ணிக்கொள்ளு கிறார்கள். அந்தச் சந்தடியிலே ராமச்சந்திரய்யனை அழைத்துப் பத்துப்பார் சர்க்கரைக்கு உத்தாரங்கொடுத்து பட்டணத்திலே சகலமானபேர் விட்டுக்கும் சர்க்கரை வழங்கத் தக்கதாக உத்தாரங்கொடுத்தார்கள். அதன்பேரிலே என்னைப் பார்த்து பட்டணமெல்லாம் அலங்கிருதம் பண்ணிவித்து பட்டணத்திலே சகலமானபேர் வீட்டிலும் விளக்கு வைக்கச்சொல்லி உத்தாரங்கொடுத்தார்கள். அந்தப்படியே நயினாரை யழைத்து உத்தாரங்கொடுத்து பட்டணமெல்லாம் விளக்கு வைக்கச் சொன்னோம். அதன்பேரிலே என்னைப் பார்த்து உனக்கென்ன வேணும் அதுகளெல்லாம் கேள். நல்ல மனதுடனே உத்தாரங் கொடுக்கிறோம் என்று சொன்னார்கள் அதன்பேரிலே காவலிலே இருக்கிற சிறைக்காரர் கடன்காரன் மற்றப்பேர் எல்லோரையும் விட்டுவிடவேணுமென்று சொன்னேன். அந்த க்ஷணம் விட்டுத் துரத்திவிடச் சொன்னார்கள். அதன்பேரிலே புகையிலே வெற்றிலே எப்போதும் காசுக்கு ஒன்பது வெற்றிலேயும். பணத்துக்குப் பனிரண்டு பலம் புகையிலையும் விற்றதை வாசுதேவபண்டிதன் என்கிற சண்டாளன் குருத்துரோகி குறைத்து காசுக்கு ஏழு வெற்றிலே பண்ணி பிறகு ஐந்து வெற்றிலையும் பத்து பலம் புகையிலேயுமாகப் பண்ணிப் போட்டானென்று வெகு சனங்கள் அவனைத் திட்டுகிறதும் வைகிறதுமாகப் பட்டணத்திலே உண்டாகிய சிறுபிள்ளை சத்தியமாய் எப்போதும் வீதிக்குவீதி மூலைக்குமூலை ஏழை எளியவர்கள் முதலாகிய சனங்களெல்லாம் இந்த தர்மபட்டணத்திலே இது மாத்திரம் ஒரு அபாயம் நடக்கிறதென்று கூவிக்கொண்டு திரிகிற சப்தம் என்னுடைய காதிலே விழுந்திருக்கிறபடியினாலே இந்தப் பட்டணத்துக்கு இந்த அபக்கியாதி வரலாகாதென்கிறதாய் துரை அவர்களைப் பார்த்து வெற்றிலைப் புகையிலே எப்போதும்போலே விற்கத்தக்கதாக உத்தாரங் கொடுக்கவேணுமென்கிறதாய்க் கேட்டோம். அந்நேரமே வாசுதேவபண்டிதனை அழைப்பித்து இன்று முதலாய்ப் பழயபடிக்கு எப்போதும்போலே காசுக்கு ஒன்பது வெற்றிலேயும் பணத்துக்கு பனிரெண்டரைப் பலம் புகையிலேயும் விற்கச்சொல்லி உத்தாரங் கட்டளையிட்டார்கள். அதின் பேரிலே சுப்பய்யனுக்கு உத்தியோகங் கொடுக்கவேணும் அய்யா அவர் வெகுநாளாய்க் கஷ்டப்படுகிறாரென்று சொன்னேன் அவருக்கு எப்போதும்போலே கோட்டை கிடங்கிலே உத்தியோகம் கொடுத்து காரைக்காலுக்கு அனுப்புவிக்கச் சொல்லி உத்தாரங் கட்டளையிட்டார்கள். இதன் பிறகு கும்பினீர் வர்த்தகரும் மகாநாட்டாரும் கும்பலாய் கூடிக்

கொண்டுவந்து பேட்டிபண்ணிக்கொண்டு சென்னப்பட்டணம் பிடித்ததற்கு முபார்க்குச் சொல்லி அதன்பேரிலே வேதபுரீஸ்வரன் கோவில் மதில் கட்டுகிறதற்கும் உத்தாரங் கேட்டார்கள். அதற்குத துரையவர்கள் இருந்துகொண்டு யோசனை பண்ணிக்கொண்டு பிறகு சொல்லுகிறோம் என்று சொன்னார்கள். அப்படியல்ல எப்படியாகிலும் உத்தாரங் கட்டளையிட வேணும். சகல சனங்களும் ஆனந்தகரமாய்ச் சந்தோஷத்தை யடையும்பொருட்டாய் வெகு காரியங்களுக்கு உத்தாரங் கொடுத்து அவரவர் மனதிற்கு அவரவர் வீட்டுச் சந்தோஷம் போலே பூரிக்கும்படியாய் உத்தாரங் கட்டளையிட்டது பட்டணத்திலே உண்டாகிய சனங்களெல்லோரும் தேவரீரைப் புகழ்ந்துகொண்டு வாழ்த்துகிறார்கள். இப்படிப்பட்ட வேளையிலே அந்த மதில் கட்டுகிறதற்குமாத்திரம் கட்டளையிட்டால் வெகுதூரம் கீர்த்தியாய் இருக்குமென்று பின்னையும் தோத்திரமான உபசாரமான வார்த்தைகளாய்ச்சொல்லிக் கேட்டவிடத்திலே நல்லது அப்படியே உத்தாரங் கொடுக்கிறோம் என்கிறதாய்ச்சொல்லிக்கொண்டே நடந்து கணக்கு எழுதுகிற அறையிலே போய்விட்டார்கள். அந்த மட்டிலே மகாநாட்டாரும் வர்த்தகரும் புறப்பட்டு வெளியே வந்துவிட்டார்கள். அந்த மட்டிலே துரைகளெல்லோரும் கூடிக்கொண்டு விருந்து சாப்பிட்டு வெகு சந்தோஷத்துடனேயிருந்தார்கள்.

1746 ஆ செப்தம்பர் மீ 23 உக்கு அக்ஷய ஸு புரட்டாசி மீ 11 உ வெள்ளிக்கிழமை நாள்

காலமே ஏழு மணிக்கு (ா) துரையவர்கள் கோட்டைக்குப் போய்க் கோட்டைக்குள்ளே வரிசை வைத்துக் கொடி போட்டு மூன்று வரிசை துப்பாக்கிச் சுட்டார்கள். அதன்பேரில் கோட்டையின்பேரிலே யிருக்கிற பீரங்கிகள் கடலோரத்திலே வைத்திருக்கிற பீரங்கிகள் இது முதல்கொண்டு பட்டணத்தைச் சுற்றியிருக்கப்பட்ட கொத்தளங்களிலேயெல்லாம் பீரங்கி சுட்டார்கள். பின்னையும் இன்றையதினம் பண்டிகை கொண்டாடியதின்பேரிலே வீட்டுக்கு வந்து எட்டு மணிக்கு அலுமோசு சாப்பிட்டு வெகு சந்தோஷத்துடனே விளையாடிக் கொண்டிருந்தார்கள். ராத்திரி ஊரெல்லாம் விளக்கு வைத்தார்கள்.

*1746 ஆ செப்தம்பர் மீ 21உக்கு அக்ஷய ஸு புரட்டாசி மீ 12உ வெளிக்கிழமை.*

சாயங்காலம் நாலு மணிக்கு மூசே துலோராம் அவர்கள் சென்னப்பட்டணத்துக் கணக்குக் காரியம் எழுதி திட்டம் பண்ணத்தக்கதாகக் கப்பலின்பேரிலே ஏறினர். ஏறச்சே கோட்டையிலே பதினொரு பீரங்கியும் கப்பலிலே ஏழு பீரங்கியும் போட்டார்கள். ஆனாலிவர் எது போகிறது என்றால் இன்றைய தினம் காலமே பத்து மணிக்கு குமிசேல்கூடி குமிசேலிலே தீர்ந்த வயணம் என்னவென்றால்: காலமே ஏழு மணிக்கு (ா) துரையவர்களண்டைக்குப் போனேம். போனவிடத்திலே துரையவர்கள் சொன்ன சேதி: சென்னப்பட்டணத்திலேயிருந்து காகிதம் வந்தது. அதிலே சென்னப்பட்டணத்து ஊர்ச் சேதி ஒன்றும் சவிஸ்தாரமாய்த் தெரியவில்லையென்று எழுதிவந்தது. உன்கிட்ட அவ்விடத்து நிலவரியாயிருக்கிறவன் ஆராகிலும் இருக்கிறானாவென்று கேட்டார். இருக்கிறானென்று சொன்னேம், அதற்குத் துரையவர்கள் சொன்ன சேதி: அவனைப் பயணம்பண்ணி இந்தக்ஷணம் அனுப்புவிக்கவேணும் எதனாலே என்றால் அவ்விடத்திலே பணங்காசு உள்ளவன் இன்னான், காரியமாயிருக்கிறவன் இன்னான், அவனவன் நிருவாகம் இப்படி, ஆஸ்தி இப்படி, யோகஸ்தன் இன்னான், அவன் ஆஸ்தி நிருவாகம் இப்படியென்றும், இன்ன இன்ன வியாபாரம் பண்ணினவனென்றும், இன்னான் வந்தான் இன்னான் வரவில்லை என்றும் இதுகள் முதலான ஊரில் உளவெல்லாம் நம்முடைய மூசே துப்ரம்மேலி முதலான பேருக்கும், உன் தம்பிக்கும் தெரியப்படத்தக்கதாகச் சொல்லத்தக்கனவனைக் கெட்டிக்காரனைப் இப்பயணம் பண்ணியனுப்ப வேணுமென்று சொன்னார். அதற்கு நான் சொன்ன சேதி: எங்கள் இனத்திலே தாண்டவராயப் பிள்ளையென்று கெட்டிக்காரன் வந்திருக்கிறான். அவனுக்குச் சகலமும் தெரியும். அவனையனுப்புவிக்கிறேன என்று சொன்னேன். ஆனாலிப்போதானே அனுப்புவிக்கவேணும். சீக்கிரம் போய்ப் பயணம்பண்ணியனுப்பு என்று சொன்னார். நல்லது என்று நான் வெளியிலே வந்தவுடனே கப்பல் ஒன்று பயணம் பண்ணி சென்னப்பட்டணம் கணக்கோடே கூடினது. எல்லாம் விசாரித்துத் திட்டப்படுத்துகிறதற்கு மூசே துலோராமையும் ஆலோசனைக்கு மூசே வெறத்தேல்மேயும் அரண்மனைக்காரருக்குச் சமாதானம்பண்ணுகிறதற்கு மூசே எலியாசு மருமகன் சுவானி சுவையும் பார்சியுடனே கூடினதற்கு மூசே கோத்தேல்லாம் மருமகன் பிரியேல் என்கிறவனையும் பயணம் பண்ணி ஐந்து மணிக்கு எல்லாம் கப்பல் பாய்விரித்து சென்னப்பட்டணம் போகச்சொல்லி அனுப்புவித்தார். நாமும் உடனே மூசே துலோராம் வீட்டுக்குப்போய் அவரைக்கண்டு அவருடனே

சொன்ன சேதி: நீர் சென்னப்பட்டணம் போகிறுப்போலே யாச்சுதே. அங்கே என்தம்பி யிருக்கிறனே அவன் இதுவரைக்கும் சுகமா யிருந்தவனல்லாமல் இப்படி ஒரு காரியங்களிலே அவதிப்பட்டவனல்ல. ஆனபடியினலே நீர் என் தம்பியிடத்திலே மெத்தவும் தயவுவைத்து ஒரு வேளையிலே அவன் ஏற நடந்தாலும் குறைய நடந்தாலும் நீர் மனம் பொறுத்து அவனுக்குத் தெரியச்சொல்லி மானமாய் நடத்துவித்துக் கொண்டு வரவேணும் என்று சொன்னேன். அதற்கு அவர் சொன்ன சேதி: ரங்கப்பா, நீ இத்தனை வந்து சொல்லவேணுமா எனக்கு என்ன தெரியாதா, நீ வேறே நான் வேறேயா, நீ அப்படி ஒன்றும் பேதகமாய் எண்ணத் தேவையில்லை. நானங்கே போன பிற்பாடு நான் உன் தம்பிக்கு அவ்விடத்திலே நடத்திவைக்கிற மரியாதைக்கப்பால் அவன் உனக்கு எழுதியனுப்புவிக்கிற காகிதத்திலே தெரியவருமென்று சொல்லி மெத்தவும் நம்பிக்கையாய்ச் சொல்லிப்போட்டுப் போனர்.

அவர் சென்னப்பட்டணத்துக்குப் போகிறபோது தாமிருந்த வெள்ளிக்கிடங்கு உத்தியோகத்தை மூசே மிரா. கையிலே ஒப்புவித்துப்போட்டுப் போனர். நானும் உடனே பனிரண்டு மணிக்கு வீட்டுக்குவந்து தாண்டவராயப்பிள்ளையை உடனே பயணம் பண்ணித் தம்பிக்கும் சகல-காரியமும் தெரியத்தக்கதாய் வயணமாய் காகிதம் எழுதிக்கொடுத்து ஒரு மணிக்கெல்லாம் தாண்டவராயப்பிள்ளை மெட்டு தாண்டிப்போகத்தக்கதாகப் பயணம்பண்ணியனுப்பிப்போட்டுஅப்பால்போசனம் பண்ணி நித்திரைபண்ணி ஐந்து மணிக்கு எழுந்திருந்து பாரிவேட்டைக்கு அப்பாவும் குதிரைமேலேயும் நன்னுச்சிக் குழந்தையும் பல்லக்கிலேயும் குலசேகரம் வெங்கட்ட நாராயணப்பையன் ஒரு குதிரைமேலேயும் ஏற்றுவித்துச் சேவகர் மற்றப்பேரெல்லாம் கூடக்கூட்டி முன்னதாய்ப் பாரிவேட்டைக்கு அனுப்பி பின்னேடே நாமும் நம்முடைய பரிசனங்களுடனே கூடப் பாரி வேட்டைக்குப் போய் ஏழு மணிக்கு வீட்டுக்கு வந்தோம். இற்றைநாள் ராத்திரியும் ஊரெல்லாம் பண்டிகை கொண்டாடி வீட்டுக்கு வீடு விளக்கு வைத்தார்கள்.

1746 ஆு செப்தம்பர் மூ 25 உ க்ஷய வருஷ புரட்டாசி மூ 13 உ ஆதிவாரம்.

இற்றைநாள் நடந்த சேதி சூரிய உதயமான ஏழு மணிக்குப் பிற்பாடு (ரா) துரையவர்கள் வீட்டுக்குப்போய் அவர்களைக் காண்பித்துக்கொண்டவிடத்திலே (ரா) துரையவர்கள் சொன்ன சேதி: உன் தம்பி சென்னப்பட்டணத்திலே நான் சொல்லியனுப்பின ஒடுதிப்படி நடவாமல் தன் மனதுக்குச் சரிப்போனபடி நடக்கிறன். ஆனபடியினலே அவனங்கேயிருக்கத்

தேவையில்லை. அவனை வரச்சொல்லி எழுதியனுப்பு என்று சொல்லிப்போட்டு அப்பாலே போனார். அதன்பேரிலே நான் வெளியிலே அந்தச் சாலையிலே இருந்துகொண்டு இப்படி (ரா) துரை சொல்லவந்தகாரியம் என்னவென்று யோசனைபண்ணி கோபாலசுவாமியை அழைத்துவரச்சொல்லி பிரசினம் கேட்டோம். அதற்குச் சுவரி சூரியன் ஆரூடத்தைப் பார்க்கிறான். இன்றையதினம் போராது என்று சொன்னான். ஆனாலும் தம்பி நடத்தின காரியம் இன்னபடி நடத்தினாரென்று அறிய வேணும். என்றதினாலே திரும்பவும் துரையவர்கள் அண்டைக்குப் போய் உங்கள் ஒடுநிதப்பி தம்பி நடக்கத்தக்கது இல்லை. அங்கே இருக்கிற பேர் என்னத்தினாலே எழுதினார்களென்று தெரியாது. அது நன்றாய் அறியவேணும் என்று சொன்னேன். அதற்கு துரையவர்கள் மூசே தெப்பிரமேனி அனுப்புவித்த காகிதத்தை எடுத்து வாசித்தார். அதிலே எழுதியிருந்தது என்னவென்றால்: ரங்கப்பிள்ளை தம்பி என்னுடனே ஒருகபுறும் வந்து சொல்லுகிறதில்லை. அவனும், லபோர்தொனேயும் ஒன்றாய்ப் போனார்கள். எனக்கு ஒரு சேதியும் தெரிகிறதுமில்லை என்று எழுதியிருந்தது. அதை வாசித்துக் காண்பித்து இனிமேல் அங்கே உன் தம்பி இருக்கவேண்டாம். இவ்விடத்துக்கு வரச்சொல்லி எழுதி அனுப்பிவிடு என்று சொன்னார். அதற்கு நான் எழுதியனுப்புவிடுகிறேன். அவன் இப்போது புறப்பட்டுவந்தால் ரொம்ப அபவாதமாச்சே என்று சொன்னேன். அதற்குத் துரையவர்கள் ஆனால் உங்கள் வீட்டுக் காரியங்களாய் ஒன்றை எழுதியனுப்பிவித்துச் சொல்லிப்போட்டு எழுந்திருந்து அப்பாலே போனார். அதன்பேரிலே இனிமேல் நாம் ரெட்டிக்கிறது நல்லதல்ல. தம்பி செய்கிறகாரியம் தெப்பிரமேனி எழுதியனுப்புவித்த வக்கணை தெரிந்துபோச்சே. இதற்குத்தக்க ஆலோசனை வெளியிலே போய் பண்ணிக்கொள்ளுவோம் என்று வெளியே வந்து கோபால்சுவாமியையும் அழைத்துக்கொண்டு பாக்குக்கிடங்குக்கு வந்து தம்பிக்குத் துரை சொன்ன வயணம் கடுதாசிகள் எழுதியனுப்புவிக்க இருக்கிறதிலே ஒன்பது மணிக்கு மூசே பரிதி சென்னபட்டணத்திலே இருந்து வந்து பாக்குக் கிடங்கு வழியாய் (ரா) துரையவர்கள் வீட்டுக்குப் போனார். உடனே வாசலிலே புறப்பட்டு மூசே பரிதியைக் காண்பித்துக்கொண்டு ரொம்ப ஸ்தோத்திரமாய்ச் சொன்னேன் அவரும் சந்தோஷமாய்த்தானே உத்தாரம் கொடுத்து துரை வீட்டுக்குப் போனார். அதன்பேரிலே நாமும் கோபாலசுவாமியும் ஒரு நாழிகை பேசிக்கொண்டிருந்து மூசே பரிதி வந்தாரே (ரா) துரையவர்கள்கிட்ட என்ன நடக்குதோ அறியவேணும் என்று துரை வீட்டுக்குப் போனோம். அங்கே குமிசேல் கூடி (ரா) துரையவர்கள்கூட பரிதிகூட இருந்து ஆலோசனை பண்ணிக்கொண்டு இருந்தார்கள். பதினொரு மணிவரைக்கும் ஆலோ

சனைபண்ணி அதன்பேரிலே மூசே பரிதி வீட்டுக்குப் போனார். நானும் உடனே புறப்பட்டு பரிதி வீட்டுக்குப் போய் அவரைக் கண்டு முன்னாலே காரைக்காலுக்குப் போய் தஞ்சாவூராரை அடித்துச் செயம்கொண்டீர். இப்போது ஆனால் சென்னப் பட்டணத்தை ஒரு நாளையிலே அடித்துக் கட்டியே போட்டீர். உம்முடைய திராணியும், தைரியமும், செளகரியமும் இந்த லோகத்திலே உம்மைப்போலே ஒருத்தருமில்லையென்று சொல்லி ரொம்ப ஸ்தோத்திரமாய்ச் சொன்னேன். அதற்குப் பிறகு பரிதி சொன்ன சேதி: ரங்கப்பன் எங்கே போனாலும் செயமாகுது பார்த்தாயா. ஆனால் உன் தம்பி மெத்த கெட்டிக்காரன் அங்கே போனவிடத்திலே நாங்கள் எந்தக் காரியம் சொன்னாலும் அந்தக் காரியங்கள் எல்லாம் கொண்டுவந்து கொடுத்தான். அதுகள் நம்முடைய ஊருக் குள்ளே வேணுமென்றாலும் பிரயாசையாயிருக்கும் அப்படிக் கொத்த காரியங்கள் எல்லாம் பிற ஊரிலே கொண்டுவந்து கொடுத்தான். சாக்கிரதையாகவும் இருந்தான். அவனைப் போலே கெட்டிக்காரன் ஒருத்தருமில்லை உன் தம்பி மெத்த வும் திராணிக்காரன் என்று தம்பி மேலே சந்தோஷமாய்ச் சொன்னார். அதற்கு நாம் சொன்ன சேதி: நீரானால் சந்தோஷ மாய்ச் சொல்லுகிறீர். மூசே துப்பிரமேனி தம்பிபேரிலே குறைகளாக துரையவர்களுக்கு எழுதி யனுப்புவித்தார். துரையவர்கள் என்னைக் காலமே யழைத்து உன் தம்பியை வந்துவிடச்சொல்லி எழுதியனுப்பச்சொன்னார் என்று சொன் னேன். அதற்கு மூசே பரிதி சொன்ன சேதி: அது என்ன காரி யம் நான் துரைக்குச் சொல்லுகிறேன் உன் தம்பியைப் போலே திராணிக்காரன் ஒருத்தனிருக்கிறானா? மூசே லபோர் தோனே ஒரு நாழிகைக்கு ஆயிரம்தரம் உன் தம்பியை அழைத் துப் பேசுவான். மூசே துப்பிரமேனி உன் தம்பியை அழைத்துப் பேசுகிறதில்லை. லபோர்தொனே உடனே அடிக்கடி போய் பேசுகிறானென்று அந்தக் கோபத்தினாலே மூசே துப்பிரமேனி எழுதினான். ஆனாலென்ன, நான் துரைக்கும் சொல்லுகிறேன் மூசே துப்பிரமேனிக்கும் எழுதியனுப்புவிக்கிறேன். நீயும் உன் தம்பியும் லபோர்தொனேகிட்டே போகவேண்டாம். துப்பிர மேனிக்கு சகல கபுறும் சொல்லிக்கொண்டு அவர்கிட்டே காத் திருக்கச்சொல்லி அவர் உத்தாரத்தின்பேரில் போய் பேசிவந்து அவர்கிட்டே நடந்த சேதியெல்லாம் அப்போதைக்கப்போது உடனேவந்து துப்பிரமேனிக்குச் சொல்லி துப்பிரமேனிகிட்டே வேகாத்திருக்கச்சொல்லி எழுதியனுப்பு என்று சொல்லிப் பரவசமுங்கொடுத்து அனுப்புவித்தார். பனிரெண்டு மணிக்கு நாமும் வீட்டுக்கு வந்து தம்பிக்குத் திரும்பவும் பரிதி சொன்ன சேதிக்கு ஒரு கடுதாசி எழுதியனுப்பிப்போட்டு அப்பால் ஸ்நானம் பண்ணிவிட்டு சாப்பிட்டுப்போட்டு நித்திரைபண்ணி ஐந்து மணிக்கு எழுந்திருந்து கிலக்கிடங்குக்குப் போனவிடத்

திலே ஆனைக்கடன்காரன் ரகாசிகான் முதலானபேர் எங்கள் கட்டளை கொடுக்க வேண்டாமாவென்று ரொம்ப தகராருய்ப் பேசினுர்கள். அவர்களுக்கு எல்லாம் சமாதானம் பண்ணிப்போட்டு ஏழு மணிக்கு வீட்டுக்கு வந்து தெரு வாசலிலே உலாத்திக்கொண்டிருக்கிறதில்லே. அழகப் பிள்ளை, அருணசலசெட்டியார் வந்து சொன்னசேதி என்ன வென்ருல் (ர்) துரையவர்களும் ஆலோசனைகாரரும் மூசே பரிதியும் குமிசேல்கூடி யோசனைபண்ணுகிருர்கள். எட்டு மணியாயும் தீனிக்குக்கூட எழுந்திருக்கவில்லே. சாயங்காலம் நாலு மணிக்குச் சென்னப்பட்டணத்திலே யிருந்து கடுதாசி வந்து அதிலே யென்ன எழுதிவந்ததோ தெரியாது. அதுவல்லா மல் மூசே லபோர்தோனே ஆனி மீ கடைசியிலே ஒன்பது கப்ப லுடனே புதுச்சேரிக்கு வருகிறபோது நாகப்பட்டணத்துக் குத் தெற்கே இங்கிலீசுக்காரர் வந்து சண்டை கொடுக்கிற போது இங்கிலீசுக்காரருக்கு அறியாமல் ஒரு சண்டைக் கப்பல் பயணம் பண்ணி புதுச்சேரிக்கு வராமல் ஓசந்து வங்காளத் துக்குப் போகச் சொல்லியனுப்பி இருந்தாரே அந்தக் கப்பல் பங்காளத்துக்குப் போகிற வழியிலே இங்கிலிஷ்காரர் கப்பல் சென்னப்பட்டணத்திலிருந்து போனதுகண்டு அதைப் பிடித்துக்கொண்டு அதிலேயிருந்த நாலு லக்ஷம் ரூபா யும் சிறிது முத்துகள் சம்புதாசு அனுப்பின ரத்தின நகைகள் முதலானதும் எடுத்துக்கொண்டு வங்காளத்துக்குப் போனுர் கள். அந்தக் கப்பல் கெங்கையிலே போகிறபோது தண் ணீரிலே முழுகிப்போச்சுது. அந்தக்கப்பலிலே அறுநூறு பேர் இருந்ததிலே முப்பது நாற்பது பேர் நீந்துவந்து பிராணன் தப்பினுர்கள். மற்றப்பேர்கள் கப்பலில் கப்பித்தான் மூசே பந்துமேலன்கூடக் கப்பல்கூட கெங்கையிலே மூழ்கிப்போனுர்க ளென்று இந்தச் சேதிக்கு (ா) துரையவர்களுக்கு குமிசேல் கூடி பேசிக்கொண்டிருக்கிருர்களென்று சொன்னுன்.

1746 ஆ செப்தம்பர் மீ 26 உக்ரு அக்ஷய ஹூ புரட்டாசி மீ 14 வ திங்கட்கிழமை

இற்றைநாள் காலமே ஏழு மணிக்கு மூசே பரிதி வீட்டுக்குப் போனேம். அவ்விடத்திலே மூசே பரிதி அவர் கள் சொன்னசேதி ஏதென்ருல்: தம்பிசேதிக்கு நேற்றுச்சாயங் காலம்தானே மூசே தேப்பிரமேனிக்கு வயணமாய்க் கடுதாசி எழுதியனுப்புவித்தேன். (ா) துரையவர்களுடனே தம்பி சேதி சொல்லுகிறதற்கு நேற்றுச் சமயமில்லாமல்போச்சுது. இன் றைக்கு எப்படியும் சொல்லுகிறேனென்று சொன்னுர். ஆனுல் நல்லதென்று அவரை யனுப்புவித்துக்கொண்டு எட்டு மணிக் குப் பாக்குக்கிடங்குக்கு வந்தோம். அங்கே வந்தவுடனே சென்னப்பட்டணம் தபாலிலே தம்பி காகிதம் கொடுத்தா

னென்று கொண்டுவந்துகொடுத்தார்கள். அந்தக்காகிதத்திலே எழுதியிருந்த சேதி யேதென்றால் தம்பிக்கு அவ்விடத்துக் காரியம் மூச்சுவிட நேரமில்லை. வேளைக்குச் சாப்பாடு நித்திரையில்லை. அதினாலே மூலங்கண்டு தொந்தரவாயிருக்கிறது என்று புதுச்சேரிக்குக் காகிதம் எழுதப்பொழுதில்லை. அந்தந்த வேலைக்கு உத்தியோகஸ்தர் வராததினாலே வெகு தொந்தரவாயிருக்கிறது என்றும் உடம்பு உபாதையினாலேதான் வந்துவிடுகிறேனென்று எழுதியிருந்தது. அந்தக் காகிதம் பார்த்துக்கொண்டு (ஈ) துரையவர்களண்டைக்குப் போனோம். அங்கே போனவிடத்திலே (ஈ) துரையவர்கள் சொன்னது: உன் தம்பி சேதி என்னவென்று கேட்டார். அதற்கு நாம் சொன்னது: உங்களுடைய ஓடுதி தப்பி நடக்கத்தக்கதில்லை யென்று சொன்னோம். அது உள்ளதுதானே. ஆனாலும், மூசே லபோர்தோனே அடிக்கடி அழைத்துப் பேசுவான். அவன் சாடை எனக்குத் தெரியும் ஆனாலுமிப்போதும் நீ எழுதி யனுப்பு. எதன்மூலம் என்றால், மூசே லபோர்தோனே யழைத்தால் போய்ப் பேசி அங்கே நடந்த சேதி அப்போதைக்கப்போது மூசே தெப்பிமேனிக்குப் போய்ச் சேதி சொல்லச் சொல்லியும் பட்டணம் கபுறு எல்லாம் மூசே தெப்பிமேனிக்கு கபுறு சொல்லிக்கொண்டு வரச்சொல்லியும் எழுதி யனுப்புவிக்கச்சொல்லிச் சொன்னார். பின்னையும் சந்தோஷமாகப் பேசினார். அதின் பேரிலே துரையவர்களை யனுப்புவித்துக்கொண்டு பாக்குக் கிடங்குக்கு வந்து துரையவர்கள் சொன்னபடிக்குச் சென்னப்பட்டணத்துக்குத் தம்பிக்குக் கடுதாசியும் எப்படி மனது சமாதானமாய்க் காரியங்கள் பார்ப்பாரோ அதற்குத் தக்கதாக எழுதி மூத்திரைபோட்டுத் தபாலிலே யனுப்பிப்போட்டு வீட்டுக்கு ஒரு மணிக்கு வந்தோம். வீட்டுக்கு வந்தவிடத்திலே கோட்டை சுப்பய்யன் சென்னப்பட்டணம் பயணம் போகிறேனென்று யனுப்புவித்துக் கொள்ள வந்தார். அவருக்கு வெகுமானங்கொடுத்துத் தம்பிக்குக் காகிதமும் எழுதிக்கொடுத்து அனுப்புவித்தோம். இற்றை நாள் பத்து மணிக்கு மாபோசுகான் மூசே லபோர்தோனே பேருக்கு அனுப்புவித்த காகிதம் லபோர்தொனே துரையண்டைக்கு யனுப்புவித்தார். அந்தக் காகிதத்திலே யெழுதியிருந்த சேதி: நீங்கள் சென்னப்பட்டணத்திலேயிருக்கத் தேவையில்லை. கப்பல் ஏறிப்போங்கள் அல்லவென்றால் நாம் தண்டுவருகிறோம். உங்கள் மனுஷன் கெட்டிக்காரனாய் ஒருத்தனை யனுப்பி வையுங்கோளென்று இதற்கடுத்த சேதிகளாக எழுதியிருந்தது

அதைப் பார்த்துக்கொண்டு துரையவர்கள் லபோர்தொனே பேரன் வந்தானே மறு காகிதம் பாரிசிலே எழுதிவைத்தார் எழுதின வயணம் ஏதென்றால், நாங்கள் வழிப்போக்கர் முன்னாலே இங்கிலீசுக்காரன் எங்கள் கப்பல்களையும் பிடித்துக்கொண்டு இந்த ரேவுகளிலே நீங்கள் அவர்கள் எங்களைப் பேசின சங்கதிகளெல்லாம் நீங்கள் அறிந்திருக்கிறீர்கள். அப்படியிருந்தும் நீங்கள் அவர்களுக்கு எழுதி யனுப்பினவிடத்திலே அவர்கள் தங்கள் பேச்சுக்கேளாமல் போனதும் தாங்கள் அறிவார்கள் அப்படியிருக்க நாங்கள் எங்கள் பண நிமித்தியம் அவர்கள் பட்டமுங்கட்டி அவர்களைக் கப்பலேற்றி எங்கள் கொடியும் பறக்கிறது. அப்படியிருக்க நீங்கள் எங்களைக் கப்பல் ஏறச்சொன்னால் எங்கள் சாதி ஞாயம் எங்கள் ராசா எப்படி ஒடுதி கொடுக்கிறாரோ அந்தப்படிக்கு நாங்கள் நடக்கிறதேயல்லாமல் மற்றப்படி ஆர் சொன்னாலும் அவர்கள் தொரட்டிக்கு எட்டுரத்துக்கு எங்களுக்கு ஞாயமில்லை. நாங்கள் வழிப்போக்கரா யிருக்கிறபேருக்கு இவ்விடத்திலே யிருந்து தங்கள் அண்டைக்கு அனுப்புவிக்கிறதற்கு மாதுபா மனுஷர் ஆருமில்லை. தாங்கள் சாரிவருகிறோமென்று எழுதினார்களே அப்படி தாங்கள் சாரிவந்தால் எங்கள் காரியம் அப்போது தங்களுக்கு நன்றாய்த் தெரியும். வாருமென்கிறதாய் இது முதலான சேதியாய் பாரிசிலே எழுதிவித்து அனுப்புவித்தார். இது சேதி சந்தாசாயபு அவர்கள் இராசத்துகான் மகனுக்குக் கலியாணம் பண்ணவேணும். கோதுமை சர்க்கரை முதலான சாமான் வேணுமென்று வந்து கேட்டார்கள். தொஸ்ததலிகான் பெண்சாதியும் தயக்கா சாயபு மகன் அல்லிநக்கி சாயபும் வருகிறார்கள். எதிராகப் போகவேணுமென்றும் கேட்டார்கள். அதற்குத் துரையவர்கள் கோதுமை சர்க்கரை முதலான சாமான்களுக்கும் உத்தாரங் கொடுத்து எதிர்கொண்டு போகிறதற்கும் உத்தாரங் கொடுத்து அவர்கள் திருவேங்கடப்பிள்ளையவர்கள் சாவடிக்கு வந்தவுடனே வந்து எச்சரிக்கையும் கொடுத்து அனுப்புங்கோளென்று சொன்னார். அதற்கு அவரும் நல்லதென்று சொன்னார்கள். அப்பால் கும்பினீர் வர்த்தகர் வந்து சலாம் பண்ணினார்கள். ஏன் வந்தீர்களென்று கேட்டார். வண்ணான்துறை சம்மதிப்பணம் கேட்கவேணுமென்று வந்தோம் என்று சொன்னார்கள். ஆனால் அந்தச் சம்மதி கோன்சேலிலே கேட்டு உங்கள் கணக்குத் தீர்த்துக்கொடுக்கச் சொல்லுகிறோம் போங்கோளென்று சொன்னார். அதற்குப் பின்னையும் நின்றார்கள். நீங்கள் வேளையறியத் தேவையில்லையா, சமயம் பார்க்கத்தேவையில்லையா இந்த வேளை கேட்கிற

வேளை கேளாத வேளையென்று தெரியாமல் எப்படி கும்பினீர் வர்த்தகம் பண்ணுகிறீர்களோ தெரியாது என்று சொன்னார். அய்யா நாங்கள் அத்தனை தூரந் தெரிந்தால் வருவோமாவென்று சற்று தாழ்ந்த வார்த்தையாய் துரையை ஸ்தவுத்தியமாய்ச் சொன்னார்கள். அதன்பேரிலே துரை யிருந்துகொண்டு இப்போது சென்னபட்டணம் கூட நம்முடைய வசமாயிருக்கிறபடியினாலே இனிமேல் சென்னப் பட்டணத்திலேயிருக்கிற கும்பினீர்வர்த்தகர்எல்லாம் நெடங்கி போடுகிறபடியினாலே நீங்களும் போடவேணும் என்று சொன்னார். அப்படியே நீங்கள் தயவுபண்ணிக்கொடுத்தால் அப்படியே போடுகிறோமென்றுசொன்னார்கள். அதற்குத் துரை ஒன்றும் சொல்லாமல் சென்னப்பட்டணத்திலேயிருக்கிற சரக்கெல்லாம் நீங்கள் வாங்கவேணும் இதற்கு ரங்கப்பிள்ளையுடனே ஆலோசனை பண்ணிக்கொண்டு அது நடக்கத்தக்கதாக யோசனை பண்ணுங்கோளென்றும் நீங்கள் நாகப்பட்டணத்திலேயிருக்கிறபடியினாலே உங்கள் மாரிபத்தாகத்தானே சகல சரக்கும் விற்கிறோம். அவ்விடத்து வர்த்தகருக்கு விற்கிறதில்லை இதற்கு நீங்களும் ரங்கப்பனும் ஆலோசனைபண்ணிக்கொண்டு வந்து சொல்லுங்கோள். சரக்கு விலையிலேயும் சதிரப்பண்ணிக்கொடுக்கிறோம் என்று சொன்னார். அதன்பேரிலே நல்லதென்று சொல்லி இன்னமொரு மனுவு இருக்கிறதென்று சொன்னார்கள். என்னவென்றால்: வெற்றிலை புகையிலை பரிச்சேதம் அகப்படுகிறதில்லையென்று வாசுதேவபண்டிதன் நசுக்கினான் என்று சொன்னார்கள். அதென்னவென்று கேட்டார். அதிலே நானிருந்துகொண்டு அந்தப் பேச்சு சொல்லுகிறதல்லவென்று வர்த்தகருடனே சாடையாய்ச் சொன்னேன். துரை கிட்டே நிற்கிறபடியினாலே அவர்கள் சொன்னதைச் சொல்லென்று சொன்னார். அதன்பேரிலே வெற்றிலை புகையிலை பரிச்சேதம் கொடுக்கிறதில்லை என்று அவன் பண்ணுகிற அயிராணைச் சொல்லுகிறார்கள் என்று சொன்னதற்குத் துரையிருந்துகொண்டு விலை ஒசந்து விற்கிறதானபடியினாலே வெற்றிலை வரவில்லையாங்காட்டும் என்றார். அதற்கு நானிருந்துகொண்டு சும்மாயிருந்தேன். அவனுக்கு ஒசந்து விற்கிறதற்கு மனது இல்லாமல் நடத்துகிறானேவென்றார். உங்களுக்குத் தெரியாததொன்று இருக்கிறதோ, சமஸ்தமும் அறிந்தவர்களாய்ச்சே என்று சொன்னதற்கு இவனுக்கு என்ன நஷ்டம் அவன் சுவாபம் அப்படியென்று சொன்னார். அவனிப்படியெல்லாரும்

போய் பிராது பண்ணுல் உங்களுக்குக் கோபம்வரும். அவனை யழைத்துக்கேட்டால் வெற்றிலை ஒசந்த விலையென்றும் ஆரும் கொண்டுவரவில்லையென்றும் சொன்னுல் எப்போதும் அவ் விலைக்கு வில்லுங்கோளென்று சொல்லுவீர்களென்று நினைத் துக்கொண்டு நடத்துகிறதேயல்லாமல் வெற்றிலை வேணு மென்று அகப்படுமென்று சொன்னதற்கு நான் அப்படி ஒருக் காலும் என் வாயிலேயிருந்து புறப்பட்டது தப்புயென்று யோசனைபண்ணவேண்டாம் கெட்டியாய் சனங்களுக்கெல் லாம் சொல்லு என்று வாசுதேவபண்டிதனை யழைக்கச்சொன் னுர். நாங்கள் வீட்டுக்கு வந்தோம் அதின் பிற்பாடு அவன் போனவிடத்திலே ரொம்பகோபம்பண்ணினுர் அதன்பேரிலே அந்தப்படிக்குத்தானே தாக்ஷியில்லாமல் விற்கிறேனென்று சொல்லிப்போட்டுவந்தான். இற்றைநாள் மத்தியானம் வரைக் கும் சரீரசுவஸ்தமில்லாமல் உடுத்திக்கொள்ளாமல் நெடுங்கால் சட்டையுடனே யிருந்தார். இந்தநாள் ஆற்காட்டு நவாபு உசேன்சாயபு முதலானபேருக்கெல்லாம் சென்னபட்டணம் செயமானதற்கு மொபார்க்கு காகிதமெழுதி முன்சிகுலாபு சிங்குக்கு இருபது போட்டல் சாராயமும் நூறு ரூபாயும் அசரத்து நவாபுக்குச் சென்னப்பட்டணம் பத்தேபண்ணுகிற தற்கு நசர் பதினைந்து மோகரியும் அனுப்பினுர்கள். சென்னப் பட்டணத்துக் காரியத்துக்கு நவாபுக்குச் சர்க்கரை தின்பிக்கி றேமென்று நவாபுக்கு முன்சிகுலாபுசிங்கு முகாந்திரமாய்ச் சொல்லச்சொல்லி வக்கீல் சுப்பய்யனுக்குக் காகிதம் எழுதி யனுப்பினுர்கள். பின்னையும், மாபுசுகான் சென்னபட்டணத் தின்பேரிலே போகாதபடிக்கு நயபயமாய்ச் சொல்லச் சொல்லி யும், அதற்கு வயணமாய் எழுதினுர்கள். இற்றைநாள் மீர்குலா முசேனுக்கும் இமாம்சாயபுக்கும் சந்தா சாயபுக்கும் மொபா ர்க்குக் காகிதமெழுதி கூட அனுப்பினுர்கள். இற்றைநாள் சரீரம் சுவஸ்தமில்லையென்று கால் சட்டையுடனே யிருந்தார்.

1746 ஆ செப்தம்பர் மீ 27 உ க்ஷய வூ புரட்டாசி மீ 15 உ

இற்றைநாள் செவ்வாய்க்கிழமைதினம் குவர்னதோருக் குச் சரீரம் சுவஸ்தமில்லையென்று உடுத்திக்கொள்ளாமல் இருந்தபடியினுலே நாங்கள் போகவில்லை. அதன் பிற்பாடு அவராய் அழைத்தனுப்புவித்தபோது உடுத்திக்கொண்டிருந் தார். அப்போது சற்போ இஞ்சினீர் பேசியிருந்தான். அப் போது சந்தா சாயபு வீட்டுக்கு ஆறுயிரம் கல்லுக்கு உத்தாவு கொடுக்கவேணுமென்று கேட்டதற்கு இஞ்சினீருக்கு உத்தாரங் கொடுத்தார். அவர் முகம் பார்த்தால் தலைநோய் சாடையாய்க் கண்டது. ஆனபடியினுலே, புறப்பட்டு வந்துவிட்டோம். அப்

பால், நம்முடைய நடக்கை எதாஸ்தியாய் சாப்பாடு நித்திரை யெல்லாம் நடந்தது. இற்றைநாள் அருணசலசெட்டி இரு சப்பசெட்டி முதலான சிறிது மளிகைக்காரர் சென்னபட்டணத்துக்குச் சிறிது சரக்கு வாங்கவேணுமென்று போகத் தக்கதாக என்னண்டை.யிலே வந்து அனுப்புவித்துக்கொண்டு போனார்கள், நல்லதென்று என்னையும் தம்பிக்குக் காகிதம் எழுதியனுப்புவிக்கச் சொல்லச் சொன்னார்கள். நல்லதென்று எழுதி டபாலிலேயனுப்பிவிட்டேன், போகும்போது அருணசல செட்டியுடனே தம்பி வருகிறானென்று ரொம்பசுறுக்கிலே எழுதினபடியினாலே நாலுநாள் முனம் பொறுத்திருக்கத்தக்கதாக எப்படித் தெரியப்படச்சொல்லவேணுமோ அந்தப்படிக்குத் தெரியச்சொல்லச்சொல்லி அதற்குத் தக்கவயணமாய்ச் சொல்லியனுப்பினேன். இற்றைநாள் தம்பிக்கு ஆலோசனை காரியங்களுக்குக் கூட இருக்கவேணுமென்று பத்துநாளைக் காரியத்துக்கு இருக்கச்சொல்லக் கண்டால் குருவப்ப செட்டியையும் தம்பியண்டைக்குப் பயணம்பண்ணி யனுப்புவித்தேன்.

*1746* ஆ செப்டம்பர் மீ *28*உக்கு அக்ஷய ஸு புரட்டாசி மீ *16*உ புதன்கிழமை.

இற்றைநாள் காலத்தாலே எட்டு மணிக்கு, சாமாராயர் வந்து முன் நவாபு கிரி பண்ணின தொஸ்தல்லிகான் பெண்சாதி நம்முடைய அக்கிராகரத்திலே வந்து இறங்கினார்கள். நாளை காத்தாலே ஊருக்குள்ளே வருகிறார்கள். முன் நடந்தபடிக்குத் துரை தெத்து வாசலிலே வந்திருக்கவேணும் என்றும், அப்புறம் நயினியப்பிள்ளையவர்கள் சாவடிமட்டுக்கும் இரண்டு கோன் சேல்காரரும் மேளதாளத்துடனே வரவேணுமென்றும் கெவுனிவாசலிலே பீரங்கிப்போடவேணும் அப்பால், வீட்டிலே போய் இறங்கின்வுடனே கோட்டையிலே பீரங்கிப்போடவேணும் என்றும் வந்து சொன்னார். நல்லதென்று துரை வீட்டுக்குப் போனவிடத்திலே சின்ன முதலியும் மதனந்த பண்டிதனும் இருந்தார்கள். நான் போனவுடனே துரை மத்தேசு கபினேத்துக்குப்போய் மறுபடி தம்முடைய கபினேத்துக்குப் போகும்போது சாமாராயரும் நானும் எதிராக நின்றோம். பார்த்து என்னவென்று கேட்டார். தானப்பமுதலி இருந்துகொண்டு அல்லிதொஸ்துகான் பெண்சாதி வாராள். ரங்கப்பிள்ளை சாவடியிலே வந்திறங்கினார்களாம். நாளை காத்தாலே இவ்விடத்துக்கு வருகிறார்கள் என்று எச்சரிக்க வந்தார்கள், என்று சொன்னார். நல்லதென்று அந்தப்படிக்கு நாளையத்துக்குத் தக்கதாய் நடப்பிப்போம் என்று சொன்னார். அதற்கு நானிருந்துகொண்டு அவர்கள் நினைப்பு அப்படியிருக்கவில்லை யென்று சொன்னேன். அதென்ன வயணமென்று கேட்டார், மூசே தும்மா குவர்னதோர் துரைத்தனம் பண்ணுகையிலே

இவர்கள் வந்தபோது தெத்துயாசற்படியிலே வந்தார். அங்கேயிருந்து சின்னதுரை மற்ற கோன்சேல்காரர் எதிராக அனுப்பினார்கள் அந்தப்படிக்கு நடக்கவேணுமென்று சொல்லு கிறார்களென்று சொன்னேன். அதற்கு துரை யிருந்துகொண்டு அந்தக்காலமல்ல இது இரண்டு கோன்செல்காரரை யனுப்பு விக்கிறேன். லாசற்படி கடந்து இப்புறம் வந்தால் சின்ன துரையை யனுப்புகிறேனென்று சொன்னார். அதற்குத் தானப்பமுதலி சொன்னது. அவ்வளவு போதுமென்று சொல்லு கிறார்களென்று சொன்னார். நல்லதென்று சொல்லிப் போட்டு அப்பால் போனமாத்திரத்திலே என்னை யழைத்துச் சென்னப் பட்டணத்து வாசற்படி மட்டாய் வரச்சொல்லுகிறார்கள். மூசே தும்மா வந்தானென்று சொல்லுகிறார்களே மூசே தும்மா வுக்கு கிராமங்கள் கொடுத்தார்கள். பதினாயிரம் வராகன் மட்டுக்கும் வெகுமதி பண்ணினார்கள். பின்னை யும் இவர்களைத் தொட்டு புடவைகள் சீலையிலே பதினா யிரம் வராகனுக்கு உண்டு வருமானம் என்று அப்போதைக்கப் போது அனுப்பினது. அப்படி யெனக்குக் கொடுத்தால் சென் னப்பட்டணம் மட்டுக்கும் எதிரே வருவேன். அவரவர்களாலே பிரயோசனப்பட்டது இப்பதிங்காத வழி போகவேண்டியதற்கு அப்படியிருக்க வாயல்படி மட்டுக்கும் வந்தது அதிசயமா வென்று கேட்டார். அது மெய்தான் இப்பவும் உங்கள் சித்தத் திற்கு யுக்தமாய்க்காணுமோ அப்படி நடத்துகிறதுதானென்று சொன்னேன். நல்லதுதான் நீ யவர்கள் பார்ப்பான் வந்திருக் கிறானே அவனையும் அழைத்துக்கொண்டு மூசே தும்மா உங்களா லே பிரயோசனப்பட்ட விதமின்னதென்று விஸ்தரித்துச் சொல்லு. அப்பால் நான் வந்த பிற்பாடு உங்களைத் தொட்டு நான் ஒரு பிரயோசனமும் அறியேன் என்று இது வயணம் உனக்குத் தெரியாததுமில்லையே. இதெல்லாம் அவர்களுக்கு விசிதப்படுத்தி வா. நாளை காலையிலே சென்னப்பட்டணத்து வாசற்படிமட்டாய் நான் வருகிறேன் என்று சொல்லிப் போகச் சொன்னார். அதின்பேரிலே சாமாராயரை வைத்துக்கொண்டு முன் மூசே தும்மாவுக்கு அழிசபாக்க கிராமங்கள் முதலாய் வெகுமானம் கொடுத்ததெல்லாம் சொல்லி இவர் வந்த பிற்பாடு உங்களுக்கும் தவுலத்துயில்லை. துரைக்கும் ஒரு பிரயோசனமுமில்லை. ஆனால், உங்களுக்கு அநேக காரியமெல் லாம் அவரைத்தொட்டு இந்தமட்டுக்கும் ஆச்சுது. இனிமேல் பெரிய காரியம் லக்ஷருபாய் பரபத்தியம் ஒன்று இருக்கிறது. கலியாணகவை இருக்கிறது. சந்தா சாயபு அவர்களை அழைத் தனுப்புவிக்கிற பிரயத்தனம் ஒன்று இருக்கிறது. ஒருவர் நாலா யிரம் ஐயாயிரம் முன்னதாய் கொடுக்கிறதற்கு ஆயிரம் இரண்டாயிரம் இனும் கொடுக்கிறார்கள். இதுகளெல்லாத் திற்கும் துரைக்கு மனது சந்தோஷம் பண்ணினாலே அல்லாமல் நடவாதென்கிறதற்கும் அப்பால் அவர்களை விசேஷித்துப்

பிரயோசனம் பண்ணுகிறதற்கு எந்தவிதம் சொல்லவேணுமோ அந்தவிதமெல்லாம் சொன்னதற்கு அவரும் மெய்தானென்று ஒத்துக்கொண்டு சொன்னது: மூசே தும்மா துரைத்தனத்திலே இவர்கள் ராச்சியத்திற்கெல்லாம் எஜமானாக நவாபு இருந்த படியினாலே அப்போது இவர்களுக்கு காரியமில்லை அவருக்குப் பிரயோசனமும் இப்போது இவர்களுக்குத் துரைத்தனமுமில் லாமல் மூசே துய்ப்ளேக்சைக்கொண்டுசகலமும்நடத்திக்கொள்ள வேணுமென்று இருக்கிற வேளையிலே மூசே துய்ப்ளேக்சுக்குப் பிரயோசனமில்லையென்று எண்ணுகிறது மெய்தான். ஆனால் காலம் அப்படிப்பட்ட காலம். ஆகிலும் இந்தச் சேதி யெல்லாம் சந்தாசாயபு பெண்சாதிக்குச் சொல்லி மறு உத்தரவு பகலைக்குமேலாக வந்து சொல்லு கிறேன் என்று சொல்லுனார் நல்லதென்று சொல்லிப் போகச் சொல்லி நான் சாப்பிடவுடனே வந்து போனேன் கண்டு பேசினேன் அவர்களும் மெய்தானென்று ஒத்துக்கொண்டார் கள் இப்போது இருக்கிற வேளை நீங்கள் பார்த்து என்ன கொடுக்கச் சொல்லுகிறீர்கள், அந்தப்படிக்கு நாங்கள் கொடுக் கிறோமென்று சொன்னார் ஆனால் நான் ஏன் வருகிறேன் நீர் தானே போய்க் கண்டுபேசும் என்று சொன்னதற்கு சாமா ராயர் சொன்னது: துரையவர்களுக்கு மனது சந்தோஷமாய் நடக்கத்தக்கதாகச் சகல யோசனையும் அவர்களுக்கு எப்படி சொல்லவேணுமோ அப்படி சொல்லி அவ்விட ... ...

1746 ஆ செப்தம்பர் மூ 29உக்கு அக்ஷய ஸூ புரட்டாசி மீ 17 உ

இற்றை நாள் வியாழக்கிழமை நான் ஏழு மணிக்கு (ௗ) துரையவர்கள் அண்டைக்குப்போய் அவ்விடத்திலே துரையவர் கள் சொன்ன சேதி: நயினியப்பிள்ளை சாவடியிலே நவாபு தோஸ்தல்லிகான் அவர்களுடைய பெண்சாதியும், அசனல்லி கான் அவர்களுடைய பெண்சாதியும், திவானுசாயபுவும், அல் லிநக்கி சாயபுவும் வந்திருக்கிறார்களே நீரும் சின்ன முதலியா ரும் மூசே மீராவும் மூசே பரிதியும் கூட்டிக்கொண்டு நயினாரும் அவர் சேவகரும் தேவடியாள் நட்டுமுட்டு மேளச்சாரரிவர்களை யெல்லாம் கூட்டிக்கொண்டு நயினியப்பிள்ளை சாவடிக்குப் போய் அவர்களைப் பட்டணத்துக்குக் கூட்டிவரச் சொல்லச் சொன்னார்கள். அந்தப்படிக்கு நாமும் புறப்பட்டு மூசே மீரா சின்னமுதலியாரும் அவர்களையும் மூசே பரிதி யவர்களையும் நயி னாரையும் நட்டுமுட்டு தேவடியாக்களிவர்களுடனே நயினியப் பிள்ளை சாவடிக்குப் போனோம். போனவிடத்திலே அல்லிநக்கி சாயபு அவர்களுக்கும் திவானு சாயபு அவர்களுக்கும் மெத்த வும் மரியாதைகள் பண்ணி யெல்லாரும் புறப்பட்டு பட்டணத் துக்கு வந்தார்கள். அவர்களுடனே கூட வந்தது ஆனை ஒன்று,

குதிரை பத்து பல்லக்கு இரண்டு, ரதம் இரண்டு, டோலி இரண்டு, எருது ஐம்பது, சேவகர் நூறு தாதிகள் ஐம்பது இத்துக்குண்டாகிய சாமான் தட்டுமுட்டுகளுடனே வந்தார்கள். இப்படி வருகிறதிலே வடக்கு தெற்கு வாசலிலே (ா) துரையவர்கள் வந்திருந்தார்கள் துரையவர்களைக் கண்டு அலிங்கி சாயபு அவர்களும் திவானு சாயபு அவர்களும் மற்றுமுண்டான பேரும் பல்லக்குக் குதிரையள் விட்டிறங்கி (ா) துரையவர்களை ஆலிங்கன மற்றது பண்ணிக்கொண்டு அனேகமாய் உபசாரங்கள்சொல்லி சென்னப்பட்டணம்பத்தேயானசேதிக்கு மொபார்க்கு சொல்லி துரையவர்களையும் கட்டிக்கொண்டு தெத்துக்குள்ளாகவந்தார்கள். உடனே வடக்கு வாசலிலே இருபத்தொரு பீரங்கி போட்டார்கள். அதற்குமேல் துரையவர்களும் ஆலோசனைக்காரரும் முன்னதாகவே வந்தார்கள். வந்த கனகராய முதலியார் வீட்டுத்தெருவுக்கு நேரே வருகிறபோது நம்மையும், சின்னமுதலியாரையும், நயினாரையும் கூடப் போகச் சொல்லிப் போட்டு (ா) துரையவர்களும் ஆலோசனைக்காரரும் கிழக்கே திரும்பி (ா) துரையவர்கள் வீட்டுக்குப் போனார்கள். நாமும் சின்னமுதலியாரும் நயினாரும் பிராமண வீதியிலே நவாபு சந்தாசாயபு அவர்கள் வீடுவரைக்கும் போய் அவர்களை அங்கே கொண்டுபோய்விட்டோம். உடனே இருபத்தொரு பீரங்கி போட்டார்கள். அதற்குமேல் நாமும் அவர்களை யனுப்புவித்துக்கொண்டு துரையவர்களண்டைக்குப் போய் கபுறு சொல்லிப்போட்டு பனிரண்டு மணிக்கு வீட்டுக்கு வந்தோம். இரண்டு மணிக்கு (ா) துரையவர்கள் உத்தாரப்படி முறைகணக்குப்படி நவாபு தொஸ்தல்லிகான் அவர்கள் பெண்சாதியண்டைக்கு அரிசி பருப்பு முதலான தட்டுமுட்டுகள் எல்லாம் கொண்டுபோய்க் கொடுத்துப்போட்டு வந்தார்கள்.

சாயங்காலம் நடந்த சேதி: ஒரு சேவகன் ஒரு கடுதாசி ஒரு சாதிக்காரன் கொடுத்து முசே பேபுரி வசத்திலே கொடுக்கச் சொன்னானென்று கடற்கரையிலே கொண்டுவந்ததாயும் அவ்விடத்திலே அவர் பார்த்து (ா) துரையவர்கள் மட்டுக்கும் போய் வந்ததாகவும் (ா) துரையவர்கள் கொண்டு வந்தவனையும் முசே லகேத்தினேயுடைய துபாசியையும் சாவடியிலே வைக்கச் சொன்னதாகவும், அதன்பேரிலே சேர்வைக்காரரையும், சேவகரையும் தபால்மேலே அனுப்புவித்து இனிமேல் தம்முடைய முத்திரைக்கடுதாசி மாதம் பார்சி முத்திரைப்போடுகிற கடுதாசியும் இதுமாத்திரம் தபாலிலே கொண்டுபோகிறதே யல்லாமல் வேறே கடுதாசி பிடிக்கத் தேவையில்லை என்று சொல்லியனுப்பினார், அந்தப்படிக்கு நாலு பேர் சேவகரும், ஒரு சேர்வைக்காரனும் தபால்மேலே போனார்கள். சாயங்காலம் நாலு மணிக்குச் சென்னப்பட்டணத்திலேயிருந்து முசே புயேல் என்கிற கப்பல் கப்பித்தான் மரியசேர் துருது என்கிற கப்பலின்பேரிலே வந்து துறையைப் பிடித்துக்

கப்பலின்பேரிலே ஏழு பீரங்கிப்போட்டு இறங்கினன். அதிலே வந்த வஸ்துக்களை இறக்கவில்லை. ஐந்து மணிக்கு நாகப் பட்டணத்திலேயிருந்து உலாந்தாக் கப்பல் ஒன்று வந்தது. துறையைப் பிடித்துக் கப்பலின்பேரிலே ஒன்பது பீரங்கிப் போட்டு இறங்கினன். அந்தக் கப்பலிலே சாராயமும் மிளகும் காரைக்கால் கடுதாசியும் கொண்டுவந்தான். இதெல்லாமல் மூசே புயல் என்கிறவன் கப்பலிலே வந்த கடுதாசியும் தபாலிலே வந்த கடுதாசியும் (ஈ) துரையவர்கள் பார்த்துக்கொண்ட விடத்திலே அதிலே எழுதிவந்த சேதி: மூசே லபோர்தோனே யென்கிறவர் (ஈ) துரையவர்கள் ஒடுதிப் படிக்கு நடக்கவில்லையென்றும் துரையவர்கள் அனுப்புவிக்கிற கடுதாசிக்கும் மறு உத்தரம் எழுதுகிறதில்லை யென்றும் அவருக்குச் சரிப்போனபடிக்கெல்லாம் நடத்துகிருர் என்றும் இப்படி நீர் நடத்துகிறது என்னவென்று மூச்சே தெப்பிரமேனி (M M-d'Espremenil) மூசே துலோராம் மூச்சே பெடத்தல்மே (M. Barthélemy) இவர்கள் கேட்டால் நீங்கள் கேட்கிறதென்னவென்றும் உங்கள் வேலையல்ல நாம் குப்பினியாருக்கு உத்தரவாதம் பண்ணிக்கொள்ளுகிறோம் நீங்கள் கணக்கு மாத்திரம் எழுதிக்கொள்ளுங்கள் என்று செம்மரம் புடவை சீலைப் பணங்காசு தட்டுமுட்டுப் பெரிய பீரங்கிகள் முதலானதுகள் கோட்டையிலே பட்டணத்திலே யிருக்கிறதெல்லாம் கப்பலின் மேலே ஏற்றிக்கொண்டு சென்னப்பட்டணம் கோட்டையையும் சின்ன பீரங்கிகளும் சிறிது மருந்து குண்டும் பதினைறு லட்சம் வராகனுக்கு இங்கிலீசுக்காரர் வசத்திலே கோட்டையையும் விட்டுப்போட்டு மசுக்கரைக்குப் போகிறதாய் மூசே லபோர்தோனே யோசனை தீர்த்துக்கொண்டு அந்த அடியிலே காரியங்களெல்லாம் வித்தியாசமாய் நடத்துகிருர் என்றும் இப்படி நடத்துகிறது நியாயமல்லவென்று மூச்சே தெப்பிரமேனியும்மூசே துலோராம் மூசே பெடத்தெல்லமியும் நானுவிதத்திலே இவர்கள் மூன்றுபேரும் மூசே லபோர்தோனே அவர்களுடனே கோபித்துக்கொண்டு புறப்பட்டு மயிலாப்பூரிலே வந்ததாகவும் எழுதி வந்தது. அது பார்த்ததும் துரையவர்களுக்கு மெத்தவும் விசாரமாச்சுது. இப்படியிருக்கிறதிலே சென்னப் பட்டணமிருந்து மூசே லபோர்தோனே அவர்கள் காகிதம் துரையவர்களுக்குவந்தது. அதிலே எழுதியிருந்தவயணம்: சென்னப் பட்டணத்திலே கும்பினியாரது பணம் காசு புடவை சீலையள் சகலமும் நாம் எடுத்துக்கொள்ளுகிறது அரமனைக்காரர் வழியிருக்கிற பணம் காசிலே பாதி கொடுத்து பாதி எடுத்துக் கொள்ளுகிறது இன்னம் மற்றப்படி கோட்டையிலே இருக்கிற மருந்து குண்டு பீரங்கி துப்பாக்கிமூடி கத்தி இதுகள் முதலான ஆயுதங்களிலே பாதி எடுத்துக்கொள்ளுகிறது. பாதி இங்கிலீசுக்காரருக்குக்கொடுத்து கோட்டையுங்கொடுக்கிறது இங்கிலீசுக்காரர் இரண்டு வருஷத்திலே பதினைறுலக்ஷம் வராகன்

கொடுக்கிறோமென்று சீட்டெழுதிக் கொடுக்கிறது இனிமேல் என்றைக்கும் பிரான்சுக்காரருடனே சண்டை கொடுக்கிற தில்லையென்று சீட்டெழுதிக் கொடுக்கிறது இப்படித் தீர்த் திருக்கிறேன் என்று எழுதியிருந்தது. இந்தக் காகிதம் பார்த் துக்கொண்டவுடனே (ஈ) துரையவர்களுக்கு வந்த கோபமும் விசாரமும் எழுதி முடியாது. இது நடந்த சேதி.

1746 ஆ செப்தேம்பர் மீ 30 உக்கு அக்ஷய ஞு புரட்டாசிமீ 18 உ

இற்றைநாள் சுக்கிரவாரம் காலமே ஏழு மணிக்கு, பாக்குக்கிடங்கிற்குப் போனோம். (ஈ) துரையவர்கள் சென்னப்பட்டணத்துக்குக் கடுதாசி எழுதி, முத்திரையுங் கையிலே கொடுத்து, சேவகரைக் கொண்டுபோய்த் தபாலிலே முத்திரையைக் காட்டிக்கொடுக்கச்சொல்லித் திட்டம்பண்ணி யனுப்புவித்தார். சின்ன துரை வீட்டிலே எட்டு மணிக்கு ஆலோசனைகாரர்கள், கணக்கர், கப்பித்தான்மார், கப்பல் கப்பித்தான்மார், பாதிரிமார், சுமற்ஷாம் சில்லரைக்காரர் (ஈ) துரையவர்கள் ஒருத்தர் தவிர மற்றப்பேர் வெள்ளைக்காரரெல்லாம் கூடிப் பேசிக்கொண்டவிபரம்:சென்னப்பட்டணத்திலே மூசே லபோர் தோனே அவர்கள் துரையவர்கள் சொன்ன ஒடுதியும் ஞாயமும் தப்பி, இங்லீசுக்காரருக்கு இடங்கொடுத்து, வித்தியாசமாய்நடத்துகிறாராம். முன்னாலே இங்கிலீசுக்காரர் இந்தியாவிலே சண்டை தேவையில்லையென்று தீர்த்திருக்க அந்த நியாயம் தப்பி, தண்ணியின்பேரிலே வெகுவாய்க்கப்பல்களும் பிடித்துப் புதுச்சேரி முதலான ரேவுலேயும் வந்து மெத்தவும் எகத்தாளியாய் நடத்தினார்கள். அதனாலே இந்த நாட்டிலே இருக்கிற சகலமான பேர்களும் ஆற்காடு முதல் நிசாம் மட்டுக்கும் இங்கிலீசுக்காரர் நடத்துகிற வித்தியாசத்தினாலேயும் அவர்கள் பிரான்சுக்காரர் புண்ணியமென்னவென்று எழுதுகிற கடுதாசினாலேயும் சகல ஜனங்களுக்கும் இங்கிலீசுக்காரர் மகா பலவான்களென்றும் பிரான்சுக்காரர் பலன் இல்லாதபேர் என்றும் இப்படி சகலமான சனங்களுக்கும் தோன்றிப்போச்சுது. இந்த மூசே லபோர் தோனே மசுக்கரைவிட்டுப் புறப்பட்டுவர ஒன்பது கப்பலும், அதிலே வெகு மனுஷரும், அதற்கேற்ற முஸ்தீப்புக்களும் இருந்தும் இவ்விடம் வந்துசேர வெகு பிரயாசையாய் இருவரும் அவதிப்பட்டுக்கொண்டு வருகிறதிலே இங்கிலீசுக்காரர் சீர்மைவிட்டுப் புறப்பட்டு வெகுநாளாய்ப் பலன் குறைந்திருக்கிற கப்பல் ஆறு கப்பல் வந்து சண்டை கொடுத்து, அவர்களை அடித்து, கப்பல்களையும் பிடித்துக்கொண்டுவரமாட்டாமல் தம்மைத் தப்புவித்துக்கொண்டுவந்து புதுச்சேரி சேர்ந்தார். அப்படியிருக்க, துரையவர்களானால் இரண்டு வருஷமாய்

அங்கேயங்கே போன கப்பல்களெல்லாம் பிடிபட்டுப் போகவும், சீர்மைக் கப்பல் வராமல்போகவும் கோட்டை யிலே கும்பினிப்பணம் ஒன்றும் இல்லாமலிருக்க வும் நாலு திக்கிலேயும் இருக்கிறபேரெல்லாம் எகத்தாளி பண்ணத்தக்கதாய் இங்கிலீசுக்காரர் நியாயந்தப்பி நடக்க, பிரான்சுக்காரர்... ... ... ...க்குப் பலனில்லை. இவர்களைநம்பி கொடுக்கப்படாதென்று ஒரு காசாகிலும் கடன் கொடுக்கிற பேர் இல்லாமல்போக இப்படிப்பட்ட இளப்பமான காலம் புதுச்சேரி பட்டணத்துக்கு வந்திருக்கிறதிலே (ா) துரையவர் கள் சீர்மையிலேயும் மகாராசன் பிள்ளையானபடியினாலேயும், மெத்தவும் தைரியமும் மானமும் உள்ளவரானபடியினாலேயும், மனதுக்கு கலக்கமில்லாதவர் ஆனபடியினாலேயும் இப்படிக் கொத்த இவ்விபரீதத்தால காலங்களையும் இங்கிலீசுக்காரரை யும் ஒரு திரணமாத்திரமாய் எண்ணப்பட்ட மகத்தானயோகதை ஆனபடியினாலேயும் இதுகளுக்கெல்லாம் சலியாமல் எத்தனிக்க வில்லையென்று திரணமாயெண்ணி, தம்முடைய திரவியத்தை யும் போட்டுக் கோட்டைக் கொத்தளங்களையெல்லாம் வெகு பத்திரமாய்க் கட்டிவித்து மாயே துலுக்கர் முதலான பேரையும் வெகு சேவகர்சேரப்பிடித்து யுத்த சன்னாகங்களுக்கு ஆருக்கும் தோற்றப்படாத எத்தனங்களெல்லாம் இரண்டாம்பேர் அறி யாமல்படிக்கு சேகரம் பண்ணி ஊருங்கலையாமல் பட்டணத்தி லேயுள்ள பேருக்கெல்லாம் சீவளமும் உண்டாக்கி இதனிடையிலே காரைக்காலிலே தஞ்சாவூராரைத்தொட்டுக் கலாபம் வந்து அது நிமித்தியம் எடுபட்டுப்போன காரைக் காலையும் நிறுத்திக் தஞ்சாவூராரையும் படிசூரணம் பண்ணி அதனாலே பிரான்சுக்காரர் பேர் சொன்னால் எதிராளியள் கெற்பங்கலங்கத்தக்கதாய் வெற்றிகொண்டு நிசாம் போய்க் கொத்தவன் எழுபதினாயிரங்குதிரையுடனே திரிசிராபுரத்திலே யிறங்கி இருக்க அந்த வேளையிலே நிசாம் நியாயம் தப்பின காரிய நிமித்தியம் ஒரு சுபேதாரையனுப்பினவிடத்திலே நிசாம்போலக் கொத்தவனை நியாயம் தப்பிதமான காரியம் நடத்தினால் கேட்போமாவென்று திரணமாயெண்ணி, சுபேதா ரை யேறிவந்தங் கட்டினையும் பிடுங்கிக்கொண்டு கூடலூர் சென்னப்பட்டணத்திலே இருக்கிற பேரெல்லாம் ராப்பகல் நித்திரை ஆகாரமன்னியில் ஓடத்தக்கதாக அவர்கள் மனுஷர் தலை நீட்டாதபடிக்குக் கூடலூர் குண்டுமட்டுச்கும் போய் அவர்கள் மனுஷரையெல்லாம் அடித்து ஆற் காட்டு சுபேதார் அன்வருத்திகானைப்போலேக் கொத்தவன் வலிய புதுச்சேரிக்கு வந்து இவருடைய தைரியம், பராக்கிரமம், குணங்களைக்கண்டு இவர் ஸ்நேகம் தனக்கு வேணுமென்று வலியப் பிரார்த்தித்து நடத்தத்தக்கதாகப் பண்ணிக்கொண்டார். முசே லபோர்தோனே வந்தவுடனே அவ ருக்கும் தெரியும்படிச்சொல்லி, கப்பலின்பேரிலே வெகு சனங்

களையும் வெகு முஸ்தீப்புக்களையும் ஏற்றுவித்து இங்கிலீசுக்காரர் கப்பல் ஐந்து கப்பலையும் பிடித்துவரச்சொல்லி யனுப்புவித்த விடத்திலே இந்த முஸ்தீப்புபண்ணி யனுப்புவித்த சேதி நாகப்பட்டணத்தார் கேட்டு, தட்டுகெட்டு மூசே லபோர்தோனேக்கு விருந்து பண்ணிவித்துத் தாங்கள் இங்கிலீசுக்காரர் கையிலே வாங்கின பிராஞ்சுக் கப்பலுக்குக் கிரயம் பதினையாயிரம் கொடுத்துச் சமுத்திரத்திலே தாங்கள் சஞ்சரிக்கிறதற்குக் கவுலும் வாங்கிக்கொண்டு சகல மரியாதையள் … … … அப்படியிருக்கிறதிலே இங்கிலீசுக்காரர் கப்பல் ஐந்துக் கப்பல் வந்து … … … … ஒலாந்தாக்காரர் பண்ணிவித்த மரியாதையளையும் கெட்டதினாலே பாயை யெடுத்து ஓடிப்போனார்கள். ஓடிப்போனவனைத் தொடர்ந்தடித்துக் கப்பலையும், பிடித்துக்கொண்டு வரமாட்டாமல் மூசே லபோர்தோனே புதுச்சேரி வந்தார். (ா) துரையவர்கள் இவர் வருமுன்னே தானே ரேவிலே யிருக்கிற கப்பல்கள் படகுகள் சுலுப்புகளின்பேரிலே வெள்ளைக்காரர், வெள்ளைக்காரர் சொல்தாதுகள், காபிரிகள், மாயே துலுக்கர், கர்நாடக ராணுவங்கள் சகலமான பேரையும் ஏற்றுவித்துக் குதிரை, பல்லக்கு, சிவியாரமருந்து, குண்டு, தீக்குடுக்கை, தீனி, சாராயம், ஆடு, கோழி, பன்றி, கறிக்காய், தண்ணீர், மர ஏணி, மண்வெட்டி, கோடாலி, வெட்டரிவாள், குந்தாலி இதுகள் முதலாகிய சகல சண்டை முஸ்தீப்புகளும், இன்ன வேளைக்கு இன்னது உண்டு, இல்லையென்கிறதா யிராமல் அபாரியாய் வேணதெல்லாம் ஏற்றுவித்துக் கூடாரம், பாலமுளைகள், கயிறு, கீல் வத்தி, மத்தாப்பு சங்கிரந்தகொதி, ஈட்டி, துப்பாக்கி, பீரங்கி, குந்தாணி, பீரங்கியளிதுகளெல்லாம் வேணுது ஏற்றுவித்துக்கொண்டு தயாராயிருந்தார்.

இதுகளையெல்லாம் கண்டவுடனே மூசே லபோர்தோனே தம்மைச் சென்னப்பட்டணத்தின்பேரிலே போகச்சொல்லுவார் என்று பயந்து, உடம்பு ஃருவில்லையென்று ஒழுகரையிலே போய் படுத்துக்கொண்டார். இந்தச் சேதி கேட்டு (ா) துரையவர்களுக்கு ஆச்சரியமாய் நாம் பண்ணியிருக்கிற எத்தனங்களென்ன, இதிலே காரியங்களென்ன, இந்த வேளையிலே இவரிப்படி படுத்துக்கொள்ளலாமாவென்று இதற்கு ஏற்றபடி மாத்திரம் பின்னம்வராமல் மூசே லபோர்தோனே அவர்களுக்கு ஒருதரம்போலே பத்துதரமும் தெரியச்சொல்லிச் சொல்லுகிறேன். சொல்லுகிற பேரையும் கொண்டு சொல்லிவித்தார். அதிலேயும் மூசே லபோர்தோனே சம்மதியாமல் கப்பல்காரரை சாரிபோய் வரச்சொன்னார். எட்டுக் கப்பல்காரரும் சென்னப்பட்டணத்துக்குச் செவ்வே சவாரிபோய் அந்த ரேவிலே இருக்கிற கப்பலுடனே சண்டை கொடுத்தார்கள். அப்போது இங்கிலீசுக்காரன் கோட்டையிலேயிருந்து பீரங்கியால் சுட்

டான். அதின்பேரிலே அந்தக் குற்றம் அவன்பேரிலே வைத்துப் போட்டு, வருகிற வழியிலே இரண்டு கப்பலையும் பிடித்துக் கொண்டு வந்து சேர்ந்தார்கள். திரும்பவும் (ா) துரையவர்கள் மூசே லபோர்தோனே அவர்களையும் அழைப்பித்து ஆலோசனை காரரையும் மற்றப் பெரிய மனுஷரையும் நடவையித்துக் கொண்டு வந்து (ா) துரையவர்கள் சொன்ன சேதி: இந்த இங்கிலீசுக்காரர் அநேகமாய் ஞாயந்தப்பிதமாக இருக்கிற கரியமெல்லாம் செயித்தார்கள். சீர்மையிலே பிரான்சு மகா ராசா அவர்கள் இங்கிலீசுத்தாராவிலே முன்னிருந்த ராசா வைப் பிடுங்கிப்போட்டு வேறே ராசாவைக் கொண்டுபோய் வைக்கிற நிமித்தியம் பத்துவைத்து பிரான்சுக்காரர் என்கிற பேருக்கெல்லாம் கட்டி அவர்கள் கோட்டையெல்லாம் பிடித்து அவர்கள் பலனையெல்லாம் குறைத்து, வெகு சனங்களை அதம் பண்ணி, சத்துருசங்காரியாய்க் கொஞ்ச நாளையிலே தாம் கைபிடித்த இங்கிலீசு ராசாவைக் கொண்டுபோய்ப் பட்டத் திலே வைக்கத் தக்கனவராயிருக்கிறார். இப்படியிருக்கிறதிலே இந்த ஈந்திக்கரையிலே இங்கே இருக்கிற இங்கிலீசுக்காரர் முன்னிருக்கிறவனைக் கப்பலென்று நாலு கொள்ளைக்கப்பலைக் கொண்டுவந்து குறுக்கு நெடுக்குமாய் திருப்பிக்கொண்டு நாலைந்து நாட்டுக்கப்பலைப் பிடித்துக்கொண்டு தாங்கள் மகா பலசாலிகளென்று இந்த நாட்டிலேயிருக்கிற பெரிய மனுஷருக் கெல்லாம் எழுதியனுப்பிச்கொண்டு திரிகிறார்கள். இதனாலே நம்முடைய மகாராசாவினுடைய கீர்த்தி இந்த ராச்சியத்திலே விளங்காமல் போகிறதாயென்கிறதினாலே இரண்டு வருஷமாய் வெகு எத்தனங்களெல்லாம் பண்ணினோம். இந்த ஈந்திக் கரைக்குள்ளே இங்கிலீசுக்காரர் பட்டணத்துக்குள்ளே சென் னப்பட்டணம் வந்து பெரிய பட்டணம். அது இவர்களுக்கு வந்து நூற்றுறு வருஷமாச்சுது வெகு பலனாகிய பட்டணம் டில்லி பார்சாமட்டுக்கும் அந்தப்பட்டணம். இந்தப்பட்ட ணத்தை ஒரு நாழிகையிலே பிடிக்கத்தக்கதாக அதற்கேற்ற காரியங்களெல்லாம் சேகரம் பண்ணியிருக்கிறோம். இதைப் பிடித்து நம்முடைய பிரான்சுக்கொடியும் போட்டால் இந்த ராச்சியமெல்லாம் டில்லி பார்சா மட்டுக்கும் வெகு கீர்த்தியுண்டாம். சத்துருவாகிய இங்கிலீசுக் காரர் கொழுப்பு அடங்கும் என்கிறதாயோசனைபண்ணி யதற் கேற்ற மனுஷரை யனுப்புவித்து சென்னப்பட்டணத்திலே யிருக்கிற பலன்களும் நாம் போய் இறங்குகிற இடங்களும் பீரங்கியள் வைத்து அடிக்கிறதற்கு ஸ்தானங்களும் லெக்கை ஏறுகிறதற்கு வழியளும் இதுகள்கூட திட்டம் பண்ணியிருக்கி றோம். இப்போதும் அதற்கேற்ற காரியக்காரரையும், ஆலோ சனைகாரரையும் பயணம்பண்ணியிருக்கிறோம். ஆனபடியி னாலே தெனுவிக்கு நீராடப் போகிறதுமாத்திரம் சகலமும் நாம் அனுப்புவிக்கிற பேர் நடத்துவிக்கிறார்கள். உமக்குச் சம்

மதியானால் கூடப்போம்; இல்லாவிட்டால் கூடப்போகச் சொல்லி கப்பல்காரருக்காகிலும் உத்தாரங் கொடுமென்று சொன்னார். அதற்கு மூசே லப்போர்தோனே அவர்கள் சொன்ன உத்தாரம் எனக்கானால் கரைமேலே சண்டைகொடுக்க ஒடுதியில்லை. நீரானால் மெத்தவும் பெரிசாயிருக்கப்பட்ட மகத்தான பட்டணத்தை ஒரு கொசுகு மரியாதையாய் எண்ணி காலாலே தேய்த்துப்போடுகிறதாய் எண்ணி எத்தனம்பண்ணிப் போகச் சொல்லுகிறீர். தெனுவிக்குக் கூடப்போவென்றும் சொல்லுகிறீர். அதிலே செயம்வருமோ அபசெயம் வருமோ எனக்குத் தெரியாது. இளப்பம் வந்தால் இப்படிக்கொத்த காரியம் உங்களை யார் நடத்தச்சொன்னது. இத்தனை பணமும் சூறசு பண்ணி இத்தனை பேரையும் சாகக் கொடுக்கவந்த காரியமென்னவென்று கும்பினியார் என்ன வில்லங்கம் போடுவார்களோ தெரியாது. ஆகையாலே நீர் கும்பினியாருக்கு நல்லது வந்தாலும்பொல்லாததுவந்தாலும் நானே உத்தரவாதியென்று கையெழுத்துப் போட்டுக்கொடுத்தீரானால் நானும் கூடப் போகிறேன் என்று சொன்னார் அதற்கு (ஈ) துரையவர்கள் சொன்னசேதி: பிரான்சுக்காரர் என்கிறபேரையும் இங்கிலீசுக் காரர் இளப்பம்பண்ணி ஈந்திக்கரையிலே வந்து கப்பலையும் பிடித்து இப்போதும் கோட்டையிலே யிருந்து குண்டு போட்டதும் சுட்டதற்குப் பிரான்சுக்காரரென்கிற பேர் சொன்னால் சகலமான பேரும் எத்தனை வயண மரியாதையிலே நடந்து கொள்ளும்படியாக மகாராசாவினுடைய கீர்த்தியினாலேயும், கும்பினியாருடைய தயையினாலேயும் நானிந்த சென்னப்பட்டணத்தையும் கட்டினவர்களையும் பிடித்து இதற்கேற்றபடி நடத்துவனேயல்லாமல் சும்மாவிடட்போகிறதில்லை உனக்கு இதைக்கொண்டு பதிலாமை தேவையில்லை. இதிலே நல்லது வந்தாலும் பொல்லாதது வந்தாலும் கும்பினியாருக்கு நாமே உத்தரவாதியல்லாமல் உமக்குத் தேவையில்லையென்று கையெழுத்துப் போட்டு (ஈ) துரையவர்கள் கொடுக்க அவர் கையெழுத்து வாங்கி கட்டிக்கொண்டு மூசே லபோர்தோனே அவர்கள்கூடப் போயிருக்க (ஈ) மூசே ழெனேரால் துய்ப்ளேக்சு அவர்கள் யோகாதிபதிசயத்தினாலே இவர்பட்ட பிரயாசைகளுக்கும், இவர் பண்ணின எத்தனங்களுக்கும் தெய்வங்கள் பார்த்து இவர் சொன்னபடிக்குப் போயிறங்கி ஒரு நாளை சண்டையிலே நிருவாகம் பண்ணமாட்டாமல் கோட்டையை விட்டுவிட்டார்கள். இது துரையவர்கள் யோகாதிசயமல்லாமல் மூசே லபோர்தோனே யவர்களுக்கு நிமித்தியம் என்ன யிருக்கிறது. அப்படியிருக்க இப்போது மூசே லபோர்தோனே இங்கிலீசுக்காரருக்கு இடங்கொடுத்து கோட்டையைத் திரும்பவும் அவர்கள்கிட்டே விட்டுவிடுகிறோமென்றும் தாம் கும்பினியாருக்கு உத்தரவாதம் பண்ணிவித்துக்கொள்ளுகிறோமென்றும் பணம் காசு தட்டுமுட்டு யெல்லாம் அங்கேயிருந்தாப்போலே

தாம் கொண்டுபோகிறோம் என்றும் சொல்லுகிருராம். இவருக்குளென்ன நியாயமிருக்கிறது என்று கூடியிருக்கிற சகலமான வெள்ளைக்காரரும் சின்ன துரை வீட்டிலே பதினொரு மணி மட்டுக்கும் பேசியதற்கேற்ற நியாயங்களெல்லாம் ஆலோசனை பண்ணிப் பனிரண்டு மணிக்குச் சகலமான பேரும் (ஙா) துரையவர்கள் வீட்டுக்கு வந்து துரையவர்களுடனே சொன்ன சேதி: நாங்களானுல் பிரான்சு மகாராசாவினுடைய கீர்த்தியினுலே அவருடைய கொடியின்கீழே யிருக்கிறோம். இங்கிலீசுக்காரர் அனேகமாய் நியாயந் தப்பிதமான காரியங்களும் நடத்துவித்து எகத்தாளியும் பண்ணினுர்கள் அப்படியிருக்கிற பேரை நீங்கள் மகாராசாவுக்கு இந்த தேசத்திலே டில்லி பார்சாமட்டுக்கும் கீர்த்தியென்றைக்கும் நிற்கும் பொருட்டாக இங்கிலீசுக்காரரைப் பங்கம்பண்ணி சென்னபட்டணமும் கட்டினீர்கள். இது உம்முடைய மூர்த்தி வந்தமும் யோகாதிசயமும் அல்லாமல் மற்றப்படி ஒருத்தனுலே சாதிக்கிற காரியமல்ல இப்போதானுல் மூசே லபோர்தோனே அவர்கள் திரும்பவும் சென்னப்பட்டணம் கோட்டையை மறுபடியும் இங்கிலீசுக்காரருக்குக்கொடுக்கிறதாகச் சேதி கேட்டோம். அப்படி கொடுத்ததே உண்டானுல் இந்த துலுக்காணியதிலே தலை நீட்டிக்கொண்டு நாங்களிருக்கத் தேவையில்லை; எங்கள் வெட்கமெல்லாம் போய்விடும் இத்தனை பிரயாசைப்பட்டு மகத்தான கீர்த்தி சம்பாதித்து வாங்கின பட்டணத்தைத் திரும்பி விடுகிறதென்ன. இது நிமித்தியம் நாங்களெல்லாரும் உங்களுடனே மனுவாகக் கேட்க வந்தோம் என்று சொன்னுர்கள். அந்தச் சேதி (ஙா) துரை அவர்கள் கேட்டு உங்களுக்குச் சம்மதியில்லாத காரியம் நடந்ததா நடத்தத்தக்கதில்லையே என்று இந்தப்படிக்குத்தானே இந்தக்ஷணம் மூசே லபோர்தோனே யவர்களுக்கும் காகிதம் அனுப்புவிக்கிறோமென்றும் அவர்களுக்குச் சமாதானமாகச் சொல்லி அவர்களையெல்லாம் அனுப்புவித்து சின்ன துரையும், மூசே மீராவும், மூசே கிலியார், மூசே மேர், மூசே பிரியேர், மூசே பரிதி இவர்கள் ஆறுபேரையும் வைத்துக்கொண்டு மூசே சின்ன மீரா, மூசே ஓர்சே, மூசே புரி இவர்கள் மூன்றுபேரையும் அழைத்துவரச்சொல்லி மூசே லபோர்தோனே அவர்களுக்குக் காகித பத்திரம் எப்படி எழுதவேணுமோ அந்தப்படிக்கு எழுதி மூசே பரிதி, மூசே புரி கிரேபியேர் உத்தியோகம் பண்ணுகிற மூசே தீம்ரே, மூசே பிரியேர் இவர்கள் நாலு பேரையும் பயணம்பண்ணிக் கப்பலிலேற்றி நாலு மணிக்குப் பாயெடுத்துப் போனுர்கள் இது சேதி.

1746ஆ ஒக்தோபர்மீ 1உக்கு அக்ஷயஞு புரட்டாசிமீ 19உ

இற்றை நாள் சனிவாரம் சேதி யென்னவென்றுல்: (ஙா) துரையினிடத்திலே பின்னையொரு அதிசயமுமில்லை. துரையவர்கள் சென்னப்பட்டணத்திலே மூசே லபோர்தோனே

நடப்பிக்கிற காரியத்துக்கு இவர் காரியக்காரராய் அனுப்பியிருக்கிற மூசே தேப்பிறமேனி, மூசே துலோராம், மூசே பெடுதெல்மே முதலான பேரை உங்களுக்கு ஒரு காரியமுமில்லை. இருந்தால் வெளியிலே யிருங்கள். இல்லாவிட்டால் போங்களென்று சென்னபட்டணத்தை இங்கிலீசுக்காரருக்கு விற்றுப்போட்டு இருக்கிற சரக்கெல்லாம் தன் மனதின்படியே நடத்தி புதுச்சேரி கோன்சேல் ஒடுதியும் தள்ளிப்போட்டு நடத்துகிற படியினாலே இந்தக் காரியத்திற்குக் கோன்சேல் கூடுகிறதும் காகித மெழுதுகிறதும் அலுவலும் அந்த விசாரமுமாயிருக்கிற படியினாலே ஒரு பேச்சும் எங்களுடனே பேசவில்லை. நானும் தானப்ப முதலியும் சலாம் பண்ணிப்போட்டு ஒரு நாழிகை இருந்துவிட்டு பாக்குக்கிடங்குக்கு வந்தேன், அவ்விடத்தி லிருந்து வீட்டுக்கு நித்தியம் வாசற்படிக்கு வந்து அப்பால் நித்தியம் நடத்தைப்படிக்கு நடந்தது.

*1746* ஆ ஒக்தோபர் மூ 2உக்கு அக்ஷய ஞு புரட்டாசி மீ 20உ

ஆதிவாரம் நாள் விசேஷித்துப் பின்னையும் வேறே அதிசய மில்லை. மூசே லபோர்தோனே சென்னப்பட்டணத்திலேதான் உத்தரவாதம் பண்ணிக்கொள்ளுகிறோம் என்று கும்பினி யாருக்கு புதுச்சேரி கோன்சேலுக்குக் கவையில்லையென்று நடத்தினதற்கு இங்கேயிருந்து மூசே தெப்ரமேனியைப் பெரியவனாக்கி இவனுக்கிணைக்குள்ளே எல்லாரும் நடக்கச்சொல்லியும் மூசே லபோர்தோனே நடவாமல்போனால் அவனைக் காவல் வைக்கச்சொல்லியும் அனுப்பி ஒடுதிப்படிக்கு மூசே லபோர் தோனே நடப்பானோ இல்லையென்று அவன் பெலத்து இருக்கிற படியினாலே தள்ளிப்போனவர்களை வெளியே போகச்சொல்லு வானோவென்று அந்த பிக்கூர்பேரிலே துரையிருக்கிறது. மற்ற வெள்ளைக்காரரெல்லாரும் இதுவே பேச்சாய்ப்பேசுகிறதுமாய் இருந்தார்களே அல்லாமல் வேறே சேதியில்லை. மாயேயி லிருந்து புறப்பட்ட மூன்று கப்பலும் மையம் பிடித்துவரச் சொல்லி உத்தாரங் கொடுத்தபடியினாலே இந்த ஒக்தோபர் மாசத்திலே வருமோ வராதோ என்று சந்தேகமாய்ச் சொல்லிக்கொள்ளுகிறார்கள் என்றும் சேதி நித்திய கிரத்தியமென்னமோ அது நடந்தது மூசே லந்தூசு மூசே ஒஸ்திராலென்று பறங்கிப்பேட்டையிலே இப்போது சின்ன கப்பித்தானாயிருக்கிறவனுடைய தங்கச்சியை கலியாணம்பண்ணத் தக்கதாக இற்றை நாள் காலத்தாலே கோயிலிலே முதல் ஓலை போட்டார்கள், இற்றை நாள் மூசே துபுவா இடத்துக்குப் போய் அவரைக் கண்டு பேசி பத்துமணிக்கு பாக்குக்கிடங்குக்கு வந்தபடியினாலே துரையண்டைக்குப் போகவில்லை.

1746ஆ ஒக்தோபர்மீ 4உக்து அக்ஷயஸு புரட்டாசிமீ 22உ மங்களவாரம்.

இற்றைநாள் மூசே துப்புவா வீட்டுக்குப் போனவிடத்திலே மூசே துபுவா பேசியிருக்கச்சே சொன்னவயணம்; மூசே லபோர் தோனே புதுச்சேரி குவர்னதோர் மூசே துப்பிளேய்க்சு பேச்சில்லாமல் இங்கிலீசுக்காரருக்கு உடன்படிக்கை பண்ணப் போகாது. பட்டணத்தைப்பதினேரு லக்ஷம் வராகனுகவும் விற்கவும்போகாது. இவர்களுத்தரவின்பேரிலே போன கோன்சேல் காரர்களைத் தள்ளிப்போட்டு நடத்தவும் போகாது. அவர்களைக் கோட்டையிலேயிருக்கக் கவையில்லையென்றும் உத்தரவேயல்லாமல் வேறே உத்தரவில்லை. நான் கும்பினீருக்கு உத்தரவாதம் பண்ணிக்கொள்ளுகிறேன்.

1746 ஆ ஒக்தோபர் மூ 4 உக்த அக்ஷய ஸு புரட்டாசி மீ 22 உ மங்களவாரம்

புதுச்சேரி கும்பினீருக்குக் கவையில்லையென்று சொல்லவும்போகாது. ஈந்தியாவிலே வெள்ளை நிசான் விழுந்த பிரான்சு ரேவுக்கெல்லாம் புதுச்சேரி குவர்னதோருடைய உத்தாரப்படிக்கு நடந்துகொள்ளச்சொல்லி ராசாவினுடைய ஒடுதியும் மினீஸ்தர்களுடைய ஒடுதியும் வந்து இருக்கிறபடியினலே புதுச்சேரி குவர்னதோருடைய உத்தாரப்படிக்கு நடந்துகொள்ளுகிறதேயல்லாமல் மூசே லபோர் தோனே திரணீகரித்து நடத்தப்போகாது. நடத்தினபடியினலே மூசே லபோர்தோனே குற்றவாளி இனிமேல் என்னமாய் நடக்குமோ. மூசே புரிபரிதி போனபிற்பாடு நடந்த சங்கதிக்கு இன்றையதினம் சேதிவரும். வந்தபிற்பாடு எல்லாம் நன்ருய்த் தெரியவரும் என்று சொன்னுன். அதன் பிற்பாடு துரை வீட்டுக்கு நான் வந்தபிற்பாடு துரையண்டைக்கு திருவான்கோட்டு மார்த்தாண்ட ராசாவினுடைய ஓலையும் அவ்விடத்திலேயிருக்கிற பிரான்சு பாதிரிமாருடைய காகிதமும் வந்தது. அந்த ஓலையிலே எழுதியிருந்த வயணம்: முன்னே இரண்டு கப்பல் உங்களுக்கு வந்திருந்ததல்லாமல் மாயே துபாசியும் வந்திருந்தான். அப்போது கப்பலையும் பயணம்பண்ணி யனுப்புவித்தோம். பிரான்சு ராச்சியத்திலேயிருந்து ஒன்பது கப்பலும் வந்து நாகப்பட்டணத்தண்டையிலே இங்கிலீசுக்காரர் கப்பல்கள் ஆறு கப்பல்கள் வந்து சண்டை கொடுத்து ஓடிவிட்டார்களாம். ஒக்தோபர் மீத்துக்கு உங்களுடைய கப்பல் எங்கள் ராச்சியத்துக்கு வருமென்கிற சேதியும் எழுதியனுப்பவேணுமென்று எழுதியிருந்தது. இந்த ஓலைச்சேதி தானப்ப முதலியாருக்குச் சொல்லவேணுமென்று என்னையும் கூட அழைத்தான். நானும் கூடப் போனேம் தானப்ப முதலி ஓலைச்சேதி சொல்

லப்போன மாத்திரத்திலே காகிதத்திலே யிருந்து பார்த்துக் கொண்டேன். எனக்குத் தெரியும், சொல்லத்தேவையில்லை யென்று சொன்னார். திரும்பியும் சொல்லப்போனார். திரும்பியும் தெரியும் என்று சொன்னார் திரும்பியும் சொல்லப் போனார். துரை சரிக்கொண்டார். அந்தமட்டிலே வந்து விட்டார். அப்பால் துரை என்னை அழைத்தார். நான் போன வுடனே மூசே லபோர்தோனே சென்னப்பட்டணத்திலே நடப்பித்த காரியத்தைப் பார்த்தையா. சென்னப்பட்டணம் பதினொரு லக்ஷம் வராகனுக்கு விற்றுப்போட்டானும். காவற்காரர் கையிலே ஈரோப்பாவிலே இங்கிலீசுத் தேராவிலே வாங்கிக் கொள்ளத்தக்கதாக உண்டிகை வாங்கிக்கொண்டானும். காவல்காரன் எழுதிக்கொடுத்தான், ஒருக்காலும் செல்லாது. அதறிந்தும் எழுதி வாங்கிக்கொண்டானும். பின்னையும், இவன் கொள்ளையிட்டதும் இவன் நடத்தினதும் பார்த்தாயா ரங்கப்பா என்று கேட்டார். மெய்தானையா. பொல்லாத வேளையானபடியினாலே மூசே லபோர்தோனே இப்படிப்பட்ட வேலை செய்யவும் அதனாலே பொல்லாப்பு வரவும் இருக்கச்சேதான் இப்படிப்பட்ட புத்தி அவனுக்கு வந்தது என்றும் இவர் மனோபாவத்துக்கு அடுத்தாப்போல் உத்தரவு சொன்னதின்பேரிலே உன் தம்பிக்கு இவன் நடத்தையும் இவன் செய்த காரியமும் ஒருக்காலும் சம்மதியாயிராது. மூசே லப்போர்தோனேயின் பேரிலே ரொம்ப பிராது எழுதியிருப்பான் என்று சொன்னார். மெய்தான், அவன் நடத்தின காரியமெல்லாம் பரிச்சேதமாய் சம்மதியில்லாமல் எழுதினது சேனையுண்டு என்று சொன்னேன். அது மெய்தான் என்று ஒத்துக்கொண்டு மூசே புல்வி (M. de Fulvy), மூசே ஒரி (M. Orry) கோந்திரோலர் சனரால் உத்தியோகமில்லை. மூசே லப்போர்தோனே பலன் குறைந்துபோச்சுதென்று சொன்னார். நானும் மெய்தான் என்று சொன்னேன். இதிலே காலத்தாலே ஏழு மணிக்கு மூசே மென்வீலும் (M. de Mainville), மூசே புஷேத் (M. Bousset) என்கிறவனும், தெப்ரேன் (M. Desfresmes) மச்சானும் பட்டணத்திலேயிருந்து வந்தார்கள். மூசே மென்வீலை மாத்திரம் மறுபடியும் பத்து மணிக்குப்பயணம் பண்ணி, கோன்சேல்கூடி, கோன்சேல் கையெழுத்துப்போட்ட காகிதமும் கொடுத்துச் சுறுக்காய் போகச்சொல்லி, பதினெட்டு பேர் போய் அண்டையாரையும் அமர்த்தியனுப்பினார்கள். தம்பிக்குக் கொடுக்கச்சொல்லி நானும் ஒரு காகிதம் கொடுத்தேன்

இற்றைநாள் சாயங்காலம் சென்னப்பட்டணத்திலிருந்து மூசே தேப்ரேமேனி (M. d'Espremenil), மூசே துலோராம் (M. Dulaurens) முதலான பேர் காகிதங்கள் அனுப்பினார்கள். அந்தக் காகித வயணம்: இவ்விடத்திலேயிருந்து (18௨) 30௨

செப்தம்பர் மீ வெள்ளிக்கிழமை நாள், போன முசே பரிதி (M. Paradis), முசே புரி (M. de Bury) முதலான பேர் போனவர்கள் (19உ புரட்டாசி 1உ அக்டோபர் மீ) சனிவாரம் மயிலாப்பூரிலிறங்கி அங்கே முசே லபோர்தோனேயுடனே கோபித்துக்கொண்டு வந்திருக்கிற முசே தெப்பிறமேனி முதலான பேருடனே கண்டுபேசி, அங்கேயிருந்து 20உ ஆதிவாரம் சென்னப்பட்டணத்துக்குப் போய் முசே லபோர்தோனே யண்டையிலே (M. de la Bourdonnais) நீ சென்னப்பட்டணத்தை மறுபடியும் இங்கிலீசுக்காரருக்கு விற்கக் காரியமென்னவென்று கேட்டார்கள். புதுச்சேரி கோன்சேல் காகிதம் என் மனதின் படியே நடந்துகொள்ளும்படி சொல்லி உத்தரவு கொடுத்தபடியினாலே என் மனதின்படியே விற்றேன் என்று சொன்னான். அதற்கு இவர்கள் சொன்னது: புதுச்சேரி கோன்சேல் ஒடுதி என்னவென்றால், சண்டைக்கு மாத்திரம் உன் மனதின்படியே நடக்கச்சொல்லி உத்தரமேயல்லாமல் சண்டையான பிற்பாடு கோட்டை காரியத்துக்கும் உன் மனதின்படியே நடப்பிக்கச் சொல்லி எழுதிக்கொடுத்தோமாவென்று முசே தெப்பிரமேனி முசே துலோராம் முதலான பேர் கேட்டார்கள். கரையிலே சண்டை கொடுக்கச்சொல்லி ராசாவினுடைய உத்தாரமில்லாதபடியினாலே நாம் எல்லாரும் கூடிச்செய்த காரியமான படியினாலேயும், கோட்டையிலே வெகு பணம் இருந்ததையெல்லாம் எடுத்துக்கொண்டபடியினாலே கோட்டைக்குப் பதினொரு லக்ஷம் வராகன் வருகிறபடியினாலேயும் நான் செய்தேனென்றும், அதன்பேரிலே இவர்கள் சொன்னது: இப்போது புதுச்சேரி கோன்சேல் ஒடுதி யென்னவென்றால், முசே தெப்பிரமேனி ஒடுதியின்பேரிலே சமஸ்தமான பேரும் நடந்துகொள்ளுகிறதேயல்லாமல் இனிமேலுன்னுடைய ஒடுதி நடவாது என்று சொன்னதின்பேரிலே கத்தியை உருவிக்கிக்கொண்டு கப்பற்காரரெல்லாம் அழைத்தவுடனே இவர்கள் கப்பல்காரர், ஒபிசியேல்மார்கள், கப்பித்தான்மார் சமஸ்தமான பேருக்கும் ராசாவினுடையபேரிலே ஆணையிட்டு புதுச்சேரி கோன்சேலில் ஒடுதி முசே தெப்பிரமேனி உத்தாரப்படிக்கு நடக்கவேணுமென்று இவ்விடத்துக் கோன்சேல் காகிதம் படித்து முசே லபோர்தோனேயை கத்தியை வைத்துப் போட்டு இந்த ஒடுதிக்கு ஒப்தேசேரிட்டு நடந்துகொண்டாலாச்சுது இல்லாவிட்டால் உன்னைக் காவல்பண்ணிவைக்கச் சொல்லி உத்தாரம் அந்தப்படிக்குச் செய்வோமென்று சொன்னதின்பேரிலே அந்தமட்டிலேயடங்கி கப்பல் கப்பித்தான்மாரும் ஒபிசி கப்பல் ஒபிசியேமாரும் சும்மாயிருந்தார்கள். அப்பால் கோட்டைச் சாவியை முசே தெப்பிரமேனி வாங்கிக்கொண்டு சகல ஒடுதியும் முசே தெப்பிரமேனி கொடுத்தான்.

அப்போது இங்கிலீசுக்காரர் துரையாயிருக்கிற மேஸ்தர் மாசு (Mr Morse) முதலானவர்கள் அழைத்து நீங்கள் காவல் உங்களுக்குக் கோட்டை விற்கவில்லை யென்று சொல்லியந்தச் சேதிக்குப் புதுச்சேரி குவர்னதோருக்குக் காகித மெழுதியனுப்பினதாய் மூசே றேபேர் (M. Robert), மூசே லோஸ்தீசு (M. Lhostis), மூசே துபுவா முதலானபேர் என்னுடனே சொன்னார்கள். இந்தக் காகிதம் நாலு மணிக்கு வந்தது. அப்போது கோன்சேல்கூடி எட்டுமணிக்குக் கலைந்து பதில் காகிதம் எழுதி ஒன்று டபாலிலேயும் ஒன்று கட்டுமரத்தின்பேரிலேயும் அனுப்பினார்கள். இதற்குப் பதிலுத்தரம் எழுதினதற்கு வயணம் இன்னதென்று தெரியாது இனிமேலறியவேண்டியது.

1476 ஆ ஒக்தோபர் மூ 5உக்கு அக்ஷய ஹூ புரட்டாசி மீ 23உ

இற்றைநாள் புதவாரம் காலமே கோன்சேல் கூடி மறுபடியும் இரண்டு காகிதம் எழுதியனுப்பினார்கள், அவ்விடத்திலிருந்து ஒரு டபால் வந்து இந்தச் சேதியெல்லாம் நாளைநன்றையதினம் விசிதமாய்த்தெரியும் இற்றைநாள் பிரபுவினிடத்துக்குப் போனவிடத்திலே அவர் சென்னப்பட்டணத்துக்கு எழுதுகிற அலுவலிலே யிருந்தபடியினாலே ஒன்றும் விசேஷமாகப் பேச்சுக்கள் நடக்கவில்லை நானும் பனிரெண்டு மணிக்கு வீட்டுக்கு வந்து சாயங்காலம் சவாரி போய்வந்து தம்பிக்குச் சென்னப்பட்டணத்துக்குக் காகித மெழுதி நாளைக்கு டபாலிலே அனுப்பச் சொன்னேன்.

1746 ஆ ஒக்தோபர் மீ 6உக்கு அக்ஷய ஹூ புரட்டாசி மீ 23 உ

இற்றைநாள் வியாழக்கிழமை காலமே ஏழு மணிக்கு பாக்குக்கிடங்குக்கு வந்து பத்து மணிக்கு (ா) லட்சுமண நாயக்கன், சுங்கு சேஷாசல செட்டியார், கோபாலராயர் இவர்களெல்லா மிருக்கிறதிலே நடந்த சேதி: ஆணைக்கார சுகசிங்கு எறமநாயக்கர் இரண்டு பேரையும் அழைப்பித்து மகா-ா-ாஸ்ரீ குவர்னதோர் மூசே துப்ளேய்க்சு துரையவர்கள் வசத்திலே 1745 ஆ அவ்ரீல் மீ 25உ நீங்கள் பொதுவிலே அனமத்தாக வைத்ததுவும் பூவராகன் மூவாயிரத்தி நூற்றியெண்பத்தொன்றுக்கும் நம்முடைய வசத்திலே வைத்தது புதுச்சேரி ரூபாய் எழுநூற்றிப் பதினைந்துக்கும், சுகசிங்கு தனத்திலே நம்முடைய வசத்திலே வைத்தது புதுச்சேரி ரூபாய் எழுநூற்றிருபதுக்கும் எறமநாயக்கன் தனத்திலே நம்முடைய வசத்திலே வைத்தது புதுச்சேரி ரூபாய் மூன்

நூறுக்கும், நீங்களிதுவரையில் உங்கள் பொதுச் செலவுக்கும் உங்கள் பொதுக் கடன்காரருக்கும் உங்கள் சொந்தச் செலவுக்குமாக உங்கள் பொதுக்கணக்கு எல்லப்பிள்ளை எழுதின கணக்குப்படிக்குப் பற்றிக்கொண்டீர்களே. நீங்கள் சரியா பற்றிக்கொண்டதற்கு நமக்கு ரசீது கொடுங்கோளென்று கேட்டோம். அதற்கு நல்லதென்றுசொல்லி (ஶ்ரீ) துரையவர்கள் பேருக்கு வராகன் மூவாயிரத்தறுநூற்றெண்பத்தொன்று (3681 வராகன்) நம்முடைய மார்பத்திலே தாங்கள் பற்றிக்கொண்டோமென்று ஒரு ரசீது நம்முடைய பேருக்கு இந்த வராகன் மூவாயிரத்தறுநூற்றெண்பத்தொன்றுக்கும் (3681) புதுச்சேரி ரூபாய் எழுநூற்றிப்பதினைந்துக்கும் ஒரு ரசீதும், சுகசிங்கு காசாவரவுக்குப் பத்து ரூபாய் 320-க்கும் ஒரு ரசீதும் எறமநாயக்கன் காசாவுக்குப் பத்து ரூபாய் 300-க்கும் ஒரு ரசீதும், இப்படி சிவராமசாஸ்திரியள் கைப்பட கடுதாசியிலே நாலு ரசீதும் எழுதுவித்துத் தாங்கள் இரண்டுபேரும் கையெழுத்துப்போட்டு இந்த ரசீதுக்குச் சாட்சி (ஶ்ரீ) லட்சுமி நாயக்கர் கையெழுத்தும், சுங்குசேஷாசல செட்டியார் கையெழுத்தும் இந்த நாலு ரசீதுக்கும் போடுவித்துக் கொடுத்தார்கள். நானும் நாலு ரசீதும் வாங்கி சிவராமசாஸ்திரியார் வசத்திலே கொடுத்து வீட்டிலே கொண்டுபோய்ப் பெட்டியிலே சாவதானமாய் வைக்கச்சொல்லிக் கொடுத்தனுப்பினேம்.

தம்பியண்டைக்குச் சேவகன் வசத்திலே ஒதிந்தி பொட்டனம் அனுப்புவித்தோம். (ஶ்ரீ) முத்தியப்பிள்ளையவர்கள் செய்தி: அவர்கள் தமையனார் பெண்சாதி முத்தம்மாளும் திருவோத்தசாம முதலியாரும் வந்து சொன்ன சேதி: புவனகிரி பட்டணம் சீர்மையிலே தியாகவல்லி முதலான இரண்டு மூன்று கிராமங்கள் குத்தகை வாங்கியிருந்தாரே அதிலே பணம் காணுமல் நஷ்டம் வந்தது. அது நிமித்தியம் பணம் செலுத்தச் சொல்லித் தீவானத்தார் ரொம்ப அரிக்கிது பண்ணினார்கள். அது சகிக்கமாட்டாமல் ராத்திரி ராத்திரியே புறப்பட்டு வழுதாவூர் வந்துசேர்ந்தார். அவர் ஏறித்திரிகிற குதிரை பைகோவு குதிரைமத்தளத்துக்குச் சரியாக ஆடுகிறது. குதிரையும் தட்டுமுட்டும் தீவானத்தார் மறித்திருந்த விடத்திலே இவர் கிட்டேயிருக்கிற நாகனென்கிறவன் போய் ராத்திரியிலே குதிரையை அவிழ்த்து அதன்மேலே ஏறிக்கொண்டு வெகு வேகமாய் ராவிலே வழுதாவூர் வந்து சேர்ந்தான். வெகு வேகமாய்க் கொண்டுவந்தபடியினாலே குதிரைக்கு குடலற்றுப் போய் வழுதாவூர் வந்துசேர்ந்த நாலு நாழிகைக்கெல்லாம் செத்துப்போச்சுது. அதனாலேயும் மனதுக்குச் சமாதானம் போதாது. இப்போதும் அவர் தமையனார் பெண்சாதி முத்தம்மாள் முகாந்திரமாய் சம்பாகோவில் பாதிரிமாருக்கு எழுதி

அனுப்புவித்து அவர்கள் (ஈ) துரையவர்கள் மட்டுக்கும் போய் பேசி கவுல் கேட்டார்களென்றும், அதற்குத் துரையவர்கள் சொன்ன சேதி: இனிமேல் என்ன நீங்கள் மனுவாய்க் கேட்கிறீர்களோ நல்லது கவுல் தருகிறோம், ஊரிலே இரண்டாம் பேர் அறியாமல் வந்துவிட்டுமட்டிலே சுகமா இருக்கிறதல்லாமல் வேறே ஏதாகிலும் பாண்டித்தியம் பண்ணினால் மனம் பொறோம். அது சம்மதியானால் வரச்சொல்லுங்கோளென்று கவுல் கொடுத்ததாகவும், அந்தக் கவுல் (ஈ) முத்தியப்பிள்ளையவர்களண்டைக்கு அனுப்புவித்தோம் என்றும் சொன்னார்கள். இது பேச்சு ஏழெட்டு மணிக்குக் கூடின கொம்மிசேல்பண்ணி பனிரெண்டு மணிவரைக்கும் எழுந்திராமல் கொம்மிசேல் பண்ணி பதினொரு மணிக்குச் சென்னப்பட்டணத்துக்குத் தபாலிலே காகிதமும் அனுப்புவித்து, திரும்பவும் கொம்மிசேல் பண்ணிக்கொண்டிருக்கிறார்கள். மறுபடி சாப்பிட்டுச் சாயங்காலம் ஆறு மணி மட்டுக்கும் கோன்சேல் கூடியிருந்தது. மறுபடியும் காகிதமும் எழுதித் தபாலிலே யனுப்பினார்கள். அப்பால் கோன்சேல் கலைந்து பிற்பாடு துரை மாத்திரம் கபினேத்திலே ராத்திரி சாப்பிடுகிறவேளைமட்டுக்கும்எழுதிக்கொண்டிருந்தார். இந்தக் குழப்பம் சென்னப்பட்டணத்திலே யிருக்கிற மூசே லபோர்தோனே பண்ணுகிற தொந்தரையினாலே இப்படி யெல்லாம் குழப்பமாய் வேசடையும் காலத்தாலே துவக்கின கோன்சேல் ராத்திரிமட்டுக்கும் நிற்கிறது... ... ... ...

இற்றைநாள் சாயங்காலம் மேற்கு வழியிலே ஆறு சேவகரையும் வடக்கு வழியிலே ஆறு சேவகரையும் நேமித்துச் சென்னப்பட்டணத்துக்கு யார் கடுதாசி போனாலும் வந்தாலும் பிடித்துவரச்சொல்லி அம்மாளனுப்புவித்தாள்... ... ... மூசே பொக்காஷ் (M. Bocage) என்கிற மயோரையும் ஐம்பது பேர் மாயே துலுக்கரையும் சென்னப்பட்டணத்துக்கு அனுப்புவித்தார்கள்.... ... ... ... ... ...

1746 ஆ ஒக்தோபர் மீ 7 உ க்ஷய அக்ஷய ளு புரட்டாசி மீ 25 உ

இற்றைநாள் சுக்கிரவாரம் காலத்தாலே எட்டு மணிக்குச் சென்னப்பட்டணத்திலேயிருந்து மசுக்கரைக்குக் கொம்மிசேலியேர் இவ்விடத்திலே முந்தியிருந்து சென்னப்பட்டணத்துக்குப் போயிருந்த மூசே பொனேறுவென்பவன் வந்தான். இவனை மூசே லபோர்தோனே காவல் வைத்துவைத்தானும், மூசே தெப்பிரமேனி அதிகாரஸ்தனை பிற்பாடு காவல் விட்டிருந்தவன், முந்தாநாள் சொல்லாமல் ராத்திரி புறப்பட்டு மயிலாப்பூர் வந்து சேர்ந்து அவ்விடம் விட்டு இற்றைநாள்

காலத்தாலே எட்டு மணிக்கு வந்து சேர்ந்தான். துரை வீடு வந்தவுடனே, துரை கோன்சேல்காரரை யெல்லாம் அழைப்பித்துக் கோன்சேல் கூடியிருக்கிறார்கள். இந்தச் சமயத்திலே சென்னப்பட்டணத்திலேயிருந்து டபாலிலே காகிதம் வந்தது. பனிரெண்டு மணிக்குக் காகிதம் எழுதி டபாலிலே அனுப்பிப்போட்டு, கொம்மிசேல் பிரிந்தார்கள். நேற்று உதய முதல் ராத்திரி ஆறு மணி வரைக்கும் கொம்மிசேல் பண்ணின தென்ன, இன்றைக்கும் இரண்டு மணி மட்டுக்கும் கொம்மிசேல் பண்ணினதென்ன (ஈ) துரையவர்கள் ரொம்ப விடாசடையாய் இருக்கிறதென்னவென்று விசாரிக்குமிடத்திலே மூசே லத்தூசு சொன்ன வயணம்: நாளது மீ 21 உ 22 உ சென்னப்பட்டணத்திலே மூசே லபோர்தோனே தமக்குப் பண்டிகை யென்று உதயத்திலே பீரங்கிகள் போடுவித்ததாகவும் மூசே தெப்பிரமேனி, மூசே துலோராம், மூசே புரி, மூசே பரிதி, மூசே பெடதல்மே, மூசே லத்தூர் இவர்கள் முதலான பெரிய மனுஷருக்கெல்லாம் சாப்பாட்டுக்குச் சொல்லிப் பனிரண்டு மணிக்குள்ளே கோட்டை மெத்தைமேலே தீனிக்கு அழைப்பித்து எல்லாருங் கூடி சாப்பிடுகிறபோது மூசே லபோர்தோனே இவர்களைப் பார்த்துச் சொன்ன சேதி: இங்கிலீசுக்காரர் கப்பல் வருகிறதாகச் சேதி கேட்கப்பட்டது. ஆகையாலே புதுச்சேரியிலே யிருந்து வந்திருக்கிற சொல்தாதுகளை யெல்லாம் கப்பலிலே ஏற்ற வேணுமென்று சொன்னதாகவும், உடனே மூசே புரி, மூசே பரிதி முதலான பேர் அப்படி கப்பலிலே ஏற்றப்படாது என்று சொன்னதாகவும், உடனே மூசே லபோர்தோனே அவர்கள் பேரிலே கோபித்து, தன் மனுஷர் இருபத்துநாலுபேர் உருவின கத்தியும் கையுமாயிருக்கிறபேரை கிட்டேயழைத்து மூசே புரி, மூசே பரிதி, மூசே லத்தூர் இவர்கள் நாலு பேரையும் காவல்பண்ணி மூசே தெப்பிரமேனி அதிகாரத்தையும் தள்ளிப்போட்டுத் தன்னுடைய அதிகாரம் பண்ணிக்கொண்டு கோட்டையிலே, பட்டணத்திலே யிருக்கிற சரக்குகளை யெல்லாம் கப்பலிலே ஏற்றுகிறதாகவும் சொல்தாதுகளையும் கப்பலிலே ஏற்றிவிட்டதாகவும் சொன்னார். இப்படி ஒடுதி தப்பி மூசே லபோர்தோனே துடுக்காய் நிராகரித்து நடத்துகிற படியினாலே இருக்கிற சரக்குகளெல்லாம் கப்பலிலே ஏற்றிக்கொண்டு இங்கிலீசுக்காரருக்குக் கோட்டையை விற்றுப் போட்டபடிக்குத்தானே நடப்பித்துப்போட்டுத் தானும் சீர்மைக்குப்போய்விடுவாரென்று தோற்றப்படுகிறது. அப்பால் எப்படி நடத்துவானோ தெரியாது. இதனாலே துரைக்கு இருக்கிற விசாரம் ஒரு மிதத்திலேயில்லை. ஆனால் இவர் இரண்டு வருஷமும் சென்னப்பட்டணத்தை வாங்கவேணும் என்று பிரயாசைப்பட்டு கடைசியில் மூசே லபோர்தோனே தனக்கு ராசாக்கள் மினிஸ்தர்கள் ஒடுதியில்லையென்றதற்குக்கூட தான் ராசாக்களுக்குக்கூட மினிஸ்தர்களுக்குக்கூட உத்தரித்துக்

கொள்ளுகிறேமென்று பாத்தியமாய்க் காகித மெழுதிக்கொடுத்தயனுப்பிஆக்கிருக்குச்சென்னப்பட்டணமும்பிடித்துக்கொடியும்போட்டுக் கோட்டையிலே உண்டான திரவியமும் சுற்றிக்கொண்டு கோட்டையையும் மறுபடியும் இங்கிலீசுக்காரருக்குக் கொடுத்துவிட்டு இவருடைய ஒடுதியும் இல்லாமல் இவருக்குப் பிரயோசனமுமில்லாமல் இவர் அனுப்பப்பட்ட மனுஷருக்கும் காவலும் வந்ததானால் இதைவிட துக்கம் வேறே உண்டா. பிரபஞ்சத்திலே. ஆனபடியினாலே இவர் துக்கத்தைக் கரைகண்டு எழுதப்போகாது. வெளியிலே யிருந்த கீர்த்திக்கும் மகாதாட்சி வந்தது.

1746ளு ஒக்தோபர் மீ 8உ க்கு அக்ஷயளு புரட்டாசிமீ 26உ

இற்றைநாள் சனிவாரம் சூரிய உதயத்திற்குமுன் பிப்ரவரி மீத்திற்கு குரோதன ஞு மாசிமீத்திலே சீர்மையிலே யிருந்து புறப்பட்ட ஏழு கப்பலும் மசுக்கரைக்கு வந்து நாலு கப்பல் அவ்விடத்திலே நின்று மற்ற மூன்று கப்பலும் மாவைக்கு வந்து அவ்விடம்விட்டுச் செப்தம்பர்மீ 12உ இந்த மீ முதல்உ மாயைவிட்டுப் புறப்பட்டு இந்த நாள் சூரிய உதய வேளைக்குப் புதுச்சேரித் துறையிலே கொண்டுவந்து வைத்துப்பிடித்துப் பதினொரு பீரங்கி சாந்தோர் என்கிற கப்பல் கப்பித்தான் கொம்மாந்தான் மூசே தோடுந்தேலேன் அந்தக் கப்பலிலே பதினொரு பீரங்கி போட்டான். மற்ற இரண்டு கப்பலிலேயும் பீரங்கி போடவில்லை. ஏனென்றால், இந்த மூன்று கப்பலுக்கும் மூசே தோடுந்தேலேன் கொமாந்தானனபடியினாலே அவன் வந்த கப்பலிலே மாத்திரம் பீரங்கி சுட்டு மற்ற இரண்டு கப்பலிலேயும் பீரங்கிப் போடவில்லை. மற்ற இரண்டு கப்பலுக்கும் பெர் பிறில்யாம் என்றும் ஒரு கப்பல் மார்ச்சு என்றும் கப்பல் கப்பித்தான்மார் பேர்.

இதிலே வந்தது வெள்ளிப்பெட்டி, சகலாத்து, சாராயம், வெள்ளிப்பெட்டி சகலாத்துகட்கு வயணம்: மொக்கா சகலாத்து லோந்திரென்கிற சட்டம் கட்டு நூறு பாதிப்பச்சை பாதி செகப்பு கட்டு, நயமுழுச் சிகப்புக் கட்டு, முப்பது சார்சி கட்டு, அயவெள்ளிப்பெட்டி 120-ம் மாயேயிலிருந்து பசுருவுது பெட்டி 24. பொன் பெட்டி 1 வங்காளத்துக்கு வந்த சகலாத்து கட்டு வயணம்: அற்பிசி மீ 10உ எழுதின சாரியிலே எழுதியிருக்கிறது பார்த்துக்கொள்ளவும். இதுகள் வந்தது. இந்தக்கப்பல் சீர்மையிலிருந்தது. சீர்மையை விட்டுப் புறப்பட்டுப்போகச்சே பிரான்சு ராசாசகலசெயத்துடனேயிருக்கிறதாகவும்,இங்கிலீத்தேர் ராசா மெத்த தாழ்ந்துபோய் சகல ராச்சியமும் பிடிபட்டுப்போய் தானிருக்கிறலோந்த்ரும் கொஞ்சசீர்மையும்தவிர

மற்றதெல்லாம் பிரான்சு ராசா கைவசமாய்ப் போனதாகவும், அப்பாலவனைக் கண்டு பேசி இனம் பண்ணென்று முஸ்திதாயிருக்கச் சொல்லென்று சொல்லி அறுபது சேவகரை வைக்கச் சொல்லென்று சொன்னார். அதற்குப் பணம் நீ கொடு என்று சொன்னார். அதற்கு நான் சொன்னது: சென்னபட்டணத்துப் பாளையக்காரன் பலத்தவன், சுத்துப்பட்டிலேயிருக்கிற பளையக்காரரெல்லாம் பலத்தவர்கள். அவர்களெல்லாம் இவனுக்குப் பந்துக்களானபடியினாலே அவர்கள் சோருவரி பண்ணுவார்கள். அதற்கு நான் அறிந்த மட்டுக்கும் சொல்லுகிறேன்என்று சொன்னேன். நல்லதுதா னிந்தச்சமயத்துக்குப்போனால் அவ்விடத்துக் காரியத்துக்குத் தக்கதாய்ப் பார்த்துக்கொள்ளுவோம் என்று சொன்னார். நான் ஒரு வார்த்தை மனுபண்ணிக்கொள்ளுகிறேன் தயவுபண்ணிக் கேட்கவேணும் என்று சொன்னேன். நல்லது சொல்லென்று சொன்னார். முத்தியப்பன் போய் சும்மா வந்தால் நன்றாயிராது. எப்போதும் முன்னிருந்தபடிக்கானால் கவையில்லை. மத்திலே சிறிது நாள் வெளியே போயிருந்து வந்தபடியினாலே அது ஒரு இகக்ஷியாயிருக்கும் என்று தோற்றுதென்று சொன்னேன். நல்லது போனால் அவனுச்கேற்ற உத்தியோகம் தாக்ஷிவராதென்று சொன்னார். அதன்பேரிலே நான் வெளியே வந்து அருணசலசெட்டியை யழைத்துத் துரை யென்னுடனே சொன்ன சேதியும் சொல்லி முத்தியப்பிள்ளை சென்னப்பட்டணத்துக்குப் போகிறதற்குச் சம்மதிபண்ணிக்கொண்டு வாயென்று சொல்லியனுப்பினேன். அவர் முத்தியப்பிள்ளையண்டைக்குப் போய் நான் சொன்ன சேதியும் தம்பி திருவேங்கடம் சென்னப்பட்டணத்துக்குப் போகிறதில்லை யென்று உட்கார்ந்துகொண்டிருக்கிறானே. அவனுக்குச் சென்னப்பட்டணத்துக்குப் போகத்தக்கதாகத் தெரியச் சொல்லச்சொல்லிச் சொல்லியனுப்பினேன். அந்தப்படிக்கு அவனுக்கும் சொல்லி மறுபடி அருணசல செட்டி என்னுடனே வந்து சொன்னது: முத்தியப்பிள்ளைக்குச் சொன்னவிடத்திலே சென்னப்பட்டணத்துக்குப் பெரிய துபாசித்தனத்துக்குத்தானே போகத்தக்கதாகப் பார்க்கிறது நல்லது. அதற்கு இமிடாத பக்ஷத்துக்குப் பாளையக்காரதனத்துக்குத்தானே பார்க்கிறதுதான். எல்லாவற்றிற்கும் துரையுடனே நல்லதென்று சொல்லிப்போட்டு வீட்டுக்கு வந்தவுடனே நானும் வீட்டுக்கு வந்து கண்டு பேசிக்கொள்ளுகிறோமென்று சொன்னதாய் வந்து சொன்னான். தம்பி திருவேங்கடத்துக்குச் சொன்னவிடத்திலே அவன் சம்மதிக்கிறதாய்க் காணவில்லை லோகத்தினுடைய ஆசைவிட்டு விரத்தியாய்ப் பேசுகிற பேச்சாயிருக்கிறது. அதற்கும் முத்தியப்பிள்ளையவர்கள் சொன்னது: நான் வந்து தம்பி திருவேங்கடத்துக்கும் சம்மதியாய்ச் சொல்லுகிறேனென்று சொன்னதாக அருணசல

செட்டி வந்து சொன்னான். அதன்பிற்பாடு துரையண்டைக்குப் போய் முத்தியப்பன் சம்மதித்து நீங்கள் எந்தப் புத்தி சொன்னால் அந்தப் புத்திப்படிக்குக் கேட்கிறோம் என்று சொன்னார் என்று உபசாரமாய் வரச்சொன்னதாய்ச் சிறிது வார்த்தைச் சொன்னேன். நகைத்து, நல்லது அந்தப்படிக்குச் சேவகர் மற்றப்பேரை சீக்கிரமத்துக்கு முஸ்திதுபண்ணி அந்தக் காரியத்தின்பேரிலே திருஷ்டிவைத்துப் பார்த்திரு என்று சொல்லிப்போட்டு, மறுபடியும் நபாபுக்கும் ஷ மகனுக்கும் (மாபூசுக்கான்) உசேன் சாயுபுக்கும், சம்பதிராயனுக்கும் காகிதமாச்சுதாவென்று கேட்டார். ஆச்சுதென்று சொன்னேன். வக்கில் சுப்பய்யனுக்கும் காகிதமெழுதியனுப்பச்சொல்லிச் சொன்னார். அந்தப்படிக்கு எழுதி நபாபு, உசேன் சாயபு, சம்பதிராயன் மூன்றுபேர் காகிதம் ஒருத்தன் கையிலேயும், அப்பால் மாபூசுக்கானுக்கு எழுதின காகிதம் ஒருத்தன் கையிலேயும் கொடுத்து மாபூசுக்கான் ஆற்காடு விட்டு எங்கேயிருந்தாலும் கொண்டுபோய்க் கொடுக்கச்சொல்லியும், மற்ற மூன்றுபேர் காகிதமும் ஒருத்தனை ஆற்காட்டிலே கொண்டுபோயிருக்கச் சொல்லியும் இந்தப்படிக்குத் திட்டம் பண்ணியனுப்பிப் போட்டுத் துரைக்கும் கபுறு சொன்னேன். இந்தக் காகிதத்திலே எழுதின சேதி யென்னவென்று உங்கள் கொடிபோட்ட கப்பலைப் பிடித்துக்கொண்டதற்கு உங்கள் நிமித்தியம் எங்கள் வசம் சிறிது சண்டைக் கப்பலை யனுப்பி அந்தக் கோட்டையை வாங்கித் தம்முடைய நிசான்போட்டுச் சிறிது நாளைக்குப்பிறகு உங்கள் வசத்திலே ஒப்புவித்துப் போடச் சொல்லியும் அந்த மட்டுக்கும் என் வசத்திலே வைத்துப்போட்டுப் போனதாகவும், இதல்லாமல் போனவருஷம் வந்தபோது நீராய் பலவந்தமாய் இங்கிலீசுக்காரர் பேரிலே சண்டை பண்ணச் சொல்லியும் அதற்கு என்ன மற்றது பண்ணவேணுமோ அந்த மற்றதெல்லாம் பண்ணுகிறோமென்றும் இந்த ராச்சியத்திலே இங்கிலீசுக்காரரையே வைக்கப்போகாது உங்கள் கொடி எங்கும் பறக்கவேணுமென்றும், பின்னையும் நீர் சொன்ன பேச்சும் தை மீ தையிலே யும்முடைய குமாரன் மாபூசுக்கான் வந்தபோது சொன்ன வார்த்தையும் மறந்து போட்டு இப்படி இங்கிலீசுக்காரருக்காக உம்முடைய குமாரன் என் தமையன் மாபூசுக்கான் மற்றது பண்ணி நடத்துகிறது மெத்த ஆச்சரியமாயிருக்குதென்றும், பிரான்சுச்காரர் எப்போதும் சௌகரியவந்தர்கள் என்றும் அவர்களுடனே யுத்தம் பண்ணுகிறதற்கு ஒருத்தருக்கும் அசாத்தியமென்றும் இப்போது இங்கிலீசுக்காரர் பேரிலே காண்பித்த பராக்கிரமத்தை யும்முடைய குமாரன் பேரிலே எங்கே காண்பிக்கிறார்களோ என்று எனக்கு மெத்த விசாரமாயிருக்கிறது என்றும் அல்லவென்று நீங்கள் தூரத்து யோசனைபண்ணாமல் நடத்தினீர்களேயானால் உங்களுக்கும் எங்கள் சௌகரிய

பராக்கிரமம் பரீக்ஷையும் கொடுத்து அப்பால் சென்னப்பட்டணத்தையும் கோட்டையூர் சமஸ்தமும் படுசூரணம்பண்ணிப் பூமியோடே பூமியாக்கி அப்பால் நடக்கவேண்டியதும் நடத்தவோ, இது பிரத்தியக்ஷமாய் நீங்கள் பார்ப்பீர்கள் என்று கடினமாகிய உத்தரவாய் தகப்பனுக்குக் குமாரன் எழுதுகிற சாடையாயெழுதி அப்பால் மாபூசுக்கானுக்கும் தமையனுக்கும் எழுதுகிற சாடையாயெழுதி நபாபுக்கு எந்தச் சுறுக்கு எழுதியிருக்கிறதோ அந்தச் சுறுக்குதான். ஆனால் இதிலே ஒன்று அதனம்: உடைந்துபோன கப்பல் பார்க்கப் புறப்பட்டீர்களென்றும் அது என்ன பிரயோசனம் உடைந்துபோன பலகையிலே என்ன அகப்படப்போகுதென்று எழுதி அப்பால் நீர் சென்னப்பட்டணத்தின்பேரிலே எங்கள்பேரிலே ராசகாரியம் பண்ணத்தக்கதாகவும் இங்கிலீசுக்காரருக்கு மற்றதாய்க் கோட்டை வாங்கிக்கொடுக்கத்தக்கதாகப் புறப்பட்டீரென்றும் கேள்விப்பட்டோம் என்கிற சொல் அதனமாயெழுதப்பட்டிருக்கும். மற்றது எல்லாம் நபாபுக்கு எழுதின காகிதம் கண்டிப்புதான். உசேன் சாயபுக்கும், சம்பதிராயனுக்கும், எங்களுக்கும், உங்களுக்கும் வெகு நாளாய் சிநேகமாயிருக்கிறபடியினாலே நபாபு குமாரன் நடப்பிக்கிறதற்கு ஒரு பொல்லாப்பு வராமல் அவனைக் காத்துக்கொள்ளவேண்டியவனுக்குத் தெரியச் சொல்லிப் போகாதபடிக்கு நிறுத்தச்சொல்லியும். ஆப்பித்திகரித்துச் சிநேக மரியாதையாய் எழுதினதாய் எழுதியனுப்பினேன்.

*1746* ஆ ஒக்தோபர் மீ *9* உ க்ஷய ஸ்ரீ புரட்டாசி மீ *27* உ ஆதிவாரம்

முத்தியப்பிள்ளையவர்கள் குஞ்சு குழந்தைகள் என் விட்டுக்குக் கிழண்டையிலே மேலை வீடு இருக்கிறதே யதிலே யிருக்கிறார்கள். முத்தியப்பிள்ளையவர்கள் எதாப்பிரகாரமாய் மேலை வீட்டின்பேரிலே யிருக்கிறார்கள்.

சுங்குவார் கட்டுக் கணக்குக் கட்டு லக்ஷ்மண நாயக்கர் கணக்கு நாளது ஆ முத்தயப்பிள்ளை மெத்தை வீட்டின் பேரிலே பார்த்தபடியினாலே இனிமேல் இவர் வந்த மட்டுக்கும் இவ்விடத்திலே பார்க்கிறதற்குக் கூடாதென்று கடைத் தெருவிலேயிருக்கிற சுங்குவார் கும்பினியிலே கணக்குக் கட்டுகளையெல்லாம் கொண்டுபோய்ப் போட்டு, ஒரு பெரிய கிடங்கிலே வைத்து, அந்த வீட்டுக்கு லக்ஷ்மண நாயக்கர் முத்திரையும் கோபாலசுவாமி முத்திரையும் போட்டுச் சாவி கும்பினீர் சேவகர் வசமாய் வைக்கச்சொல்லி நாளையதினம் முதல் சுங்குவார் கணக்குப் பார்க்கிறது. அந்தக் கிடங்கிலே பார்க்கச்சொல்லி உத்தாரங்கொடுத்தோம்.

இற்றைநாள் மத்தியானம் சென்னப்பட்டணத்திலிருந்து பகல் இரண்டு மணிக்கு முசே தோத்தேல் வந்து சேர்ந்தான்.

*1746* ஆ ஒக்தோபர் மீ *10* உ க்ஷய ஸ்ரீ புரட்டாசி மீ *28*உ சோமவாரம்.

இற்றைநாள் காலத்தாலே வந்து தம்பி திருவேங்கடம் எழுதின காகிதம், அதிலே முசே லபோர்தொனே கெவுனி வாசல்களுக்கெல்லாம் தன்னுடைய உத்தரவு கவையில்லையென்று மேஸ்தர் மாசு இங்கிலீசுக்காரருடைய குவர்னதோருடைய உத்தாரப்படிக்குப் போக்குவருத்து சமஸ்தமும் நடப்பித்துக் கொள்ளச் சொல்லியும், வர்த்தகர் அவரவர்கள் தங்கள் சரக்கு நிமித்தியம் வந்து கேட்டால் மேஸ்தர் மாசு உத்தாரப்படிக்கு இனிமேல் நடக்கிறதானபடியினாலே வர்த்தகர் கிடங்கு சாவிகள் அவரவர் வசம் கொடுத்துவிடச்சொல்லி மேஸ்தர் மாசு வசம் ஒப்புவித்துவிட்டோம். அவரைக் கேட்டு வாங்கிக்கொள்ளுங்கோளென்று சொன்னதாகவும் சென்னப்பட்டணம் கோட்டையை இங்கிலீசுக்காரருக்கு விற்றுப்போட்டபடியினாலே இது முதற்கொண்டு அவர்களுத்தாரமே யல்லாமல் எங்களுக்குக் கவையில்லையென்றும், கப்பல்களுக்குச் சீக்கிரமத்துக்கு ஏற்றுவிக்கிறோமென்றும், புடவைக் கட்டுகள் இரண்டாயிரம் கட்டு மட்டுக்கும் காணுமென்றும் சகலாத்து அறு நூறு கட்டிருந்து நெப்புய்த்

தான் (Neptune) என்கிற கப்பலின்பேரிலே ஏற்றிவிட்டானென்றும், பொட்டிலுப்பு திரளாயிருந்ததென்றும், அதெல்லாம் கப்பலிலே ஏற்றிக்கொண்டானென்றும், இருபத்தி மூவாயிரத்தி எழுநூறு பத்தாக்கும், லக்ஷத்தெண்பத்தேழாயிரத்துச் சில்வானம் ரூபாயும், ஐந்நூறு மோகரியும் இருந்ததாகவும், மோகரிமாத்திரம் மூசே லபோர்தோனே எடுத்துக்கொண்டதாகவும், மற்றது பத்தாக்கு ரூபாயும் கிட்டங்கிலேதானே வைத்ததாகவும், பின்னையும் சிறிது வயணங்கள் 2[illegible]உ முதல் எழுதுகிற காகிதங்களிலே எழுதி வந்தது. இதிலே சூசனையாய் எழுதினேன். இதல்லாமல் 26உ எழுதின காகிதத்திலே மூசே தேப்பிறேமேனி தன்பேரிலே அசூயாயிருக்கிறானென்றும், மூசே பரிதி தன்னையழைத்து தான் அதற்குத் தன்னைத்தொட்டு ஒரு வித்தியாசமும் வரத்தக்கதில்லையென்று மூசே பரிதியுடனே சொன்னதாகவும் இப்படி விஷமசத்தி வேளையிலேயிருக்கிறதல்ல, தன்னை யழைத்துக்கொள்ளச் சொல்லி எழுதினதற்குப் பதிலுத்தரம் அதற்குத் தக்கதாயெழுதி இற்றைநாள் டபாலிலே இரண்டு காகிதம் அனுப்பினோம். இதல்லாமல், தம்பி எழுதின காகிதத்திலே பிரான்ஸிஸ்கு பிரேரா என்கிறவன் 25உ (7 ஒக்தோபர் மீ") செத்துப்போனதாயெழுதினான். ஆனால் அவன் ரோமன் அக்மசி (Roman Doctor) பிரான்ஸீஸ்கு பிரேரா (Francis Pereira) பேரிலே நமக்கு வரவேண்டிய எழுநூறு வராகன், அசல் வட்டி மூந்நூறு—ஏகத்துக்கு ஆயிரம் ஆயிரத்து நூறு வராகன் மட்டுக்கும் வரவேணும். நமக்குப் பாக்கிய நஷ்டகாலமானபடியினாலே இவன் முகாந்திரமாய்ச் சகலாத்துச் சரக்கு அனுப்பவும், இந்தப்பணம் நஷ்டமாகவும் வந்தது. ஆனால், சுவாமியினுடைய என்ன என் பாக்கியம் முன்னுக்கு என்னமாயிருக்கிறதோ அந்தப்படி நடக்குது. பார்க்கவேணும், ஆனால் இந்த பிரான்ஸீஸ்கு பெரோரா முதல் தடவையாக இந்த ராச்சியத்துக்கு வந்தபிற்பாடு சிறிதுநாள் யாத்திரை பண்ணுகிறோமென்று வர்த்தகர் கையிலே சென்னப்பட்டணந்திலே சிறிது வர்த்தகரை மோசம் பண்ணி பத்துப்பதினையாயிரம் வராகன் மட்டுக்கும் வர்த்தகருக்கு முதலிலே நஷ்டம் பண்ணுவித்தான். அப்பால் சென்னப்பட்டணத்திலே இந்தக் கடனைத் தொட்டு இருக்கப்படாமல் ஆர்க்காட்டுக்குப் போய் வைத்தியம் பண்ணுகிறேனென்று இருபத்தைந்து வருஷமாய் துலுக்கரிடத்திலே சேர்ந்து கடைசியிலே சந்தா சாயபு இடத்திலே மந்திரித்தனம் பண்ணி அவனை மருட்டியர் வசம்பண்ணி யனுப்பிப் போட்டுத் தானுமங்கே யிருக்கக்கூடாமல் அவ்விடம் விட்டுப் புதுச்சேரியிலே வந்துசேர்ந்து இங்கே திரியாவரமும் பொய்யும் பேசிக்கொண்டு கடைசியிலே சென்னப்பட்டணத்திலே போயிருந்து பிரான்சுக்காரர் சென்னப்பட்டணம் வாங்குகிறபோது இவன் வந்து சந்திநடந்து ஆக்கிருக்குச் சென்னப்பட்டணம் கோட்டை பிரான்சுக்காரர் வசமான பதினைந்தாம்

நாள் மரணமடைந்தான். அபத்தக்காரருக்கெல்லாம் குருக்கள். திரியாபுரத்துக்கெல்லாம் இருப்பிடம். இப்படி இந்நாள் முதற்கொண்டு இவனும் பல்லக்குச் சுவாத்தியத்துடனேயும் மேன்பாடுடனேயும் இருந்து ஆக்கிருக்கு எண்பத்தைந்து வயது மட்டுக்கும் இருந்து காலத்தைப் போக்கிவிட்டான்.

*1746* ஆ ஒக்தோபர் மீ *10* உ க்ஷய ஸ்ரீ புரட்டாசி மீ *28* உ சோமவாரம்

இற்றைநாள் காலத்தாலே ஏழு மணிக்குக் கோன்சேல் கூடி பத்தரை மணிக்குக் கலைந்தார்கள். சம்மதியின்னதென்று வெளியாகவில்லை.

வேங்கட நரசிங்கராசா அண்டைக்கு வைத்தியம் பார்க்க அனுப்பின ஆறுமுகப் பண்டாரம் அவருக்குக் கொஞ்சம் சுவஸ்தம் ஆனவுடனே அங்கேயிருந்து திருப்பதிக்கு காளாஸ் திரிக்குப் போய் மறுபடி நாராயணபுரத்துக்கு வந்து வேங்கட நரசிங்கராசா சேதிக்கு விசாரித்தவிடத்திலே கால் கையெல்லாம் சோபை கண்டது என்கிற சேதி கேட்டு இனிமேல் நிருவாகமில்லை. நாம் போகிறதில் காரியமில்லையென்று செவ்வையாய் புதுச்சேரிக்கு நேற்றையதினம் வந்துசேர்ந்து இற்றைநாள் என்னண்டைக்கு வந்து இனிமேல் வேங்கட நரசிங்கராசா பேச்சு நிருவாகமில்லை. இன்னும் ஒரு மாதமிருந்தால் மெத்தப் பெரியது என்று கார்வேட்டிராசாவுக்குப் பயித்தியம் பிடித்தது முதலானதெல்லாம் சொன்னான்.

இற்றைநாள் சாயங்காலம் குவர்னதோர் மூசே துப்ளேய்க்கு சுக்ஷ தக்காசாயபு போனூர் மமுதல்லிகான், சென்னப்பட்டணம் பத்தேயானதற்கு முபார்க்குப் பாதி காகிதம் எழுதின வயணம்: தானப்பமுதலியாரும் மதனந்த பண்டிதனும் போய் துரையுடனே சொல்லப்போன மாத்திரத்திலே, துரை இனிமேல் சென்னப்பட்டணத்துச் சேதியைச் சொல்லவேண்டாம். எனக்குக் கவையில்லை என்றுசொல்லி வேசாறவாய்ப் போகச்சொன்னார். இந்த மட்டுக்கும் துரைக்கு நினைப்பு, சென்னப்பட்டணம் அந்தப்படியும் இங்கிலீசுக்காரருக்குக் கொடுக்காமல் நிறுத்தலாமென்று அவனாலே ஆன அரண பரணசக்தி எந்தெந்தவிதம் உண்டோ அந்தந்த விதமெல்லாம் பார்த்த விடத்திலேயும் மூசே லபோர்தோனே (M. LaBourdonnais) தான் எடுத்த அடிமடங்காமல் அதற்கு எல்லாம் எந்தெந்தவிதம் பத்திரப்படுத்த வேணுமோ அந்தந்த விதத்திலே இவர்கள் மனுஷர்கள் கோட்டைக்குள்ளே சேராதபடிக்கு இருந்த சொலுதாதுமார், ஒபிசியேலுமார்களையெல்லாம் கப்பலில் ஏற்றிவிட்டுத் தன்னுடைய அதிகாரத்துக்குள்ளேயிருக்கிற மசுக்கரை, மோரீஸ் சொலுதாதுகளையும் காப்பிரிகளையும் கோட்டையிலே வைத்துக்

கொண்டு தன்னண்டைக்கு புதுச்சேரி வெள்ளைக்காரர் ஒருத்தரையும் விடவேண்டாமென்றும், அல்லவென்று ஆராகிலும் புதுச்சேரி வெள்ளைக்காரர் பேசவேணுமென்றால் கத்தி அப்புறத்திலே வைத்து ஒரு ஆயுதமுமில்லாமல் சோதனை கொடுத்துப் பிற்பாடு போனால் என்ன வந்ததென்று கேட்கிறதும் அந்த க்ஷணம் கோட்டைக்கு அப்புறம் போகச்சொல்லுகிறதும் குவர்னதோர் சென்னப்பட்டணம் சம்மதி ஏதாகிலும் சொன்னாரென்று சொன்னதேயுண்டானால் உங்கள் வேலையல்ல, போவென்று சொல்லுகிறதும், குவர்னதோர் சென்னப்பட்டணத்துக் காரியத்தைக் குறித்து எழுதினால் அதற்கு உத்தரமெழுதாமல் பின்னை வேறே காரியத்தைக் குறித்து எழுதுகிறதும் இப்படியாகப் பண்ணிக்கொண்டு. தான் சுத்தவேண்டியதை இங்கிலீசுக்காரருக்குக் கோட்டையை ஒப்புவிக்கிறோமென்றும் அவரவர்கள் சொந்தத்திலே இருக்கிறதையும் சிறிது அவரவர்களுக்குக் கொடுக்கிறோமென்றும் சொன்னதின் பேரிலே அவரவர் மூசே லபோர்தோனேயை விசுவாசித்து, கும்பினீர் கண்டு சமஸ்தமும் முன்னிருந்த கணக்கெல்லாம் கிழிப்பித்து, மூசே லபோர்தோனே சொன்னபடிக்கு நூதனமாய் எழுதுவித்து இந்தக் கணக்கை இனிமேல் கும்பினியாருக்கும், ராசாவுக்கும், மினிஸ்தர்களுக்கும் அத்தாக்ஷி காண்பிக்கவும், இப்படியெல்லாம் பண்ணிக்கொண்டு அவரவர் வெள்ளைக்காரர் சொல்லுகிறது பதினைந்து இருபது லக்ஷம் வராகன் சுத்திப் போடுவானென்கிறவர்களும், அறுபது எழுபது லக்ஷம் சுத்துவானென்கிறவர்களும், வச்சிரமும் கெம்பும் வராகனுமாகத் தானே மேலே எழுதப்பட்ட தொகைக்கு சுத்தியிருப்பானென்கிறவர்களும், இப்படி சரிப்போனபடிக்கெல்லாம் வெள்ளைக்காரரும் தமிழரும் சொல்லுகிறார்கள். எவ்வளவு அவன் சுத்தினானோ சுவாமிக்குத் தெரியும். பட்டணம் இந்த இந்திய ராச்சியத்துக்குள்ளே சென்னப்பட்டணத்துக்குச் சமானமான பட்டணம் இல்லாதத்தினாலேயும், சுவர்ண பட்டணம் என்று ராச்சியமெல்லாஞ் சொல்லுகிறபடியினாலேயும், குபேரனுடைய பட்டணம் இதுதான் என்று பார்க்கிறபேருக்கெல்லாம் தோற்றியிருக்கிறபடியினாலே அப்படிப்பட்ட பட்டணத்தை இவன் மனதின்படியியே கொள்ளையிட்டபடியினாலே கோடிதிரவியமென்று சொன்னாலும் சரிப்பட்டிருக்கும். துரை சகல கஷ்டப்பட்டு, சகலமும் தயார் பண்ணி, கலத்திலே வடித்துச் சாப்பிடுகிற வேளையிலே தட்டிப்போட்டுப் பின்னையொருத்தன் சாப்பிட்ட கதையாய் மூசே துய்ப்ளேக்குக்குப் பிரயாசைப்படவும் மூசே லபோர்தோனே எடுத்துப்போகவுமாகத் தீர்ந்துபோனால் மூசே துய்ப்ளேய்க்குத்த எத்தனை விசாரமிருக்குமோ அதற்குக் கரையிருக்கிறதா? புருஷ ஆயுசுலேயும் இப்படிப்பட்ட வாய்ப்பு வாய்க்கலாமா? வாய்க்கமாட்டாதே? அப்படிப்பட்ட வாய்ப்பு வாய்த்துத் தட்டி

போறது. பாக்கிய திசையில்லாதபடியினாலே தட்டிப்போய் விட்டது. நடந்திருக்கிற சம்மதிக்கு எழுதினது பத்து லக்ஷத்திலே ஒரு பங்கு காணாது.

சென்னப்பட்டணம் இங்கிலீசுக்காரருக்கு விற்றபணம் பதினொரு லக்ஷம் வராகன் உடம்படிக்கையின்னதென்று நன்றாய் வெளிப்படவில்லை. வெளிப்பட்டவுடனே பிறகாலே வயணமாய் எழுதுகிறேன். மூசே தெப்பிரேமெனி, துலோராம் முதலானபேர் இன்னும் நாலைந்து நாளையிலே வருவார்களென்று சொன்னார்கள்.

*1746* ஆ ஒக்தோபர் மூ *11* உக்ரு அக்ஷய ஷு புரட்டாசி மீ 29 உ மங்களவாரம் நாள்.

இந்த நாள் மூசே லத்தூசு, பறங்கிப்பேட்டையிலே சின்ன துரையாய் ஒலாந்தா பெத்திரிக்கு இருந்த மயோர் ஒஸ்த்ருய்க் (M. Astrue) குமாரத்தி இப்போது பறங்கிப்பேட்டை பெத்திரிக்குச் சின்ன துரையாயிருக்கும் மனேர் ஒஸ்திரால் உடன் பிறந்தாளை இற்றைநாள் கலியாணம் பண்ணிக்கொண்டான். மதாம் போயிருந்தாள். குவர்னதோர் போனார். மற்றப்படி விசேஷித்த சம்பிரமமில்லை. நாடோடியாயிருந்ததுதானென்றால் குவர்னதோருக்கு மூசே லபோர்தொனே சென்னப்பட்டணம் காரியம் ஒப்புறவு இல்லாமல் நடப்பித்த சம்மதியினாலே குவர்னதோருக்கு உற்சாகமில்லை. ஆனதினாலே எல்லாருக்கும் உற்சாகமில்லை ஆனபடியினாலே, சம்பிரமம் மட்டும் நாம் ஒரு சரிகைச் சுருட்டி—நூற்றிமுப்பது ரூபாயும் வெள்ளைச்சாலுவைக்கு அறுபத்திரண்டு ரூபாயும், வாழைப்பழம், கற்கண்டு, சர்க்கரை முதலான வஸ்துக்களும், புஷ்பங்கள், தடக்கும் பாலத்தட இருபது முசல் குட்டிகளும் அழைப்பித்துக் கொடுத்து நானும் மற்றதுடனே சாயுங்காலத்துக்குள்ளே மூன்று தரம் போய் வந்தேன். போனவிடத்திலே பாக்குவெற்றிலை பன்னீர் கொடுத்தார்கள்.

இற்றைநாள் காலத்தாலே மூசே லபூசி (M. Labougie) சென்னப்பட்டணத்திலிருந்து வந்தான்; துரையைக்கண்டு பேசினவுடனே கோன்சேல் கூடினார்கள். நான் துரையைக் கண்டு பேசுகிறதற்கில்லாமல் ஆறேழுநாள் நடந்தபடிக்குத் தானே இன்றைக்கும் பாக்குக்கிடங்கிலேயிருந்து விட்டுக்கு வந்தேன். நேற்றையதினமும் இன்றையதினமும் ஆற்காட்டிலிருந்து வந்தகாகிதத்திலே நபாபு அன்வர்திகானுக்குச் சரீரம் ரொம்ப அசுவஸ்தமாயிருக்குதென்றும், அவர் மூத்த குமாரன் மகம்மது மாபூசுகானுக்கு நபாபுகிரிப்பட்டம் கட்டினார்கள் என்றும், மமுதல்லிகான் ராணிப்பேட்டையிலே மராட்டியர் பேரிலே

போகவேணுமென்றிருக்கிறவன் அண்டைக்கு மாபூசு கான் சம்பதிராயன் முதலானபேர் போனதாயும், அதன் பேரிலே சம்பதிராயனுக்கு ஒரு ஆனையும் சிரொப்பாவும் கொடுத்தானென்றும், அவன் கையில் அனுப்புவித்துக் கொண்டு மறுபடி ஆற்காட்டுக்கு வந்துவிட்டார்களென்றும், வன்னிப்பேட்டுக்கு நாம் சாமீன் இருந்தோமென்றும், அந்தப் பணம் வரவேணுமென்றும் சயிது பாசல்கான் (Sayid Fazl khan) மனுஷன் வித்திய சந்து (Vidya chand) என்கிறவன் திவான்சியுடனே சொல்லி, கொத்தவாலுக்குச் சொல்லுவித்து நம்முடைய குமஸ்தா சாம்பையனை அழைப்பித்து உங்கள் காபந்துபேரிலே வன்னிப்பேட்டுச் சம்மதிப்பணம் வரவேணு மென்று சொன்னதாகவும் எங்களுக்குத் தெரியாது. இப்படி நூறு காரியம் நடக்கும். அது அவ்விடத்தில் பேசிக்கொண்டு போகவேணுமேயல்லாமல் இவ்விடத்திலே எங்களைக் கேட்டாப்போலே என்ன கிரிகை என்று கொத்தவாலுக்குச் சொன்னதாகவும் அதன் பேரிலே உங்கள் எசமானுக்கு எழுதியனுப்பு என்று சொன்னதாகவும், நல்லது, வந்து காகித மெழுதினதாகவும் எழுதினார்கள். அதற்குப் பதில் உத்தரவு யாதியஸ்தரவாய்ப் பார்த்துக்கொள்ளத் தக்கதாக நாம் சாமீன் இருந்ததில்லை. ராகவ பண்டிதன் பேருக்கு பொர்சு எழுதினேமென்றும் அந்த வருஷம் மூன்று தரம் அமுல் கல்லல் ஆச்சு என்றும், ஆனபடியினாலே நம்மைக் கேட்கக் கவை யென்னவென்று இது நிமித்தியம் புதுச்சேரி குவர்னதோருக்கு முன்னே எழுதினதற்கு அவர் எழுதின காகித வயணமும் எழுதி கொத்தவாலுக்கு ஏதாகிலும் வாய்ப் பூசி நியாயமானபடிக்கே பேசச்சொல்லியும், இது முக்கடை வழி வராதபடிக்கு உசேன் சாயபு மனுஷரை லாலாப்பேட்டைக்கும் ஆற்காட்டுக் கடைக்கும் இரண்டு பேரைக் கொண்டுவந்து வைத்துக்கொள்ளச்சொல்லியும், இது நிமித்தியம் அப்பாசி பண்டிதருக்குக் காகிதமும், கௌரவரம் கோதண்ட ராமய்யனுக்குக் காகிதமுமெழுதி நாளைக் காலத்தாலே கொண்டுபோகச்சொல்லி, கோதண்டராமய்யன் மனுஷன் கையிலே காகிதம் கானுகோயி சீனிவாச ராயன் மனுஷர் பிறகேயனுப்புவித்தோம்.

காரைக்காலுக்கு வாய்க்கால் கலாப நிமித்தியம் பிரகாச முதலிக்கு மேலகிரி பண்டிதன் குமாரன் ஸ்ரீனிவாசராயருக்கும் கந்தப்பனுக்கும் சேஷய்யங்கார் பேரனுக்கும். மேலக் கிராமத்தாரைக் கீழக்கிராமத்தாரையும் மூசே பாதி ஒடுதியின் பேரிலே நடப்பித்துச் சமாதானம் பண்ணி, ஒருவரும் நடந்ததை மறிக்கிறது இப்போது நியாயமில்லையென்று கனகராய முதலியார் குத்தகைக்காரருக்குத் தெரியச்சொல்லி எழுதியனுப்புவித்தோம்.

1746 ஆ ஒக்தோபர் மீ 12 உக்கு அக்ஷய ஞு புரட்டாசி மீ 30 உ புதவாரம்.

இற்றைநாள் சென்னப்பட்டணத்திலிருந்து மூசே மேல்வீல் (M. Melville) வந்தான். வந்து அவ்விடத்துச் சமாசாரம், கோட்டையை மறுபடி இங்கிலீசுக்காரருக்குக் கொடுத்ததும் மூசே லபோர்தோனே புதுச்சேரி நோன்சேல் ஒடுதியைத் தள்ளி இங்கேயிருந்து போனவர்களைக் காவல் வைத்து விட்டுவிட்டதும் மூசே துலோராம், மூசே தெப்பிரமேனி, மூசே பர்த்தேலெமி (M. Barthélemy) மூசே தே புய்ரி (M. de Bury) முதலான பேரெல்லாம் தம்பி திருவேங்கடம் கூடவருகிற சேதியும் அவர்கள் வந்து மயிலாப்பூரிலே வந்திருக்கிறதும், இப்பால் பயணம் சாகிவருகிற சாடையும் வந்து சொன்னான். இதுவுமல்லாமல் மூசே லபோர்தோனே சகல ஆயுதத்துடனேயும் கப்பலில் சரக்கும் மற்ற தினி முதலானதும் ஏற்றிக்கொண்டு கப்பலின் பேரிலே ஏறிப் போகப் பயணமாயிருக்கிறதும் வந்து சொன்னான். தம்பி எனக்கு எழுதின காகிதத்திலேயும் மூசே தெப்பிரமேனி (M. d'Espremenil) முதலான வெள்ளைக்காரருடனே கூட புதுச்சேரிக்குப் பயணமாய் வரத்தக்கதாக மயிலாப்பூர் வந்து சேர்ந்தோம். நாளையதினம் புறப்பட்டுவருகிறோமென்றும், ஒருவேளை அடிப்பட்டால் தனக்குச் சரீரம் சுவஸ்தமில்லையென்று அழைப்பித்துக்கொள்ளச் சொல்லியும் இப்படியாக எழுதினான். துரை சீர்மைக் கப்பலின் பேரிலே யனுப்புகிறதற்குக் காகிதங்கள் எழுதுகிறதும் அவர் முகத்திலே இருக்கிற வேசடையும் காகிதத்திலே எழுதிமுடியாது.

இற்றைநாள் பத்து மணிக்குச் சென்னப்பட்டணத்திலிருந்து வந்த தபாலிலே இங்கிலீசுக்காரர் கொடிமரத்தின் கீழே இரண்டு லக்ஷம் வராகன்மட்டுக்கும் புதைத்து வைத்ததாய்ப்போலேயும், அது மூசே லபோர்தோனே இங்கிலீசுக்காரரை மேஸ்தர் மாசு குவர்னதோரைப் பார்த்து, நீ என்னை மோசம் பண்ணுய். நீங்கள் எனக்கு நிசமாய்ச் சொன்னீர்களென்று நான் புதுச்சேரி குவர்னதோருடனே கூட நான் துவேஷித்துக்கோட்டையும் பட்டணமும் உங்கள்வசம் பண்ணி வைக்க வேணுமென்று எல்லாரையும் போகச்சொல்லி உடன்படிக்கை எழுதிக்கொடுத்து நானும் இரண்டு மூன்று நாளையிலே பயணமாய் ஏறிப்போகிறதாயிருக்கும்போது இப்படி என்னை நீங்கள் மோசம்பண்ணின மட்டுக்கும் இன்னும் என்ன என்ன மோசம் பண்ணியிருக்கிறீர்களோ தெரியாது என்று அவர்களுக்கு எழுதிக்கொடுத்த உடன்படிக்கைக் காகிதத்தையும் கிழித்துப்போட்டு மேஸ்தர் மாசு (Mr. Morse) முதலானபேரையும் காவல் வைத்துப்போட்டு இறக்கின இங்கிலீசுக்காரரையும் மறுபடி கப்பலின்பேரிலே ஏற்றிப் புதுச்சேரி

சொல்தாதுகளை கப்பலிலே இருந்தபேரை இறக்கிப்போட்டு, கெவுனி வாசல்களுக்கெல்லாம் பிரான்சுக்காரர் சொலுதாதுகளை வைத்து, புதுச்சேரி குவர்னதோரை அவர்களுக்கு மூசே லபோர்தோனே காகிதம் இங்கிலிசுக்காரர் தன்னை மோசம் பண்ணினபடியினாலே தான் மோசம் போனேனென்று இப்பவும் இங்கிலீசுக்காரருக்கு எழுதிக்கொடுத்த உடன்படிக்கைக் காகிதம் கிழிபட்டுப்போச்சுதென்றும், இங்கிலீசுக்காரரையெல்லாம் காவல் வைத்திருக்குதென்றும், மூசே தேப்பிரமேனி முதலானபேரை யனுப்புவித்துக் கோட்டையை ஒப்புவித்துக்கொள்ளச்சொல்லியும் எழுதியனுப்பினானென்றும், அதின்பேரிலே துரைக்கு இருந்த மனது வேசடையெல்லாம் போய்ச் சந்தோஷம் வந்து மூசே தேப்பிரமேனி முதலானபேரையெல்லாம் மறுபடி வழியிலே எங்கேவந்தாலும் திருப்பிக்கொண்டு போகச்சொல்லி, கோன்சேல் கூடி காகிதம் எழுதி அனுப்பிவிட்டார். இது சேதி மூசே லத்தூசு முதலானபேர் சொல்லக்கேட்டது உள் வர்த்தமானம் அவ்விடத்திலே என்ன நடந்ததோ தெரியாது. இன்னம் நன்றாய் விசாரித்துப் பிறகாலே வயணமாய் எழுதுகிறேன்.

இந்தநாள் சாயங்காலம் மூசே தே லாதூர் (M. de la Tour,) மூசே புருய்யேர் (M. Bruyeres), மூசே கேர்ழான் (M de Kerjean) இவர்கள் சென்னபட்டணத்திலேயிருந்து வந்தார்கள். அவர்களை மறுபடியும் ராத்திரி எட்டு மணக்குப் பயணம் பண்ணிச் சென்னபட்டணத்துக்குப் போகச்சொல்லியனுப்பிவிட்டார்.

இந்த நாள் சென்னப்பட்டணத்துக்கு மூன்று காகிதம் டபாலிலே யனுப்பினார். இந்தநாள் ராத்திரி விடியற்காலம் தீபாவளிப் பண்டிகை துவக்குகிறது.

1746 ஆ ஒக்தோபர் மீ 13 உக்கு அக்ஷய ஞு புரட்டாசி மூ 31 உ வியாழக்கிழமை.

இந்தநாள் காலத்தாலே டபால் காகிதம் வந்தது. அதிலே தம்பி காகிதமொன்று வந்தது. அந்தக் காகிதத்திலே எழுதியிருந்த வயணம்: மூசே தேப்பிரமேனி (M. de Esperemenil,) மூசே துலோரான், மூசே பரிதி, மூசே பர்ந்தேலேமி முதலான பேர்கள் எல்லோரும் சதுரங்கப்பட்டணம் வந்து சேர்ந்தோமென்றும், இதிலே புதுச்சேரியிலிருந்து காகிதம் வந்தவுடனே பார்த்துக்கொண்ட உத்தரக்ஷணம் மூசே தேப்பிரமேனி சதுரங்கப்பட்டணத்திலிருந்தவன் மறுபடி சென்னப்பட்டணத்துக்குப் பயணப்பட்டுப் போனானென்றும், போகச்சே தம்பி போய் நான் வருகிறதாயென்று கேட்டதற்கு, மூசே துலோராம்-பாதி முதலானபேர்கள் உடனேயிருந்து அவர்கள் சொற்படி நடந்துகொள்ளச்சொல்லிச் சொன்னதாகவும், அவர்கள் புறப்பட்டு

வந்தால் நானுங்கூட வந்துவிடுகிறேனென்றும், ஒருவேளை அவர்கள் திருப்பிக்கொண்டு சென்னப்பட்டணத்துக்குப் போகிறதானால் தனக்குச் சரீரம் சுவஸ்தமில்லைபோனால் சரீரம் நர்க்கத்தக்கதில்லை யதனாலே வேறே யொருத்தரை அனுப்பச்சொல்லியும் இப்படியாக வந்த காகிதத்திலே பார்த்துக் கொண்டிருக்கையிலே மூசே பாதி, மூசே பெடுத்தலேமி, மூசே பனும் பின்னையும் சிறிது ஒப்பிசியேல்மார்களும் வந்தார்கள். வந்தவர்களை துரை ரொம்பக் கோபம்பண்ணி மறுபடி திருப்பிக்கொண்டுபோகாமல் வந்ததேனென்று கேட்டதற்கு, நீர் முத்திரைபோடாமல் ஒரு காகிதமெழுதி வருகிறவர்களெல்லாருக்கும் காண்பித்துப் பார்த்துக்கொண்டவுடனே மறுபடி சென்னப்பட்டணத்துக்குப் போகச்சொல்லி எழுதின காகிதம் மரக்காணத்துக்கழியிலே வருகையிலே வந்தது. மூசே புரி மாத்திரம் திருப்பிக்கொண்டு போனான். நாங்களெல்லோரும் உங்களை வந்து கண்டு பேசிப்போகவேணுமென்று வந்தோமென்றும் சொன்னதாகவும் அதிலே பீனிக்சு என்கிற கப்பல் கப்பித்தான் பென்வாம் என்கிறவன் வந்தான். வந்த பிற்பாடு மறுபடி கோன்சேல்காரரையெல்லாம் கூட்டி மறுபடி கோன்சேல் கூடி இரண்டு மணிக்குக் கலைந்தார்கள். அதின்பிற்பாடு பகலைச் சாப்பாடு சாப்பிட்டு மூசே பெடுத்தலேமி, பாதி முதலான பேர் அனைவரும் பயணம் போகிறது நின்றிருந்தது. நேற்றைய தினம் மூசே லத்தூர், மூசே கேர்ழாம் இரண்டுபேரும் எதிரே வந்தாரே, மறுபடியும் பயணமாய் இருக்கிற மூன்றுபேரையும் மூசே துலோராம் சாயங்காலம் வந்தான். தம்பியை வரவேண்டாமென்று நம்முடைய அக்கிரகாரத்திலேதானே யிருக்கச்சொல்லி எழுதினபடிக்கு அங்கேதானே யிருந்தான். இற்றை நாள் சாயங்காலம் மப்பும் மந்தாரமுமாயிருந்தபடியினாலே, ராத்திரி, வாடைகாற்று அடித்து, மின்னலும் மழையும் வந்தது.

1746 ஆ ஒக்தோபர் மீ 14 உ க்ஷய ஐப்பசி மீ 1உ சுக்கிரவாரம்

இற்றை நாள் அமாவாசை, காலத்தாலே மழையும் காற்றுமானபடியினாலே நான் வெளியே துரை வீட்டுக்குப் போகவில்லை. துரைக்குப் பிடரியிலே இரண்டு சிரங்குபோலே கண்டு சற்று நோக்காடாயிருந்தது எட்டு மணிக்குக் காற்று மழையும் ஆனபடியினாலே துரை உடுத்திக்கொள்ளாமல் படுத்துக்கொள்ளுகிறபோது போட்டிருக்கிற நெடுங்கைச் சட்டை, கமிசி விலேத்து, குல்லாவுடனே மதாம் துய்ப்ளேய்க்ஸினுடைய சிறிதுக் கூண்டிலே ஏறிக்கொண்டு கடற்கரைக்குப்போய் கப்பல்கள் அலைகிற அலைச்சலும் கடல் கொந்தளிப்பும் பார்த்துக் கப்பல்களுக்குப் பின்னை யொன்றும் தொந்தரவுகள் வராதேயென்று பட்டணவரை விசாரித்துவிட்டுக்

குனரவாடை நின்று சோழக்கச்சான் இறுதி மூலைக்காற்று வருகிறபடியினலே பயமில்லை. காற்றுமழையும் சாப்பும் வாங்கிப்போமென்றும் சொன்னபடியினலே அதைக்கேட்டு விட்டு மறுபடியும் வீட்டிற்கு வந்துவிட்டாரென்கிற கபுறு வந்தது.

தம்பி அக்கிரகாரத்திலேயிருந்து இரண்டு மணிக்கு வந்தான். நானப்போது நித்திரை பண்ணிக்கொண்டிருந்தபடியினலேயும் அவனுக்குச் சரீரம் லகுவில்லாமலிருந்தபடியினலேயும் சாப்பிடாமல் துரையைக் காண்பித்துக்கொள்ள வேணுமென்ற நினைப்பினலே அங்கிகமூட்டாமலிருந்தான். நான் நாலு மணிக்கெழுந்தபிற்பாடு தம்பி வந்த கபுறு கோபாலசுவாமி வந்து சொல்லி, துரையைக் காண்பித்துக்கொள்ள வேணுமென்று தம்பி காத்துக்கொண்டிருக்கிருரென்று சொன்னன். அதன் பேரிலே நான் முகங்கழுவிக்கொண்டு தம்பியிருக்கிற தென்னண்டை பாரிசம் வீட்டுக்குப் போனேன். தம்பி முகம் மகா வேசாறியாயிருக்கிறதும் சாப்பிடாமலிருக்கிறதும் சாப்பிடச் சொன்னேன். சரீரம் லகுவில்லையென்று சொன்னன். அதன் பேரிலே துரையவர்களண்டைக்குப் போகவேணுமென்று தம்பியைப் போகச்சொல்லி நானும் அங்கிபோட்டுக்கொண்டு சாருயக்கிடங்குக்குப்போய் பாக்குக்கிடங்கிலே உட்காரவேணுமென்று பல்லக்கை விட்டிறங்கினவுடனே குவர்னதோரும் மூசே லகுவும் (M. Lagou) நடந்து கடற்கரைக்குப் போனர்கள்.

அவர் வருந்தனியும் பாக்குக்கிடங்கு திண்ணையின்பேரிலேயிருந்தோம். ஆறு மணி அடிக்கச்சே குவர்னதோர் வீட்டுக்கு வந்தார். வந்தவுடனே தம்பியை அழைத்துக்கொண்டு துரையண்டைக்குப் போனவிடத்திலே துரை புகை பிடித்துக்கொண்டு கிழக்கு முகமாய் சுற்றிலும் ஏழெட்டு வெள்ளைக்காரர்களிருக்கத்தக்கதாக உட்கார்ந்துகொண்டிருக்கச்சே நான் போய் சலாம்பண்ணினவுடனே, எங்கு வந்தாயென்று கேட்டார். இதிலே தம்பியைக் கண்டவுடனே எழுந்திருந்து இப்புறம் வந்து நீ ஏன் வந்துவிட்டாயென்று கேட்டார். மூசே தேப்பிரமேனி சொன்னது: மூசே துலோராம் முதலான பேர் எப்படிப் போனர்களோ அப்படிப் போகச்சொல்லி உத்தாரம் கொடுத்தபடியினலேயும் அவர்கள் புதுச்சேரிக்கு வந்துவிட்டபடியினலேயும் நானும் வந்தேனென்று சொன்னதற்கு மூசே லபோர்தோனே நடந்த நடத்தை மகா செவ்வையாய் நடந்தானென்று கேட்டார். அந்தச் சாடை தம்பிக்குத் தெரியாமல் அவர்கள் சொன்னபடிக்குக் கேட்டு நடந்துகொண்டு வந்தேனென்று சொன்னன்.

அந்தப் பேச்சு அவர் மனேபாவத்துக்கு அடுத்த பேச்சு அல்லா என்று அவர் கேட்டும் கேளாததற்கு முன்னேதானே

அவர் நடந்த நடத்தைகளையெல்லாம் சம்மதியாயென்று சொன்னான். அப்பால் என்னை அழைத்துத் தென்னண்டை பாரிசத்திலே யிருக்கிற கிராதியண்டையிலே போயிருக்கச்சே நான் கூடப்போனேன். போனவுடனே ஏகாந்தமாய் மூசே லபோர்தோனே என் அரண்மனைக்காரரைக் காவல் வைத்தாரென்று கேட்டார். ஏதாகிலும் பிரயோசனத்துக்கு என்று சொன்னேன். எவ்வளவு அசப்படும் மூசே லபோர்தோனேக்கு என்று கேட்டார். பத்து லக்ஷம் வராகனுக்கு அகப்பட்டிருக்குமென்றுப்போலே தோன்றுதென்று சொன்னேன். என் முகத்தைப் பார்த்து என்ன பேச்சுப் பேசுகிறாயென்று சொல்லி மூன்று லக்ஷ வராகனுக்குண்டென்று சொன்னார். திரும்பியும் இரெட்டித்து நான் சொன்ன பத்து லக்ஷம் வராகனுக்கு உண்டு. அதம பக்ஷமென்று சொன்னதற்கு அவருக்கு வயிற்றெரிச்சல் ரொம்ப சொல்லுகிறதற்குத் தமக்கு வராதே போச்சென்று தொகை பெருக்கச்சொல்லவில்லை யென்று இவ்வளவு இல்லையென்றும், தாம் சொன்ன தொகைக்கு உண்டென்றும் சொல்லி முகத்தைக் கடுத்துச் சொன்னார். பொறுத்துக்கொள்ளுமென்று இரண்டு லக்ஷம் வராகனுக்கு உண்டு; மூசே லவில்பாக்கு (M. de la Villebague) க்கும் அகப்பட்டதென்று சொல்லி நீங்கள் என்ன ஆச்சரியமா என்கிறீர்கள். அவனண்டையிலே இருக்கிற சட்டைக்கார ஆந்திரே பயலுக்கு ஐம்பதினாயிரம் வராகனுக்கு உண்டே யென்றும், பின்னையும் அந்தப் பட்டணத்துச் சாடையும் சொன்ன பிற்பாடு சட்டைக்கார ஆந்திரேக்கு அகப்பட்டது நீ சொன்ன தொகைக்கு அதனமுண்டென்று நானும் கேட்டிருக்கிறேனென்று சொன்னார். அவனண்டையிலிருக்கிற வேலைக்காரப் பயலுக்குத்தானே, அப்படியானால் எசமான் பேச்சு எப்படியோ பார்த்துக்கொள்ளுமென்று சொன்னதற்கு, மெய்தான் நீ சொல்லுகிறது. வீட்டுக்குப் போவென்று சொன்னார். அதன் பேரிலே நானும் தம்பியும் அனுப்புவித்துக் கொண்டு வீட்டுக்கு வந்தோம்.

இற்றைநாள் சாயங்காலமும் கச்சான் சோழகமும் மப்புமாயிருந்தது இற்றைநாள் ராத்திரி எட்டு மணிக்குச் சென்னப்பட்டணத்திலிருந்து மூசே லபோர்தோனே காகிதமும் தெப்பிரமேனி காகிதமும் வந்தது. அந்தக் காகிதத்திலே சென்னப்பட்டணம் பறுபடியும் புதுச்சேரி குவர்னதோர்வசம் பண்ணக்கூடாதென்றும், சென்னப்பட்டணத்துக்குக் குவர்னதோரிடம் ஒருத்தனை தான் வைத்துவிட்டு அந்தப் பட்டணம் தன் ஆதீனத்திலே யிருக்கத்தக்கதாக வைக்கிறதானால் சென்னப்பட்டணம் இங்கிலீசுக்காரருக்குக் கொடுக்கிறதில்லையென்று இப்படியாக எழுதிவந்ததாயும், அந்தக்ஷணம் கோன்சேல் கூடி ராத்திரி பத்தரை மணி மட்டுக்கும் கேன்சேலிலேயிருந்து காகிதம் தயார்பண்ணி, பதினொரு மணிக்கு டபாலிலே நாளை மத்தியானம்

இரண்டு மணிக்குச் சென்னப்பட்டணத்தில் கொண்டுபோய் கொடாவிட்டால் டபால் சேவகருக்குப் பேருக்கு ஐம்பது அடி அடிக்கிறோமென்று தாக்கிது பண்ணுவித்துக் காகிதத்தை டபாலிலே கொடுத்தனுப்பி அதன்பிற்பாடு சாப்பிட்டார்கள். அந்நேரத்திலே சென்னப்பட்டணத்துக்கு மூசே லபோர்தோனே யண்டைக்குச் சீர்மைக் கப்பலிலே மூன்று கப்பல் சொலுதாதுகளுக்கும், மயோராயிருந்த மூசே அவிஸ் (Major Avice) என்கிறவனை சென்னப்பட்டணத்துக்குச் சீர்மையிலிருந்து மூசே லபோர்தோனேயுக்குக் காகிதம் வந்ததை மூசே லபோர்தோனேயிடம் கொடுத்துப் பதிலுத்தரமும் வாங்கிக் கொண்டுவந்தான். அதைத் துரை கையிலே கொடுத்து அவ்விடத்திலே நடந்த சேதியும் குவர்னதோருக்குச் சொல்லி பனிரெண்டு மணி வேளைக்கு அவன் வீட்டிற்குப் போனான்.

அவன் கொண்டுவந்த காகிதமும் ராத்திரி பத்தரை மணி வரைக்கும் பண்ணப்பட்ட கோன்சேல் இன்னதென்று தெரியாது.

சென்னப்பட்டணம் வாங்காதபோனாலும் தொந்தரவு இல்லை. வாங்கினதினாலே துரைக்கும் மூசே லபோர்தோனேயுக்கும் நடக்கிற இட்டோட்டும் இதனாலே துரைக்கு இருக்கிற விசாரமும் காகிதத்திலே எழுதிமுடியாது. சோசியர் காகிதத்திலே 38½ க்குமேல் பாக்கிய நஷ்டகாலம் என்று போட்டிருக்கிறதற்குச் சந்தேகமில்லை. சென்னப்பட்டணத்தைப்போலே கொத்தப்பட்டணம் கொள்ளைபோகச் சேதம்பி எசமானனாய்ப் போயிருக்கையிலே தனக்குக்கூட எழுபது மட்டுக்கும் அகப்பட்டு, தம்பி கொள்ளை வந்ததைக் கூட விலைக்கு வாங்குகிறதற்குக்கூட பயப்பட்டானென்றால் இது நம்முடைய அபாக்கியமென்கிறதற்குச் சோசியப்படிக்குச் சந்தேகமென்னவிருக்கிறது!

*1746* ஆ ஒக்தோபர் மீ 15 உக்கு அக்ஷய ஹூ அற்பிசி மீ 2 உ சனிவாரம்,

இற்றைநாள் நடந்த சேதி: முன்னாலே சீர்மையிலேயிருந்து வந்த மூன்று கப்பலிலே சொலுதாதுகளுக்கும் எசமானனாய் வந்த மூசே அவீஸ் என்கிறவனைப் பயணம்பண்ணிச் சென்னப்பட்டணத்துக்கு மூசே லபோர்தோனேயண்டைக்கு அனுப்பியிருந்தவன் அவ்விடத்திலேயிருந்து நேற்றையதினம் ராத்திரி பனிரெண்டு மணிக்குக் கடுதாசி கொண்டு வந்து (ா) துரையவர்கள் கையிலே கொடுத்துச் சேதி பதிலும் சொன்னான். அவன் வந்து சொன்னது இன்னதென்று தெரியவில்லை. அதன்பேரிலே இற்றைநாள் காலமே கொமிசேல் கூடி பனி

ரெண்டு மணி மட்டுக்கும் கொமிசேல் கலையவில்லை நானும் சூரிய உதயத்துக்குப் பழயது சாப்பிட்டு முசே லந்தூசு வீட்டுக்குப் போய்க் கண்டு பேசிவிட்டு, அங்கேயிருந்து முசே திபுவா வீட்டுக்குப் போய் அவரையும் கண்டு பேசிவிட்டு, ஒன்பதரை மணிக்கு (ா) துரையவர்கள் வளவுக்கு வந்து அவ்விடத்திலே துரையள் கொமிசெல் கூடியிருக்கிறதினாலே பத்து மணிக்கு வந்து பாக்குக்கிடங்கிலே உட்கார்ந்துகொண்டிருந்தேன். அப்போது காரைக்காலிலே யிருந்து கந்தப்பன் அனுப்புவித்த ஓலையை வந்தவாசி திருவேங்கடப்பிள்ளை கொண்டுவந்து நம்முடைய கையிலே கொடுத்தான். அந்த ஓலையிலே எழுதியிருந்த வயனம் என்ன வென்றால்: வடக்கு வட்டம் கிராமத்துக்கு மேற்கே போய் ஆற்று அணையை வெட்டித்திறந்து கொண்டு வருகிறதற்குப் போன தாசுமான் சேவகர் செலவு பதினேழு வராகனாச்சுது. அதைக் கொடுத்துவிடென்று கேட்டார்கள். அதற்கு நான் சொன்னது: முன்னாலே ராசாவுங் குதிரைவந்து கலாபமாய் கிராமங்களெல்லாம் கொள்ளையிட்டார்களே அப்போது ஆயிரம் இரண்டாயிரம் பேரை வைத்துச் சண்டைபண்ணினார்களே, அதற்குக்கூட அல்லவோ நாங்கள் ஒத்துக்கொடுக்க வேண்டிதென்றும், இது ராசிகமல்லவோ, அது தாங்களல்லவோ ஒத்துக்கொள்ளவேண்டியது. எங்களுக்கு என்ன காரியமிருக்கிறதென்று சொன்னதற்கு (ா) துரையவர்கள் சொன்னது: முன்னாலே வந்தவாசி திருவேங்கடப்பிள்ளை தாசுமான் செலவு ஒத்துக் கொடுத்திருக்கிறாரென்றும் சொன்னார். அதற்கு நான் சொன்னது: கும்பினீர் காரியத்துக்காக தாசுமான் வைத்துக்கொண்டு திரிந்தார். அந்தப் பணம் எங்கள் எஜமான் ஒத்துக் கொடுக்கிறதில்லையென்று சொல்லிவிட்டார்களென்று சொல்லிவிட்டேன். அது தீராதென்றும் கொடு என்றும் சொன்னார்கள். அது எனக்குத் தெரியாது. எங்கள் எசமானுக்கு எழுதி யனுப்புவிக்கிறேன் என்று சொல்லிவிட்டு வந்து விட்டேனென்று சொல்லி, இப்படி இவர்கள் எழுதியிருந்தது. அந்த ஓலையை வந்தவாசி திருவேங்கடப்பிள்ளை கையிலே கொடுத்து இதற்கு மறு ஓலை எழுதவேணுமே அந்த ஓலையை வாசித்துப் பார்த்துக் கொடும் என்று சொன்னோம். அந்த ஓலையை வாசித்துப் பார்த்துக் கொண்டு தாசுமான் செலவு நாமே கொடுத்திருக்கிறோமா? நாம் ஒருக்காலும் ஒருகாசு கொடுத்ததுமில்லை. தாசுமான் செலவு நமக்கென்ன கவை யிருக்கிறதென்று சொன்னார். அந்தப்படிக்குக் காரைக்காலுக்குக் கந்தப்பன்பேருக்கும் மறோலையும் இப்போதுதானே எழுதி முத்திரைபோட்டு வந்த சேவகன் பிச்சாண்டி வசம் அனுப்பிவிட்டுப் பனிரெண்டு மணிக்கு நம்முடைய வீட்டுக்கு வந்துவிட்டோம். இந்த விஷயம் நடக்கும் போது சாராயக்கிடங்கிலே சேஷய்யங்கார், கோபாலகிருஷ்ணய்யர், அப்பாசி, நீலகண்டநாய்க்கர், தியாகய்யன், வெங்க

டாசலய்யன் இவர்களெல்லாம் அவ்விடத்திலேயிருந்தார்கள். முன் புரட்டாசி மீ 30உ மூசே லபோர்தோனே துரைக்கு எழுதின காகிதத்திலே ஒபிசியேல்மாரையும் கோன்சேல்காரர் முதலானபேரையும் வரச்சொல்லியும், சென்னப்பட்டணம் கோட்டையை ஒப்புவித்துப்போகிறோம் என்று இங்கிலீசுக்காரருக்கும் கொடுக்கிறோமென்ற உடன்படிக்கையைப் பரிகரித்துப் போட்டோமென்றும் இப்படியாக எழுதினதினாலே மூசே தெப்பிரமேனி (M. de Espermenil) முதலானபேரை மறுபடி போகச்சொல்லி எழுதினபடிக்குச் சிறிதுபேரெல்லாம் போனார்களே இப்படியிருக்க, மறுநாள் எழுதின காகிதத்திலே இங்கிலீசுக்காரருக்கு மறுபடி நான் கொடுத்துவிட்டேன் என்று எழுதினதின்பேரிலே திரும்பியும் கோன்சேல் கூடியதற்கு நீ இப்படி எகத்தாளி பண்ணினாயென்று அதற்கு அடுத்த அவர்கள் நியாயம் நியாயப்படிக்குக் கண்டிப்பாயும் எழுதினார்கள். இந்தச் சேதி அவனுக்குப் போய்ச்சேருகிறதற்கு முன்னே மறுநாள் மூசே லபோர்தோனே துரைக்கு எழுதின காகிதத்திலே இங்கிலீசுக்காரருக்குப் பட்டணம் கொடுக்கவும் இல்லை. புதுச்சேரி கோவ்சேலியேர் வசம் பண்ணவுமில்லை. கடைசியிலே என்னமாய் நடத்துவேனோ நானறியேன். இது என்னமாய் நடக்கவிருக்குதோ தெரியாதென்று எழுதினான். அதன்பேரிலேதான் மூந்தாம்நாள் ராத்திரி பத்து மணி மட்டுக்கும் கோன்சேல் கூடியிருந்தது. பதினொரு மணிக்குக் காகிதம் ராத்திரிதானே மகா சுறுக்கிலே தாக்கீது பண்ணி டபால்காரருக்குக்கூடக் சொல்லியனுப்பினது. இப்படியெல்லாம் மூசே துய்ப்ளேக்ஸைக் கூட கோன்சேலியேரைக்கூட மூசே லபோர்தோனே பண்ணுகிற எகத்தாளி காகிதத்திலே எழுதிமுடியாது. ஆகிலும் எழுதுவோமென்று எண்ணினாலும் விஸ்தரித்து எழுதிமுடியாது எழுதுகிறதும் யுக்தமல்லவென்று சாரமென்னவோ அதைமாத்திரம் எழுதினேன் விவேகிகளாயிருக்கிறவர்கள் தெரிந்துகொள்ளுவார்கள்.

1746 ஆ ஒக்தோபர் மீ 16 உக்கு அக்ஷய அற்பிசி மீ 3 உ ஆதிவாரம்.

இற்றைநாள் காலத்தாலே கேட்ட சேதியும் பார்த்த சேதியும் என்னவென்றால்: மூசே லபோர்தோனே கடைசியிலே வந்த தொடுத்தலேன் கொமாந்தானாக வரப்பட்ட மூன்று கப்பல்களுக்குக் கூட மூசே லபோர்தோனே எசமானனைபடியினாலே அவனுடைய ஒடுதிப்படிக்கு நடந்துகொள்ளச் சொல்லி எழுதிவந்தபடியினாலே மூசே லபோர்தோனே மூசே தொடுத்தலேன் முதலான கப்பல் கப்பித்தான்மார்களுக்கெல்லாம் எழுதின காகித வயணம் என்னவென்றால்: நீங்கள்

ஒக்தோபர் மீ 21 உ ஒரு கெடுவு, அப்பால் 25 உ ஒரு கெடுவு. அந்தக் கெடுவுக்குமேல் புதுச்சேரி துறையிலே ஒருத்தரும் இருக்கத் தேவையில்லை. அவரவர் கப்பல்களைப் பாயெடுத்துக் கொண்டு தன்னண்டைக்கு ஓடிவரச் சொல்லி எழுதியனுப்பு வித்தானும். மறுநாள் கப்பல் கப்பித்தான்மார்களுக்கெல்லாம் ராசாவுடைய பாடுத்திவைத்து முன் எழுதின கெடுவுக்குமேல் ஒருத்தரும் இருக்கவேண்டாம் என்று கண்டிப்பாய் எழுதி யனுப்பினானும். அதன்பேரிலே கப்பல் கப்பித்தான்மார் மூசே தோடுத்தலேன் முதலான பேரெல்லாரும் தங்கள் தங்களுக்குக் கும்பினியார் கொடுத்திருக்கிற ஒடுதியும் எடுத் துக்கொண்டு குவர்னதோர் மூசே துய்ப்ளேய்க்சுக்குக் காண் பிக்க, அவர் சென்னபட்டணத்திலிருந்து மூசே லபோர்தோனே எழுதின ஒடுதியும் எடுத்துக்கொண்டு, அந்த ஒடுதியை இந்தக் கப்பல் கப்பித்தான்மாரைப் போய் கிறேப்பிலே தெக்ளாராசியம் எழுதுவிக்கச் சொல்லி உத் தாரம் கொடுத்தபடிக்கு இற்றைநாள் காலத்தாலே ஒன்பது மணிக்குக் கிறேப்பிலே போய் தெக்ளாராசியம் பண்ணுவித் துக் கையெழுத்தும் போட்டு அப்பால் குவர்னதோரண்டைக்கு வந்தார்கள். குவர்னதோருடனே கோன்சேல்காரரையெல் லாம் அழைக்கச் சொன்னார். அரை நாழிகைபோன உடனே மறுபடி கோன்சேல்காரரை அழைக்கவேண்டாமென்று உத் தாரம் கொடுத்தார். அப்பால் மூசே தோடுந்தலேன் முதலாகிய கப்பல் கப்பித்தான்மாரை வைத்துக்கொண்டு யோசனையாய்ப் பேசியிருக்கிறார். என்ன பேசியிருக்கிறாரோ தெரியாது. இனி மேல் வெளிப்படும். ஆனால், மூசே லபோர்தோனே புதுச்சேரிக் கும் கோன்சேல்கும் ஒரு நாளைக்கு ஒரு விதமும் மற்றொரு நாளைக்கு ஒரு விதமுமாய் இப்படி எகத்தாளி பண்ணி எழுது கிற சாடை இன்னதென்று புரியவில்லை வெள்ளைக்காரருக் குள்ளே ஒரு உத்தரவாய் ஒரு சாடையாய் அதற்கும் நியாயத் துடனே மெய்ப்பிக்கிற சாடையாயிருக்கிற கட்டாயிருக்கச்சே இவன் ஒருவேளை சென்னப்பட்டணம் கொடுத்துவிட்டேனென் றும் கொடுக்கவில்லையென்றும், இப்படியாகப் பரிகாசம்பண்ணு கிற சாடை இன்னவிதமென்றும் புரியவில்லை. ஏரோப்பாவுக் குள்ளே மகா கட்டாயிருக்கிறது. இப்போது துலுக்கர் சாடை தமிழர் சாடையாய்க் காணுது. இது நாளது வரைக்கும் நான் பார்த்திருந்ததற்கும் கேட்டிருந்து சம்மதிக்கும் இப்போது மூசே லபோர்தோனே இப்படி அரை நாழிகைக்கு ஒரு விதமாய் எழுதுகிறதும், ஒரு வேளை இங்கிலிசுக்காரருக்கும் இப்போது கொடுக்கிறேனென்றும் உடன்படிக்கை இல்லையென்றும், இப் படி நானு விதமாய் எழுதுகிற சாடை இன்னதென்று நான் அறியேன். இது சீர்மையிலே கேட்டால் மூசே லபோர்தோனே கழுத்துக்குக் கயிறு வருமென்று சொல்லுகிறார்கள்.

இப்படி சமஸ்தமான பேர் வெள்ளைக்காரரெல்லாரும் சொல்லுகிறார்கள். இரண்டொருத்தர் மாத்திரம் மூசே லபோர்தோனேக்கு பக்ஷபாதமாய்ச் சொல்லுகிறவர்கள் சீர்மைக்குப் போய்ப் பத்துப்பணம் விஸ்தாரமாய் செலவழித்தால் அடங்கிப்போமென்று சொல்லுகிறார்கள். சிறிது வெள்ளைக்காரர்கள் சொல்லுகிறது: பணத்தளவிலே தள்ளிக்கொள்ளலாமென்றுதானிப்படியெல்லாம் நடத்தினான். ஆனால், முன் கோந்த்ரோலேர்ஜெனரலாயிருந்த மூசே ஒறியும்கும்பினீருக்கும், எசமானனாயிருக்கிறவனும், அவர் தம்பி மூசே புல்லிவி (M. Fulvy) க்கும் உத்தியோகம் போனபடியினாலே இப்போ கோந்த்ரோலேர் ஜெனரலாயிருக்கிற மூசே மஷோ தெ தறுனுவிலும் (M. Machant de Arnouville) கும்பினீருக்கு எசமானனாக இருக்கிற மூசே ரூலியேரும் (M. Roulier) அப்படி பணம் வாங்குகிறவர்கள் அல்ல. அதினாலே மூசே லபோர்தோனேக்கு (M. de la Bourdonnais) மோசம் வருமென்று இப்படி நானாவிதமாகச் சொல்லுகிறார்கள். எந்தவிதம் பாத்தாலும் ஆக்கிருக்கும் மூசே லபோர்தோனேக்கு தொந்தரவு வருமே அல்லாமற்போகாதென்று தோற்றுகிறது அப்பால் சுவாமியினுடைய சித்தம் என்னமாயிருக்கிறதோ தெரியாது. அறியக் கூடாதது.

1946 ஆ ஒக்தோபர் மீ 17 உ க்கு அக்ஷய வருஷ அற்பிசி மீ 4 உ சோமவாரம்.

இற்றைநாள் காலமே பொழுது விடிய ஆறு நாழிகை நம்முடைய வீட்டுக்கு எதிரேயிருக்கிற பாதிரி கோவிலிலே இரண்டு பேர் கப்பல் மத்லோத்துகளாகியவர் பூந்து வடவண்டைச் சுவரிலே தாழ்வாரம் இறக்கிச் சவளிக்கடை போட்டிருக்கிற சுவர்பேரிலே யேறி தாழ்வாரத்தின் கைநடுவே தைத்திருக்கிற றிப்பாயை முறித்துப்போட்டு இறங்குகிறதாய் எத்தனம் பண்ணியிருக்கச்சே இதிலே எதிரே முத்திரைச் சாவடி யானபடியினாலே ஊர்சுற்றிவந்த தலையாரிகள் மேலே தட்டோடு படபடென்று உடைகிறதும் றிப்பாயை ஒடிக்கிற சப்தமும் கேட்டு முன்னும் அனேகந்தரம் அந்தச் சவளிக் கடைகளிலே களவுபோகிற சாடையைப் பிடித்துக்கொண்டு இதேதோ திருடன் என்று யோசனை பண்ணிக்கொண்டு இவர்கள் கும்பலாய்க் கூட்டி சந்தடி பண்ணவும், உடனே இவனுக்குத் திருடுகிறதற்கு லகுவில்லாமல் மறுபடி பாதிரி கோவிலிலே இறங்கி அடுத்தாப்போலே போட்டிருக்கிற எத்தத்தைப் பிடித்தார்கள். இதேதடா இந்நேரத்திலே ஏற்றம் பிடிக்கிற சாடையேதென்றும், இவர்கள்தான் திருடரென்றும் யோசனைபண்ணி மதிலைச்சுற்றித் தலையாரி சேவகர் இருந்தார்கள். இவர்கள் இரண்டுபேரிலே ஒருத்தன் அக்கினி மூலையிலே சுண்ணாம்பு

சுடுகிற காளவாய் வெளியிலே கட்டியிருக்கிறது, அங்கே குதித்தான். அங்கே இருக்கிற தலையாரிகள் எல்லாருங்கூடி அவனைப் பிடித்துக்கொண்டு போகிறதாய் அந்தச் சந்தடியிலே சுற்றிலும் இருந்த தலையாரிகள்கூட இவனைப் பிடித்துக் கொண்டுபோய் நயினார் வீட்டிலே காவல் வைத்துவிட்டு வருகிறதற்குள்ளே பின்னையொருத்தன், உள்ளே இருக்கிறவன் சுவரேறிக் குதித்து ஓடிப்போய்விட்டான். அதன் பிற்பாடு இவர்கள் தீவட்டிக் கில் வத்திகள் கொளுத்திக் கொண்டு கோவில் கதவைத் தட்டித் திறக்கச்சொல்லி உள்ளேபோய் சோதித்துப் பார்த்தவிடத்திலே காண்பியாமல் போய்விட்டது. அப்பால் அகப்பட்ட வெள்ளைக்காரன் கையிலே பாதிரியார் போட்டுக்கொள்ளுகிற சட்டை ஒன்று, மேசோடு ஒன்று, பித்தளைக்குண்டு மெருகுபோட்டது ஒன்று இப்படி பாதிரியார் தட்டுமுட்டுச் சிறிது இருந்தது. அதைப் பாளையக்காரர் மனுஷர் பார்த்து வந்து பாதிரியுடனே சொன்ன பிற்பாடு, அவர் வீட்டைப் பார்த்து மெய்தான் எடுத்துப் போனான். இரண்டு பேர் கப்பல் மத்லோத்துகள் நேற்று மத்தியானம் வந்து கோவில் பார்க்கவேணுமென்று கேட்டார்கள். நல்லது பார்க்கச்சொல்லி உத்தாரங்கொடுத்தோம். அவர்கள் பார்த்துப்போனார்கள் என்றும், அவர்களின்னவிதமாயிருப்பார்களென்றும் அடையாளம்கூடச் சொன்னார். அவர் சொன்ன அடையாளம் அப்படியே சரியாயிருந்தது. அப்படியே இப்போது அகப்பட்டவன் அந்தச் சாடையாய் அடையாளம் இருக்கிறபடியினாலே அவன்தானென்று பெரியண நயினார் சொல்லி யின்னமொருதரம் தோட்டம் எல்லாம் பார்க்கவேணுமென்று பார்த்தவிடத்திலே காணேமென்று சூரிய உதயத்துக்குப் புறப்பட்டுத் தலையாரியள் கூடப் போய்விட்டார்கள். அப்பால் அவனைப் பிடித்துவந்து துரைமுன்னே விட்டு அவன் திருடின திருட்டுச் சாடையும் சொன்னமாத்திரத்திலே கொண்டுபோய்க் கஷோத்திலே போடச் சொன்னார். அந்தப் படிக்குக் கஷோத்திலே கொண்டுபோய்ப் போட்டார்கள். இனிமேல் என்ன ஆக்கினை பண்ணுவார்களோ அறியவேணும், முன்னையப்போலேயானால் தூக்கிலே போடுவார்கள். இப்போது சண்டை நாளானபடியினாலே என்னமாய் நடப்பிப்பார்களோ அறியவேணும் இற்றைநாள் எட்டு மணிக்குக் குவர்னதோர் கோன்சேல்காரரை யெல்லாம் அழைக்கச் சொல்லி, கோன்சேல் எட்டரை மணிக்குக் கூடினார்கள். இத்துடனே மூசே தோடுத்தலேன், மூசே பென்வா முதலான சீர்மைக் கப்பல் கப்பித்தானமாரெல்லாரும் கூட இருந்து கோன்சேல் பண்ணினார்கள் இந்தக் கப்பல் கப்பித்தான்மார் தாங்கள் எந்தத் துறையிலே யிருக்கிறார்களோ அந்தக் கோன்சேல் ஒடுதிப்படிக்கு நடந்துகொள்ளுகிறோம் என்று சொல்லி, கப்பித்தான்மார் கையெழுத்துப்போட்டதாகவும் இவர்கள் தாங்கள்

புதுச்சேரி துறையிலே வந்திருக்கிறபடியினாலே புதுச்சேரி கோன்சேல் சொன்னபடிக்குக் கேட்கிறோமென்று எல்லாரும் கையெழுத்துப் போட்டதாகவும், அதன் பேரிலே மாயே அண்டையிலேயிருக்கிற ஐந்தாம் தலச்சேரி பேரிலே சண்டை போடுகிறதற்குப் படைக்கு மூச்சே பாதியைக் கொம்மாந்தானாக்கினார்களென்றும் இதுதான் இன்றையக் கோன்சேல் என்றும் சொல்லுகிறார்கள். இது நாளை நன்றாய் விசிதமாய் குவர்னதோர் துய்ப்ளேய்க்சு முகமும் சற்றுத் தெளிவாயிருக்கிறார். இது என்னமோ தெரியவில்லை.

இற்றைநாள் சாயங்காலம் நாலு மணிக்குச் சென்னப்பட்டணத்திலிருந்து கண்டால் குருவப்பசெட்டி புரட்டாசி மீ 30 உ, 31 உ அற்பிசி மீ முதல் உ எழுதின காகிதம் நமக்கு வந்து சேர்ந்து பார்த்துக்கொண்டோம். அந்தக் காகிதங்களிலே எழுதியிருந்த வயணம்: முன் புரட்டாசி மீ 30 உ சென்னப்பட்டணத்துக்கு இங்கிலீசு சுலுப்பு ஓடிவந்ததாகவும் கோட்டையிலேயும், துறைகளிலேயும் இருந்த கப்பல்கள் எல்லாம் இங்கிலீசுக்கொடிபோட்டானாம். அப்பால் சுலுப்பு துறை பிடித்துச் சீனிபோட்டவுடனே பிரான்சு வெள்ளைக்கொடி போட்டானாம். அதன்பேரிலே சுலுப்புக்காரன் ஓடிப் போகவேணுமென்று பார்த்தாப்போலே கப்பலிலே பீரங்கியிலே குண்டுபோட்டுச் சுட்டார்களாம் கோட்டையிலேயும் ஒரு வேட்டு குண்டு போட்டுச் சுட்டானாம். அதன்பேரிலே கப்பலின்பேரிலே யிருந்து இரண்டு லாங்கு போட்டிலே வெள்ளைக்காரர் போய் சுலுப்பு மேலே ஏறி சுலுப்பு கைவசம் பண்ணிக்கொண்டதாகவும், அதிலே வந்த சரக்கு, கெஞ்சா, சாம்பிராணி, கெந்தகம் இந்தச் சரக்குகள் ஏற்றி மூவாயிரம் வராகனுக்கு மாத்திரமுண்டு என்றும், இது சண்டை கப்பல்களுக்கும் தீனி தட்டுமுட்டு ஏற்றிப்போய்க் கொடுத்துவிட்டு வரச்சே மலாக்கா அச்சை பிடித்து இந்தச் சரக்குகள் ஏற்றிவந்ததாயும் எழுதி, இதல்லாமல் புரட்டாசி மீ 31உ வியாழக்கிழமை ராத்திரியும் அற்பிசி மீ முதல் உ வெள்ளிக்கிழமை மத்தியானமும் அடித்த காற்று மழையும் சென்னப்பட்டணத்திலே சுறுக்கா யடித்ததாகவும். மரி ஜெர்த்துருய்து (Marie Gertrude) என்கிற கப்பலும் ஒரு சுலுப்பும் கோவளத்திலே வந்து உடைந்துவிட்டதாகவும், சென்னப்பட்டணத்துத் துறையிலேயிருந்த ஒலாந்தாக் கப்பலொன்று மயிலாப்பூரிலே வந்து உடைந்ததாகவும், மற்றப்படி மூசே லபோர்தொனே இஸ்காதுரு கப்பல்கள் போனவிடம் வந்தவிடம் தெரியவில்லையென்றும் இரண்டு மூன்று உருப்படி மையத்திலே கொடிக்கம்பங்களெல்லாம் முறிந்த சாடையாய் இன்றையதினம் தெரிந்ததென்று சொல்லிக்கொள்ளுகிறார்களென்றும் இப்படி பின்னையும் இந்தக் காற்றுக்கு முன்னே

சிறிது தட்டு முட்டுகள் கட்டுகள் கப்பலுக்கு எற்றினதாகவும், மூசே தெப்பிரமேனிக்குச் சின்ன துரைக்கு அடிக்கிற தம்பூரும், மூசே லபோர்தோனேக்கும் பெரிய துரைக்கும் அடிக்கிற தம்பூரும் அடிக்கிறார்கள் என்றும், மூசே தெப்பிரமேனி சென்னப் பட்டணத்துக்கு வந்த பிற்பாடு மெத்தைமேலே மூசே லபோர் தோனேயும் தெப்பிரமேனியுங்கூட இருந்தார்களென்றும், மறுநாள் யதாப்பிரகாரம் கோசாப்பெத்ராஸ் வீட்டிலே தெப்பிரமேனி வந்து கோட்டைக்கு மூசே லபோர்தோனே அண்டைக்குப் போகவர இருக்கிறார்களென்றும், நயினியப்பமுதலி பேச்சு சற்றுச் சுறுக்காய் நடக்கிறாப்போலேயும், வர்த்தகர் கிடங்குகளெல்லாம் சோதித்து எடுக்கிறார்களென்றும், வர்த்தகர் கேட்டால் மேஸ்தர் மாசுக்குக் கோட்டை கொடுத்துவிட்டோம், அவரைக் கேட்டு வாங்கிக்கொள்ளுங்கோளென்றும் மூசே லபோர்தோனே சொல்லுகிறதும், தான் சுற்றுகிறதுமா யிருக்கிறதென்றும் இப்படி யனேகஞ் சேதிகளாக எழுதின காகிதம் பார்த்துக்கொண்டு சகலமுந் தெரிந்துசொண்டேன். இந்தக் காற்றடித்த சாடையும் கப்பல் சேதப்பட்ட சேதியும் துரைக்கும் இந்தக் காகிதத்துடனேகூட தெப்பிரமேனி லபோர்தோனே காகிதம் வந்தது அதிலே பின்னை என்னசேதி எழுதியிருந்ததோ தெரியாது. இதல்லாமல் இந்தச் சீர்மைக் கப்பல் மூன்றும் வந்தவுடனே ஒலாந்தாக்காரருக்கும் சண்டைக்கு ஆரம்பித்ததாய்ச் சொல்லிக்கொண்டார்கள். நாகப் பட்டணத்திலேயிருந்து வந்த சேதி: நாகப்பட்டணத்துக் குவர்னதோர் ஊரிலே தமுக்குப் போடுவித்ததாயும் பிரான்சுக்காரருக்கும், எங்களுக்கும் சண்டை பட்டணத்திலுண்டானவர்களெல்லாரும் அவரவர்கள் பணங்காசு தட்டுமுட்டு சமஸ்தமும் எடுத்துக்கொண்டு அப்பாலே ராசா சீர்மை, அப்பாலே எங்கெங்கே அவரவர்களுக்கு இடம் சம்பாதித்துக் கொள்ளவேணுமோ அப்படி சம்பாதித்துக்கொள்ளச்சொல்லி உத்தாரம் கொடுத்ததாகவும் அவரவர்களும் அந்தப்படிக்கு அப்பால் தங்கள் தங்கள் தட்டுமுட்டுப் பணம் காசு சரக்குகள் அப்பாலே படுத்துகிறார்கள் என்றும், கோட்டைக்கு ரஸ்துக்களும் சண்டை சாமான்களும் முஸ்திப்பு பண்ணுகிறார்கள் என்றும் இப்படி சேதி எழுதிவந்ததாய்ச் சொன்னார்கள்.

*1746* ஆ ஒக்தோபர் மீ *18* உ க்கு அக்ஷய ஹு அற்பிசி மீ 5 உ மங்களவாரம்.

இற்றைநாள் காலத்தாலே நான் கோட்டைக்குப் போய் அவ்விடத்திலே மூசே கோர்னேயைக் கண்டு பேசி வரவேணுமென்று யோசனைபண்ணிப் புறப்பட்டேன். இதிலே குவர்னதோர் துய்ப்ளேய்க்சு, கோன்சேல்காரர்களையும் கப்பல் கப்பித்தான்மார்களையும் அழைக்கச்சொன்

ஞர்களென்று சேதிகேட்டுக் கொர்னேயண்டைக்குப் போகி
றதை நிறுத்தி, துரை வீட்டுக்குத்தானே போவோமென்று
பாக்குக் கிடங்கிலே போயிறங்கினேன். அவ்விடத்திலே
லட்சுமண நாயக்கன், ஏகாம்பர அய்யன் முதலானவர்கள்
வந்தார்கள். இதிலே துரை கபே குடித்துக் கோன்சேல் கூடி
னார்கள். கப்பல் கப்பித்தான்மார் இப்புறத்திலேயிருந்தார்
கள். அப்பால் கப்பல் கப்பித்தான்மார்களையும் அழைத்துக்
கோன்சேலிலே கூடவைத்துக்கொண்டு, கோன்சேல் பண்ணிப்
பத்தரை மணிக்குக் கோன்சேல் கலைந்தார்கள். இந்தக் கோன்
சேல் சாடை என்னவென்றால்: கப்பல் களிந்த மழைக்காலத்
துக்கு ஒரு இடத்திலே போய் இடம் வேறனாரிட வேணுமே
அச்சி மேற்கு இந்த வட்டாரங்களுக்குப் போகிறதற்குக்
காற்று ஒவ்வாகாது. ஆனபடியினாலே போகக்கூடாதே. அத
னாலே கோத்தே மலபார், மலையாளம் அந்த வட்டாரங்களிலே
மழைக்காலம் ஆய்ப்போய் கோடை நாளானபடியினாலே அவ்
விடத்துக்குப் போகலாம். போகிறதற்கு வாடைக்காற்று
நல்ல வாய்ப்பு ஆனபடியினாலே, மயேயிலே போய் வைத்
துப்பிடித்து அப்பால் ஐந்தாம் தலைச்சேரியை வாங்கத்தக்க
தாக நிஷ்கரிஷை பண்ணினதாயும், பின்னையும், சீர்மைக்
குக் கப்பலும் அனுப்பக்கூடாமலிருக்கிற நியாயமும் யோசனை
பண்ணினதாயும் சொல்லிக்கொண்டார்கள். இது நாலைந்நாளை
யன்றைக்கு விசிதமா யின்னதென்று புரிந்த பிற்பாடு திட்ட
மாய் இன்னதென்று எழுதுகிறேன். இது நிமித்தியம் இடம்
விட்டு வைத்தேன்.

இற்றைநாள் காலமே பத்தரை மணிக்குச் சென்னப்பட்ட
ணத்து டபாலிலே குவர்னதோர் முசே துய்ப்ளேக்சு அவர்களுக்
கும் முசே லபோர்தோனே, தெப்பிரமேனி எழுதின காகிதம்
வந்தது அத்துடனே கூட கண்டால் குருவப்பசெட்டி என்
பேருக்கு அற்பிசி மீ ௨உ எழுதின காகிதம் வந்தது அந்தக்
காகிதத்திலே எழுதியிருந்தது சீர்மைக் கப்பலிலே புர்போம்
என்கிற கப்பல்கூட கோவளத்துத்துறையிலே மூன்றுவது அலை
யண்டையிலே வந்து உடைந்து பலகை பலகையாய் மிதந்து
வருகுதென்றும், அதிலே சிறிது சரக்குகளிருந்தது எல்லாம்
கோவளத்திலே உள்ளவர்கள் எடுக்கிறார்களென்றும், இது
நிமித்தியம் முசே லபோர்தோனே, முசே தொடுந்தேனையும், நாறு

சொலுதாதுகளையும் கோவளத்துக் கனுப்பினார்களென்றும் முன் எழுதின காகிதத்திலே மரியசொத்துறாதே என்கிற கப்பலும் ஒரு சுலுப்பும் கோவளத்துத் துறையிலே உடைந்ததை வெறுங்கப்பல் என்றல்லோ எழுதினேன். அதிலேயும் சிறிது சரக்குகள் ஏற்றியிருந்ததாய்ச் சேதி சொல்லிக்கொள்ளுகிறார்கள் என்றும், மூசே லபோர்தோனேக்கு முன்னிருந்த உற்சாகம் போய் இப்போதிருக்கிறவிசாரத்தை இன்னவிதமென்று எழுத முடியாது என்றும் மற்றக் கப்பல்கள் துறைக்கு ஒன்றும் இந்த மட்டுக்கும் வந்து சேர்ந்ததில்லையென்றும் இனிமேல் நடக்கிற சேதி பிறகாலே எழுதியனுப்புகிறோமென்றும் சுங்குவார் வீட்டுப் பிள்ளையாண்டான்கள் இங்கே வந்து ஒரு நாளிருந்து மறுபடி வெளியே போனார்களே. அங்கே ஒருபட்டாணியன் வியாச்சியமாய் இருக்கக் கூடாமல் மறுபடி சென்னப்பட்டணமே வந்திருக்கிறார்களே என்றும் தானிருக்கிறதற்கும் வந்துவிடுகிறதற்கும் வயணம் எழுதியனுப்பச்சொல்லியும் இந்தப்படியாக குருவப்பசெட்டி எழுதினான். அதற்குப் பதில் ஆரை யங்கேயிருந்து சமாசாரம் எழுதி அனுப்புவிக்கச்சொல்லிப் பதில் காகிதம் எழுதியனுப்புவித்தோம். இவ்விடத்து குவர்னதோருக்கு மூசே லபோர்தோனே தன்னாலே அசடு வந்ததாய் மிகுதியும் வணங்கி எழுதிக்கொண்டதாய்ச் சொன்னார்கள். அதற்கு குவர்னதோர் இரண்டொருத்தருடனே சொல்லிக்கொண்டிருந்ததாய் முன்னாலே இவன் சரிப்போனபடிக்கு எல்லாம் நடப்பித்துவிட்டு இப்படி இப்படி எழுதினாப்போலே செய்யவேண்டியதென்னவென்று சொல்லிக்கொண்டிருந்ததாய் மூசே மிரா என்னுடனே சொன்னான். ஆனால், மூசே லபோர்தோனேயுடைய ஆங்காரத்தை அடக்கவேணுமென்று சுவாமி நினைத்து இந்தப் பெருங்காற்றைக் கொண்டுவந்துவிட்டுக் கப்பல்களைச் சேதமாக்கி, இதனாலே சீர்மைக்கும் இவ்விடத்துக்கும் நேரஸ்தனாக்கக் கெடுக்கவேணுமென்றும் நினைத்ததாய் எனக்கும் தோற்றுது. சகல சனங்களும் அப்படியே சொல்லி அவன் பண்ண சூதுக்கும் துரோகத்துச்கும் ஆண்டவன் இன்னம் அனேகம் கஸ்தியும் கொடுப்பாரென்றும் சொல்லிக்கொள்ளுகிறார்கள். இந்த மட்டுக்கும் வெகு வர்த்தகரையும் வெகு சனங்களையும் கெடுத்து அவர்களுடைய உடமையை எடுத்துக்கொண்டதற்கு நடந்த பலனைக் கண்டோமே, இனிமேல் நடக்கிறதையும் இறுமேலு யறிவோம். மற்றப்படி ஆற்காட்டிலிருந்து வந்த காகி

தத்திலே அனவரதிகானுக்குச் சரீரம் லகுவாயிருக்கிறதென்றும் மருதல்லிகானும் லஸ்கரும் பெண்ணைக்கடந்து அப்பாலே சாகிப்போனதா யெழுதிவந்தது. கப்பல்களுக்குத் தண்ணீர் ஏற்றுகிறதே பெரிய வேலையாயிருக்கிறதேயல்லாமல் மற்றப்படி வேறே வேலையைக் காணோம். இதற்காகச் சென்னப்பட்டணத்திலிருந்து மூசே பேன்லாம், கப்பலிலே ஏற்றிவந்த சகலாத்துக் கட்டிலே இந்த மட்டுக்கும் எண்பது கட்டு இறங்கினதாய்ச் சொன்னார்கள்.

கனகராயமுதலியார் தம்பி தானப்பமுதலியானால் நாம் அவனுக்குப் பண்ணின சகாயத்துக்கு நம்மை வைத்துப் பூசை பண்ணிக்கொண்டு பிள்ளைபெற்றுப் பேரிட்டாலும் தினம் மதித்துக்கொள்ளமாட்டான். அப்படிப்பட்ட காரியம் செய்து இவன் வீட்டை நிறுத்தினது லோகம் அறிந்திருக்க நானெழுத வேண்டியதென்னவிருக்கிறது. அப்படிப்பட்ட நன்றிமறந்து சின்ன காரியத்துக்கெல்லாம் நம்மைத் தூஷிக்கிறதும் நம்முடைய பேரிலே ராசகாரியம் பண்ணுகிறதும் இந்தக் காரியத்திலே வெகு சாக்கிரதையாயிருக்கிறான். ஆனால், சுவாமியவனுக்கு ஒருக்காலும் உதவிசெய்யார் என்கிறது எனக்கும் தோன்றியிருக்கிறதைச் சகல சனங்களும் அறிந்திருக்கிறார்கள். ஆனால், அவனைக் கொஞ்ச நாளைக்குள்ளே யாதொரு கஸ்திப்படத்தக்கதாகப் பண்ணி அந்தக் கிலேசத்துக்குள்ளாக்குவாரேயல்லாமல் விடத்தக்கதில்லையென்று தோற்றுகிறது. சுவாமி ஒருத்தர் உண்டாயிருந்தால் மேலே எழுதினபடி நடக்கும்.



சந்தானம் பிரின்டிங் ஒர்க்ஸ், புதுவை.

